# மறக்க முடியாத
# திரைப் பாடல்களும்
# பாடலாசிரியர்களும்


சிலோன் விஜயேந்திரன்

எம்.ஏ., டி.லிட்.



சோனம் பதிப்பகம்

243, T.H. சாலை,

ரத்னா கேப் அருகில்

திருவல்லிக்கேணி, சென்னை-600 005.

முதற் பதிப்பு 1992 டிசம்பர்
(அறுபதாண்டு காலத் திரைப்பாடல்களும்,
பாடலாசிரியர்களும்)

புதுக்கிய இரண்டாம் பதிப்பு : 2001 ஜுன்

**மறக்க முடியாத திரைப்பாடல்களும், பாடலாசிரியர்களும்**



பதிப்பாசிரியர்: **எஸ். ஏஜாஸ் அலி**

நூல் விலை: ரூ. 135.00/-

வெளியீடு:
**சோனம் பதிப்பகம்**
243, T.H. சாலை,
(ரத்னாகேப் அருகில்)
திருவல்லிக்கேணி, சென்னை-5.

அச்சுப்பதிவு:
**PAGE OFFSET**
6/2, Devarajan Street,
Triplicane, Chennai - 600 005.

# பதிப்புரை

மரியாதைக்குரிய நண்பர் சிலோன் விஜயேந்திரன் அவர்களுடன் கடந்த பதினேழு ஆண்டு காலமாக மிகவும் நெருங்கிப் பழகி வருகிறேன்.

உலக இலக்கியங்கள், உலக சினிமா, பன்மதச் சிந்தனைகள் எந்த விஷயமானாலும், ஆழமான அறிவு, தெளிவான பார்வை இவற்றோடு அருமையாக எழுதவும், பேசவும் கூடிய பேராற்றல் மிக்கவர் அவர்.

தமிழ்த் திரைப் பாடல்களின் இலக்கியத் தகுதியை முதன் முதலாக மிகவும் விசாலமாகவும், சுவையாகவும் அடையாளங்காட்டி நண்பர் விஜயேந்திரன் ஒன்பது ஆண்டுகளுக்கு முன் "அறுபதாண்டு காலத் திரைப்பாடல்களும், பாடலாசிரியர்களும்" என்ற பெயரில் ஒரு நூல் வெளியிட்டார்.

அந்த நூலே கொஞ்சம் மாறுதலோடு "மறக்க முடியாத திரைப்பாடல்களும், பாடலாசிரியர்களும் என்ற தலைப்பில் எமது சோனம் பதிப்பகம் மூலம் இப்போது வெளியாகிறது.

திரைப்பட ரசிகர்களும், தமிழ் இலக்கிய ஆர்வலர்களும் இந்த நூலை அதிக ஆர்வத்தோடு வாங்கிப் படித்து ஆதரிப்பார்கள் என்று நம்புகிறோம்.

- எஸ். ஏஜாஸ் அலி

243, திருவல்லிக்கேணி
நெடுஞ்சாலை,
சென்னை-5.

# முன்னுரை

நேயம் நிறைந்த தமிழன்பர்களே!

இந்நூலின் முதற்பதிப்பை "அறுபதாண்டு காலத் திரைப்பாடல்களும், பாடலாசிரியர்களும் என்ற மகுடத்தில் சரியாக ஒன்பதாண்டுகளுக்கு முன்பு - 1992இல் நாள் வெளிக்கொணர்ந்தேன்.

தமிழில் முதன் முதல் திரைப்பட பாடல்கள் பற்றியும் பாடலாசிரியர்கள் பற்றியும் சத்தியம் பிறழாது எழுதப்பெற்ற சீரிய நூலாக அது அமைந்து இன்று வரை பல்கலைக்கழகங்களில் திரைப்பாடல் ஆய்வு மேற்குகொள்ளும் மாணவ்மணிகளுக்கும் தொலைக்காட்சி, வானொலியில் திரைப்பாடல் வரலாறு பற்றிப் பேசுவோர்க்கும் வழிகாட்டுதலைக் கண்டு மெய்யான என் நெடுங்கால உழைப்பு வீண்போகவில்லை என எண்ணி மகிழ்கிறேன்.

இதோ "அறுபதாண்டு காலத் திரைப்பாடல்களும் பாடலாசிரியம் நூல் சற்றே புதுக்கப்பட்டு மறக்க முடியாத திரைப்பாடல்களும் பாடலாசிரியார்களும் என்ற பெயருடன் உங்கள் கைகளுக்கு வந்துவிட்டது. இதைப்படித்து உங்கள் எண்ணங்களை எனக்கு எழுதுங்கள்.

எனது பல்லாண்டு கால உழைப்பின் அறுவடையான இந்நூலின் அம்சங்கள் பலவற்றை திருடி ஈழத்து மட்டக்களப்பில் ஒரு நபரும், அண்மையில் தமிழகத்தில் ஒரு நபரும் இரு நகல் நூல்களை வெளியிட்டுள்ளார்கள்.

அந்தக் கையாலாகாத போலிகளை இறைவன் மன்னிப்பாராக.

**சிலோன் விஜயேந்திரன்.**

243, T.H. ரோடு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

# இதயம் நிறைந்த நன்றி, இவர்களுக்கு!

* உடன் பிறவாச் சோதரராய் எனக்கு வாய்த்து நல்லுதவிகள் செய்துவரும் அதிமரியாதைக்குரிய பேராசிரியர் தீரன் அவர்கள்

* என்றன் தமிழ்ப் பணிக்கு மனமுவந்து ஆதரவு நல்கிய ஈழ ஏதிலியர் கழக நிறுவனர் அட்வகேட் சந்திரகாசன் அவர்கள்.

* யாழ்ப்பாணம் அல்லைப்பிட்டி உடையார் அமரர் தவவிநாயகம் அவர்களின் திருமகள் ஜெயபாலி னி அவர்கள் (லண்டன்)

* தவவிநாயகம் அவர்களின் திருமகன் அன்பு நண்பர் உருத்திர குமார் அவர்கள்

* அருமைத் தங்கை சகுந்தலா யசோதரன் (பிரான்ஸ்)

* ஆருயிர் நண்பர் ஆர்.சி. பிரகாஷ் அவர்கள்

* இன்பத்திலும், துன்பத்திலும் என்னை விட்டகலா அருமை நண்பன் எஸ். ஏஜாஸ் அலி அவர்கள்.

* என்றன் இலக்கியப் பணிக்கு எப்போதும் ஆதரவு தரும் மேன்மகன் "ஊர்வசி சோப்" நிறுவனர் செல்வராஜ் அவர்கள்.

* இருபதாண்டு கால இனிய நண்பர் "நெற்றிக்கண்" ஏ.எஸ். மணி அவர்கள்

* ஈழத்துத் திருமலையைச் சேர்ந்த வே. சங்கர் அவர்கள்.

* கவிஞர் சுந்தரக்கண்ணன் அவர்கள்

# அருமை அம்மா ஜெயசீலிக்கு அர்ப்பணம்

அன்றிரவு தொலைக்காட்சியில் தோய்ந்திருந்தேன்.

அவசர அவசரமாய் அறைக்குள் நுழைந்த நண்பன் ஏஜாஸ்,

உங்கள் அம்மா யாழ்ப்பாணத்தில் காலமாகி விட்டார்! பிரான்சிலிருந்து சேதி வந்தது" என்றான்.

ஓ தாயே! நெஞ்சம் நொருங்கியது. நேத்திரங்கள் நீரேந்தின.

பால்யகாலந்தொட்டுப் பாசத்தேனமுதை ஊட்டிய என் தாய், சதா மெய்யான தேவன் இயேசுவை நினைத்தபடி தலைமைத்தாதி பதவிவகித்து ஏழை, எளிய நோயாளிகளைப் பராமரித்த என்றன் புனித மாதா தேவராஜ்யத்தை நோக்கிப் பயணித்து விட்டார்.

ஆதர்ச அன்னையே!

என்றோ ஒரு நாள் தேவனின் திவ்ய வான் சபையில் உனைக் காண்பேன்! உன் தரிசனத்தில் உயிர் இனிப்பேன்!

உனக்கு இந்நூல் அர்ப்பணம்.

# ஆசிரியரின் பிற நூல்கள்

1. விஜயேந்திரன் கவிதைகள் (1968)

2. அவள் (நாவல்) (1969)

3. அண்ணா என்றொருமானிடன் (1969)

4. சௌந்தர்ய பூஜை (1970)

5. பிரேமதியானம் (1971)

6. ஆசுகவிகல்லடி வேலுப்பிள்ளை வரலாறு (1973)

7. விஜயேந்திரன் கதைகள் (1975)

8. பாரதி வரலாற்று நாடகம் (1982)

9. நேசக்குயில் (கவிதைகள்) (1984)

10. உலக நடிகர்களும் நடிகமேதை சிவாஜியும் (1985)

11. கவிஞர் கம்பதாசன் வாழ்வும் பணியும் (1986)

12. சிலோன் விஜயேந்திரன் கவிதைகள் (பாகம்-2) (1990)

13. ஈழத்துக் கவிதை விமர்சனம் (1992)

14. மூன்று மகாகவிகள் (1993)

15. சிலோன் விஜயேந்திரன் கவிதைகள் (பாகம்-3) (1994)

16. அல்லாஹூ அக்பர் (1996)

17. மகாகவி கம்பதாசன் கவிதா நுட்பங்கள் (1997)

18. ஈழத்துக் கலை இலக்கிய நினைவுகள் (1998)

## தொகுத்த நூல்கள்

1. கல்வடி வேலன் நகைச் சுவைக் கதைகள் (1974)

2. கம்பதாசன் கவிதைத் திரட்டு (1987)

3. கம்பதாசன் திரை இசைப்பாடல்கள் (1987)

4. கம்பதாசன் காவியங்கள் (1988)

5. கலைஞர் திரை இசைப்பாடல்கள் (1988)

6. கம்பதாசன் சிறு கதைகள் (1988)

7. கம்பதாசன் நாடகங்கள் (1988)

8. ஈழத்துக் கவிதைக் கனிகள் (1990)

9. அறுபதாண்டு காலத்திரைப் பாடல்களும் பாடலாசியர்களும் (1992)

10. இருபதாம் நூற்றாண்டின் தலைசிறந்த கவிஞர்களும் கவிதைகளும் (1994)

தொடர்புகளுக்கு:
**சோனம் பதிப்பகம்**
243, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை,
திருவல்லிக்கேணி
சென்னை-600 005.





மதுர பாஸ்கரதாஸ்

டி.கே. சுந்தர வாத்தியார்





லட்சுமண தாஸ்

பாபநாசம் சிவன்



உடுமலை நாராயண கவி



முகவை ராஜமாணிக்கம்



கம்பதாசன்



கே.பி. காமாட்சி



கு.சா. கிருஷ்ணமூர்த்தி



தஞ்சை ராமய்யாதாஸ்



கா.மு. செரீவ்



மருதகாசி



கண்ணதாசன்



கே.டி. சந்தானம்



எஸ்.டி. சுந்தரம்



கவி ராஜ கோபால்



மு. கருணாநிதி



சுரதா



கு.மா. பாலசுப்ரமணியம்



எம்.கே. ஆத்மநாதன்



பட்டுக்கோட்டை
கல்யாணசுந்தரம்



வாலி



ஆலங்குடி சோமு



மாயவநாதன்



பஞ்சு அருணாசலம்



புலமைப்பித்தன்



பூவை செங்குட்டுவன்



நா. காமராசன்



முத்துலிங்கம்



வைரமுத்து



மு. மேத்தா



குருவிக்கரம்பை சண்முகம்

# மதுர பாஸ்கர தாஸ்

மகாகவி பாரதி போல் அருமையான தேசீய பாடல்கள் பல யாத்தவர் மதுர பாஸ்கர தாஸ்.

தமிழகத்தில் சாதாரண பொது மக்களுக்கு மத்தியில் சுதந்திர வேட்கையைத் தூண்டும் வண்ணம் உணர்ச்சி பொங்க எளிய நடையில் அற்புதமான பாடல்களைத் தீட்டியவர் இந்தக் கவிஞர்.

அந்தக் காலத்தில் இசை அரங்குகளில் இவர் பாடல்கள் முழங்கின; நாடக மேடைகளில் நர்த்தனம் புரிந்தன; திரைப்படங்களில் சங்கநாதம் எழுப்பின.

திரைப் படங்களில் வீர ரசம் மட்டுமல்ல நவரசங்களும் சொட்டும் மதுர கீதங்களை வரைந்தவர் பாஸ்கர தாஸ் ஆவார்!

1937-இல் வெளி வந்த ''தேவதாஸ்'' படத்தில் வண்டிக்காரன் பாடுவதாக அமைந்த,

''ஓடோடிப் பாடுபட்டு உழைத்தேன்
ஓகோ பேய்ப் பிழைப்பு பிழைத்தேன்''

என்ற தொடக்க வரிகளே ஒரு ஏழைத் தொழிலாளியின் அவல வாழ்வைத் தத்ரூபமாகச் சித்தரிக்கிறது.

அப்பாடலில்-

''காற்று, மழை, மின்னல், இடி
கார் கோடன் போல் சீறுதையோ!''

என்ற அடிகளிலும்,

''காசெல்லாம் யார்க்கோ போகுது
யோசிக்கத் துக்கமாகுது கடவுளே, கடவுளே!''

என்ற அடிகளிலும் இல்லாதாரின் இழிநிலையை கவிஞர் சிறப்புறச் சித்தரிக்கிறார்.

''ராதா கல்யாணம்'' படத்தில், ''புருசர்களை நம்பலாமா?'' எனத் தொடங்கும் பாடலில் கண்ணனைக் கடிந்து ராதா பாடுவதாக உள்ள

''கரும்பு போல பேசுவார் காணாவிடம் ஏசுவார்
குரும்பாய் முகஸ்துதிகள் கொட்டி மனங் கூசுவார்''

என்ற வரிகளில் வனப்பாகத் தீட்டுகிறார் கவிஞர்!

'ராதா கல்யாணம்' படத்தில் பிரிவுத் துயரோடு,

''தனியிருந் துருகு மந்த
கன்னியாம் ராதை தன்னை''

என கண்ணனை எண்ணிப் பாடுவதாக அமைந்த விருத்தப் பாவினையும் கவிஞர் கவினுறத் தீட்டியுள்ளார்.

''சந்திரஹாசன்'' படத்தில் முதியவன் ஒருவன் இளம்பெண்ணை மணக்க முடிவு செய்த கொடுமையை எதிர்த்து அந்தப் பெண்ணே ஆர்த்தெழுந்து பாடுவதாக ''பாவை என் மனம்'' எனத் தொடங்கும் பாடலின் இறுதி நாலடிகளும்,

''மவுசாகச் சிறு பெண்ணை
மணம் புரியும் மாப்பிள்ளையை
மண்ணைத் தோண்டிப் புதைக்க வேணும்
எண்ணெய் ஊற்றி எரிக்க வேணும் சகியே!''

என்று உத்வேகத்தோடு மதுர பாஸ்கரதாசால் புனையப்பட்டுள்ளன!

தேசீயக் கவியான பாஸ்கரதாஸ், 'ராஜசேகரன்' படத்திலே தேசபக்திக் கனலை இனம் காட்டும் வண்ணம்,

''தேவி பாரதமாதா ஜெகதாம்பா'' எனத் தொடங்கும் பாடலைப் படைத்துள்ளார்.

அந்தப் பாடலில்,

''ஆவியான சஞ்சீவியும் நீயே
அன்னை நீயே தந்தை நீயே
ஜீவ அரசியல் ஞானந் தருகவே
சேவித்தே னெதிராக வருகவே''

என்ற வரிகள் பாவலரின் பாரத தேவிப் பாசத்தையும், விடுதலை உணர்வையும் தெளிவாக உணர்த்துகின்றன அல்லவா?

தேசீயக் கவி மதுர பாஸ்கர தாஸ் அவர்களை நேரில் சந்தித்த அனுபவத்தை பழம் பெரும் பாடகரும் நடிகருமான சொக்கலிங்க பாகவதர் என்பால் எடுத்துரைக்கையில்,

''மதுர பாஸ்கரதாஸ் அவர்களை 1934-இல் 'சீதா கல்யாணம்' நாடக இசைத் தட்டுககுப் பாட்டெழுத வந்த சந்தர்ப்பத்தில் நேரில் சந்தித்தேன்.

அந்நாடகத்தில் சீதாவாக நடித்த எம்.எஸ்.விஜயா, ராமரைப் பார்த்துப் பாடும்,

''தேவ தேவ ராகவா
ரகு நாயகா
தெய்வாம்ச பாஸ்கர வஞ்ச தாயகா
மூவரில் முதல்வன் என்றே உலகம்
முக்காலும் துதிசெய்யும் சுமூகம்''

என்றமைந்த அடிகள் இன்றும் எனக்கு ஞாபகத்தில் உள்ளன!''

'சீதா கல்யாணம்' நாடகத்தில் ஜனகனாக நான் நடித்தேன். விஸ்வாமித்ரரை வரவேற்று நான் பாடுவதாக, அமைந்த,

''புனித யோக மாவிவேக
போத கௌசிக நாதா''

என்ற பாடலை எழுதிய பாஸ்கரதாஸ் அவர்கள் தமக்கே உரிய கம்பீரக் குரலில் ஆரம்பத்தில் அந்தப் பாடலைப் பாடிக் காண்பித்தார். அந்த இசை மேதையுடன், மிகச் சிறந்த பாடலாசிரியருடன் பழகிய அனுபவத்தை என்னால் என்றுமே மறக்க முடியாது'' என்றார்.

1892-ஆம் ஆண்டு மதுரையில் பிறந்த மதுர பாஸ்கர்தாஸ் அவர்கள் 1952-இல் மறைந்தார். எட்டயபுரத்தை அடுத்துள்ள நாகாலாதபுரத்தில் கவிஞருக்குச் சமாதி அமைத்துள்ளார்கள். மதுரையில் பாஸ்கரதாஸ் நகரும் உண்டு.

இனி தேசீயக் கவியின் சில பாடல்களை முழுமையாகப் பாருங்கள்.

## ஓடோடிப் பாடுபட்டு...

**படம்: தேவதாஸ்,**

**ஆண்டு: 1937**

ஓடோடிப் பாடுபட்டு உழைத்தேன்
ஓகோ பேய்ப் பிழைப்பு பிழைத்தேன்! (ஓடோடி)

நாடோடித் தொழில் புரியலானேன்
எந்த நாளும் சுகித்திருக்க லானேன்! (ஓடோடி)

மக்கிப் போன கட்டை வண்டி
மாடுரெண்டும் மிக்கச் சண்டி
சொக்கிச் சொக்கி ராப்பகலாய்
தூங்கி விழுந்து ஒட்டு ராண்டி தூ! தூ! (ஓடோடி)

காற்று, மழை, மின்னல், இடி
கார் கோடன் போல் சீறுதையோ!
காலைக் கதிரோனைக் காண
மேலும் ஆசை மீறுதையோ!

கண்ணில்லாத பாழுந் தெய்வம்
என்னையேன் வருத்த வேண்டும்?
காசெல்லாம் யார்க்கோ போகுது!
யோசிக்கத் துக்கமாகுது, கடவுளே! கடவுளே!
(ஓடோடி)

## புருசர்களை...

*படம்: ராதா கல்யாணம்*
*இசை: எஸ்.முத்தையா பாகவதர்*
*ஆண்டு: 1935*

புருசர்களை நம்பலாமா? வெறும் போக்கும்
புகலும் சொல்லிப் பூவையரை மயக்கும் (புருசர்)

கரும்பு போல பேசுவார், காணாவிடம் ஏசுவார்
குரும்பாய் முகஸ்துதிகள் கொட்டி மனம் கூசுவார்
விரும்பலாமோ இவரை வீண் பேச்சு வீசுவார்
வெட்கங்கெட்டு மெல்லியர்க்கும் சுகந்தம் பூசுவார்!

## என்னையே...

*படம்: ராதா கல்யாணம்*
*இசை: எஸ்.முத்தையா பாகவதர்*
*ஆண்டு: 1935*

என்னையே நம்பி னோர்கள்
இகழ்ச்சியே கொள்ள மாட்டார்
தன்னையே நொந்து கொண்டு
தனியிருந் துருகு மந்த
கன்னியாம் ராதை தன்னை
கலங்கவே செய்தே னென்றால்
பின்னையென் பேருக் கென்ன
பெருமையுண் டாகும் மாதோ!

## பாவை என் மனம்...

*படம்: சந்திரஹாசன்*
*ஆண்டு: 1936*

பாவை என் மனம் பற்றி எரியுதடி - பதறியே (பாவை)
பகர்ந்ததை நினைந்தெனதுளம் மிகக் கரைந்துருகுதடி!
தேர்ச்சியான தேச ராஜன் - பார்த்தீபனிவன்
கீர்த்தி பெற்றவ னென்றதால் (பாவை)

கௌசாம்பி நகரத்தின் காவலனாம் கிழவனையே
கருதியெனக் காதரவாய் கணவனெனக் கூறினதும்
மவுசாகச் சிறுபெண்ணை
மணம் புரியும் மாப்பிள்ளையை
மண்ணைத் தோண்டி புதைக்க வேணும்!
எண்ணெய் ஊற்றி எரிக்க வேணும் - சகியே!
(பாவை)

## சிலைமாரன்

*படம்: உஷா கல்யாணம்*
*ஆண்டு: 1936*

சிலைமாரன் பழிகாரன்
மலர்வாளி மிகப் பாயுதே - மானே! (சிலை)

மதுரக் கிளியே மாமணித் தேனே
மாணிக்கமே மடமானே - நறு
மலரணைதனில் வருவாய் முத்தம் தருவாய்
மிக வாடினேன் நானும்! (சிலை)

## கொஞ்சும் மொழி...

*படம்: உஷா கல்யாணம்*
*ஆண்டு: 1936*

கொஞ்சும் மொழி பயில்வாய் - கிளியே
கோலச் சிறகுடையாய்
நெஞ்சக் கவலையற - கிளியே
நீயோர் சுதலை சொல்வாய்
தோழி வரவில்லையே - கிளியே

தொலை தூரம் சென்றனளோ?
நாழிகை செல்கின்றதே - கிளியே
நாதனைக் கண்டனளோ?
ஈசனை நான் மறவேன் - கிளியே
ஏழைக் கிரங்காரோ?
நேசருடன் என்பாங்கி - கிளியே
நிமிஷத்தில் வாராளோ?

## பூங்கா வனமெனும்...

*படம்: சதி அகல்யா*
*ஆண்டு: 1935*

பூங்கா வனமெனும் புதுமலர்ச் சோலை
பூசல் தென்றல் வீசும் மாலை
பொங்கு மிங்கிதசுகம் பொருந்துமிக்காலை
மாங்குயில் பாட மயிலாட
மையலாய்த் துள்ளி இளமான் குதித்தோட
தேங்கிய அமுதாய்த் தெளிந்த நீரோடை
தேகம் பரவசங்கொள் தினமணி மேடை
ஈங்கமைந்த செயல் இறைவனின் லீலை!

## அதிரூபவதி...

*படம்: சதி அகல்யா*

*ஆண்டு: 1935*

அதிரூபவதியாம் அகலிகை
ரதி கள் கோடி மடவார்கள் கூடித் துதி

ரமணியாம் சமலில்லா தமிழ்வதனி
சதுர்முகம் உன்னம் யான் சைத்திறம்
சமைந்ததோர் பெண் மகா விசித்திரம்!
புதுமையான உருவம் இளம் பருவம்
புனிதையே வனிதையாம் இனிதுரைக்க!

## தேவி பாரத மாதா...

*படம்: ராஜசேகரன்*
*ஆண்டு: 1937*

தேவி பாரதமாதா ஜெகதாம்மா
தேவி பாரதமாதா ஜெகதாம்மா (தேவி)

பூவில் நானே தனியானேனே
புண்ணாகி னேனே நெஞ்சமுந் தானே!
பாவி நான் படும் பாடே தெரிகுவாய்
மேவி நீயருள் நேரே புரிகுவாய் (தேவி)

ஆவியான சஞ்சீவியும் நீயே
அன்னை நீயே தந்தை நீயே
ஜீவ அரசியல் ஞானந் தருகவே!
சேவித்தே னெதிராக வருகவே (தேவி)

## வாலிபக் காலம்...

*படம்: சதி அகல்யா*
*ஆண்டு: 1935*

வாலிபக் காலம் போல நுகூலம் வாய்க்குமோ
சீலம் தீர்க்க விசாலம்

பாலித மோகப் பருவங் கொண்டேனே
பாவையென் தாகம் பெருகக் கண்டேனே!
பதம் பெறுவேனோ மெய்யாகத் தானே?
மணமில்லா மலர் போலுறும் வாழ்வே
மாதர்கள் தனித்திருந்தாலது தாழ்வே
மங்கல பாக்யம் பொங்குதல் யோக்யம்

## மதனே உன் கணையால்...

*படம்: தேவதாஸ்*
*ஆண்டு: 1937*

மதனே உன் கணையால்
மகா மோக மாகினேன் (மதனே)

மாலைநேர மீதில் சதாமதிசேர் வசந்தமதால்
மனமே விசனமதால் மகாமோகமாகினேன் (மதனே)

இளஞ் சோலைக் குயிலே இன்பமாகக் கூவுதே
கபால மாமயிலே காண சோகம் மேவுதே!

# பூமி பாலகதாஸ்

மதுர பாஸ்கர தாசைப் போல, பாரத தேவியின் அடிமைத்தளை அறுபட ஆர்த்தெழுந்து ஆவேசப் பாடல்கள் பின்னிய பெருங்கவிஞரே, பூமி பாலக தாசாவார்.

கோவை மாவட்டத்தைச் சேர்ந்த இவர், உடுமலைப் பேட்டை முத்துச் சாமிக் கவிராயரின் பிரதம மாணவர்களில் ஒருவர்.

முதன் முதலில் இவர் திரைப்படப் பாடல்களை எழுதியது, டி.கே. எஸ்.சகோதரர்கள் பங்கேற்ற 'மேனகா' படத்திற்காகும்.

அப்படத்தில் இவர் எழுதிய பாடல்கள் பொது மக்களின் அமோக வரவேற்பைப் பெற்றன.

கட்டிய கணவன் பிற மாதரை விழைந்து மானபங்கம் செய்ய முற்பட, அது கண்டு சோகத் தீயில் சுழன்றாள் ஒருத்தி!

"தீமையான இந்தச் செய்கை தான் நினைக்க
சிதறுதே மனமே இத் தினமே"

மேற்காணும் பல்லவி மூலம் மாதவள் மனோநிலையை கவினோடு பாடுகிறார் கவி.

'மேனகா' படத்தில் மோகாவேசமுற்ற கன்னி ஒருத்தி பாடுவதாக உள்ள பல்லவியை.

"ஆசை என்பதோர் அளவு மீறியே
ஆஹா வெகு மோக மாகினேன்"

என்று எழிலோடு அமைத்துள்ளார் கவிஞர்.

தூங்கும் அழகியை வர்ணித்துப் பாடுவதாக அமைந்த 'மேனகா' படத்தின் பிறிதொரு பாடலில்

**''செங்கற் பவள விரலோடு கால்கள் தெரிகுவது - ஓர்**
**தங்கப் பதுமை சாய்ந்தே கிடந்த தகைமையிதே''**

என்ற வரிகளினை பரநலம் பொலிய வடித்துள்ளார்!

திருத்தூதர் நபிகள் நாயகத்தின் மாட்சியை வியக்கும் பாடலொன்றையும் பூமிபாலகதாஸ் 'மேனகா'விற்காக எழுதியுள்ளார்.

அப்பாடலில்,

**''சத்ய சன்மார்க்க துங்க**
**சாந்த முகம்மது நபியே!''**

என்று ரத்தின சுருக்கமாக நாயகத்தின் மாண்பினை இனங் காட்டுகிறார்!

''மேனகா' படத்திற்குப் பின்னர் வெகு காலங்கழித்து 'ஜுபிடர்' நிறுவனம் தயாரித்த 'அபிமன்யு', 'மோகினி' போன்ற படங்களிலும் சில பாடல்கள் யாத்துள்ள கவிஞர், லாரி மோதியதால் தம் இன்னுயிர்துறந்தார்.

காலம் காவிச் சென்ற பழம் பெரும் கலைஞர் எம்.கே. முஸ்தபா அவர்களை அவுர் மறைவதற்கு சில வாரங்களுக்கு முன்பதாக அவர் இல்லத்தில் சந்தித்தேன்.

அப்போது அவர், பூமி பாலகதாசுடன் தாம் பழகிய பழைய நாட்களை நினைவு கூர்ந்தார். அவர் கூறியதாவது:

''புதுக்கம்பன்'' என்று படித்தவர்களால் பாராட்டப்பட்ட பூமி பாலகதாஸ், மாதம் ஐநூறு ரூபாய் சம்பளத்தில், நாங்கள் பணி செய்த 'ஜுபிடரில்' பாடலாசிரியராகப் பணியாற்றினார்.

அவர் தமிழில் ஆழமான புலமைமிக்கவர். சராசரி உயரமுடையவர். மாநிறமானவர். அவர் உரையாடும் போது அடிக்கடி தமது மீசையைத் தடவியபடியே இருப்பார். கம்பீரக் குரலில் பேசுவார்; தாம் எழுதிய தேசீயப் பாடல்களை எழுச்சியோடு பாடிக் காண்பிப்பார்.

மகாகவி சுப்ரமணிய பாரதியின் பாடல்களை அவரே பாடக் கேட்ட அனுபவங்களையெல்லாம் பாலகதாஸ் எம்மிடம் சொல்லிச் சொல்லி

மகிழ்வார்.

ஜுபிடரில் நான், பாடகர் திருச்சி லோகநாதன், நடிகர் எஸ்.ஏ.நடரா ஜன் போன்றறோரெல்லாம் இணைந்து 'அறிவு வளர்ச்சி மன்றம்' என்ற அமைப்பை நடத்தினோம்.

எங்கள் அமைப்பு சிறப்புற நடக்க நல்ல ஆலோசனைகளை ஆசான் போல எமக்கு வழங்கினார் பூமி பாலகதாஸ் என்றார் எம்.கே.முஸ்தபா

'புதுக் கம்பன்' பற்றி பழம் பெறும் நகைச்சுவை நடிகர் டி.என்.சிவ தாணு அவர்கள் என்னிடம் கூறுகையில்,

''பூமி பாலகதாஸ் இசையறிவு மிக்கவர். தமிழில் ஆழமான புலமை மிக்கவர். 'தேசீயக் கவி' மதுர பாஸ்கர தாஸ் போலவே மிகச் சிறந்த தேசீயப் பாடல்களை பூமி பாலகதாஸ் எழுதியுள்ளார்.

அக்காலத்தில் பல நாடகங்களுக்கும் கவிஞர் கருத்துச் செறிவுள்ள பல பாடல்களை வடித்துள்ளார்.

'மேனகா' படத்திற்குப் பாட்டெழுத வந்த போது அவரோடு பழகும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. வயதில் மிகக் குறைந்தவனாக இருந்த என்னோடு, அவர் பாசத்தோடு பழகினார்.

டி.கே.எஸ்ஸின் குழுவிலிருந்த எமக்குத் தாமெழுதிய சீரிய தேசீயப் பாடல்களை எடுப்பாகப் பாடிக் காண்பிப்பார்:

''காக்கா காக்கா கடைகெட்ட காக்கா
காக்கா ரெட்ட காயைப் போல
மூக்கறுந்த காக்கா

மாற்றானுக்கு இடம் கொடுத்த காக்கா - உனக்கு
மண்டையிலே மூளையில்ல காக்கா
காற்றாய் பறக்குறாயே காக்கா - மகாத்மா
காந்தி சொன்னபடி கேளு காக்கா''

(காக்கா)

மேற்காணும் பாடலைக் கவிஞர் உணர்ச்சியோடு பாடுவார்.

இந்தப் பாடலில், எமது இந்தியர்களில் சிலர் அந்நியரான வெள்ளை யருக்கு வால்பிடித்து வாழ்ந்தமையை பூமி பாலகதாஸ் ஆத்திரத்தோடு கண்டித்துள்ளார்.

அந்தக் கவிஞரோடு பழகிய அனுபவத்தை என்னால் மறக்கவே

முடியாது.

இப்படியாக எனக்குச் சொன்னார் பழம் பெருங்கலைஞர் டி.என்.சிவ தாணு

இனி புதுக் கம்பன் புனைந்த 'மேனகா' பாடல்களை முழுமையாகத் துய்ப்போம்!

## முகம்மது நபியே...

*படம்: மேனகா*
*இசை: டி.கே.முத்துச்சாமி*
*- பம்பாய் கிருஷ்ணமூர்த்தி*
*ஆண்டு: 1935*

சத்ய சன்மார்க்க துங்க
சாந்த முகம்மது நபியே

சுத்த கஸ்தூரி மணம்
சோபித பொன் மேனியரே (சத்ய)

தேன்மொழி மான் கதீஜா
சிந்தை மகிழ் நாயகமே
வான்முகில் குடை கவிக்க
வந்த எங்கள் நாயகமே (சத்)

## மாதா பிதா...

*படம்: மேனகா*
*இசை: டி.கே.முத்துச்சாமி - பம்பாய் கிருஷ்ணமூர்த்தி*

மாதா பிதா குருமார் தெய்வமே
புவி வாழ்க வாழ்கவே! (மாதா)

ஆதாரமே அன்புதான் பெண்களின்
அழகாகுமே ஓம்
வேதோப தேச போத
மேன்மையான தியான மோன (மாதா)

## மகிழ்வீர் என் மதன துரையே...

*படம்: மேனகா*
*இசை: டி.கே.முத்துச்சாமி*
*- பம்பாய் கிருஷ்ணமூர்த்தி*
*ஆண்டு: 1935*

மகிழ்வீர் என் மதன துரையே

மிகுமோகனா இதுநாள் வரையும்
வேறாகிச் சோகமானேன்
வேணுந்தயவு பூர்ணமாக (மகிழ்)

பெண்களுக்குத் தான் நாதன்மார்கள் தான்
எண்ணும் பொழுதே தெய்வம்
கண்ணாளரே கருணா மிர்தமே
காலமிது பாலிப்பீரே!
காருண்யங் கனிந்து தானே! (மகிழ்)
துங்கப் பதுமை மலர் மஞ்ச மீது துயிலுமிவள்
அங்கம் பசுஞ் ஜெக ஜோதியான அழகு தந்து
செங்கற் பவள விரலோடு கால்கள் தெரிகுவது - ஓர்
தங்கப் பதுமை சாய்ந்தே கிடந்த தகைமையிதே
(மகிழ்)

## தீமையான இந்தச் செய்கை

*படம்: மேனகா*
*இசை: டி.கே.முத்துச்சாமி*
*- பம்பாய் கிருஷ்ணமூர்த்தி*
*ஆண்டு: 1935*

தீமையான இந்தச் செய்கை தான் நினைக்க
சிதறுதே யென்மனமே - இத்தினமே (தீமை)

காமவெறி பிடித்துக் காசினியில் என் நாதன்
கருத்திற் கிசையா பிறர் கன்னியரை யடுத்து
கற்பழிக்க வற்புறுத்த முற்பட்ட (தீமை)

பாவையிவளின் பர்த்தா
பரம சண்டாளனென
பாரில் பலரும் பழிபாவச் சொல் - கூறும்படி
பண்பட்டகம் புண்பட்டிடத் துன்புற்ற (தீமை)

## ஆசை யென்பதோர்...

*படம்: மேனகா*
*இசை: டி.கே.முத்துச்சாமி*
*ஆண்: 1935*

ஆசை யென்பதோர் அளவு மீறியே
ஆஹா வெகு மோகமாகினேன்
அருகில் வாரும் துரையே நீரும்
அரிவையுன் மேல் (ஆசை)

சாசனம் பேசி, சந்தனம் பூசி
சரி நாமே கூடுவோமே!
தையல் நானே, மையலானேன்
தயை புரிவீர்!
சரச மதன சாமி உன் மேல் (ஆசை)

# டி.கே.சுந்தர வாத்தியார்

மதுர பாஸ்கரதாஸ், பூமி பாலகதாஸ் வரிசையில் மிக முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய பாடலாசிரியர், சுந்தர வாத்தியாராவார்.

பிழைப்புக்காக வெளிநாடு சென்ற தமிழர்களின் அவலம் கல்லையும் கரைய வைக்கக் கூடியதாகும்!

மகாகவி பாரதி ஃபிஜூத் தீவிலே பிழைக்கச் சென்ற தமிழ்ப் பெண்டிர் வேதனையை,

"கரும்புத் தோட்டத்திலே - ஆ
கரும்புத் தோட்டத்திலே!",

என்ற பாடலிலும், தமிழர் தம் வேதனையை, "தமிழச் சாதி" என்ற தலைப்பிலமைந்த பாடலில்,

"...........
விதியே, விதியே, தமிழச் சாதியை
என் செய நினைத்தாய் எனக் குரை யாயோ"

என்றெல்லாம் உயிரு ருகிப் பாடியுள்ளார்.

அதுபோல் -

1936-இல் வெளி வந்த "சதி லீலாவதி" படத்தில் இலங்கைத் தேயிலைத் தோட்டப் பணிக்காக கூலிகளாகக் கூட்டிச் செல்லப்பட்ட தமிழர் தம் இழிநிலையை விழிநீரில் மொழி தோய்த்துப் பாடியுள்ளார் நம் சுந்தர வாத்தியார்!

"தேயிலைத் தோட்டத்திலே - பாரத
சேய்கள் சென்று சென்று மாய்குறார் ஐயையோ"

''நோயால் வருந்துகிறார் - எதிர்
நோக்கும் சவுக்கடித் தாக்குதலும் ஐயையோ!
கட்டத் துணியுமில்லை! இந்தக்
கானலிலே புள்ளிமானைப் போலலைந்து
நட்டுவாக்காளி, பூரான் - பாம்பு
அட்டை கடித்து அலறித் துடிக்கிறார்!''

என்ற வரிகளைப் படிக்கின்ற போது, ''இப்படியான சமுதாய நோக்குடைய கவிஞர்கள் இன்று எங்கே இருக்கிறார்கள்?'' என்றே சத்தியாவேசத்தோடு கேட்கத் தோன்றுகிறது!

பொறுப்புணர்ச்சியுள்ள ஒரு அண்ணன் கணவன் வீடு செல்லும் பாசத் தங்கைக்குப் புத்திமதி சொல்வதாக அமைந்த கருத்துச் செறிவுள்ள பாடலொன்றை, ''பானை பிடித்தவள் பாக்கியசாலி'' படத்திற்காக எழுதியுள்ளார் கவிஞர்: ''புருசன் வீட்டில் வாழப் போகும் பெண்ணே - தங்கச்சி கண்ணே'' என்று தொடங்கும் இந்தப் பாடலில்,

''அரசன் வீட்டுப் பெண்ணாய் இருந்தாலும் அம்மா
அகந்தை கொள்ளக் கூடாது, எந்நாளும்''

என்ற வரிகளிலும்,

''புருசன் உயிரை மீட்டுத் தந்தவ பொண்ணுதான்
பொழுது அங்கே நில்லுனு சொன்னவ பொண்ணுதான்
அரசன் நடுங்க நீதி சொன்னவ பொண்ணுதான்
அவங்க ஆஸ்திக் கணக்கு போட்டாக் கற்பு ஒண்ணுதான்''

என்ற வரிகளிலும்,

''புருசன் கூட நீயிருந்து பூவும் மணமும் போல் மணந்து
மக்களைப் பெத்து மனையைப் பெத்து
மக்க வயித்திலே பேரனைப் பெத்து
பேரன் வயித்திலே பிள்ளைக பெத்து
நோயில்லாம நொடியில்லாம
நூறு வயசு வாழப் போற தங்கச்சி

என்ற வரிகளிலும் கல்லையும் கரைக்கும் பாத்திறனை பறைசாற்றியுள்ளார் கவிஞர்!

'கோடீஸ்வரன்' படத்தில் இடம் பெற்றுள்ள

''யாழும் குழலும் உன்மொழி தானோ''

எனத் தொடங்கும் பாடலில், நாயகன்:

''எனதுயிர், உடல், பொருள் எல்லாம் உனதே
எனதென்ப தேது உனையல்லால்''

என்று பாட நாயகி:

''களவாடும் திறம் எங்கே கற்றீரோ?
என்னையறியாமல் என்னுளம் தனையே
களவாடும் கலையெங்கு கற்றீரோ?''

என்று பாடுகிறாள்.

எத்துணை சுகமான வரிகள் இவை!

'தமிழோடு இசைபாட மறந்தறியாத' சுந்தர வாத்தியார், 'களத்தூர் கண்ணம்மா' படத்தில், ''அம்மாவும் நீயே அப்பாவும் நீயே'' எனத் தொடங்கும் பாடலில்-

தந்தை முகம் தாயின் முகம் கண்டறியோமே - மனச்
சாந்தி தரும் இனிய சொல்லைக் கேட்டறியோமே
எங்களுக்கோ அன்பு செய்ய யாருமில்லையே - இதை
அறியாயோ முருகா! உன் கருணையில்லையோ''

என்ற அடிகளை நெஞ்சுருகும் வண்ணம் வடித்துள்ளமை காண்க!

சுந்தர வாத்தியார் அவர்கள் 'ஜாதகம்' 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்', 'பட்டினத்தார்' உட்பட பலப்பல படங்களில் சிறந்த பாடல்களை எழுதியுள்ளார்.

கவிஞரின் மூத்த மகன் சுந்தரக் கண்ணனும் ஒரு கவிஞர். 'அன்பே தெய்வம்' படத்தின் அனைத்துப் பாடல்களும் அவர் எழுதியதேயாகும்.

அவரைச் சந்தித்த போது தம் தந்தையார் பற்றிய சில் தகவல்களைக் கூறினார்:

''எனது தந்தையார் தஞ்சை மாவட்டத்தில் 1900-ஆம் ஆண்டு பிறந்தார். 1964-இல் சென்னையில் மறைந்தார்

தந்தையார் எழுதிய ''பக்திரசக் கீர்த்தனைகள்'' என்ற நூல் அந்தக் காலத்தில் மிகவும் புகழ் பெற்றது.

அவரெழுதிய ''பக்தி.கொண்டாடுவோம்'' என்ற பாடல் கே.பி.சுந்த

ராம்பாளின் 'கணீர்' குரலிலே தமிழ்நாட்டின் மூலை முடுக்கெல்லாம் ஒலித்தது.

என் தந்தையார் நகைச்சுவை நடிகராகத் திகழ்ந்த டி.எஸ்.துரைராஜ் தயாரித்த ''பிழைக்கும் வழி'' படத்திற்கு கதை - வசனம் - பாடல்கள் எழுதியுள்ளார்.

பல நாடகங்களுக்கும் கதை - வசனம், பாடல்கள் எழுதியுள்ளார். ஆர்மோனியம் வாசிப்பதிலும் அவர் மிகச் சிறந்தவராக விளங்கினார். எமது தந்தையாரை இறுதி வரை ஆதரித்து வந்தவர்களில் ஏ.வி.எம். நிறுவன அதிபர் மெய்யப்பச் செட்டியாரை சிறப்பாகக் குறிப்பிட வேண்டும்.''

இவ்வண்ணம் சுந்தர வாத்தியார் பற்றி அவர் தம் மைந்தர் சுந்தரக் கண்ணன் என்பால் எடுத்துரைத்தார்.

இனி சுந்தரவாத்தியாரின் செந்தமிழ்ப் பாடல்களில் ஐந்து பாடல்களைச் சுவைப்பீர்!

## தேயிலைத் தோட்டத்திலே...

*படம்: சதி லீலாவதி*
*ஆண்டு: 1936*

தேயிலைத் தோட்டத்திலே - பாரத
சேய்கள் சென்று சென்று மாய்குறார், ஐயையோ
ஓயாது நாள் முழுதும் - பல
ஊழியம் செய்து உடம்பலுத்தேகுறார்.
நோயால் வருந்துகிறார் - எதிர்
நோக்கும் சவுக்கடித் தாக்குதலும் - ஐயையோ.

கட்டத் துணியுமில்லை - இந்தக்
கானலிலே புள்ளிமானைப் போல வந்து
நட்டுவாக்காளி, பூரான் - பாம்பு
அட்டைக் கடித்து அலறி துடிக்கிறார்
சோற்றுக்கு வற்றுகிறார் - சிப்பி

சுண்ணாம் பரிசியை உண்பதற்குப் பொல்லா
நாற்றமடிக்குதையோ - இங்கு
நம்பி வந்தவர்கள் துன்ப நிலையெல்லாம்
சொல்லத் தரமல்லவே - ஐயோ

அந்தச் சூதுக்கவர் ஒரு பேதியில் போகாரோ?
நல்ல தொழில் இல்லையா - சொந்த
நாட்டினில் பயிர் போட்டுப் பிழைத்திட
வெள்ளைக்காரர் மீதிலே - குற்றம்
எள்ளத்தனையுமில்லை எல்லாம் நம்மிந்தியக்
கள்ளக் கறுப்பர்களே - இங்கு
கங்காணியாய் நின்று காணிக்கை வாங்குறார்
இந்து சகோதரரே!

## புருசன் வீட்டில்...

*படம்: பானை பிடித்தவள் பாக்கியசாலி.*

*இசை: எஸ்.ராஜேஸ்வரராவ்*
*ஆண்டு: 1958.*
*பாடியவர்: திருச்சி லோகநாதன்*

புருசன் வீட்டில் வாழப் போகும் பெண்ணே!
தங்கச்சி கண்ணே - சில
புத்திமதிகள் சொல்லுறேன் கேளு முன்னே
அரசன் வீட்டுப் பெண்ணாக இருந்தாலும் - அம்மா
அகந்தை கொள்ளக் கூடாது எந்நாளும்! (புருசன்)

மாமனாரை மாமியாரை மதிக்கணும் - உன்
மாலையிட்ட கணவனையே துதிக்கணும்!
சாமக் கோழி கூவையிலே முழிக்கணும் - குளிச்சி
சாணம் தெளிச்சி கோலம் போட்டு
சமையல் வேலை செய்யத் துவங்கணும்! (புருசன்)

கண்ணால் பேசும் பயக முன்னே நில்லாதே - நீ
காணாததைக் கண்டேனென்று சொல்லாதே - இந்த

அண்ணேன் சொல்லும் அமுத வார்த்தை தள்ளாதே -நம்ம
அப்பேன் பாட்டன் பேரைக் கெடுத்துக் கொள்ளாதே!
(புருசன்)

புருசன் உயிரை மீட்டுத்தந்தவ பொண்ணுதான்!
பொழுது அங்கே நில்லுன்னு சொன்னவ பொண்ணுதான்!
அரசன் நடுங்க நீதிசொன்னவ பொண்ணுதான்! - அவங்க
ஆஸ்திக் கணக்கு போட்டா கற்பு ஒண்ணுதான்!

(புருசன்)

தாலிகட்டப் போகையிலே தாய் தகப்பன் இல்லேன்னு
சஞ்சலப் படாதே அன்புத் தங்கச்சி!
தாரை வார்க்கப் நானிருக்கேன் சீர் கொடுக்க நானிருக்கேன்
தாயைப்போல நானிருக்கேன் தங்கச்சி!

புருசன் கூட நீயிருந்து பூவும் மணமும் போல் மகிழ்ந்து
கூரச் சேலையும் தாலை மஞ்சளும்
குங்குமப் பொட்டும், நகையும் நட்டும்
கொறஞ்சி விடாம நெறஞ்சிகிட்டு
மக்களை பெத்து மனையைப் பெத்து
மக்க வயத்திலே பேரனைப் பெத்து
பேரன் வயத்திலே பிள்ளைக பெத்து
நோயிமில்லாம நொடியில்லாம
நூறு வயசு வாழப்போற தங்கச்சி!

நமக்கு சாமி துணையிருக்கு தங்கச்சி! - நமக்கு
சாமி துணையிருக்கு தங்கச்சி!

## அம்மாவும் நீயே...

*படம்: களத்தூர் கண்ணம்மா*
*இசை: ஆர்.சுதர்சனம்*

பாடியவர்கள்: 'ராஜேஸ்வரி குழுவினர்

ஆண்டு: 1960

அம்மாவும் நீயே அப்பாவும் நீயே!
அன்புடனே ஆதரிக்கும் தெய்வமும் நீயே!
(அம்மாவும்)

தந்தை முகம் தாயின் முகம் கண்டறியோமே - மனச்
சாந்தி தரும் இனிய சொல்லைக் கேட்டறியோமே
எங்களுக்கோ அன்பு செய்ய யாருமில்லையே - இதை
அறியாயோ முருகா உன் கருணையில்லையோ
முருகா முருகா முருகா (அம்மாவும்)

பூனை நாயும் கிளியும் கூட மனிதர் மடியிலே - பெற்ற
பிள்ளை போல நல்லுறவாய்க் கூடி வாழுதே
ஈ எறும்பும் உன் படைப்பில் இனிமை காணுதே! - இதை
அறியாயோ முருகா உன் கருணை இல்லையோ
முருகா முருகா முருகா (அம்மாவும்)

## காத்திருப்பான் கமலக்கண்ணன்...

படம்: உத்தமபுத்திரன்

இசை: ஜி.ராமநாதன் பாடியவர்: பி.லீலா
ஆண்டு: 1958

காத்திருப்பான் கமலக்கண்ணன்
கனிந்து கனிந்து அன்பை
நினைந்து நினைந்து - கண்ணுறங்காமல்
(காத்திருப்பான்)

ஆத்தங்கரை தனிலே அந்திப் பொழுதினிலே

பூத்த மென்மலர் போலே
புனிதமான வனிதை ராதை - வருகை காண
(காத்திருப்பான்)

கோபியர் கொஞ்சும் சல்லாபன் - வேய்ங்
குழலிசை அமுதூட்டும் எழிலோடு சுகங்காட்டும்
தாவிப் பிடிப்பான் வெண்ணெய்த் தயிர்க் குடத்தைத்
தடுப்பான்!
தரையிலமர்ந்து ராதை உருவம் வரைந்து கொண்டு
- அங்கு
(காத்திருப்பான்)

வேடிக்கையாய்ச் செய்வான் அலங்காரம்
வீணை இசைக்கச் சொல்லி வேண்டுவான் - சில நேரம்
பாடுவான் - அதற்கவன் ஆடுவான் - மறுநேரம்
பாதம் நோகுமே என்று பரிவுடன்
காதல் இன்பமே தந்த நாயகன் - வந்து
(காத்திருப்பான்)

# லட்சுமணதாஸ்

"சுய கௌரவம் மிக்க கவிஞர். தமிழை முறையாகப் பயின்றவர். பணத்திற்காகப் பல்லிளிக்கும் சுபாவம் அற்றவர். அவருடன் உரையாடுவது இனிமையான அனுபவம்.

1947-ஆம் ஆண்டளவில் முதன் முதலாக நான் அவரைச் சந்தித்தேன். அவர் அவினாசியைப் பிறப்பிடமாகக் கொண்டவர். 1961-இல் அவர் மறைந்தார். இறுதி வரை என்னோடு நல்ல நட்புக் கொண்டிருந்தார்."

மேற்கண்டவாறு லட்சுமணதாஸை நினைவு கூர்ந்தார், எழுத்தாளரும், பழம் பெரும் பத்திரிகையாளருமான எஸ்.எம்.சந்தானம் அவர்கள்.

பாடலாசிரியர் லட்சுமண தாஸ் 1936-ஆம் ஆண்டே திரைப்படப் பாடலாசிரியராக உருவானார்.

அதற்கு முன்னரே பல நாடகங்களுக்குப் பாடல்கள் எழுதி வந்துள்ளார். கவிஞருடைய திரைப்பாடல் திறன் 1952-இல் வெளி வந்த 'ஏழை உழவன்' படத்தில் அற்புதமாக வெளிப்பட்டுள்ளது.

முற்போக்கான சிந்தனையோடு பாடல்களைப் பின்னியுள்ளார்.

"ஓ! சோதரத் தொழிலாளர்களே" என்று தொடங்கும் பாடலில்,

**"உடல் தளர நரம்பெல்லாம் தளர**
**பரம்பரையாக அடிமைகள் ஆனீரே**
**ஓய்வில்லாமலே உழைத்து உழைத்து**
**பொன்னை மலை போல் குவித்திட்டீரே**
**நம் குறைகள் உணராக் கற்சிலைகளாம்**

ஜமீன்தார்களைப் பகிஷ்கரித்திட வாரீர்!
ஒன்றாய் சேரீர்!

என்று ஆவேசக் குரல் கொடுக்கிறார் கவிஞர்!

உழவர்கள் பாடுவதாக அமைந்த

"விடுவிடு சாலுடன் பாறாங்கல்லை
விரும்பிக் கேளு, உழவர்கள் சொல்லை"

என்ற வரிகளிலும், பெண்ணொருத்திப் பாடுவதாக அமைந்த,

"இரவும் பகலும் தரியை ஓட்டியே
ராணிக்குச் சேலைகள் நெய்கின்றாய் - மஹா
ராணிக்குச் சேலைகள் நெய்கின்றாய் தோழா
அந்தோ நெசவுக்காரா
ஜமீன்தாரிணிக்குப் பட்டாடையா
ஏழை மக்களுக்கு கந்தலுடையா?"

என்ற வரிகளில் உழவர்களின் உரிமைக்குரலை மட்டுமல்ல, நெசவாளர் தம் அவலநிலை கண்டு அவர்களை ஆர்த்தெழச் செய்யும் வண்ணமும் பாடலைப் புனைந்துள்ளார் கவிஞர்.

லட்சுமணதாஸ் 'ஏழை உழவன்' படத்திற்கு எழுதிய,

"நமதே தானிப் பூமி" - எனத் தொடங்கும் பாடலில்,

"கூட்டுறவு விவசாயம் தான் நடத்தோணும்!
நாட்டினிலே சமதர்மம் நிலை நாட்டணும்."

எனச் சீரிய சிந்தனையோடு கூறுகிறார். இதே படத்தில் இடம் பெற்ற, "ஓ.... நிலத்தை" எனத் தொடங்கும் பாடலில்,

"உழவனே உனக்குரிமை ஒன்றுமே இல்லையா?
உபவாசத் தொல்லையா?"

என அந்தக் காலத்தில் பணத்திமிர் மிக்கஅதிகார ஆணவம் கொண்ட ஜமீன்தார்களால் உழவர்கள் உற்ற துயரை நம் கண்முன் நிறுத்துகிறார் கவி.

அதே பாடலில்

"உன் வேர்வை ஜலத்திலே
உன் எலும்பு எருவிலே
உண்டாச்சு கண்ணெதிரே
பொன்னான கதிரே"

என்ற வரிகளிலும் கவியாவேசம் மின்னக் காணலாம்.

1957 - இல் வந்த 'மணமாலை' படத்தில் விரகத் தீயில் உழன்ற பெண்ணொருத்தி பாடுவதாக அமைந்த பாடலின் பல்லவியை

''நிலையாக வீசுதே அலை போலவே - அவர்
நினைவே சதா நெஞ்சில் கனலாகவே''

என்று அருமையாக்த் தீட்டியுள்ளார் கவிஞர்.

அநுபல்லவியோ, மேலும் சிறப்பாக,

''நிலவில் என்னோடு அவர் நிகழ்த்திய வார்த்தைகள்
குவிந்திடுமோ? இன்னல் விளைந்திடுமோ - என்ற
நினைவே சதா நெஞ்சில் கனலானதே''

என்று அமைந்துள்ளது!

'தாய்க்குப் பின் தாரம்' படத்தில் இடம்பெற்ற,

''ஆஹா நம் ஆசை நிறைவேறுமா'' எனத் தொடங்கும் பாடலில்,

''ஈடில்லா இருபறவை ஜோடியாய் வாழவே
எண்ணிடும் போதில் பகை
வல்லூறாகத் தோன்றுமோ?''

என நாயகி பாட,

நாயகன்

''வல்லூறானதை வனத்தில் வாழும் வேடனாகி நான்
வெல்லுவேனே உன் இரு கண் அன்பினாலே''

என்று பாடுவது இலக்கிய நயத்தோடு உள்ளது.

எம்.ஜி.ஆர். அவர்களின் புரட்சிப் படைப்பான ''நாடோடி மன்னன்'' படத்தில் இடம் பெற்ற மிகச்சிறந்த பாடல்களில் ஒன்றான உழைப்பதிலா உழைப்பைப் பெறுவதிலா இன்பம் எனத் தொடங்கும் பாடலை லட்சுமண தாஸ் வினா - விடை முறையில் மிகச் சிறப்பாக எழுதியுள்ளார்.

''உழைப்பதிலா உழைப்பைப் பெறுவதிலா இன்பம்
உண்டாவதெங்கே சொல் என் தோழா?''

என்று கேள்வியை எழுப்பி,

''உழைப்பவரே உரிமை பெறுவதிலே - இன்பம்
உண்டாகுமென்றே சொல் என் தோழா!''

என்று பதிலிறுப்பதும்,

''கல்வி கற்றோம் என்ற கர்வத்தில் இன்பம்
கண்டவருண்டோ? சொல் என் தோழா''

என வினவி,

''கல்லாத பேரையெல்லாம் கல்வி பயிலச் செய்து
காண்பதிலேதான் இன்பம் என் தோழா''

என்று விடையளிப்பதும்,

''பட்டத்திலே, பதவி உயர்வதிலே இன்பம்
கிட்டுவதே இல்லை என் தோழா
உனை ஈன்ற தாய்நாடு உயர்வதிலே இன்பம்
உண்டாகுமென்றே சொல் என் தோழா''

என்பதும் மிகச்சிறப்பாக உள்ளன.

பாடல், இசை போன்ற விஷயங்களில் கூட தனிக் கவனத்தைச் செலுத்தி வந்தவர் அமரர். டாக்டர் எம்.ஜி.ஆர். அவர்கள்.

அன்னார் 1958 -இல் வெளியிட்ட 'நாடோடி மன்னன்' வெற்றி விழா மலரிலே,

''லட்சுமணதாஸ் 'உழைப்பதிலா' எனத் தொடங்கும் பாடலை எழுதுவதற்கு கடினமாக உழைக்க வேண்டி வந்தது''

என்று கருத்துச் சொல்லியுள்ளது லட்சுமணதாசின் புகழை வெளிப்படுத்தும் சொற்கள் அல்லவா?

அவரின் சில பாடல்கள் இதோ!

## ஓ! சோதர தொழிலாளர்களே...

*படம்: ஏழை உழவன்*
*ஆண்டு: 1952*

பெ: **ஓ! சோதர தொழிலாளிகளே!**
**ஓ! சோதர பாட்டாளிகளே!**
**கேளுங்கள் அழைப்பு**

கேளுங்கள் அழைப்பு
ஏழை உழவர் அழைப்பு - ஏழை உழவர் அழைப்பு

உழவர்கள்: சத்தியமே ஜெயம்
அஹிம்சையே ஜெயம்
ஏழை உழவருக்கு ஜே - ஜெயம்

பெ:– உடல் தளர - நரம்பெல்லாம் தளர
பரம்பரையாக அடிமைகள் ஆனீரே
ஓய்வில்லாமலே - உழைத்துழைத்து
பொன்னை மலைபோல் - குவித்திட்டீரே
நம்குறைகள் உணரா - கல்சிலைகளாம்
ஜமீந்தார்களை - பகிஷ்கரித்திட
வாரீர் ஒன்றாய்ச் சேரீர்

உழவர்கள்: சத்தியமே ஜெயம்
அஹிம்சையே ஜெயம்
ஏழை உழவருக்கு ஜே - ஜெயம்

சதையே உருகவே
கல்லும் கரையவே
சதையே உருகிட
கல்லும் கரைந்திட
துரைகளின் துணியை
வெளுத்திடும் ஏகாலீ!
அய்யோ ஏகாலி!
ஜமீந்தார்களின் - மனமோ கறுப்பு
என்ன துவைத்தாலும் - ஆகாது வெளுப்பு
விடு விடுசாலுடன் - பாறாங்கல்லை
விரும்பிகேளு இனி - உழவர்கள் சொல்லை

*உழவர்கள்: விடு விடு சாலுடன் - பாறாங்கல்லை*
*விரும்பி கேளு இனி - உழவர்கள் சொல்லை*
*சத்தியமே ஜெயம்*
*அஹிம்சையே ஜெயம்*
*ஏழை உழவருக்கு ஜே - ஜெயம்*

பெ: இரவும் பகலும் - தரியை ஓட்டியே
ராணிக்கு சேலைகள் நெய்கின்றாய் – மஹரா

ராணிக்கு சேலைகள் நெய்கின்றாய் தோழா
அந்தோ நெசவுக் காரா
ஜமீந்தாரிணிக்கு - பட்டாடையா
ஏழை மக்களுக்கு கந்தலுடையா
விடு விடு இனி நீ - நெசவுத்தரியை
உடனே கைக்கொள் - உழவர் முறை...

*உழவர்கள்:* விடு விடு இனி நீ - நெசவு
உடனே கைக்கொள் - உழவர் முறையை
சத்தியமே ஜெயம்
அஹிம்சையே ஜெயம்
ஏழை உழவருக்கு ஜே - ஜெயம்

பெ: செங்கல் அடுக்கி - வேர்வையை கொட்டி
செல்வருக்கு பங்களா கட்டுறாயே மேஸ்திரி!
அய்யோ மூட மேஸ்திரி!
ஜமீந்தாருக்கது - கேளிக்கை சாலை
ஏழை உழவருக்கது - சிறைச்சாலை
விடு விடு வேலையை - வேண்டாம் இத் துன்பம்
உழவனும் நீயும் ஏக குடும்பம்

*உழவர்கள்:* விடு விடு வேலையை - வேண்டாம் இத் துன்பம்
உழவனும் நீயும் ஏக குடும்பம்

பெ: நம் குறைகள் உணரா கற் சிலைகளாம்
ஜமீந்தார்களை - பகிஷ்கரித்திட வாரீர்

*உழவர்கள்:* அனைவரும் - வாரீர்
ஒன்றாய்ச் சேரீர்
சத்தியமே ஜெயம்
அஹிம்சையே ஜெயம்
ஏழை உழவருக்கு ஜே - ஜெயம்

## நமதே...

*படம்: ஏழை உழவன்*
*ஆண்டு: 1952*

நமதே தானிப்பூமி - நமதே தானே

நமதே தானிப்பூமி - நமதே தானே
உழவருக்கே இப்பூமி - உண்மை தானே
வெயில் மழை பார்க்காமெ - பண்படுத்தோணும்
உழுது பயிர் செய்யோணும்
ஆடை ஆகாரங்குறைய அகற்றி போடணும்
பஞ்சம் பறந்து ஓடணும்
கூட்டுறவு விவசாயம் தான் நடத்தோணும்
நாட்டினிலே சம தர்மம் நிலை நாட்டணும்
அல்லல் பசி பிணி தீர்க்கும் - கற்பக தருவே உழவன்
கள்ளம் கபடம் தெரியா - கர்மயோகி உழவன்
உழவனே தேசத்தின் - உயிர் நாடியே
ராம ராஜ்ய மென்றாலே - உழவர் ராஜ்யம் தானே
நமதே தானிப்பூமி நமதே தானே
நமதே தானே இனி நமதே தானே

## ஓ... நிலத்தை...

*படம்: ஏழை உழவன்*
*ஆண்டு: 1952*

நிலத்தை நீ உனதென்று
  கலப்பையே கைக்கொண்டு
நலிந்து குடல் பசியோடு
  நாளும் உழுகின்றாய்
ஓ! ஏழை உழவா!
நினது ஏர் முனையாலே
  நிலமெல்லாம் அதிர்ந்ததே
அன்னை பாரத தேவி
  அங்கம் சிலிர்த்ததே
உழவனே! உனக்குரிமை - ஒன்றுமே இல்லையா?
உபவாசத் தொல்லையா?
கடுமையாய் நடுச்சேற்றில்
  கால்நோக நிற்கிறாய்

கடமையே பெரிதென்று
நடவு நடுகின்றாய்
உன் செல்வமான பயிர்
உன் சொந்தமான பயிர்
உனதல்ல வென்கிறார்
வெளியேறச் சொல்கிறார்
உழவனே! உனக்குரிமை - ஒன்றுமே இல்லையா?
உபவாசத் தொல்லையா?

உன் வேர்வை ஜலத்திலே
உன் எலும்பு எருவிலே
உண்டாச்சு கண்ணெதிரே
பொன்னான கதிரே
அறிவாள் பிடித்தே நீ
அறுவடை செய்கிறாய்
சிரமீது சுமக்கிறாய்
பெரும்போர் குவிக்கிறாய்;

கதிர் மணிகள் உதிரவே
களத்திலே அடிக்கிறாய்
காளைகள் ஓட்டுறாய்
காற்றிலே தூத்துறாய்
ஓ! ஏழை உழவா!
சலியா உழைப்பிலே
மலையாய் குவிந்ததே
ஜொலிக்க ஜல ஜல வெனவே
பொன் மழை பெய்ததே:
உழவனே! உன் பங்கு - வீண் உழைப்பு தானா?
முழுச்சுகம் அடைபவன் - முதலாளி தானா?

## ஆஹா நம் ஆசை...

*படம்: தாய்க்குப் பின் தாரம்*
*இசை: கே.வி. மகாதேவன்*
*ஆண்டு: 1956*

பெண்: ஆஹா நம் ஆசை நிறைவேறுமா... கடல்

அலையைப் போலே மறைந்துபோக நேருமா?

ஆண்: அன்பே சந்தேகம் கொள்ளலாகுமா கொடி
அசைந்தாட பந்தலின்றி போகுமோ?

பெண்: ஈடில்லா இரு பறவை ஜோடியாய் வாழவே
எண்ணிடும போதில் பகை
வல்லூறாகத் தோன்றுமோ?

ஆண்: வல்லூறானதை வனத்தில் வாழும் வேடனாகி நான்
வேல்லுவேனே உன் இருகண் அன்பினாலே

பெண்: ஆ... ஆ... ஆ... (ஆஹா)

ஆண்: அன்பே சந்தேகம் கொள்ளலாகுமோ - கொடி
அசைந்தாடப் பந்த லின்றி போகுமோ?

பெண்: அருமை மொழி காதில் அமுதாகப பாய்வதால்
அகமே மகிழ்ந்தேன் அத்தானே

ஆண்: அழகே நீரோடை அதில் நீந்தும் மீன் போலவே
ஆனந்த மானேன் என் கண்ணே

பெண்: ஆ... உமது ஆனந்தமே அழியாச் செல்வமே

ஆண்: ஆருயிரே நான் உனக்கே சொந்தமே என்
ஆருயிரே நான் உனக்கே சொந்தமே

இருவரும்: ஈருடல் ஒருயிராய் வாழுவோம் - சுகம்
மாறாத இன்ப உலகை ஆளுவோம்

## நிலையாக வீசுதே!...

*படம்: மணமாலை*
*பாடியவர்: ஜானகி*
*இசை: வேதா*
*ஆண்டு: 1958*

நிலையாக வீசுதே அலைபோலவே - அவர்
நினைவே சதா நெஞ்சில் கனலாகவே (நிலை)

நிலவில் என்னோடு அவர் நிகழ்த்திய வார்த்தை
குலைந்திடுமோ? இன்னல் விளைந்திடுமோ? - என்று

நினைவே சதா நெஞ்சில் கனலானதே!

அகன்று நின்று ஜாடை அழகாகச் செய்வதும்
அருகில் வராததும் சரிதானோ

அணையா விளக்கை ஒளியே நீங்குமோ
ஆவியின்றி உடலே அசைந்திடுமோ? - என்ற
நினைவே சதா நெஞ்சில் கனலானதே! ..

## இன்பம் எங்கே?...

*படம்: நாடோடி மன்னன்*
*பாடியவர்: டி.எம். சௌந்தர ராஜன்*
*இசை: எஸ்.எம். சுப்பையா நாயுடு*
*ஆண்டு: 1958*

உழைப்பதிலா உழைப்பைப் பெறுவதிலா... இன்பம்
உண்டாவதெங்கே சொல் என் தோழா?
உழைப்பவரே உரிமை பெறுவதிலே - இன்பம்
உண்டாகுமென்றே சொல் என் தோழா!

கல்வி கற்றோம் என்ற கர்வத்தில் இன்பம்
கண்டவருண்டோ சொல் என் தோழா?
கல்லாத பேரை எல்லாம் கல்வி பயிலச் செய்து
காண்பதில்தான் இன்பம் என் தோழா!

இரப்போர்க்கு ஈதலிலும் இரந்துண்டு வாழ்வதிலும்
இன்பம் உண்டாவதில்லை என் தோழா
அரிய கைத் தொழிலும் செய்து அவரவர் பகிர்ந்துண்டு
அன்புடன் வாழ்வதின்பம் என் தோழா!

பட்டத்திலே பதவி உயர்வதிலே இன்பம்
கிட்டுவதே இல்லை என் தோழா
உனை ஈன்ற தாய்நாடு உயர்வதிலே இன்பம்
உண்டாகுமென்றே சொல் என் தோழா!

# பாபநாசம் சிவம்

பாபநாசம் சிவன் பழுத்த இசை ஞானி, சமஸ்கிருத மொழியிலே 'பண்டிதர்' பட்டம் பெற்றவர்.

நுட்பமான முறையில் எண்ணற்ற கீர்த்தனைகள் இயற்றியவர்.

அவருடைய சீரிய கீர்த்தனைகளை ஜி.என்.பாலசுப்பிரமணியம், எம்.எஸ்.சுப்புலட்சுமி உட்பட மிகப்பலர் பாடியுள்ளனர்.

சிவனின் புகழ் அவர் காலத்தில் பொது மக்கள் மத்தியிலும் மிகவும் ஓங்கி இருந்தது. காரணம் 'ஏழிசை மன்னர்' தியாகராஜ பாகவதர் சிவன் இயற்றிய பாடல்களை திரைப்படங்களில் பாடியமையே யாகும்.

பெரும்பாலும் அவர் பாடல்களில் பக்தி ரசமே பரிமளித்தது!

நவீன தமிழின் நளினங்களை சிவனிடம் நாம் காண இயலாது!

வடமொழிச் சொற்களே அவர் பாடல்களில் ஆட்சி செலுத்தின!

ஆயினும் பொருள் நயத்துடன் அவர் பாடல்கள் துலங்கின,

''வதனமே சந்திர பிம்பமோ
மலர்ந்த சரோஜமோ''
''சுவப்பன வாழ்வில் மகிழ்ந்து''
''மன்மத லீலையை வென்றாருண்டோ''

போன்ற காலத்தை வென்ற பல பாடல்களை யாத்த சிவனைத் தமிழ் இசையுலகம் என்றும் மறக்க இயலாது!

தஞ்சை மாவட்டத்தில் நன்னிலம் வட்டத்திலுள்ள போலகம் என்ற சிற்றூரில் 1890-ஆம் ஆண்டு பிறந்த சிவனின் இயற் பெயர் இராமையா

என்பதாகும்.

இவர் உயர்ந்த சாகித்திய கர்த்தாவாக மட்டுமின்றி பாடகராகவும், நடிகராகவும் விளங்கினார்.

இவர்தம் இக வாழ்வு முடிவுற்ற போதும் இசையுலகில் இவர் நாமம் என்றென்றும் உச்சரிக்கப் படுமென்பதில் ஐயமில்லை.

இதோ சிவனின் நான்கு பாடல்களைத் தொகுத்துள்ளேன்.

## வதனமே சந்திர பிம்பமோ...

*படம்: சிவகவி*

*இசை: ஜி.ராமநாதன்*

*ஆண்டு: 1943*

வதனமே சந்திர பிம்பமோ
மலர்ந்த சரோஜமோ (வதனமே)

மாரனம்போ நீள்விழியோ மதுரகானமோ
மின்னு மோகனத் துடியிடையாள் அன்னமோ
மடப்பிடி நடையாள்
புன்னகை தவழ் பூங்கொடியாள் - புவன
சுந்தரியாள் (வதனமே)

## சுவப்பன வாழ்வில்...

*படம்: சிவகவி*

*இசை: ஜி.ராமநாதன்.*

*ஆண்டு: 1943*

சுவப்பன வாழ்வில் மகிழ்ந்து சுப்ரமண்ய
சுவாமியுனை மறந்தார் - அந்தோ
அற்ப பணப்பேய் பிடித்தே அறிவிழந்து
அற்பர்களைப் புகழ்வார்

நாவால் பொய்மொழிவார் தனது வாழ்

நாளெல்லாம் பாழ்செய்வார் - நின்
பாவன நாமமதை ஒரு பொழுதும்
பாவனை செய்தறியார்
அந்தோ விந்தையிதே அறிந்தறிந்து
ஆழ் நரகில் உழல்வாரே - இவர்
சிந்தை திருந்தி உய்ய - உன்றன்
திருவருள் புரியாயோ? (சுவப்பன)

## கவலையைத் தீர்ப்பது...

*படம் : சிவகாசி*
*இசை : ஜி.ராமநாதன்*
*ஆண்டு : 1943*

கவலையைத் தீர்ப்பது நாட்டியக் கலையே
கணிகையர் கண்களே மதன் விடும் வலையே
நவரசங்களிலும் சிருங்காரம் தலையே
நளின நடையழகிற் கீடெங்கும் இல்லையே!
(கவலையை)
புஜமிரண்டு மூங்கில் தளர்நடையஞ்சி
புருவம் இடையுடலும் வளையுமே கெஞ்சி
ரசிகத் தன்மையில் கை தேர்ந்தவள் வஞ்சி
ராகத்தில் சிறந்தது நாட்டக்குறிஞ்சி (கவலையை)

## தாயே யசோதா...

*படம்: கடகம்*

*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு: 1947*

தாயே யசோதா உந்தன் ஆயர் குலத்துதித்த மாயன்
கோபால கிருஷ்ணன் செய்யும் ஜாலத்தைக் கேளடி
(தாயே)

தையலே கேளடி உந்தன் பையனைப் போலவே இந்த
வையகத்தில் ஒரு பிள்ளை அம்மம்மா நான் கண்டதில்லை...
(தாயே)

காலினில் சிலம்பு கொஞ்ச கைவளை குலுங்க முத்து
மாலைகள் அசைய தெருவாசலில் வந்தான்
பாலர்களெல்லாம் மகிழ வானவ ரெல்லாம் புகழ
நீல மேகக் கண்ணனவன் நர்த்தன மாடினான்

பாலனென்று தாவி அணைத்தேன் அணைத்த என்னை
மாலையிட்டவன் வாயில் முத்தமிட்டாண்டி
பாலனல்லடி உன் மகன் ஜாலமாச் செய்வதெல்லாம்
நாலு பேர்கள் கேட்கச் சொல்ல நாணமாயிருக்குதடி
(தாயே)

## என்ன ஆனந்தம்...

*படம்: அவள் யார்?*

*இசை: எஸ்.ராஜேஸ்வரராவ்*
*ஆண்டு: 1959*

என்ன ஆனந்தம் இருள் பிரிந்தொளி வீசும்
அருணோதயம் காண (என்ன)

இளமைப் பருவம் என்பது எல்லா உயிர்களுக்கும்
இறைவன் தந்த வரப்பிரசாதம்!
என் மனத்தாமரை மலர்ந்து மணம் வீசும்
இயற்கை யழகும் சேர்ந்து காண்பதெல்லாம் (என்ன)

குருவி ஜாலங்களே குருவி ஜாலங்களே
கோலாகல கலகல இசை பயிலும்
குருவி ஜாலங்களே! உங்கள் இன்ப வாழ்வு
எங்களுக்கெளிதோ? இன்ப வாழ்வு
எங்களுக் கெளிதோ? (என்ன)

# ராஜகோபாலய்யர்

பாபநாசம் சிவனின் சகோதரரான ராஜகோபாலய்யர் தேசப் பற்றும் சீர்திருத்த சிந்தனையும் மிக்க பல பாடல்களைத் திரைப்படங்களில் வடித்தவர்.

சிவன் சமஸ்கிருதத்தில் பண்டிதர், இவரோ தமிழில் பண்டிதர். ஆதலால் நல்ல நயமான தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்திப் பாடல்களை எழுதினார்.

மிகச் சிறந்த பாடலாசிரியர்களாகத் திகழ்ந்த மருதகாசி, கவிராஜகோபால் ஆகியோர் ராஜகோபாலய்யரின் மாணவ மணிகள் என்பது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

இவர் புரட்சித் தலைவர், எம்.ஜி.ஆர். அவர்களின் துணைவியாரான வி.என்.ஜானகி அம்மையாரின் தந்தை. இவரின் பாத்திறனைப் பார்ப்போம்

ஆண்டு வெளிவந்த ''தியாகி'' படத்தில்,

''பாரத மாதாவின் பதமே - நாம்
பாடித் துதித்திடுவோம் நிதமே''

என்று கம்பீரமாகப் பாடலை ஆரம்பித்து.

''ஞான மிகும் திருக்குறள் எனும் நூலையே
தான் நமக்காகவே தந்திடும் வள்ளுவர்
மானமும் காத்திடும் மாகதர் நூல் தரு
மோன நிலைபெறும் காந்தியை...''

தந்த புனித பாரத மாதாவின் அடிகளைப்
பாடித் துதிப்போம்

என்று உணர்ச்சிப் பெருக்கோ . எழுதியுள்ளார்

'தியாகி' படத்தில் இடம் பெற்ற பிறிதொரு பாடலில்,

"அடிமை வாழ்வை அகற்றுவாய் நெஞ்சில்
குடிகொண்ட பேதம் போக்குவாய்"

என்றவர்.

"கடவுளே உன் பார்வை தன்னில்
உயர்வும் தாழ்வும் தானுண்டோ?"

என்று கடவுளை நோக்கியே வினவுகிறார்.

'தியாகி' படத்தின் மற்றொரு பாடலில்,

"சொல்லுவோம் சொல்லுவோம் இல்லை ஜாதி பேதமென்று"

என்று உணர்ச்சியோடு பல்லவியை அமைத்து இறுதி வரிகளை,

"நாட்டவர்க்கு ஈசன் கோயில் நாட்டி வைத்த பொதுவிடம்
பூட்டி வைத்தார்;
உடைத்து போவோம் உட்புகுந்து நாம்!"

என்று புரட்சிகரச் சிந்தனையோடு அந்தக் காலத்திலேயே எழுதியுள்ளார்.

போஜன் படத்தில் இடம்பெற்ற காதல் பாடலொன்றில்,

"நாடி வந்தென் கை பிடிப்பார்
மிக நாணங் கொண்டு தலைகு னிவேன்
முகம் பார்த்துப்பார்த்து மனங்குளிர்வேன்....."

என்று சுவையாக எழுதியுள்ளார் ராஜகோபாலய்யர்.

கவிஞரின் மிகப்பலப் பாடல்கள் சிறப்பாகவே அமைந்துள்ளன.

நான்கு பாடல்களின் நயத்தைச் சொன்னேன். அதை முழுமையாகப் பாருங்கள்!

## பாரத மாதாவின்...

*படம்: தியாகி*
*இசை: எஸ்.வி.வெங்கட்ராமன் டி.ஆர். ராமனாதன்*
*ஆண்டு: 1947*

பாரத மாதாவின் பதமே - நாம்

பாடித் துதித்திடுவோம் நிதமே ஜெய (பாரத)

நற்குண மோடுயர் கற்பகமே நிகர்
நாற்பது கோடி நன்மக்களைத் தாங்கிடும் (பாரத)

ஞானமிடும் திருக்குறள் எனும் நூலையே
தான் நமக்காகவே தந்திடும் வள்ளுவர்
மானமும் காத்திடும் மாகதர் நூல் தரு
மோன நிலைபெறும் காந்தியைத் தந்த - நம் (பாரத)

தீர சிவாஜியைப் போல் பல வீரரை
யாருமே புகழ் திலகர் போல் தலைவரை
பாரில் வீரமணி ராணி ஜான்சியை,
நேரில் அன்னை கஸ்தூரி பாயைத் தந்த (பாரத)

உண்ணவுமே உடை தங்கவும் அன்று
கண்ணிய தாய்தளை நீக்கவே இன்று
கண்ணனும் காட்டிடும் இவ்வழி நின்று
திண்ணமாய் நம் கடன் செய்குவோம் - என்று (பாரத)

## அடிமை வாழ்வை...

*படம்: தியாகி*
*இசை: எஸ்.வி. வெங்கட்ராமன்*
*டி..ஆர். ராமநாதன்.*
*ஆண்டு: 1947*

அடிமை வாழ்வை அகற்றுவாய் - நெஞ்சில்
குடிகொண்ட பேதம் போக்குவாய்
கொடிய துரோகம் மடியவே - பாரில்
குடிகளென்றும் மகிழவே நீ (அடிமை)

கடவுளே உன்பார்வை தன்னில்
உயர்வும் தாழ்வும் தானுண்டோ?
மடமை நீங்கி மக்கள் வாழ
மதியைத் தாராய் ஈசனே! (அடிமை)

வந்தே மாதர மந்திரமே நெஞ்சில்
வைத்துச் சுமந்த சர்க்கார் இயந்திரமே
வந்திட யெமக்குச் சுதந்திரமே - இன்றே
சொந்தமதாக்கு நிரந்தரமாய் நீ (அடிமை)

## சொல்லுவோம்...

*படம்: தியாகி*
*இசை: எஸ்.வி.வெங்கட்ராமன்*
*டி.ஆர்.ராமநாதன்*
*ஆண்டு: 1947*

சொல்லுவோம் சொல்லுவோம்
இல்லை ஜாதி பேதமென்று (சொல்லுவோம்)

தொல்லுலகில் ஈசனார் படைப்பிலேது மில்லையே
சொல்ல வந்த சாத்திரங்கள் செய்து வைத்த தொல்லையே!
அல்லல் செய்ய அகந்தை அதற்கும் எல்லை இல்லையே!
நல்லவர்கள் எல் லாருக்கும் நன்கறியச் சொல்லுவோம்!

அன்பு ஒன்று அல்லதேதும் ஆண்டவன் மகிழ்ந்திடார்!
துன்பமே அகற்றி சிந்தை தூய்மை கொள்ளச் சொல்லுவோம்
நாட்டவர்க்கு ஈசன் கோயில் நாட்டி வைத்த பொதுவிடம்!
பூட்டிவைத்தார்; உடைத்து போவோம் உட்புகுந்து நாம்!

## வருவார் இன்றிரவு...

*படம்: போஜன்*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு: 1948*

வருவார் இன்றிரவு என் நாதன்
தருவார் இன்பமது எந்நாளும்!

என் மனம் போல் என் கண்ணாளன்
தருவார் இன்பமது எந்நாளும் (வருவார்)

அன்பு கொண்டெதிர் அழைப்பேன்
அவர் பாதபூஜை செய்து களிப்பேன்
பண்பாக பாடி மகிழ்வேன்
மஞ்சம் மேல் கொஞ்சவேன்!

நாடி வந்தென் கை பிடிப்பார்
மிக நாணங் கொண்டு தலை குனிவேன்
முகம் பார்த்துப் பார்த்து மனங்குளிர்வேன்
இன்ப நாள் இன்று தான்! (வருவார்)

# பாரதிதாசன்

பாவேந்தர் பாரதிதாசன் உன்னதமான பல கவிதைகளைப் படைத்தவர்.

அவருடைய முதல் கவிதைத் தொகுதியிலும்; அழகின் சிரிப்பு, எதிர்பாராத முத்தம், காதல் நினைவுகள் போன்ற நூல்களிலுள்ள பாக்கள் கால காலமாய் வாழக் கூடியவை.

கவிஞர் அருமையான இசைப்பாடல்களையும். படைத்திருக்கிறார்.

அவற்றில் —

''துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ
இன்பம் சேர்க்க மாட்டாயா?''

என்ற பாடல் ''ஓர் இரவிலும்''

''தமிழுக்கு அமுதென்று பேர்''

எனத் தொடங்கும் பாடல் 'பஞ்சவர்ணக் கிளி படத்திலும்.

''எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு''

பாடல் 'கலங்கரை விளக்கம்' படத்திலும் இடம் பெற்று பாரதிதாசன் தமிழாற்றலைத் திசையெல்லாம் பறைசாற்றியது.

மற்றும் 'பொன் முடி', 'பணம்', 'ரத்தக் கண்ணீர்', 'பராசக்தி' உட்பட பலப்பல படங்களில் கவிஞரின் பாடல்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

பாரதிதாசனார் 'பாலாமணி', 'ஸ்ரீ ராமானுஜர்', 'கவி காளமேகம்', 'வளையாபதி' போன்ற படங்களுக்குப் பாடல்கள் எழுதியுள்ளார்.

சினிமாப்பாடல்களை குறிப்பிட்ட ஒரு மெட்டுக்குள் அடக்க வேண்

டியதாகவும், விஷயமறியாத பேர்வழிகளை திருப்தி செய்ய வேண்டிய நிலையிலேயுமே அன்று திரைத்துறை இருந்தது.

சுதந்திர சிந்தனையுடன் பல்வேறு சந்தங்களில் பாடல்கள் புனைய வல்ல பாவேந்தருக்கு இந்தக் கட்டுப்பாடுகள் அறவே பிடிக்கவில்லை.

இந்தக் காரணத்தால் கவிஞர் எழுதிய திரைப் பாடல்கள் கவிஞருக்கும் அதே ஞான்று படவுலகினருக்கும் நிறைவு தர முடியாத ஒன்றாகி விட்டது!

''பாலா மணியில் பாவேந்தர் எழுதிய பாடல்கள் சில அந்தக் காலத்தில் மிகவும் பிரபலம் பெற்றன'' என்று என்பால் சொன்னார் பழம்பெரும் நடிகர் டி.என்.சிவதாணு.

கவிஞர் கே.டி.சந்தானம் என்னிடம் பேசுகையில் ''சிவாஜி நடித்த 'அம்பிகாபதி' படத்திற்கு வசனம் - பாடல்கள் எழுத பாவேந்தர் வரவழைக்கப்பட்டார். ஆனால் அவரை அழைத்த நோக்கம் நிறைவேறவில்லை. இறுதியில் ஒரு பாடலை மட்டும் பாரதிதாசனிடம் பெற்றுக் கொண்டார்கள். அப்பாடல் கூட அம்பிகாபதியில் இடம் பெறவில்லை'' என்று ஓர் தகவலைச் சொன்னார்.

''பாவேந்தர் தமது இலக்கியப் பெட்டகமான 'பாண்டியன் பரிசை' படமாக்க வேண்டுமென்று விரும்பினார். அதே போல பாரதியார் வாழ்க்கையைத் திரைப்பட வடிவில் வடிக்க கனவு கண்டார்.

சினிமா வல்லூறுகள் 'சொன்ன சில வாக்குறுதிகளை நம்பி, ஏமாந்து அதிர்ச்சியுற்ற கவிஞர் சீக்கிரமாகவே மரண தேவியை தழுவிக் கொண்டார்!

# வேல்சாமிக் கவி

1940-ஆம் ஆண்டுக்கு முன்னர் திரைப்படப் பாடல்களில் தம் திறமையைக் காட்ட ஆரம்பித்தவர்களில் இவரும் ஒருவர்

இவர் பாடலாசிரியர் மட்டுமல்ல 'போஜன்', 'பத்மினி' போன்ற படங்களை இயக்கியவருங்கூட.

'பத்மினி' படத்தில் முற்போக்குச் சிந்தனைகளை அள்ளித் தெளித்து, இவர் சில பாடல்களை யாத்துள்ளார்.

''பாடு பட்டு வேலை செய்யும்
பாட்டாளி இல்லாட்டா
மாடி வீட்டு மனுஷனெல்லாம்
என்ன செய்யுவான்?''

என ஆவேசமாகக் கேட்கிறார் வேலுச்சாமிக் கவி! தொடர்ந்து,

''ஏர் பிடிக்கும் ஜீவனெல்லாம்
இல்லாமே போனாக்கா
ஏத்தசாலு வயித்தனெல்லாம்
என்ன செய்யுவான்?''

எனக் கேட்கிறார்.

''பாடுபடும் பாட்டாளி மக்களும்
ஏரோட்டும் உழவப் பெரு மக்களும்
உழைத்து உழைத்து வறுமையில் உலவும்
போது செல்வச் செருக்குள்ள பேர்வழிகள்
ஆனந்தமாய் வாழ்கிறார்களே என

கவிஞர் ஆத்திரப்படுகிறார் இந்த ப் பாடலில்.

''தட்டுத் தூக்கும் தம்பி எல்லாம்
தாளம் போட்டுப் பாடினாக்கா
துட்டு வாங்கும் முதலாளி
என்ன செய்யுவான்?''

என்ற வரிகள் மூலம் ஓட்டலிலே வேலை செய்து பிழைக்கும் பரிதாபத்திற்குரிய 'சப்ளையர்'களுக்காக முதன் முதலில் குரல் கொடுத்த கவிஞர் என்ற பெருமையையும் வேல்சாமிக்கவி பெறுகிறார்.

'பத்மினி' படத்தில் இடம் பெற்ற ''வருந்த லாமோ தோழனே'' என்ற பாடலில் உழலும் உண்மைக் கலைஞர்களின் அலங்கோல நிலையை வெகு யதார்த்தமாக வேல்சாமிக்கவி

''வீண் பழிகள் ஏழை யின் தலைமேல்
விழும் இயல்பா மே!
வேலையில்லாக் கலைஞன் வாழ்வு
தாழ்வுதும் இதில்தானே?
வீழ்வதும் அதில்தானே''

என்று சொல்கிறார்.

பாடலின் இறுதி வரிகளில், வறுமை வந்தாலும் அதனை பொறுமையாகத் தாங்க வேண்டும்; பொறுமை, வாழ்வில் நிச்சயம் வெற்றி தரும். எது வந்தாலும் அதை ஒரு கலைஞன் எதிர்கொள்ள வேண்டும்; மனம் உடைந்து போகக் கூடாது என்பதனை,

''வறுமைதனிலும் பொறுமைகொள் – அது
வாழ்விலே ஜெயமாமே!
வருவதெல்லாம் வரட்டும் நீ - உன்
நெஞ்சம் உடையாதே!''

என்ற வரிகள் மூலம் வனப்புற கூறுகிறார் அவர்.

இனி கவிஞரின் இரு பாடல்களை முழுமையாகச் சுவைப்போம்!

## பாடுபட்டு...

*படம்: பத்மினி*
*பாடியவர்: பி.எஸ்.கோவிந்தன்*
*இசை: பிள்ளை*
*ஆண்டு: 1954*

பாடுபட்டு வேலை செய்யும்
 பாட்டாளி இல்லாட்டா
மாடிவீட்டு மனுஷனெல்லாம்
 என்ன செய்யுவான்?
ஏர்பிடிக்கும் ஜீவனெல்லாம்
 இல்லாம போனாக்கா
ஏத்தசாலு வயித்தனெல்லாம்
 என்ன செய்யுவான்? - அவன்
 என்ன் செய்யுவான்?
வேட்டி நெய்யும் நெசவாளி
 இல்லாமே போனாக்கா
விசிறி மடிப்புக் காரனெல்லாம்
 என்ன செய்யுவான்?
காட்டு வேலைக் காரனெல்லாம்
 ஆட்டமாடிக் கொண்டிருந்தால்
நீட்டான ஷோக்குக் காரன்
 என்ன செய்யுவான்? - அவன்
 என்ன செய்யுவான்?
பட்டிக் காட்டுக் காரனெல்லாம்
 கோட்டு சூட்டு மாட்டிக்கிட்டா
கோர்ட்டு வேலைக் காரனெல்லாம்
 என்ன செய்யுவான்?
தட்டுத் தூக்கும் தம்பி எல்லாம்
 தாளம் போட்டுப் பாடினாக்கா
துட்டு வாங்கும் முதலாளி

என்ன செய்யுவான்? - அவன்
என்ன செய்யுவான்?

## வருந்தலாமோ தோழனே...

படம்: பத்மினி
பாடியவர்: ஹுசேன் தீன்
இசை: பிள்ளை
ஆண்டு: 1954

வருந்தலாமோ தோழனே
மனவேதனை சகிப்பாயே
கருணையில்லா பொருள் படைத்த
உலகமிதுவே பாராய் நீ! (வரு)

காண்பதெல்லாம் வேஷமே - இதில்
மோசமே அடைந்தாயே நீ! (வரு)

வீழ் பழிகள் ஏழையின் தலைமேல்
விழும் இயல்பாமே!
வேலையில்லாக் கலைஞன் வாழ்வு
தாழ்வதும் இதில்தானே? - அவன்
வீழ்வதும் அதில் தானே!- நீ (வரு)

வறுமைதனிலும் பொறுமை கொள் - அது
வாழ்விலே ஜெயமாமே!
வருவதெல்லாம் வரட்டும் நீ - உன்
நெஞ்சம் உடையாதே! (வரு)

# ச.து.சு. யோகியார்

இவர் இருபதாம் நூற்றாண்டின் மிகச் சிறந்த கவிஞர்களில் ஒருவர்.

'அகல்யா', 'மேரி மக்தலேனா' போன்ற குறுங் காவியங்களையும்; 'கண்மணி ராஜம்', 'காசில்லாக் கனகரத்தினம்' உட்பட பல அமர கவிதைகளையும் தமிழன்னைக்கு வாடாத மலர்களாகச் சூட்டியுள்ளார்.

இருபது ஆண்டுகளுக்கு முன்னர் நான் யாழ்ப்பாணத்தில் நடத்திய 'வைகறை' இலக்கியப் பத்திரிகையில் யோகியாரின் கவிவளம் பற்றி விரிவாக ஆராய்ந்து மகிழ்ந்திருக்கிறேன்.

ஆங்கிலம், தமிழ், சமஸ்கிருதம் ஆகிய மும்மொழிகளை கற்ற மேதை இந்தக் கவிஞர்.

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை மொழி பெயர்த்த 'உமர் கய்யாம்' பாடல்களை விட யோகியார் மொழி பெயர்த்த பாடல்கள் ஜீவனோடு மின்னுகிறது!

தமிழ் உரை நடையிலும் ஒரு புதிய அத்தியாயத்தை ஆரம்பித்து வைத்தவர் இவர்!

இத்துணை சிறப்புகள் மிக்க ச.து.சு. யோகியார் திரைப்படத்துறையிலும் நுழைந்து 'ஆனந்தன்', 'அதிர்ஷ்டம்' போன்ற படங்களுக்கு கதை, வசனமெழுதி இயக்கினார்.

அப்படங்களுக்குப் பாடல்களும் புனைந்துள்ளார், மற்றும் ''மனைவியே மனிதனின் மாணிக்கம்'' உட்பட சுமார் பத்துப் படங்களுக்குப்

பாடல்களை எழுதியுள்ளார்.

யோகியாரின் கவிதைகளோடு ஒப்பிடும் போது அவரெழுதிய சினிமாப் பாடல்கள் மிகமிகச் சாதாரணமாகவே உள்ளது.

''ஆனந்தன்'' படத்தில் அவரெழுதிய 'பிச்சைக்காரி பாட்டு' மிகவும் ஹிட்டானதாகக் கேள்வி.

யோகியார் திரைப் பாடல்களைத் தொகுப்பது அந்த மகாகவிக்கு கௌரவம் சேர்ப்பதாக ஆகாது!

# கல்கி கிருஷ்ணமூர்த்தி

விரல் விட்டு எண்ணிவிடக் கூடிய மிகச் சில பாடல்களைத் திரைப்படங்களுக்கு எழுதி, இசைப் பிரியர்கள் நெஞ்சில் அழியாத இடம் பிடித்தவர் எழுத்தாளர் கல்கி.

'மீரா' படத்திற்காக அவர் எழுதிய ''காற்றினிலே வரும் கீதம்' எனத் தொடங்கும் அமுத்கானம் ஆயிரம் முறை கேட்டாலும் அலுக்காத வண்ணம் அமைந்துள்ளது. 'மீரா' படத்தில் இடம் பெற்ற.

''அந்த நாளும் வந்திடாதோ?'' எனத் தொடங்கும் பாடலையும் ஜீவத் துடிப்பு மிக்கதாகக் கல்கி எழுதியுள்ளார்.

கல்கியாரின் அழகுத் தமிழும், இசைமேதை எஸ்.வி. வெங்கட்ராமனின் நுட்பமான இசையமைப்பும், எம்.எஸ்.சுப்புலட்சுமியின் மதுர குரலும் 'மீரா' பாடல்களை சாகாவரம் பெற்றதாகச் செய்து விட்டன.

கல்கியின் பாடல்கள் சில 'தியாக பூமி' படத்திலும் இடம் பெற்றுள்ளன.

# உடுமலை நாராயண கவி

1899-இல் கோவை மாவட்டத்திலுள்ள பூவிளைவாடி கிராமத்தில் இவர் பிறந்தார். உடுமலை முத்துசாமிக் கவிராயரின் மாணவர்.

நாராயண கவிக்குத் தமிழ் இலக்கணப் பயிற்சி அளித்தவர்களில் தவத்திரு. சங்கரதாஸ் சுவாமியும் முக்கியமானவர்.

கவிராயர் 1940-ஆம் ஆண்டுக்கு முன்னரே படவுலகில் பாடலாசிரியராக நுழைந்து விட்டார்.

கலைவாணர் என்.எஸ்.கே. கவிராயரிடம் சீர்திருத்த சிந்தனைகளை நகைச்சுவையோடு எழுதும்படி பணித்து,கவிராயர் புகழ் திக்கெட்டும் பரவ உதவினார்.

> ''நாட்டுக்குச் சேவை செய்ய நாகரீகக் கோமாளி வந்தானைய்யா
> ஆட்டமாடிப் பாட்டுப்பாடி - நல்ல அழகான ஜதையோடு வந்தா
> னய்யா''

என்ற பாடல் காற்றைப் போல் திசையெட்டும் பரவி கலைவாணருக்கும், கவிவாணருக்கும் புகழை வாரி வழங்கியது

மேற்காணும் பாடல் 'நல்ல தம்பி' படத்தில் இடம் பெற்றது.

அந்தப் படத்தில் இடம் பெற்ற,

> ''அன்னியர்கள் நமையாண்ட தந்தக்காலம்
> நம்மை நாம் ஆண்டு கொள்வ திந்தக்காலம்''

என்ற பாடலில்

''நெனச்சதை எல்லாம் எழுதி வச்சது அந்தக் காலம்
எதையும் நேரில் பார்த்தே நிச்சயிப்பது இந்தக் காலம்

என்ற வரிகளிலும்

''இழிகுலமென்றே இனத்தை வெறுத்தது அந்தக் காலம்
மக்களை
இணைத்து அணைக்க முயற்சி பண்ணுவது இந்தக் காலம்''

போன்ற வரிகளிலும் உடுமலையாரின் முற்போக்குச் சிந்தனை முறுவலிட்பதைக் காணலாம்.

கே.ஆர். ராமசாமி நடித்த ''செல்லப்பிள்ளை'' படத்தில்,

''நாடு நடக்கிற நடையிலே
நமக்கே ஒண்ணும் புரியலே''

எனத் தொடங்கும் பாடலில்,

''கலையைப் படிச்சவன்
காத்தாப் பறக்கிறான்
காக்கா புடிக்கிறவன்
காரில் பறக்கிறான்''

என்ற வரிகளும்

''உதவி என்று பல
நிதிகள் திரட்டுகிறான்
ஊராரை ஏச்சுப்புட்டு
உண்டு களிக்கிறான்
இதம்பல பேசி
எலக்ஷன் ஜெயிக்கிறான்
பதவிக்கு வந்ததும்
பச்சோந்தி யாகிறான்''

என்ற வரிகளும் இன்றைய நாட்டு நடப்புக்குக் கூட சிறப்பாக பொருந்துகிறதல்லவா?

கலைவாணரின் மணமகள் படத்தில்

''சுதந்திரம் வந்ததுன்னு
சொல்லாதீங்க; - சொல்லிச்
சும்மா சும்மா வெறும் வாயை

மெல்லாதீங்க - நீங்க;
மதம், ஜாதி பேதம்
மனசை விட்டு நீங்கலே காந்தி
மகான் சொன்ன வார்த்தை போலே
மக்கள் இன்னும் நடக்கலே''

என்று ஆவேசமாகப் பாட்டெழுதியுள்ளார் உடுமலையார்.

''சொர்க்கவாசல்'' படத்தில் இலக்கிய அ ழகு மின்ன சில பாடல்களை கவிராயர் தீட்டியுள்ளார்.

''கன்னித்தமிழ்ச் சாலையோரம் சோலையிலே
கவிதைக் கனிகளே'' உண்ணும் பறவைகளே
தென்னவர் மூவேந்தராம் தமிழ் வளர்த்த
சேர, சோழ, பாண்டியரைப் பாடுங்களே''

என்ற வரிகளில் தமிழ்ச் சுவை பாங்கோடு அமைந்துள்ளது!

அதே பாடலில்,

''சீறிவந்த புலியதனை முறத்தினாலே - அடித்து
சிங்கார மறத்தி ஒருத்தி துரத்தினாளே - இதை
ஊரறிய உலகறிய உங்களாலே
உண்மையான பெண்மை வாழப் பாடுங்களே''

என்ற இறுதி நாலு வரிகளும் மிகச் சிறப்பாக அமைந்துள்ளமை காணலாம்.

சொர்க்க வாசல் படத்தில்,

''அந்தரத்தில் நீர்பாய்ச்சி தருவளர்த்தே
விந்தைமிகும் கனிகொள்வார் விநயம் போலாம்''

என்ற வரிகள் மூலம் 'சொர்க்கம் வானத்திலுண்டு' என நம்புவோர்க்குச் சாட்டையடி கொடுக்கிறார் கவிஞர்.

தொடர்ந்து,

''எங்கே சொர்க்கம், எங்கே சொர்க்கம்
என்றே தேடுறீர்; ஏமாந்தே ஓடுறீர் - அது
அங்கே இல்லை இங்கே உண்டு
அன்பால் நாடுவீர்! ஒன்றாய் கூடுவீர்''

என்று பகுத்தறிவுக் குரலை கொடுக்கிறார்.

உடுமலையாரின் புரட்சிக் குரலை 'எங்கள் வீட்டு மகாலட்சுமி' படத்தில் இடம் பெற்ற,

"காரிலே சவாரி செய்யும்
கன்னம் சிவந்த பொன்னம்மா"

என்ற பாடலில் தெளிவாகக் காணலாம்.

"ஊரில் வாழும் ஏழைப் பெண்களின்
உழைப்பின் பயனே உணவேயாகி
உணவின் ரசந்தான் கொழுப்பாய் மாறி
உன்மேலே ஜொலிக்குது தெரியுமா?"

என்று படாடோப பாவை ஒருத்தியைப் பார்த்து வினவுகிறார்.

அதே பாடலில்,

"பிடித்த பிடிக்குள் அடங்கும் சல்லா
உடைக்குள் மினுக்கும் பொன்னம்மா - நீ
உடுக்கும் சேலை உண்டான உண்மையை
உணர்ந்து பார்த்ததும் உண்டுமா?"

எனக்கேட்டு,

கிழிந்த கோவணம் தரித்து வறுமை
பிடித்த மாந்தர்கள் நெய்தார் கண்டாய்"

என்று பதிலிறுத்து தொடர்ந்து,

"உழைக்க பலபேர் சுகிக்க சில பேர்
இருக்க இனிமேல் முடியாதம்மா"

என கோபக்குரலோடு பாடலை முடிக்கிறார் கவிராயர்.

"எங்கள் வீட்டு மகாலட்சுமி" படத்தில் இன்னுமொரு பாடலில்,

"நாட்டுக்குப் பொருத்தம் நாமே நடத்தும்
கூட்டுப் பண்ணை விவசாயம்"

என்றுரைத்து விவசாயிகளின் உழைப்பை உறிஞ்சி வாழும் ஜம்பம் இனிப் பலிக்காது என்பதனை,

"பாளையக்காரர் ராஜாதிராஜா
பதவிகள் பறக்கிற போது - நம்ம
பட்டாக்கள், மிட்டா மிரசுகள் ஜம்பம்
கட்டாயமாகப் பலிக்காது"

என்று தெளிவாகச் சொல்கிறார்.

'காவேரியின் கணவன்' படத்தில் உடுமலையார் அற்புதமான பாட லொன்றைத் தீட்டியுள்ளார்!

''வண்ணத்தமிழ் சொர்ணக்கிளி
வாய் திறந்தாள்
வள்ளுவன் சொல் தெள்ளமுதை
மெல்ல மொழிந்தாள்''

எனச் சொல்கிறார் அவர்.

உடுமலையாருக்கு இரண்டு தனித்துவ பெருமைகள் உண்டு. சீர் திருத்தக் கருத்துகளை நகைச்சுவையோடு சொன்ன பாடலாசிரியர் அவர் ஒருவரே!

அதேபோல் திருக்குறள் சிந்தனைகளை தமிழ் திரைப்படப் பாடல்க ளில் அதிகம் கலந்து பிரசாரம் செய்த பெருமையும் கவிராயருக்குச் சேர்கிறது!

தமிழ்ப்படவுலகிற்கு அரிய தொண்டாற்றிய உடுமலை நாராயணகவி தமது 82-ஆம் வயதில் 1981-இல் காலமானார்.

கவிராயரின் பாடல்கள் சிலவற்றை முழுமையாக அனுபவியுங்கள்.

## சுதந்திரம் வந்ததுன்னு...

*படம்: மணமகள்*
*பாடியவர்: என்.எஸ்.கே.*
*இசை: சி.ஆர்.சுப்பராமன்*

சுதந்திரம் வந்ததுன்னு
சொல்லாதீங்க; சொல்லிச்
சும்மா சும்மா வெறும் வாயை
மெல்லாதீங்க - நீங்க ;
மதம், ஜாதி பேதம்
மனசை விட்டு நீங்கலே; - காந்தி
மகான் சொன்ன வார்த்தை போலே
மக்கள் இன்னும் நடக்கலே (சுதந்)

குடிக்கத் தண்ணீரில்லாது பெரும்
கூட்டம் தவிக்குது; - சிறு
கும்பல் மட்டும் ஆரஞ்சுபழ
ஜூசு குடிக்குது! (சுதந்)

அடுக்கு மாடி மீது சிலது
படுத்துத் தூங்குது;
ஆயிரக் கணக்கான மக்கள்
பாயில்லாமல் ஏங்குது! (சுதந்)

ஊத்துக் கிணறு வெட்டச் சொல்லி
உதவி செஞ்சாங்க; - பண
உதவி செஞ்சாங்க; - அதில்
ஏத்தம் இறைக்கு தான்னு யாரும்
பாக்க வல்லீங்க!
சோத்துப்பஞ்சம், துணிப்பஞ்சம்
சுத்தமாக நீங்கலே;
சுதந்திரம் சுகம் தரும் என்றால்
யாரு நம்புவாங்க? (சுதந்)

## ஓரிடந்தனிலே...

*படம்: வேலைக்காரி*
*இசை: சி.ஆர்.சுப்பராமன்*
*ஆண்டு : 1949*

ஓரிடந்தனிலே - நிலையில்லா துலகினிலே
உருண்டோடிடும் பணங்காசெனும் உருவமான பொருளே!
ஊரும் பேரும் தெரியாதவரை
உயர்ந்தோர் ஆக்கிடுமே - உருண்டோடிடும்
பணம் காசெனும் உருவமான பொருளே

காசு நல்ல காரியம் செய்யாது;
கண்மூடித் தூங்கக் கருணை காட்டாது;
களவு கொலையுண் டாக்கும்;
கவலை மிகவும் சேர்க்கும்;

காமுறும் இன்பமும், சொர்க்கமும்.
எல்லாமே நீக்கும்! (ஓரிடந்)

## நாகரீகக் கோமாளி...

*படம்: நல்லதம்பி*
*பாடியவர்: கலைவாணர் என்.எஸ்.கே.*
*ஆண்டு : 1949*

நாடு செழிக்க வேணும்
ஆமடி தங்கம்;
நாகரீகமாக வேணும்
ஆமா சொல்லு...! (நாடு)

பாடுபட்டுப் பிழைக்க வேணும்
ஆமடி தங்கம்;
பசியாற உண்ண வேணும்
ஆமா சொல்லு...! (நாடு)

நாட்டுக்கு சேவை செய்ய
நாகரீக்க்கோமாளி வந்தானய்யா!
ஆட்டம் ஆடி பாட்டுப்பாடி - நல்ல
அழகான ஜதையோடு வந்தானய்யா
மோட்டாரை விட்டிறங்கி வந்தானய்யா
முங்குடும்பி சீவிக்கிட்டு வந்தானய்யா
ராட்டினம்போல் சுழன்று வந்தானய்யா
நம்ம ராஜ்ஜியத்தைச் சுற்றிப் பார்த்து வந்தானய்யா
தச்சோம் கிழிச்சோம் ஜரிகை வெண்பட்டு
என்பட்டு கிழிஞ்சது போ...

## அன்னியர் நமையாண்டது...

*படம்: நல்லதம்பி ஆண்டு : 1949*
*பாடியோர்: கலைவாணர் என்.எஸ்.கே. குழுவினர்*

அன்னியர்கள் நமையாண்ட தந்தக்காலம்

நம்மை நாம் ஆண்டுகொள்வ திந்தக்காலம்
பேசுதற்கும் உரிமையற்ற தந்தக்காலம்
பிரசார பெருமையுற்ற திந்தக்காலம்

மனுஷனை மனுஷன் ஏச்சுப் பொழைச்சது அந்தக்காலம்
அது மடமை நீங்கி நம் உடமை கோருவது இந்தக் காலம்

(ஆமா மனுஷனை)

நெனச்சதை எல்லாம் எழுதிவச்சது அந்தக் காலம்
எதையும் நேரில் பார்த்தே நிச்சயிப்பது இந்தக் காலம்
மழை வருமென்றே மந்திரஞ் செபிச்சது அந்தக் காலம்
மழையைப் பொழிய வைக்கவே யந்திரம் வந்தது இந்தக்
காலம்
இழிகுலமென்றே இனத்தை வெறுத்தது அந்தக் காலம்
மக்களை இணைத்து அணைக்க முயற்சிபண்ணுவது
இந்தக் காலம்
திரௌபதை தன்னைத் துகிலுரிஞ்சது அந்தக் காலம்
பொண்ணைத் தொட்டுப் பார்த்தாச் சுட்டுப் பிடுவான்
இந்தக் காலம்

சாஸ்திரம் படிப்பது அந்தக் காலம்
சரித்திரம் படிப்பது இந்தக் காலம்
பக்தி முக்கியம் அந்தக் காலம்
படிப்பு முக்கியம் இந்தக் காலம்
கத்தி தீட்டுவது அந்தக் காலம்
புத்தி தீட்டுவது இந்தக் காலம்
பெண்ணைப் பேயென பேசி அணைச்சது அந்தக்காலம்
வாழ்வின் கண்ணின் ஒன்றாய் எண்ணி நடப்பது இந்தக்காலம்
(ஆமா மனுஷனை)

## கன்னித்தமிழ் சாலையோரம்...

*படம்: சொர்க்கவாசல்*
*இசை: சி.ஆர்.சுப்பராமன் விஸ்வநாதன் - ராமமூர்த்தி*
*ஆண்டு : 1954*

கன்னித்தமிழ்ச் சாலையோரம் சோலையிலே
கவிதைக் கனிகளே உண்ணும் பறவைகளே!

தென்னவர் மூவேந்தராம் தமிழ் வள்ர்த்த
சேர, சோழ, பாண்டியரைப் பாடுங்களே! (கன்னி)

மேருமலை மீதினிலே கொடி நாட்டினான் - சேரன்
வீரங்காட்டி கனகவிசயன்தனை வாட்டினான்
பாராங்கல்லை உடைத்தெடுத்தான் -
பகைவனைச் சுமக்க வைத்தான்!
பத்தினிப்பெண் சிலைசமைத்தான் கேளுங்களே - அந்த
பாடல் பெற்ற தேவிதன்னைப் பாடுங்களே! (கன்னி)

சீறிவந்த புலியதனை முறத்தினாலே - அடித்து
சிங்கார மறத்தி ஒருத்தி துரத்தினாளே - இதை
ஊரறிய உலகறிய உங்களாலே
உண்மையான பெண்மை வாழப்பாடுங்களே!(கன்னி)

## நிலவே நிலவே...

*படம்: சொர்க்க வாசல்*
*பாடியவர்: கே.ஆர்.ராமசாமி*
*இசை: சி.ஆர்.சுப்பராமன்*
*விஸ்வநாத்ன் - ராமமூர்த்தி*
*ஆண்டு : 1954*

நிலவே நிலவே ஆடவா
நீயன்புடனே ஓடி வா
மலராம் அரும்பின் எழில்மேவும்
மரகதமணியுடன் ஆடவா (நிலவே)

நீலவானக் கடல் நிதியே
நித்தில மதியே வெண்மதியே
சீலம் அருளறம் சேரும் குணவதி
சிங்கார நிதியுடன் ஆடவா

மண்ணில் அமுதம் சிந்திடுவாள் - இவள்
மழலைக்கமுதம் தந்திடுவாள்
உன்னில் இவளே உயர்ந்தவள் அதனால்
உல்லாசமாக ஆடவா

## குரங்கிலிருந்து...

*படம்: தூக்குத் தூக்கி*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு : 1954*

குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன்
கொம்பேறித் தாவும்
குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன்

உருண்டையான உலகின் மீது
உயர்ந்தோர் சொன்ன உண்மை இது
உருவ அமைப்பையும் காணும் போது
ஓரறி வீரறி வுயிரென மாறி மாறி
வாலில்லாத குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன்

பிடித்தபிடி விடாமலே சிலர் பேசும் பேச்சாலும்... தலையில்
பேனும் ஈரும் தேடித் தேடி பிடிப்பதனாலும்
நடிப்பினாலும் நடத்தையாலும்
நரர்களும் வானரர்களும் ஓர்குலம்

உடுக்கும் உடைகள் படிப்பினாலும்
உள்ளபடி பேதமுண்டு உண்மையில் வித்யாசமில்லை
(குரங்கில்)

## காரிலே சவாரி செய்யும்...

*படம்: எங்க வீட்டு மகாலட்சுமி*
*பாடியவர்: கண்டசாலா*
*இசை: எம்.ஏ.வேணு*
*ஆண்டு : 1957*

காரிலே சவாரி செய்யும்
கன்னம் சிவந்த பொன்னம்மா - உன்
கன்னம் சிவந்தது என்ன என்று நீ
எண்ணிப் பார்த்ததும் உண்டுமா? (காரிலே)

ஊரில் வாழும் ஏழைப் பெண்களின்
உழைப்பின் பயனே உணவேயாகி
உணவின் ரசந்தான் கொழுப்பாய் மாறி
உன்மேலே ஜொலிக்குது தெரியுமா?

காரிலே சவாரி செய்யும்
கன்னம் சிவந்த பொன்னம்மா - உன்
சீரும் சிறப்புள்ள சிங்கார வாழ்வைக்
கூறுவேன் கொஞ்சம் நிதானியம்மா
பஞ்சுமெத்தை மஞ்சமீது
படுத்துத் தூங்கும் பொன்னம்மா - உன்
பஞ்சு மெத்தை மஞ்சம் வந்ததை
நெஞ்சில் நினைத்ததும் உண்டுமா?

வஞ்சமில்லா வழக்கமானார்
வாழத் தெரியாக் கோழையானார்
கஞ்சிக்காகக் கஷ்டப்படுபவர்
கைத்திறமை என்ன தெரியுமா?
பிடித்த பிடிக்குள் அடங்கும் சல்லா
உடைக்குள் மினுக்கும் பொன்னம்மா - நீ
உடுக்கும் சேலை உண்டான உண்மையை
உணர்ந்து பார்த்ததும் உண்டுமா?
கிழிந்த கோவணம் தரித்து வறுமை
பிடித்த மாந்தர்கள் நெய்தார் கண்டாய்
உழைக்க பலபேர் சுகிக்க சிலபேர்
இருக்க இனிமேல் முடியாதம்மா. (க்ாரிலே)

## நாட்டுக்குப் பொருத்தம்...

*படம்: எங்கள் வீட்டு மகாலட்சுமி*
*பாடியவர்: டி.எம்.எஸ். குழுவினர்*
*இசை: எம்.ஏ.வேணு*
*ஆண்டு : 1957*

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல்பவர் என்றே - சொல்லும்

பழுதற்ற வள்ளுவன் பைந்தமிழ் நீதி
வழிசென்று மாண்பால் உயர்ந்த நாடு
நமது தாய்நாடு!

நாட்டுக்குப் பொருத்தம் நாமே நடத்தும்
கூட்டுப்பண்ணை விவசாயம் - பட்ட
பாட்டுக்குத் தகுந்த ஆதாயம் உண்டு
பழைய கொள்கைகளை விடுவது ஞாயம்!
(நாட்டுக்கு)

காட்டையும் மேட்டையும் தோட்டங்கொடிகள்
கழனிகள் செய்வது திறமை - அதனால்
கட்டாயம் நீங்கும் வறுமை - ஔவை
பாட்டியும் பாட்டால்பாடிய பெருமை
பாராட்டிய தொழில் முறைமை - இது
பரம்பரையாய் நமக்குரிமை - தமிழ் (நாட்டுக்கு)

ஒத்தைக் குடித்தனம் பத்துக் காணியில்
உழுது பாடுபட முடியாது - ஒரு
பத்துக் குடித்தனம் நூறு காணியில்
பங்காய் உழுவதுதான் தோது!

பாளையக்காரர் ராஜாதிராஜா
பதவிகள் பறக்கிற போது - நம்ம
பட்டாக்கள் மிட்டா மிராசுகள் ஜம்பம்
கட்டாயமாய்ப் பலிக்காது!
நாளுக்கு நாளாய் காலம் மாறுது
நடப்பதை னெனைச்சா நடுக்க மாகுது
ஆளை ஏய்க்க இனி முடியாது! - மக்கள்
ஆட்சியில் சுயநலங் கூடாது! - நம்ம (நாட்டுக்கு)

புருஷன் பெண்டாட்டி பிள்ளே குட்டிங்க
உருப்படி கணக்கையும் போட்டுக்கணும்
சரிசமமாக விகிதாசாரப்படி
சாப்பாட்டுச் செலவுக்கும் வாங்கிக்கணும்.

வரும்படி தன்னை அதிகமாக்கணும்
வகைதொகையாக செலவு செய்யணும்

உலகம் நம்மைக்கண்டு நடக்கவே
உண்மையோடு நாம் உழைக்கணும்
உயிர் பிழைக்கணும் - நம்ம (நாட்டுக்கு)

## எங்கே சொர்க்கம்...

*படம்: சொர்க்கவாசல்*
*பாடியவர்: கே.ஆர்.ராமசாமி குழுவினர்*
*இசை: சி.ஆர்.சுப்பராமன்,*
*விஸ்வநாதன் - ராமமூர்த்தி*
*ஆண்டு : 1954*

அந்தரத்தில் நீர் பாய்ச்சி தருவளர்த்தே
விந்தைமிகும் கனிகொள்வார் விநயம் போலாம்
இந்த உலகம் விட்டிறந்த பின்னே
இன்புறும் சொர்க்கமெனில் ஏமாந்து போவீரே!

எங்கே சொர்க்கம் எங்கே சொர்க்கம்
என்றே தேடுறீர் ஏமாந்தே ஓடுறீர் - அது
அங்கே இல்லை இங்கே உண்டு
அன்பால் நாடுவீர்! ஒன்றாய் கூடுவீர்!
எல்லோரும் ஒன்றாய் கூடுவீர்!

தன்னந்தனியே தவம் புரிந்தே
சமாதியாகப் போறீரா...? சமு
சாரம் பிள்ளை சுற்றத்தோடு
வாழ்ந்து கொஞ்ச வாரீரா?
இங்கு வாரீரா... அங்கு போறீரா?
உள்ளம் தேறீரா... (எங்கே சொர்க்கம்)

அதுஇங்கே இல்லை அங்கே உண்டு
என்றே சொல்லுவார் - அது
அங்கே இல்லை இங்கே உண்டு
அன்பால் நாடுவீர் ஒன்றாய்ச் கூடுவீர்
(எங்கே சொர்க்கம்)

பஞ்சம் இல்லாத நாடு - உயர்
பத்தினிமேவும் வீடு - வளம்

மிஞ்சும் வயலும் தோட்டங்காடும்
மேன்மையான சொர்க்கந்தான்!
நெஞ்சில் ஈரம், நேசம் - அன்பு
உள்ளார் காண்பது சொர்க்கம் - அது
இல்லார் காண்பது நரகம்
நினைவே மெய்க்கும் நிம்மதியே சொர்க்கம் - புது
நீதியின் பக்கம் இனி! (எங்கே சொர்க்கம்)
நூலே சொல்லும், சொர்க்கம்
மேலோகந்தான் - அன்பின்
மேலோர் கண்ட சொர்க்கம் பூலோகந்தான்
வேதாந்தியின் சொர்க்கம் -
விண்ணாட்டிலே - நல்ல
விவசாயிகாணும் சொர்க்கம்
இந்நாட்டிலே
பரதேசியின் சொர்க்கம் தெரியாதது - மெய்ப்
பாட்டாளியின் சொர்க்கம் உருவானது
சோம்பேறியின் சொர்க்கம்
சுயகாரியம் - நல்ல
தொழிலாளியின் சொர்க்கம்
பிறர் காரியம்
இங்கே உண்டு சொர்க்கம்
இங்கே உண்டு (எங்கே)

## வண்ணத்தமிழ்...

*படம்: காவேரியின் கணவன்*
*பாடியவர்: எம்.எல்.வசந்தகுமாரி*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1959*

வண்ணத்தமிழ் சொர்ணக்கிளி
வாய் திறந்தாள்
வள்ளுவன் சொல் தெள்ளமுதை
மெல்ல மொழிந்தாள் (வண்ண)

கன்னலொடு பாகுமலர்க்
கள்ளை வெறுத்தேன் - அவள்
கானரசத் தேனையுண்டு
ஞானம் படைத்தேன் - இன்ப (வண்ண)

மன்னும் செவிக்குணவு இல்லாதபோது - சிறிது
வயிற்றுக்கும் ஈயப்படும் எனவோதும்
பொன்னெழுத்து ஏடுதனை புவிமீது கொண்ட
கன்னியெழில் மாறாத கலைமாது - எங்கள் (வண்ண)

குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள்
மழலைச் சொல் கேளாதவர் - என்றே
அமிழ்தினும் இனியதொரு புகழ்சால் - பொன்மொழியை
வழங்கி வற்றாத வளம் பெற்றாள் - எங்கள் (வண்ண)

# முகவை ராஜ மாணிக்கம்

1936-இல் தியாகராஜ பாகவதரின் அழைப்பின் பேரில் அவர் நடித்த சத்திய சீலனுக்குப் பாட்டெழுதினார். முகவையார்.

அப்படத்தில் இடம் பெற்ற "சொல்லு பாப்பா" என்ற பாடலும், "உத்தியோக பட்டமெல்லாம்" என்ற பாடலும் தாமெழுதியதே என்ற தகவலைக் கவிஞரே எனக்குச் சொன்னார்.

'சொல்லுபாப்பா' பாட்டில்,

"நல்லதமிழ் வளர வழியொன்று சொல்லு பாப்பா"
"அடிமைத்தளை யழியச் சொல்லு பாப்பா
ஆருயிர் தியாகம் செய்யச் சொல்லு பாப்பா"

போன்ற வரிகளில் கவிஞரின் தமிழ்ப்பற்றும் பாரத சுதந்திர வாஞ்சையும் புலப்படுகிறது.

முகவையார் சாமான்யரல்லர்! சுதந்திர போராட்டத் தியாகி. ஆதலால் பாப்பா பாட்டிலும். தமது ஆத்ம வேட்கையை அழகுற இயம்புகிறார்.

"உத்தியோகப் பட்டமெல்லாம்" எனத் தொடங்கும் பாடலிலும் எழுச்சிச் சிந்தனைகள் மின்னிடக் காணலாம்.

இவர் பாண்டித்தேவன், பெண்குலத்தின் பொன்விளக்கு படங்களுக்கு கதை வசனமும் எழுதியுள்ளார்.

முதுமை எய்திய இன்றைய நிலையிலும், வானொலிப் பேச்சு, மேடைகளில் இலக்கிய சொற்பொழிவு என அர்த்தத்துடன் காலத்தை செலவிட்டு வருகிறார் நாட்டுப்புறப் பாடல்களை ஆய்வு செய்து தொகுத்து அரிய

நூலொன்றை இலக்கியத் துறைக்கு வழங்கியுள்ளார்.

இனிநாம் கவிஞரின் ஐந்து பாடல்களை முழுமையாகப் பார்ப்போம். 1936-இல் திரைப்பட பாடல் எழுத தொடங்கிய ராஜமாணிக்கம் 19 வருட காலம் திரைப்படத் துறையை விட்டு ஒதுங்கி இருந்துவிட்டு 1955-இல் ''காலம் மாறிப் போச்சு'' படத்தின் மூலம் மறுபிரவேசம் செய்துள்ளார்.

''ஏருபூட்டி போவாயே - அண்ணே சின்னண்ணே!''

என்ற மிகப் பிரபலமான பாடல் முகவையார் எழுதியதாகும்.

அப்பாடலில்,

பதவிகள் சதமெனக் குதிக்கிற பேரும்
ஓட்டுவாங்கி உனைமறக்கிற பேரும்
நீயே கதியென வருவார் பாராய்''

என்ற வரிகள் பதவிக்காக அப்பாவி மக்களைப் பகடைக் காய்களாகப் பாவிக்கும் அரசியல் நரிகளின் தோலை உரிக்கிறது.

'காலம் மாறிப்போச்சு' படத்தில் இடம்பெற்ற, ''வாங்கண்ணே போவோமே ராமே'' என்ற பாடலையும் கவிஞர் சிறப்பாகத் தீட்டியுள்ளார்

''தரிசுநிலம் யாவையும் உழுதுநல் வயலாக்கி
காடாய்க் கிடந்ததை திருத்தியே சீராக்கி
வானத்து மழைநீரை எவர் தடுத்தாலுமே
பாய்ந்தோடச் செய்வோம் குடியோங்கச் செய்வோம்!''

என்ற வரிகளில் தமிழ்நாடு உணவு உற்பத்தியில் தன்னிறைவுகாண வேண்டுமென்ற கவியின் பொற்கனா புன்னகைக்கிறது!

முகவை ராஜமாணிக்கம், தாமரைக்குளம், பக்காத் திருடன், பெண் குலத்தின் பொன் விளக்கு உட்பட பல படங்களுக்குப் பாடல்கள் எழுதியுள்ளார்.

இவர்தம் பாடல்கள் சிலவற்றை முழுமையாகக் காண்க!

## சொல்லு பாப்பா...

*படம்: சத்திய சீலன் ஆண்டு : 1936*
*பாடியவர்: தியாகராஜ பாகவதர்*

சொல்லு பாப்பா சொல்லு பாப்பா
சுகம்பெற வழியொன்று சொல்லு பாப்பா
நல்ல தமிழ் வளரச் சொல்லு பாப்பா - மக்கள்
ஞானம்பெற வழியொன்று சொல்லு பாப்பா
அடிமைத் தளையழியச் சொல்லு பாப்பா - அதற்கு
ஆருயிர் தியாகம் செய்யச் சொல்லு பாப்பா
மிடிமை அகலவென்று சொல்லு பாப்பா - மக்கள்
மேன்மைபெறும் வழியைச் சொல்லு பாப்பா
சொல்லு பாப்பா சொல்லு பாப்பா!

## உத்தியோகப் பட்டமெல்லாம்...

*படம்: சத்தியசீலன் ஆண்டு : 1936*
*பாடியவர்: தியாகராஜ பாகவதர்.*

உத்தியோகப் பட்டமெல்லாம் - எந்தன் தோழரே
உம்போல் உள்ள ராச ராசவேயாகும் - எந்தன் தோழரே!
சத்தியம்சேர் ஆட்சியெல்லாம் - எந்தன் தோழரே
பொதுசனங்களாலே துலங்கலாகும் - எந்தன் தோழரே!
மலரிலுள்ள வாசமெல்லாம் - எந்தன் தோழரே
சூடி மகிழ்வோர்க்கன்றி மலருக்கேது? - எந்தன் தோழரே
பலரும் போற்றும் இந்தப் பெருமை - எந்தன் தோழரே
இனிபாரில் உமக்கே நேர்வதாம் - எந்தன் தோழரே
(உத்தியோகப்)

## கள்ளம் கபடம்...

*படம்: காலம் மாறிப்போச்சு ஆண்டு : 1956*
*பாடியவர்கள்: ஜிக்கி குழுவினர்*

*இசை: வேணு.*

கள்ளம் கபடம் தெரியாதவனே
உலகம் போவது புரியாதவனே (கள்ளம்)

ஏருபூட்டிப் போவாயே அண்ணே சின்னண்ணே
உன் துன்பமெல்லாம் தீருமே அண்ணே சின்னண்ணே
நவதானியத்தை தலையில் சுமந்துக்கினு
பழய கஞ்சியை கலயத்தில் ஊத்திக்கினு
தாருக்குச்சியைக் கையில் எடுத்துக்கினு
பெண் சாதியையும் கூட இட்டுக்கினு

மேலத் திசையிலே வானவில் பாராய்
இடியும் மின்னலும் மழையும் பாராய்
ஓடையும் கால்களும் பாய்வது பாராய்
உலர்ந்த பொட்டலில் அருகினைப் பாராய்! (ஏரு)!

மேழியை நேர்செய்து ஆழ உழுதுக்கோ
எடத்திலே வலத்திலே எருதைப் பூட்டிக்கோ
சாலு விடாம நிரையைப் புடிச்சுக்கோ
விதையை எல்லாம் விசிறி விதைச்சுக்கோ (ஏரு)

பதவிகள் சதமெனக் குதிக்கிற பேரும்
ஓட்டு வாங்கி உனை மறக்கிற பேரும்
நீயே கதியென வருவார் பாராய்!
காலம் மாறியதே காலம் மாறியதே
காலம், காலம், காலம் மாறியதே! (ஏரு).

## வாங்கண்ணே...

*படம்: காலம் மாறிப்போச்சு*
*பாடியோர்: திருச்சி லோகநாதன் குழுவினர்*
*இசை: வேணு*

வாங்கண்ணே போவோமே நாமே - கூடி
வாங்கண்ணே போவோமே நாமே - நொடியில்

மலைகள் எல்லாம் பொடிப் பொடியாக்கித் தகர்ப்போமே
(வாங்கண்ணே)

நந்திதேவன் உறுமி செவிதூக்கி வர்ரானே!
பண்ணையாள் நம்மோடு துணையாக வர்ரானே!
பூதேவி அருளுண்டு புளகாங்கிதமுண்டு
(வாங்கண்ணே)

தரிசுநிலம் யாவையும் உழுதுநல் வயலாக்கி
காடாய்க் கிடந்ததை திருத்தியே சீராக்கி
வானத்து மழைநீரை எவர் தடுத்தாலுமே
பாய்ந்தோடச் செய்வோம் குடியோங்கச் செய்வோம்

(வாங்கண்ணே)

## வீணில் ஏனோ...

*படம்: பக்காத்திருடன்*
*பாடியவர்: ஏ.எம்.ராஜா*
*இசை: இப்ராகீம்.*
*ஆண்டு : 1960*

வீணில் ஏனோ வேதனை
மேன்மை இல்லாப் போதனை (வீணில்)

ஏதும் அறியாப் பேதை மனிதா
தீது புரிந்தால் மோசம் விளையும்
விதியை மதியால் வெல்லலாமே!
எதிலும் இன்பம் காணலாம் (வீணில்)

இன்பமான வாழ்வு காண
இழிவு நீங்க வேண்டுமே
அன்பு கொண்ட மாந்தரோடு
ஆடிப்பாடி வாழலாம் (வீணில்)

# கே.பி.காமாட்சி

"பாரதியும் - பாரதிதாசனும் என் கவியுலக ஆசான்கள். சினிமாப் பாடல்களை நான் எழுதுவதற்கு எனக்கு ஆசானாக அமைந்தவர் கே.பி.காமாட்சியே யாவார்.

மெட்டுக்குப் பாட்டெழுதுவதில் அவர் ஒரு கிங்.

நாடகங்களுக்குப் பாடல்கள் எழுதிய பழுத்த அநுபவசாலியான காமாட்சி, பல அருமையான பாடல்களை திரைப்படங்களில் எழுதியவர்.

கம்பனுக்குச் சடையப்ப வள்ளல் வாய்த்தது போல் காமாட்சிக்கு வாய்த்தவர், ஏ.வி.எம்.செட்டியார் ஆவார்.

முறையான கல்வியைப் பெறாமலேயே முதல்தரமான பாடல்களை எழுதிய காமாட்சி, மிகிச் சிறந்த நாடக - திரைப்பட நடிகருங்கூட. நகைச் சுவையோடு அவர் பேச்சிருக்கும்.

கவிஞர் நோயினால் கடுமையாகப் பாதிக்கப்பட்டு 'லஸ்' - சில் இருந்த டாக்டர் சந்திரன் என்பவரிடம் சிகிட்சை பெற்றார்.

டாக்டரிடமே, "நீங்கள் என் உடம்பை வைத்து வைத்தியம் கற்றுக் கொள்கிறீர்கள்" என்பார். ஒரு நாள் டாக்டர் ஊசிபோட ஆயத்தப்படுத்தும் போதே கவிஞர் மரணத்தைக் தழுவிக் கொண்டார்."

மேற்கண்டவாறு காமாட்சியென்ற அற்புத பாடலாசிரியரைப் பற்றி என்பால் எடுத்துரைத்தார். கவிஞர் கு.மா.பாலசுப்பிரமணியம்.

கவிஞரின் சகோதரமுறை உறவுக்காரரான கதாசிரியர் - படத் தயாரிப்பாளர் கலைஞானம் கவிஞரைப் பற்றி என்னிடம் பேசுகையில்,

'காமாட்சி அண்ணன் ஏழு வயதிலேயே கந்தசாமி முதலியார் நாடகக் குழுவில் சேர்த்து விடப்பட்டார். இருபத்திரண்டு வயதுக்குள் ஆயிரம் நாடகங்களில் அவர் நடித்து முடித்து விட்டார்! இந்தியாவிலேயே முதன் முறையாக மேற்கத்திய உடையணிந்து, நவீனமான தமது நடிப்புத் திறனை கதாநாயகன் வேடமேற்று சென்னை ஒற்றை வாடித் தியேட்டரில் நடித்துக் காட்டினார்! அவர் நடிப்பைக்காண மக்கள் அந்தக் காலத்தில் திரண்டு வருவார்கள்.

காமாட்சி அண்ணன் நடிப்பைப் பார்த்த ஒரு முதலியார், தமது ஒரே பெண்ணைக் கவிஞருக்கே மணம் செய்து கொடுத்து விட்டார்!

'இழந்த காதல்,' 'நல்லதம்பி,' 'இதயகீதம்,' 'பராசக்தி' உட்பட பல படங்களிலும் நடித்தவர்.

பராசக்தியில் ஏற்ற பூசாரி வேடமும், 'நல்ல தம்பி' படத்திலேற்ற இந்திரன் வேடமும் கவிஞருக்குப் புகழ் சேர்த்தது.

காமாட்சி 1900 ஆம் ஆண்டில் பிறந்து 1956 ஆம் ஆண்டில் அமரரானார்' என்று சொன்னார்.

நான்கு ஆண்டுகளுக்கு முன்னர் இசையமைப்பாளர் சுதர்சனத்தை மயிலாப்பூர் கற்பாகாம்பாள் நகரிலுள்ள அவர் இல்லத்தில் சந்தித்தேன்.

காமாட்சி உங்கள் இசையில் ஏ.வி.எம். நிறுவனத்துப் படங்களில் அதிகம் பாடல்கள் எழுதியுள்ளார். அவரைப் பற்றிய உங்கள் கருத்துகளைச் சொல்லுங்கள்.'' எனக்கேட்டேன்.

சுதர்சனம் மிகுந்த உத்சாகத்தோடு,

''காமாட்சி சுந்தரன் மிகச் சிறந்த பாடலாசிரியர். நாராயண கவி, பாடல்கள் எழுதிய பின் நான் மெட்டு போடுவது வழக்கம். ஆனால் காமாட்சியோ எந்த மெட்டைக் கொடுத்தாலும் உடனடியாக பாடல் படைக்கும் தனித்திறமை மிகுந்தவர்.

'பெண்' படத்தில் ஒரு மெட்டினைக் கொடுத்து பாட்டுப் போடும் என்றேன்.

வழக்கத்திற்கு மாறாக மெட்டுக்குப் பாடல் தராமல் இழுத்தடித்துக் கொண்டிருந்தார்.

''பல்லவியே எட்டவில்லையோ?'' என்று சொன்னேன்.

உடனே காமாட்சி,

**"எட்டாத கிளையில் கிட்டாத கனி போல்**
**இருப்பதும் சரிதானோ - என்னாசை**
**மறப்பதும் சரிதானோ"**

என்று ஆரம்பித்து முழுப்பாடலையும் எழுதி எங்கள் இசைக் குழுவினரை மகிழ்ச்சியில் ஆழ்த்தினார்.

கவிஞருக்கு படிப்பு வாசனை அவ்வளவாக இல்லை. ஆனால் இயற்கை அளித்த கொடையால் கருத்தாழமுள்ள பாடல்கள் பலவற்றை அவர் எழுதினார்" என்று சொன்னார்.

காமாட்சி பற்றி மூவர் சொன்ன கருத்துகளைச் சொன்னேன்.

இனி கவிஞர் பாத்திறனைப் பார்ப்போம்.

'வாழ்க்கை' படத்தில் காமாட்சி எழுதிய பாடல்கள் அனைத்துமே சிறந்தவை!

"செந்தமிழும் சுவையும் போலவே - நம்
காதலால் மிகுசுகமே பெற வாழ்வோம்"

என்ற பல்லவியே பாங்கோடு அமைந்துள்ளது.

"ஆ... கலைமாமணி!
கலைமாமணியே எந்நாளும்
ஈருடல் ஒருயிர் ஆனோமே
ஈருடல் ஒருயிர் ஆனோமே
எந்நாளும் இணைபிரியோம் நாமே
எந்நாளும் இணைபிரியோம் நாமே"

என்ற வரிகளில் கருத்தொருமித்த காதல் கிளிகளின் மனோ ஒருமையைச் சொற் சித்திரமாக்கியுள்ளார் கவிஞர்.

'ஓர் இரவு' படத்தில்,

"வசந்த முல்லையும் மல்லிகையும்
அசைந்தே ஆடிடுதே
அசைந்தே ஆடிடுதே
இசைந்த காதலன் [illegible]கரனை
மனம் நாடுதே - என்
மனம் நாடுதே"

என்று வெகு அழகாக காதல் பெண்ணொருத்தியின் ஆத்ம

பாவத்தைச் சொற்களில் வடித்துள்ளார் கவிஞர்.

இப்பாடலில்,

'உயர்ந்த வானவில் போலே - உடை
ஒய்யாரமாய் அணிவேனே இனிநானே - என்
அழகெனும் போதையில் தானே - மயங்கி
ஆடிடச் செய்திடுவேனே''

என்ற வரிகளை அருமையாகத் தீட்டியுள்ளார் காமாட்சி.

'பராசக்தி' படத்தில்,

''பொருளே இல்லார்க்குத் தொல்லையா?
புது வாழ்வே இல்லையா?
இருள் நீங்கும் மார்க்கம் இல்லையா?
இறைவா நீ சொல்லையா''

என வறுமைத் தீயில் உழன்ற வனிதை ஒருத்தியின் இதய வேதனையை அற்புதமாக வெளிப்படுத்துகிறார் கவிஞர்.

அதே பாடலில்,

''வறுமைப் பேயை விரட்ட நாட்டில்
வழியே இல்லையா? - அதற்கு
அழிவே இல்லையா?''

என்ற கவிஞரின் அர்த்தமுள்ள வினாவுக்கு எத்தனையோ கட்சிகளும், தலைவர்களும் மலிந்து கிடக்கும் இந்நாட்டில் இன்றுவரை விடை கிடைக்காததுவிசனமான சமாசாரமே!

'பராசக்தி' படத்தில் தனது ஏழைக் குழந்தையைப் பார்த்து அதன் தாயார் பாடுவதாக காமாட்சி எழுதியுள்ள,

''கொஞ்சும் மொழி சொல்லுங்கிளியே - செழும்
கோமளத் தாமரைப் பூவே!
ஒரு வஞ்சமில்லா முழுமதியே - இன்ப
வானில் உதித்த நல் அமுதே!
கண்ணே! கண்மணியே! கண்ணுறங்காயோ?

என்ற பாடல் இலக்கிய நயத்தோடு மின்னுகிறது!

அந்தப் பாடலில் விதியின் லீலையால் பிரிந்து போன அந்தக் குழந்தையின் மாமன்மார் மூவரும் மீண்டும் வருவார்கள்; புதுவாழ்வை தந்து

முத்தம் தருவார்கள். என்பதனை,

மாமன்மார் மூவர்தம்பி - நல்ல
வாழ்வளிக்க வருவார் உன்
மாம்பழக் கன்னத்திலே - முத்த
மாரி பொழிந்திட வருவார்.''

மாணிக்கப் பாலாடை - ப்ச்சை
மாமணித் தொட்டிலுடன் - சின்ன
மாமன் தருவார் சீதனமாய்''

என்கிறார். கவிஞரின் இந்தத் திருவாசகங்களுக்கு உருகார், தமிழ்க் கவிச்சுவை அறியாதவரே எனத் துணிந்து கூறலாம்! 'பராசக்தி' படத்தில் இடம் பெற்று மிகப்பிரபலமான, ''ஓ ரசிக சீமானே'' - பாடலையும், ''புதுபெண்ணின் மனதைத் தொட்டு -போறவரே'' என்ற பாடலையும் காமாட்சியே எழுதியுள்ளார்.

இனி -

கவிஞர் 'கண்கள்' படத்தில் எழுதிய பாடலொன்றைப் பார்ப்போம்.

''காதலாகி கசிந்து கண்ணீர் மல்கியே
கற்பூரம் மென்மலர் தன்னையும் சாற்றியே
பாடிப்பாடி தினம் தேடினாலும் - அவன்
பாதம் காண முடியாது! - ஈசன்
பாதம் காண முடியாது!
நாடி நாடி மனம் வாடி நொந்தவர்
கோடி கோடி இந்த உலகில்''

என்று சொல்லும் கவிஞர்,

''அற்புதங்கள், பல செய்திடும் சித்தர்கள்
அகத்திலும் ஆண்டவன் இல்லை!

என்றுரைத்து,

''நற்பயனில்லாத நாச வேலைகள் செய்யக்
கற்ற விஞ்ஞானத்திலும் இல்லை''

என்று ஆணித்தரமாகச் சொல்கிறார் கவிஞர். அப்படி என்றால் கடவுள் எங்கே? இதோ கவிஞர் சொல்கிறார்:

''விற்பன்னர்போல் வேஷமிடும் கலைஞர்

வெம்பகை நெஞ்சிலும் இல்லை!
கற்புள்ள மாதர்கள் காணும் - உழவர்கள்
கருத்திலே வாழ்கிறான் கடவுள்...''

மேற்காணும் அற்புதமான சிந்தனை நயமுள்ள பாடலைக் கவிஞர் புனைவதற்கு அடித்தளமாக அமைந்தது தாகூர் 'கீதாஞ்சலி'யில் எழுதிய பாடலொன்றே யாகும்! 'எதிர்பாராதது' படத்தில் இடம்பெற்ற,

''சிற்பி செதுக்காத பொற்சிலையே - எந்தன்
சித்தத்தை நீ அறியாயோ?''

எனத் தொடங்கும் பாடலையும் காமாட்சி அற்புதமாக எழுதியுள் ளார். அப்பாடலின் சரணமாக அமைந்த,

''கற்பனைக் கெட்டாத அற்புதங்கள் தன்னை
காண்பதும் உன் செயலாலே!
கற்கண்டு பாகும் கனிரசந் தேனும்
கசந்திடும் உன் மொழியாலே
கசந்திடும் உன் மொழியாலே

என்று கவிஞர் எழுதியுள்ளது மிக மிக உருக்கமாக உள்ளது.

1955 - 56-ஆம் ஆண்டுகளில் வாரத்தில் ஏழு நாட்களும் இலங்கை வானொலி நிலையத்தார் இப்பாடலை ஒலிபரப்பி என் போன்ற பல் லாயிரக்க ணக்கான நேயர்களை மகிழ்வித்தார்கள்.

'நானே ராஜா' படத்தில் இன்ப போதையில் கதாநாயகன் பாடுவதாக அமைந்த,

''மந்தமாருதம் தவழும் சந்திரன் வானிலே திகழும்
இந்த வேளையே இன்பமே ஏகாந்தமான
இந்த வேளையே இன்பமே!''

எனத் தொடங்கும் பாடலில்

''கண்படைத்த பயனை நானே
கண்டு கொண்டேன் உன்னால் மானே
பெண்ணுருவாய் வந்தென் முன்னே
பேசுந்தெய்வம் நீயே கண்ணே

போன்ற வரிகளிலும் இலக்கிய நயம் கொஞ்சக் காணலாம்! இதே பாடலில்

''விழித்து என்னைப் பார்ப்பதாலே

விபரம் ஒன்றும் புரிந்தேனில்லை
பழுத்த மாம்பழத்தைக் கண்டு
பசித்தவன் காத்திருப்பதில்லை''

என்ற வரிகளும் தமிழின்பம் கரைபுரளும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது!

'அமர தீபம்' படத்தில்

''தேன் உண்ணும் வண்டு மாமலரைக் கண்டு
திரிந்தலைந்து பாடுவதேன் ரீங்காரம் கொண்டு''

என எழிலோடு பாடலைத் தொடங்கி

''வீணை இன்பநாதம் எழுந்திடும் விநோதம்
விரலாடும் விதம் போலவே
காற்றினிலே - தென்றல் காற்றினிலே
சலசலக்கும் பூங்கொடியே கேளாய்''

என்று அழகுமின்ன எழுதுகிறார் காமாட்சி.

அதே பாடலில்

''மீன் நிலவும் வானில் வெண்மதியைக் கண்டு
ஏன் அலைகள் ஆடுவதும் ஆனந்தம் கொண்டு
மென் காற்றே நீ சொல்லுவாய்
மென் காற்றே நீ சொல்லுவாய்''

என்று நயமுற எழுதியுள்ளார் கவிஞர்.

'துளி விஷம்' படத்தில்

''விண்ணிலே தவழும் மதி மண்ணில் வரக்கண்டேனே
'வண்ணமதில் நானே மனம் பறிகொடுத்தேனே''

என்ற அழகான பாடலொன்றை யாத்துள்ளார் காமாட்சி.

இனி கவிஞர் எழுதிய சில பாடல்களை முழுமையாகக் காண்போம்

## செந்தமிழும்...

*படம்: வாழ்க்கை ஆண்டு : 1949*
*இசை: ஆர்.சுதர்சனம்*

*ஆ/பெ:* செந்தமிழும் சுவையும் போலவே - நம்

காதலால் மிகுசுகமே பெறவாழ்வோம்

பெ: என் மனமே கவரும் நாதனே - நம்
வாழ்விலே புது உலகம் காண்போமே

ஆ: ஓ.... மன மோகினி!
நாம் வீணையும் நாதமும் போல்

பெ: ஒன்றாக ஆனந்தமாய் வாழ்வோம்
ஒன்றாக ஆனந்தமாய் வாழ்வோம்

ஆ: எந்நாளும் இணைபிரியோம் நாமே
எந்நாளும் இணைபிரியோம் நாமே

ஆ/பெ: செந்தமிழும் சுவையும் போலவே நம்
காதலால் மிகுசுகமே பெற வாழ்வோம்

பெ: ஆ... கலைமாமணி
கலைமாமணியே எந்நாளும்
ஈருடல் ஒருயிர் ஆனோமே
ஈருடல் ஒருயிர் ஆனோமே
எந்நாளும் இணைபிரியோம் நாமே
எந்நாளும் இணைபிரியோம் நாமே

ஆ: கடலும் அலையும் நிலவும் ஒளியும்
உடலும் உயிரும் நாம்

ஆ/பெ: செந்தமிழும் சுவையும் போலவே - நம்
காதலால் மிகுசுகமே பெறவாழ்வோம்

## வசந்த முல்லை...

*படம்: ஓர் இரவு ஆண்டு : 1951*
*இசை: ஆர்.சுதர்சனம்*

வசந்த முல்லையும் மல்லிகையும்
அசைந்தே ஆடிடுதே
அசைந்தே ஆடிடுதே
இசைந்த காதலன் சேகரனை
மனம் நாடுதே - என் (வசந்த)

மனம் நாடுதே!

உயர்ந்த வானவில் போலே - உடை
ஒய்யாரமாய் அணிவேனே இனி நானே - என்
அழகெனும் போதையில் தானே - மயங்கி
ஆடிடச் செய்திடுவேனே

உள்ளத்தில் இன்பம் பெறவே
நான் பாடுவேன்...
அன்பாய் பேசினால் - நான்
வம்பாய் பேசுவேன் - என்பால்
வாவென்றால்... எட்டி ஓடுவேன்! (வசந்த)

## பொருளே இல்லார்க்கு...

*படம்: பராசக்தி ஆண்டு : 1952*
*இசை: ஆர்.சுதர்சனம்*

பொருளே இல்லார்க்குத் தொல்லையா
புது வாழ்வே இல்லையா? (பொருளே)

இருள் நீங்கும் மார்க்கம் இல்லையா?
இறைவா நீ சொல்லையா (பொருளே)

பசியாலே வாடும் பாவிமுகத்தைப்
பார்ப்போர் இல்லையா?
எமைக் காப்போர் இல்லையா?
ஏழை எம்மை ஆதரிக்கும் இரக்கம் இல்லையா?
இருள் நீங்கும் மார்க்கம் இல்லையா?
இறைவா நீ சொல்லையா? (பொருளே)

வறுமைப்பேயை விரட்ட நாட்டில்
வழியே இல்லையா? - அதற்கு
அழிவே இல்லையா?

பொருளில்லாதார் இல்லையெனும் - உலகில்
பொருளில்லாதார் இல்லையெனும்

திருநாளே இல்லையா?
இருள் நீங்கும் மார்க்கம் இல்லையா?
இறைவா நீ சொல்லையா? (பொருளே)

## கொஞ்சும் மொழி...

*படம்: பராசக்தி ஆண்டு : 1952*
*பாடியவர்:*
*இசை: ஆர்.சுதர்சனம்*

கொஞ்சும் மொழி சொல்லுங் கிளியே - செழும்
கோமளத் தாமரைப் பூவே! (கொஞ்சும்)

ஒரு வஞ்சமில்லா முழுமதியே - இன்ப
வானில் உதித்த நல் அமுதே!
கண்ணே! கண்மணியே! கண்ணுறங்காயோ?

மாமன்மார் மூவர் தம்பி - நல்ல
வாழ்வளிக்க வருவார்! - உன்
மாம்பழக் கன்னத்திலே - முத்த
மாரி பொழிந்திட வருவார்!

மாணிக்கப் பாலாடை - பச்சை
மாமணித் தொட்டிலுடன் - சின்ன
மாமன் தருவார் சீதனமாய்! (கண்ணே)

## காதலாகி கசிந்து...

*படம்: கண்கள் ஆண்டு : 1953*
*பாடியவர்: ஜிக்கி*
*இசை: எஸ்.வி.வெங்கட்ராமன்*

காதலாகி கசிந்து கண்ணீர் மல்கியே
கற்பூரம் மென்மலர் தன்னையும் சாற்றியே

பாடிப்பாடி தினம் தேடினாலும் - அவன்
பாதம் காண முடியாது! - ஈசன்
பாதம் காண முடியாது!
நாடி நாடி மனம் வாடி நொந்தவர்
கோடி கோடி இந்த உலகில்!

அற்புதங்கள், பல செய்திடும் சித்தர்கள்
அகத்திலும் ஆண்டவன் இல்லை!
நற்பயனில்லாத நாசவேலைகள் செய்யக்
கற்ற விஞ்ஞானத்திலும் இல்லை - என்றறியாமல்
(பாடி)

விற்பன்னர் போல வேஷமிடும் கலைஞர்
வெம்பகை நெஞ்சிலும் இல்லை!
கற்புள்ள மாதர்கள் காணும் உழவர்கள்
கருத்திலே வாழ்கிறான் கடவுள் - என்றறியாமல்

பாடிப்பாடி தினம் தேடினாலும் - அவன்
பாதம் காண முடியாது - ஈசன்
பாதம் காண முடியாது!

## சிற்பி செதுக்காத...

*படம்: எதிர்பாராதது ஆண்டு : 1954*
*பாடியவர்: ஏ.எம்.ராஜா*
*இசை: சி.என்.பாண்டுரங்கன்*

சிற்பி செதுக்காத பொற்சிலையே - எந்தன்
சித்தத்தை நீ அறியாயோ? (சிற்பி)

அற்ப செயலுக்கு இப்படியும் - மன
அவஸ்தைப்பட விடுவாயோ? (சிற்பி)

கற்பனைக்கெட்டாத அற்புதங்கள் தன்னை
காண்பதும் உன் செயலாலே!
கற்கண்டு பாகும் கனிரசந் தேனும்
கசந்திடும் உன் மொழியாலே!
கசந்திடும் உன் மொழியாலே! (சிற்பி)

## மந்த மாருதம்...

*படம்: நானே ராஜா ஆண்டு : 1956*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை:*

மந்த மாருதம் தவழும் சந்திரன் வானிலே திகழும்
இந்த வேளையே இன்பமே ஏகாந்தமான
இந்த வேளையே இன்பமே!

வந்து வந்து வீசும் முல்லை
மணத்திற்கேதும் ஈடே இல்லை!
செந்தமிழ்ப் பெண்ணைப் போலே
சிரிக்குதே தென்னம் பாலை (இந்த)

கண்படைத்த பயனை நானே
கண்டு கொண்டேன் உன்னால் மானே!
பெண்ணுருவாய் வந்தென் முன்னே
பேசுந்தெய்வம் நீயே கண்ணே!

பொன் பொருள் யாவும் துன்பமே
உன்னோடு பேசும் இந்த வேளையே இன்பமே!

விழித்து என்னைப் பார்ப்பதாலே
விபரம் ஒன்றும் புரிந்தேனில்லை
பழுத்த மாம்பழத்தைக் கண்டு
பசித்தவன் காத்திருப்பதில்லை!
கருத்தைக் கொள்ளைகொண்டாய் வாழ்விலே
உன்னோடு பேசும் இந்த வேளையே இன்பமே

## தேன் உண்ணும் வண்டு...

*படம்: அமரதீபம் ஆண்டு : 1956*
*பாடியவர்கள்: ஏ.எம்.ராஜா - சுசீலா*
*இசை: டி.சலபதிராவ்*

பெ: தேன் உண்ணும் வண்டு மாமலரைக் கண்டு

திரிந்தலைந்து பாடுவதேன் ரீங்காரம் கொண்டு
பூங்கொடியே நீ சொல்லுவாய்.... ஓ
பூங்கொடியே நீ சொல்லுவாய்!

ஆ: வீணை இன்பநாதம் எழுந்திடும் விநோதம்
விரலாடும் விதம் போலவே
காற்றினிலே - தென்றல் காற்றினிலே
சலசலக்கும் பூங்கொடியே கேளாய்!
புதுமை இதில்தான் என்னவோ... ஓ
புதுமை இதில்தான் என்னவோ?

மீன் நிலவும் வானில் வெண்மதியைக் கண்டு
ஏன் அலைகள் ஆடுவதும் ஆனந்தம் கொண்டு
மென்காற்றே நீ சொல்லுவாய்
மென்காற்றே நீ சொல்லுவாய்

ஆ: கானமயில் நின்று வான் முகிலைக் கண்டு
களித்தாடும் விதம் போலவே
கலையிதுவே - வாழ்வின் கலையிதுவே
கலையிதுவே கலகலவெனும் மெல்லியப் பூங்காற்றே
காணாததும் ஏன் வாழ்விலே?... ஓ
காணாததும் ஏன் வாழ்விலே

ஆ/பெ: கண்ணோடு கண்கள் பேசிய பின்னாலே
காதலின்பம் அறியாமல் வாழ்வதும்
கலைமதியே நீ சொல்லுவாய்... ஓ
கலைமதியே நீ சொல்லுவாய்!

# கம்பதாசன்

"காளிதாசன் (அசல்) காளிதாசன் (பாரதியார்) பாரதிதாசன் (சுப்புரத்தினம்) கம்பதாசன் (ராஜப்பா) இவர்கள் நம் நாட்டு முதல்த்தர கவிஞர்கள். இவர்கள் பிறவிக் கவிஞர்கள்; பயிற்சிக் கவிஞர்கள் அல்ல"

மேற்கண்டவாறு இந்தியாவின் பெருங்கவிஞர்கள் வரிசையில் தமிழறிஞர் வ.ரா.வினால் அடையாளங் காட்டப்பட்டவர் கம்பதாசனாவார். கம்பதாசனின் 'முதல் முத்தம்' நூலுக்கு 1943-இல் அளித்த முன்னுரையில் பாவேந்தர் பாரதிதாசன்,

"கம்பதாசன் எழுதும் நூல்கள் எனக்கு மகிழ்ச்சியை அளிக்கின்றன; அவை அவராலேயே இயற்றப்பெற்றவை; அவரின் நெஞ்சினின்று தங்கு தடையின்றி எழும் ஊற்று!

அவர் எந்த நூல்களையும் பார்த்து எழுதுவதில்லை. எதையும் மொழி பெயர்த்து புகழுக்கும்; பணத்துக்கும் தம் பெயரால் வெளியிடுவதில்லை. தமிழ்நாடு நன்றிசெலுத்த வேண்டும்" என்று கூறியுள்ளார்.

இப்படி "சுய கற்பனையுள்ள கவிஞர்கள்" என்ற பாராட்டைப் பாவேந்தரிடம் பெற்றவர்கள் இருவர் ஆவர். ஒருவர் கம்பதாசன் மற்றவர் சுரதா.

கம்பதாசன் 1916-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 15-ஆம் தேதி திண்டிவனம் அருகேயுள்ள உலகாபுரத்தில் பிறந்தார்.

இயற்கைக் கவிஞரான அவர் புதிய கோணத்தில் சிந்தித்து தமிழன்னைக்கு வாடாக் கவிமலர்களைச் சூட்டியவர்.

1940-இல் ''வாமன அவதாரம்'' படம் மூலம் திரைப்படப் பாடலாசிரிய ராக அறிமுகமானார். பழைய கீர்த்தனை மரபை அடியொற்றிக் கிடந்த திரைப்பாடல்களில் பாரதி வழி மறுமலர்ச்சித் தமிழைப் பெய்த முன்னோடிக் கவிஞர் கம்பதாசனே ஆவார்.

'மங்கையர்க்கரசி' படத்தில் ஒரு மாறுபட்ட சூழ்நிலை. ஒரு அழகி மீது காதலான நாயகன்;

''பார்த்தால் பசிதீரும்
பங்கஜ வதன செங்கனி வாய்ச் சிரிப்பை
பார்த்தால் பசி தீரும்''

என்று பாடுகிறான்.

அழகி அவன் தாய் என்பதனை அவன் அறியான்!

பதிலுக்கு அவள்,

''பார்த்தால் பசி தீரும்
பாலகனே உன் சீல திருமுகத்தைப்
பார்த்தால் பசிதீரும்!''

என்று பாசம் பொங்கப் பாடுகிறாள்.

மீண்டும் அவன்,

''நேற்று நிலாவினிலே - மின்னென
நேசம் காட்டி மறைந்தாய்
காற்றின் ரதந்தனிலே - வந்தனை
கந்தர்வ மோகினியே''

என்கிறான்.

இப்படியாக ஒரு விசித்திரமான சூழ்நிலைக்குத் தகுந்தவாறு மிகுந்த மொழி நயத்தோடு பாடலைத் தீட்டியுள்ளார் கவிஞர்.

'இதய கீதம்' படத்திற்காக கம்பதாசன் வடித்த

''ஆசைக்கிளியை அழைத்து வாராய் தென்றலே தென்றலே''

எனத் தொடங்கும் பாடலில்

''மேகம் தன்னில் மின்னல் போல ஜாலம் செய்கின்றாளே!
மோகவலை வீசும் கண்கள் ஜோதியான தாரையே''

என்று அற்புதமாகச் சித்தரிக்கிறார்.

"அழகின் மனோராணி
ஆடுகின்றாளே நிலவினிலே
அநுராக நவகீதம் - அவள்
பாடுகின்றாளே தென்றலிலே"

என்ற வரிகளிலும் கவிஞரின் நுட்பமான கவிதா சக்தி மேலோங்கிநிற்கிறது.

'கண்ணின் மணிகள்' படத்தில் காதல் தத்துவத்தை அற்புதப் பாட்டாகத் தருகிறார் கவிஞர்

"காதல்! காதல்! காதல்!
கண்டு கொண்டேன் நானே - காதல்
என்னவென்று தானே"

எனத் தொடங்கும் பாடலில் காதல் எத்தகையது என்பதனை,

"விண்ணின் விரிவிலுமே பெரிது
ஆல வித்திலுமே சிறிது
தண்ணீரதிலுமே மெலிது
உயர் ஜகமதிலுமே பெரிது"

என்ற வரிகளால் வனப்புறச் சொல்கிறார்.

அப்பாடலில்,

"கண்டிடாப் போது கலங்கும்
நேரில் காண்கையில் கர்வத்தால் குலுங்கும்"

என்ற வரிகள் எத்துணை உண்மை என்பதனை காதல் வசப்பட்டவர்கள் தெளிவாக உணர்வார்கள்.

'ஓடி விளையாடு பாப்பா' படத்தில் இடம்பெற்ற,

"பாட்டு முடியுமுன்னே மீட்டிய வீணையை
பக்கம் வைத்தே நடந்தாய் இனிதாய்

என்ற பாடலை கம்பதாசன் அற்புதமாக வடித்துள்ளார்.

அப்பாடலில்

"கேட்ட நினைவே கண்ணீர்த் துளியில்
கீதம் இசைக்குதடி"

என்ற வரிகளும் பிரிவு வாதையை உயிரோட்டமுள்ள இலக்கியமாய் கவிஞர் செதுக்கி உள்ளதை எமக்குத் தெளிவாக உணர்த்துகிறது.

'மாமன் மகள்' படத்தில் இடம் பெற்ற,

"ஆசை நிலா சென்றதே
அபலைக் கண்ணீரில் நீந்தியே"

என்ற பாடலிலும் காதல் பிரிவை சொல்லோவியமாக வடித்துள்ளார் கவிஞர்.

'பூங்கோதை' படத்தில்,

"நான் ஏன் வரவேண்டும்? ஏதுக்காகவோ?
யாரைக் காண்பதற்கோ?
வான் நட்சத்திரம் மாங்குயில் அழைத்தாலும்
வையகந்தனிலே வருமோ?
வலை கண்டும் மான் வீழ்ந்திடுமோ?"

என்ற பாடல் உன்னதமான இலக்கியப் பாங்கோடு அமைந்துள்ளது.

இதுகாறும் யான் கூறியவற்றால், 'காதல் பாடல்களை' திரைப்படங்களில் கம்பதாசன் எத்துணை இலக்கியப் பாங்கோடு பின்னியுள்ளார் என்பதனை உணர்ந்திருப்பீர்கள்.

கவிஞருக்கு மிகவும் புகழ் கொடுத்த பாடல்களில்,

"கனவு கண்ட காதல்
கதை கண்ணீராச்சே"

"கல்யாண ஊர்வலம் வரும்
உல்லாசமே தரும்"

போன்ற பாடல்களையும் சொல்ல வேண்டும்.

இனி கவிஞரின் முற்போக்குச் சிந்தனைகளை உள்ளடக்கிய சில பாடல்களைப் பார்ப்போம்.

"நன்னம்பிக்கை' படத்தில் தொழிலாளியைப் பற்றி புதிய பார்வையுடன் கவிஞர் பாடல் அமைத்துள்ளார்.

"சூரியனும் ஒரு தொழிலாளி - தினம்
சுற்றும் உலகும் தொழிலாளி"

எனத் தொடங்கும் அரிய பாடலின் இறுதியடிகளை

"பாரை நடத்தும் தொழிலாளி - இனி
பரமனடா கலை பிரமனடா"

என கம்பீரமாக அமைத்துள்ளார்.

'தந்தை' படத்தில் தொழிலாளர்கள் பாடுவதாக அமைந்த பாடலை

''நாமே முதலாளி நமக்கினி
நாமே தொழிலாளி
இம்மானிட வாழ்வின் போரினிலே
முன்னேறும் படையாளி

ஓரோர் செவ்விய ரத்தத் துளியும்
உஷ்ண வேர்வை மழையாக்கி
உழைப்பினாலே மண்ணிலே
பொன் விளைப்போம்''

என்று எடுப்பாக எழுதியுள்ளார் கவிஞர்.

'பூம்பாவை' படத்தில்

''சின்ன வயதிலே கன்னித் தமிழிலே
சொன்னான் ஒரு பாட்டு
என்று போடுகிறோமே வேட்டு''

என்று எழுதும் கவிஞர்,

''உழைப்பதன் வெற்றிப் பயனே அருளாம்
உண்மை தெரிந்திடா விளைவும்,
மோட்சம், கடவுள் கூட்டம்
வீணான வார்த்தையடி''

எனத்தொடர்ந்து புரட்சிச் சிந்தனைகளைத் தூவுகிறார்.

'பிரியசகி' படத்தில், ''கடவுளே காலம் மாறியதே'' எனத் தொடங்கும் பாடலின் இறுதி நான்கு அடிகளை,

''விந்தை மாளிகை அமைத்தவன் தனக்கு
குந்தக் குடிசையில்லை நாட்டிலே
இந்தக் கொடுமையை மாற்றிப் புது விதி
எழுதாயோ பொன் ஏட்டிலே''

என்று ஆவேசமாகத் தீட்டியுள்ளார் கவிஞர்.

உன்னதமான சோசலிச கவிஞரான கம்பதாசன், முற்போக்குச் சிந்தனைகளை உள்ளடக்கிய பாடல்களையும், அற்புதமான காதல் பாடல்களையும் திரைப்படங்களில் தீட்டியவர். கண்ணதாசன், கல்யாணசுந்தரம் போன்ற கவிஞர்களுக்கு முன்னோடியாக அமைந்தவர்.

இலக்கிய உலகிலும், திரையுலகிலும் பெருஞ்சாதனை நிகழ்த்திய கம்பதாசன் 1973-இல் மறைந்தார்.

இனி கவிஞரின் சில பாடல்களை முழுமையாக அனுபவியுங்கள்.

## சூரியனும் ஒரு தொழிலாளி...

*படம்: நன்னம்பிக்கை*
*பாடியவர்: எஸ்.வி.வெங்கட்ராமன்*
*இசை: எஸ்.வி.வெங்கட்ராமன்*

சூரியனும் ஒரு தொழிலாளி... தினம்
சுற்றும் உலகும் தொழிலாளி
வாரி அலையும் தொழிலாளி... எதிர்
வந்திடும் காற்றும் தொழிலாளி
மாரி நதியும் தொழிலாளி... இருள்
மலரும் உடுவும் தொழிலாளி
பாரை நடத்தும் தொழிலாளி... இனி
பரமனடா கலை பிரமனடா

## ஒருவருக்கும் தாழோம்...!

*படம்: தந்தை ஆண்டு : 1944*
*இசை: திவாகர்*

நாமே முதலாளி நமக்கினி நாமே தொழிலாளி
இம் - மானிட வாழ்வின் போரினிலே
முன்னேறும் படையாளி...

ஓரோர் செவ்விய ரத்தத் துளியும்
உஷ்ண வேர்வை மழையாக்கி
உழைப்பினாலே மண்ணிலே பொன் விளைப்போம்!

ஒருவரும் பிச்சைக்காசு தரவேண்டாம்
உடல் தன் வலிமையால் -
நரம்பு துடிக்கும் வரை பார்மீதிலே...

உடலின் சக்தியில் கலாசித்தியில்
உயர்ந்தோம் எவரோடும்
உழைப்பைத் தந்தே உரிமை கேட்போம்

ஒருவருக்கும் தாழோம் - நாம்
ஒருவருக்கும் தாழோம்!

உள்ள வேலையை தெளிவுடன் செய்தே
ஊதியந்தான் கேட்போம்
உற்ற கூலியைத் தட்டிப் பறித்தால்
உயிர் ஈந்தும் பெறுவோம் - நாம்
உயிர் ஈந்தும் பெறுவோம்!

## உழைப்பதன் வெற்றி...

*படம்: பூம்பாவை*
*பாடியவர்: என்.எஸ்.கே*

சின்ன வயதிலே கன்னித் தமிழிலே
சொன்னான் ஒரு பாட்டு
என்று போடுகிறாயே வேட்டு

உழைப்பதன் வெற்றிப் பயனே அருளாம்
உண்மை தெரிந்திடா விளைவும்,
மோக்ஷம், கடவுள் கூட்டம்
வீணான வார்த்தையடி!

கங்கையினால் தங்கக்குடம்
நிரப்பும் என் கண்மணி
காதலன் நெஞ்சம் களிப்புறச்
செய்வாய் நீயே பெண்மணி

வெண் பனியிற் குளித்துச்
சோலை மலர்கள் ஆடுதே
இதைக் கண்டதும் நீரில்
ஆட ஆசை கூடுதே!

## பாட்டு முடியுமுன்னே...

*படம்: ஓடி விளையாடு பாப்பா*
*பாடியவர்: பி.பீ.சீனிவாஸ்*

பாட்டு முடியுமுன்னே மீட்டிய வீணையை
பக்கம் வைத்தே நடந்தாய் இனிதாய் (பாட்டு)

கேட்ட நினைவே கண்ணீர்த் துளியில்
கீதம் இசைக்குதடி - காதல் (பாட்டு)

தாரகை சிரிப்பொலி தாவி என் காதை
தருணி மின்நினைவே மயக்கிடும் போதை
பூர்ண நிலாமுகம் போனதும் எங்கே
புயலில் குயில் இங்கே - வாழ்வின் (பாட்டு)

தாவிய கடல் அலை கரைதனை தொட்டுமே
தணல் மெழுகதுபோல் உருகிச் சென்றாலும்
மேவிய அலையின் வடுவே மண்ணில்

மின்னி மிளிராதோ
மின்னி மிளிராதோ
மின்னி மிளிராதோ

## கண்டு கொண்டேன் நானே...

*படம்: கண்ணின் மணிகள் ஆண்டு : 1959*
*பாடியவர்: மோதி - பாலசரஸ்வதி*
*இசை: எஸ்.வி.வெங்கட்ராமன்*

காதல்! காதல்! காதல்!
கண்டு கொண்டேன் நானே
காதல் என்னவென்று தானே

விண்ணின் விரிவிலுமே பெரிது
ஆல வித்ததிலுமே சிறிது

தண்ணீ ரதிலுமே மெலிது
உயர் ஜகமதிலுமே பெரிது (கண்டு)

கண்டிடா போது கலங்கும்
நேரில் காண்கையில் கர்வத்தால் குலுங்கும்
பெண்மையை ஆண்மையால் மாற்றும்
ஆண்மையை பேச்சற மயக்கினில் ஏற்றும் (கண்டு)

வண்டு போல மலர்தனில் தாவும்
புது வாழ்க்கையின் ருசி எனக் கூவும்
மண்டல விதி தன்னைத் தாண்டும்
அது மனதினில் இன்பக் கனவே தூண்டும் (கண்டு)

## பார்த்தால் பசி தீரும்...

*படம் : மங்கையர்க்கரசி ஆண்டு : 1949*
*பாடியவர்: பி.யு.சின்னப்பா பெண் பாடகி*

*அவன்:* பார்த்தால் பசி தீரும்
பங்கஜ வதன செங்கனிவாய்ச் சிரிப்பை
(பார்த்தால்)

*அவள்:* பார்த்தால் பசி தீரும்
பாலகனே உன்சீல திருமுகத்தைப்
பார்த்தால் பசி தீரும்.

*அவன்:* நேற்று நிலாவினிலே - மின்னென
நேசம் காட்டி மறைந்தாய்
காற்றின் ரதந்த் னிலே - வந்தனை
கந்தர்வ மோகினியே

*அவள்:* நேற்று நிலாவினிலே - உனை
நேரில் கண்ட போதே
மாற்ற வொண்ணா பாசமே
மயக்குது எந்தனை மகனே (பார்த்தால்)

*அவன்:* மாயக் கருவிழியும், வானமுத மொழியும்
மாரன் வில்புருவமும், யௌவன பருவமும்

தோயும் மதுவண்டு நீயோ மலர்ச்செண்டு
சுவைக்கும் கரும்பை விடுவேனோ
கண்ணாரக் கண்டு (பார்த்தால்)

## வாழ்க வாழ்க பாட்டாளி...

*படம்: பாட்டாளியின் சபதம்*
*பாடியவர்: டி.எம்.எஸ். - சுசீலா*
*இசை: ஓ.பி.நய்யார்*

குழு: வாழ்க வாழ்க பாட்டாளியே

அவள்: வாழ்க வாழ்க பாட்டாளி
தாழ்வில்லாத வழியே இங்கே
அமைத்திட வாரும் கூட்டாளி

அவன்: வாழ்க... வாழ்க... பாட்டாளியே

குழு: வாழ்க வாழ்க பாட்டாளியே

அவன்: நமது பாட்டாளி தோழரின் ஒற்றுமை
மனதால் ஜெகம் வெல்வாரே
ஆழ் கடலே வழி உண்டாக்க
பெரும்மலையே தலைதனை தாழ்த்த
வைரந்தானே நெஞ்சே நமக்கே
இரும்பே கைகள் பாராய்!

குழு: வைரந்தானே நெஞ்சே நமக்கே
இரும்பே கைகள் பாராய்

நண்பன்: நாம் நினைத்தாலோ மலையைத் துளைத்தே
காண்போம் இங்கே பாதை

குழு: நாம் நினைத்தாலோ மலையைத் துளைத்தே
காண்போம் இங்கே பாதை
வாழ்க... வாழ்க... பாட்டாளியே

நண்பன்: விதியது உழைப்பாய் கொண்டனை நீதான்
உழைத்திடவே அஞ்சுவதா?

நேற்று நீ அந்நியனை மதித்தனையே
இன்று உனையே மதித்திடு தோழா

அவள்: நமது துக்கமே ஒன்றே தோழா
நமக்கே சுகமே ஒன்றே!

# கு.சா.கிருஷ்ணமூர்த்தி

கவிஞர் கு.சா.கி. பல நாடகங்களுக்குக் கதை, வசனம், பாடல்கள் எழுதிய பழுத்த அநுபவத்தோடு திரைப்படத்துறையில் நுழைந்தவர்.

அவர் முதன் முதலாக "மங்கையர்க்கரசி" படத்தில் பி.யூ.சின்னப்பா பாடிய

**"காதல் கனிரசமே"**

என்ற சிறந்த பாடலை எழுதினார்.

கு.சா.கி.யின் பிரபல நாடகமான 'அந்தமான் கைதி' திரைப்படமாக்கப் பட்ட போது அதற்குத் திரைக்கதை, வசனம் எழுதி சில அருமையான பாடல்களையும் எழுதினார்.

**ஐஞ்சு ரூபா நோட்டு**
**கொஞ்சமில்ல காசு"**

என்ற பாடல் அந்தக் காலத்தில் மிகவும் பிரபலம்.

அந்தப் படத்தில்,

**"வாழ்வின் ஜீவன் காதலே**
**வளரும் அன்பின் நிலையாலே**
**ஜெகமீதிலே**

என்று அருமையாக கவிப்பண்புகள் பொருந்துமாறு பாடலை ஆரம்பித்து,

**"சூழும் இன்பம் யாவுமே - மெய்க்**
**காதலால் உண்டாகுமே!**

மீளாத் துன்பம் மூளும் எந்நாளும்
காதலர் பிரிவாலே

என்று தொடர்ந்து இணைந்த காதலின் இன்பத்தையும் அதன் பிரிவால் நேரும் துன்பங்களையும் கவிஞர் இயல்பாகப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

'ராஜராஜன்' படத்தில் கு.சா.கி. எழுதிய.

"நிலவோடு வான்முகில் - விளையாடுதே"

என்ற பாடல் மிக அருமையானதாகும்.

நாயகி,

"புதுப்பாதைத் தனைக்காண மனம் நாடுதே - உண்மை
புரியாமல் வெட்கம் வந்து திரை போடுதே!

என்றுபாட, நாயகன்

"மதுவுண்ட மகிழ்வோடு வரும் காதல் வண்டின்
மனம் நோக மலரே உன் இதழ் மூடுமா?"

என்று பாடுவது வெகு நேர்த்தியாக உள்ளது.

கவிஞர் கு.சா.கிருஷ்ணமூர்த்திக்கு அழியாத புகழ்கொடுத்த பாடல், இரத்தக் கண்ணீர் படத்தில் இடம்பெற்ற,

"குற்றம் புரிந்தவன் வாழ்க்கையில்
நிம்மதி கொள்வதென்பதேது?"

எனத் தொடங்கும் அற்புதமான பாடலாகும்.

அப்பாடலில்,

"அமைதி அழிந்தது புயலும் எழுந்தது
ஆணவம் இன்றோ டொழிந்தது"
"குணத்தை இழந்தவன் இறுதியிலே
நல்ல சுகம் அடைவதேது?"

போன்ற வரிகளில் தான் எத்தனை நளினம்

"தைபிறந்தால் வழிபிறக்கும்" படத்திற்காக கு.சா.கி எழுதிய,

"எளியோரைத் தாழ்த்தி
வலியோரை வாழ்த்தும்
உலகே உன்செயல்தான் மாறாதா?"

என்ற வரிகள் உலகியலை யதார்த்தமாகப் படம் பிடித்துக் காட்டுகி றது!

அன்பு அண்ணன்,

"அறியாத நங்கை என்தாசை தங்கை
கதியேதும் காணாமல் மனம் நோவதோ"

என்று பாட,

தங்கை,

"சிறகே இல்லாத கிளிபோல ஏங்கி
உனைக் காணவே என்உளம் வாடுதே!"

என்று பதிலிறுப்பது நெஞ்சை உருக்கும் வண்ணம் அமைந்துள்ளது. இருமனங்கலந்து அது திருமணத்தில் முடிந்தால் எத்துணை இன்பம்!

இதனை 'பதியே தெய்வம்' படத்திற்காக எழுதிய பாடலில் கவிஞர்,

"இன்பம் பொங்குமே - என்றும்
இன்பம் பொங்குமே - ஆண், பெண்
இதயம் ஒன்றாக
இணைந்தோரின் இல்வாழ்வில்
இன்பம் பொங்குமே"

என்று அழகாககூறுகிறார். ஒருபெண்ணின் வாழ்க்கை, அவள் மணம் செய்தால் தான் மேன்மையுறும் என்பதனை,

"செங்கதிர் வரக்கண்டு சிங்காரத் தாமரை
தேன்மலர் இதழ்திறந்து சிரிப்பதைப் போல்
மங்கையர்க்கே திருமணமேவும் மாங்கல்யம்
வாழ்வில் நலம்தேக்கி சூழும் துயர் போக்கி"

என்ற வரிகளால் நயமாகச் சொல்கிறார் கவிஞர். 'பதியே தெய்வம் படத்தில் இடம் பெற்ற பிறிதொரு பாடலில் பெண்மையை மிகவும் சிறப் பித்து,

"பெண்ணின் பெருமையே பெருமை - அன்பின்
தன்மையும், தாய்மையும் தழைத்திடும் - அருமை"

என்று எழுதியுள்ளார் கவிஞர்.

பெண்கள் அழகற்றவர்களாக அமைந்துவிட்டால் ஆடவர்கள் அவ ளைக் கொண்டாடுவது இல்லை. இது தவறு என்பதனை,

''அன்பும் குணமும் உயர்ந்த அறிவும் இருக்கும் போது
அழகில்லை என்றால் அதனால் குறையேது''

என்ற வரிகள் மூலம் கவிஞர் கவினோங்க உணர்த்துகிறார்.

அருமையான, திரைப்படப் பாட லாசிரியர்களில் கு.சாகி.யும் ஒருவர். தமிழ்நாடக வரலாற்று நூலொன்றையும் அவர் நுணுக்கமாக ஆராய்ந்து வெளியிட்டுள்ளார். அன்னாரின் சிறந்த மரபுக் கவிதைகளை உள்ளடக்கிய தொகுதி ஒன்றும் வெளியாகி உள்ளது.

பல வருடங்களுக்கு முன்பு மறைந்துவிட்ட கவிஞர் கு.சா.கி. தீட்டிய தீந்தமிழ்த் திரைப்படப் பாடல்கள் சிலவற்றை முழுமையாகக் காணுங்கள்.

## வாழ்வின் ஜீவன்....

*படம்: அந்தமான் கைதி*

*பாடியவர்: கண்டசாலா*

*இசை: கோவிந்தராஜுலு நாயுடு*

*ஆண்டு: 1952.*

வாழ்வின் ஜீவன் காதலே
வளரும் அன்பின் நிலையாலே - ஜெமீதிலே
சூழும் இன்பம் யாவுமே - மெய்க்
காதலால் உண்டாகுமே! (சூழும்)
மீளாத் துன்பம் மூளும் எந்நாளும்
காதலர் பிரிவாலே. (வாழ்வின்)

கண்வழிஏகி கருத்தினில் மேவி
கலந்திடும் அழியா ஓவியமே!
விண்ணுயர் வானவில் மோகனக் கலையெழில்
விந்தைக் காவியமே! (விண்)

வாழ்வின் ஜீவன் காதலே
வளரும் அன்பின் நிலையாலே
ஜெகம் மீதிலே

ஆதவன் காணாத் தாமரைபோல் - குளிர்
அம்புலி காணா அல்லிபோல் (ஆதவன்)

மாமுகில் காணாத் தோகையைப் போலும்
வாடிடுமே மனமே (வாழ்வின்)

## நிலவோடு வான்முகில்...

*படம்: ராஜராஜன்*

*பாடியவர்கள்: சீர்காழி - ஏ.பி.கோமளா*

*இசை : கே.வி.மகாதேவன்.*

*ஆண்டு: 1957*

பெ: நிலவோடு வான்முகில் விளையாடுதே - அந்த
நிலைகண்டு என்உள்ளம் துணைதேடுதே!
(நிலவோடு)

ஆ: எழில் மேவும் கண்கள் என்மேல் வலைவீசுதே!
இனிதாகவே இன்பக் கதை பேசுதே!
(நிலவோடு)

பெ: புதுப்பாதைத் தனைக்காண மனம் நாடுதே - உண்மை
புரியாமல் வெட்கம் வந்து திரைபோடுதே

ஆ: மதுவுண்ட மகிழ்வோடு வரும் காதல் வண்டின்
மனம்நோக மலரே உன் இதழ் மூடுமா?

பெ: இதயம் ஒன்றாகி உறவாடுவோம்!

ஆ: எந்நாளும் பிரியாத நிலைகாணுவோம்
(நிலவோடு)

## குற்றம் புரிந்தவன்...

*படம்: ரத்தக் கண்ணீர்*
*பாடியவர்: சி.எஸ்.ஜெயராமன்*
*இசை: சி.எஸ்.ஜெயராமன்*

குற்றம் புரிந்தவன் வாழ்க்கையில்

நிம்மதி கொள்வதென்ப தேது?

அற்றது உலகில் அமைதியும், மகிழ்வும்,
அரும்பிட முடியாது!

அமைதி அழிந்தது புயலும் எழுந்தது
ஆணவம் இன்றோ டொழிந்தது!

குணத்தை இழந்தவன் இறுதியிலே
நல்ல சுகம் அடைவதேது? (குற்றம்).

## எளியோரைத் தாழ்த்தி...

*படம்: தை பிறந்தால் வழிபிறக்கும்*
*பாடியவர்கள்: டி.எம்.எஸ்., பாலசரஸ்வதி*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு: 1958.*

ஆ: எளியோரைத் தாழ்த்தி
வலியோரை வாழ்த்தும்
உலகே உன் செயல்தான் மாறாதா?
(எளியோரை)

பெ: பரிதாபம் நெஞ்சில் சிறிதேனும் இல்லா
படுபாவியால் வாழ்வு பறிபோவதோ?

ஆ: அறியாத நங்கை எனதாசை தங்கை
கதியேதும் காணாமல் மனம் நோவதோ?
(எளியோரை)

பெ: சிறகே இல்லாத கிளிபோல ஏங்கி
உனைக்காணவே என் உளம் வாடுதே!

ஆ: பறந்தோடி வந்துன் குறைதீர்க்க - என்னைச்
சிறைக்காவல் இங்கே தடை போடுதே!
(எளியோரை)

## இன்பம் பொங்குமே....

*படம்: பதியே தெய்வம்*
*பாடியவர்: டி.ஏ.மோதி*

*ஆண்டு: 1956*

இன்பம் பொங்குமே - என்றும்
இன்பம் பொங்குமே - ஆண் பெண்
இதயம் ஒன்றாக
இணைந்தோரின் இல்வாழ்வில் (இன்பம்)

தன்னை மறந்து சரசநிலையில் திகழ்ந்து
மன்னுயிர் எல்லாம் மனம் மிகவே மகிழ்ந்து (இன்பம்)

செங்கதிர் வரக்கண்டு சிங்காரத் தாமரை
தேன்மலர் இதழ்திறந்து சிரிப்பதைப் போல்
மங்கையர்க்கே திருமணமேவும் மாங்கல்யம்
வாழ்வில் நலம் தேக்கி சூழும் துயர்போக்கி (இன்பம்)

காதலினால் அன்பு கனிவதே. சிலாக்கியம்
கன்னியா தானமே காதலின் பாக்கியம்
நாதமும் வீணையும் இழைவதைப் போலே
நாயகன் நாயகி வாழ்வில் மென்மேலே (இன்பம்)

## பெண்ணின் பெருமை...

*படம்: பதியே தெய்வம்*
*பாடியவர்: ஏ.எம்.ராஜா.*
*ஆண்டு: 1956*

பெண்ணின் பெருமையே பெருமை - அன்பின்
தன்மையும் தாய்மையும் தழைத்திடும் - அருமை
(பெண்)

உன்னதமாகிய கனவே நினைவாக
உருவாக்கியே வாழ வழிகாட்டிடும் தெய்வம் (பெண்)

அன்பும் குணமும் உயர்ந்த அறிவும் இருக்கும் போது
அழகில்லை என்றால், அதனால் குறையேது?
பண்பும் நற்குடிப்பிறப்பும் மிகநிறைந்து
பதிவாழ்வையே தனது நிதியாகக் கருதும் - உத்தமப்
(பெண்)

# கொத்தமங்கலம் சுப்பு

ஜெமினிவாசன் தயாரித்த பல பிரபலமான படங்களுக்குக் கதை, வசனம், பாடல்கள் யாத்தும், சில படங்களை இயக்கியும் பெரும் புகழீட்டியவர் இவர்.

நாட்டுப்புறப் பாடல்களில் ஊறித்திளைத்த இவர், மாவீரன் கட்டபொம்மன், மகாத்மா காந்தி போன்றோர் சிறப்புகளை நாட்டுப்புறப் பாடற் பாணியில் வரைந்து பெருமை பெற்றார்.

'தில்லானா மோகனாம்பாள்' இவர்தம் பிரசித்த நாவல்.

சுப்பு திரைப்படப் பாடல்களிலும் தமது திறமையை செம்மையாக இனம் காட்டியுள்ளார்.

'சம்சாரம்' ஜெமினி நிறுவனம் தயாரித்த உன்னதமான சமூகச் சித்திரம். அப்படத்தில் ஒரு நல்ல குடும்பத்திற்கு அமைய வேண்டிய இயல்புகளைச் சித்தரித்து அருமையான பாடல் எழுதியுள்ளார் சுப்பு.

**''சம்சாரம்! சம்சாரம்**
**சகலதர்மசாரம் - சுகஜீவன ஆதாரம்''**

என்ற வரிகள் இல்லறவாழ்வின் மகிமையை இனங்காட்டுவதாகவும்,

**''உறவோடு உண்ண வேண்டும்**
**ஊரோடு வாழ வேண்டும்**
**பெரியோரைப் பணிய வேண்டும்**
**சிறியோரைக் காக்க வேண்டும்.''**

என்ற வரிகள் தம்பதிக்குச் சீரிய போதனை நல்குவதாகவும் அமைந்துள்ளன.

குடும்ப வாழ்வில் வேதனைகள் நேரினும் அவற்றை தம்பதி தாங்கிக் கொள்ள வேண்டும் என்பதனை;

**''சம்சார சாகரத்தில் - துயர்**
**தாங்கொணாத போதும்**
**தாரமோடு கணவன் - அதைக்**
**தாங்கி வாழ வேண்டும்.''**

என்ற வரிகள் மிக அழகாக எடுத்தியம்புகிறது.

வறுமையின் கொடுமையைப் பற்றியும் 'சம்சாரம்' படத்தில் சுப்பு அற்புதமான பாடல் ஒன்றைத் தீட்டியுள்ளார்.

குடும்பத் தலைவனோ வறுமையின் கொடுமை தாங்காமல் வீட்டை விட்டே ஓடிவிடுகிறான். தாயும் பிள்ளைகளும் நிர்க்கதியாகி தெருவிலே பிச்சை எடுத்து வாழும் நிலை ஏற்படுகிறது.

சின்னஞ்சிறு பிள்ளைகள் இரண்டும் பசியால் துடிதுடித்துப் பிச்சை எடுக்கின்றன. பாடிக்கொண்டே.

**''அம்மா பசிக்குதே தாயே பசிக்குதே**
**ஆண்டவன் எங்களை மறந்தது போலே**
**அன்னை நீர் மறவாதீர்**
**வேண்டிய தெல்லாம் ஒருபிடி சோறு;**
**வெறுஞ் சோறாயினும் போதும்!''**

இந்த வரிகளை இரும்பு நெஞ்சையும் உருக்க வல்லதாக அமைத்துள்ளார் கவிஞர்.

ஜெமினியின் 'வஞ்சிக்கோட்டை வாலிபன்' படத்தில் பெற்றதாயின் பெருமையை விளக்குவதாக அமைந்த அரிய பாடலொன்றைத் தீட்டியுள்ளார் கொத்தமங்கலம் சுப்பு. சிறையிடப்பட்ட மைந்தன் மாறாத பாசத்தோடு தாயைக் காணத் துடிக்கிறான்.

அந்தோ பரிதாபம்!

தாயோ பிணமாகிவிட்டாள்!

''அம்மா அம்மா என்றே
ஆயிரம் ஆண்டுகள் அழுது புரண்டாலும்

அன்னை வருவாளோ? உனக்கொரு
ஆறுதல் சொல்வாளோ?''

என்று பாடலின் முன்னடிகளை முருகோடு அமைத்த கவிஞர்.

''கொள்ளியிடவும் வகையில்லை என்றே நீ
கொடுஞ் சிறையில் கலக்கம் கொள்ளாதே
அன்பைச் சொரிவாய் மகனே நீ
கண்ணீரால் நீராட்டு அன்னை
தன்னை மண்மேலே தாலாட்டு
நெஞ்சக் கனலால் நெருப்பினை மூட்டு
நீ உன் கடமையை நிலைநாட்டு''

என்று பிற அடி களை அமைத்து தமது பாத்திறனால் நேசிக்கத் தெரிந்த நெஞ்சஞ்களை யெல்லாம் பிழிந்தெடுத்து விடுகிறார்.

'ஜெமினி'யின் 'அபூர்வ சகோதரர்கள்' படத்திற்காக ''மானும் மயிலும் ஆடும் சோலை'' என்ற அருமையான காதல் பாட்டை எழுதியவரும் இக்கவிராயரே யாவார்.

இவர் இன்று இல்லை. ஆனால் இவர் பாடல்கள் என்றும் இருக்கும்.

முழுமையாக சில பாடல்களை அநுபவியுங்கள்.

## சம்சாரம் சம்சாரம்...

*படம்: சம்சாரம் ஆண்டு : 1951*
*பாடியவர்: ஏ.எம்.ராஜா*
*இசை: ஏமனி சங்கர சாஸ்திரி*

**சம்சாரம்! சம்சாரம்!**
**சகலதர்மசாரம் - சுகஜீவன ஆதாரம்**
**சம்சாரம்! சம்சாரம்!**
**கணவன் மனைவி ஒன்றாய் - இரு**
**கண்ணும் மணியும் போலே**
**இணைபிரியாது இளம்பாலகர் விளையாடும் (சம்சாரம்)**

**உறவோடு உண்ண வேண்டும்**

ஊரோடு வாழ வேண்டும்
பெரியோரைப் பணிய வேண்டும்
சிறியோரைக் காக்க வேண்டும் (சம்சாரம்)

சம்சார சாகரத்தில் - துயர்
தாங்கொணாத போதும்
தாரமோடு கணவன் - அதைத்
தாங்கி வாழ வேண்டும் (சம்சாரம்)

## மானும் மயிலும்...

*படம்: அபூர்வ சகோதரர்கள்*
*பாடியவர்: பானுமதி.*
*இசை: எஸ்.ராஜேஸ்வரராவ்*
*ஆண்டு : 1949*

மானும் மயிலும் ஆடும் சோலை
மாலை நன்நேரம் மாநதி ஓரம்
கனவே கண்டேனே - என்னாசைக்
கனவே கண்டேனே!

பூரண சந்திரன் போலவன் முகமே
புதுமலர் விழியே மதுநிகர் மொழியே
நினைவும் கனவும் நீ என்றானே!
நேரினில் வந்தான் நெஞ்சில் உறைந்தான். (மானும்)

## அம்மா பசிக்குதே...

*படம்: சம்சாரம்*
*இசை: ஏமனி சங்கர சாஸ்திரி*
*ஆண்டு : 1951*

அம்மா பசிக்குதே தாயே பசிக்குதே
அம்மா பசிக்குதே தாயே பசிக்குதே
ஆண்டவன் எங்களை மறந்தது போலே
அன்னை நீர் மறவாதீர்
வேண்டிய தெல்லாம் ஒருபிடி சோறு

வெறுஞ் சோறாயினும் போதும் (அம்மா)

உச்சிவெய்யிலில் பிச்சை எடுக்கும்
பச்சைக் குழந்தைகள் பாரும்!
ஒருபிடி சாதம், ஒருபிடி அரிசி,
ஒரு முழக்கந்தை தாரும் (அம்மா)

பாலும் பழமும் வேண்டாந் தாயே
பசிக்குச் சோறு கிடைத்தால் போதும்
பிள்ளை குட்டியைப் பெற்ற தாய்களே
பிச்சைப் போட்டுப் பசிதீரும் - உங்கள்
பிள்ளைகளாய் எண்ணிப்பாரும் (அம்மா)

## அம்மா அம்மா என்றே...

*படம்: வஞ்சிக்கோட்டை வாலிபன்*
*பாடியவர்: சி.எஸ்.ஜெயராமன்*
*இசை: சி.ராமச்சந்திரா*
*ஆண்டு : 1958*

அம்மா அம்மா என்றே
ஆயிரம் ஆண்டுகள் அழுது புரண்டாலும்
அன்னை வருவாளோ? உனக்கொரு
ஆறுதல் சொல்வாளோ? (அன்னை)

முன்னைத் தவமிருந்து முந்நூறு நாள் சுமந்து
பொன்னைப் போல உனைப்போற்றி வளர்த்திட்ட
கொள்ளியிடவும் வகையில்லை என்றே நீ
கொடுஞ்சிறையில் கலக்கம் கொள்ளாதே (அன்னை)
அன்பைச் சொரிவாய் மகனே நீ
கண்ணீராலே நீராட்டு அன்னை
தன்னை மண்மேலே தாலாட்டு
நெஞ்சக் கனலால் நெருப்பினை மூட்டு
உன் கடமையை நிலைநாட்டு (அன்னை)

## கதையைக் கேட்டதும்...

*படம்: நீங்காத நினைவு ஆண்டு : 1963*
*பாடியவர்: பி.பி.சீனிவாஸ்.*
*இசை: கே.வி.மகாதேவன்*

கதையைக் கேட்டதும் மறந்து விடு
கண்ணீர் வந்தால் துடைத்து விடு (கதையை)

ஆசைப்படகு கரைசேரும் என
ஆவலுடன் அவன் காத்திருந்தான்
அழகியமலரைப் பார்த்து வந்தான்

ஒளியைக் கொடுத்தான் மலரைப் பறித்தான்
உண்மையைக் கூட்டில் அடைத்து விட்டான் - அவன்
உள்ளப்படகை உடைத்து விட்டான்! (கதையை)

உள்ளத்திலே உனக்கு ஆலயம் அமைத்து
ஒருவன் உன்னைப் பூசித்தான்
உயிருக்கு மேலாய் நேசித்தான்!
பள்ளத்தில் அவன் வீழ்ந்துவிட்டான்! - அவன்
பாதையில் அவன் போகட்டும் - நல்ல
பாக்கியம் உனக்குச் சேரட்டும் (கதையை)

இரவும் பகலும் தெரியா நாளில்
இன்பமும் துன்பமும் தெரியவில்லை! - அது
ஏனென்று அன்று புரியவில்லை
இருளும் தீர்ந்தது! பாதை பிரிந்தது
எவனோ வழியைக் காட்டுகிறான் - இனி
எது நடந்தாலும் கவலை இல்லை! (கதையை)

## அன்னையின் அருளே...

*படம்: ஆடிப்பெருக்கு ஆண்டு : 1962*
*பாடியவர்: சீர்காழி.*
*இசை: ஏ.எம்.ராஜா*

அன்னையின் அருளே வா! வா!

ஆடிப்பெருக்கே வா! வா!
பொன்னிப் புனலே வா! வா!
பொங்கும்பாலே வா! வா! (அன்னையின்)

குடகில் ஊற்றுக்கண்ணாகி
குலத்தைக் காக்கும் பெண்ணாகி
கண்ணன்பாடி அணைதாண்டி
கார்முகில் கண்ணனை வலம்வந்து (அன்னையின்)

திருவாய்மொழியாம் நாலாயிரமும்
தேனாய்ப் பெருகும் தமிழே வா!
திருமால் தனக்கே மாலையாகி
திருவரங்கம்தனை வலம்வரும் தாயே!
கட்டிக் கரும்பின் சுவையும் நீ
கம்பன் கவிதை நயமும் நீ
முத்துத் தாண்டவர் பாடலிலே
முழங்கும் பக்திப் பெருக்கும் நீ

வான்பொய்த்தாலும் தான் பொய்யா
வற்றாக் கருணை காவேரி
வள நாடாக்கும் தாயே நீ
வாழிய வாழிய பல்லாண்டு!

# சுத்தானந்த பாரதியார்

கவியோகி சுத்தானந்த பாரதியார் தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம், ஹிந்தி, பிரெஞ்சு உட்பட பல மொழிகளில் நிறையறிவு வாய்க்கப் பெற்றவர். பல்லாயிரக்கணக்கான இசைப்பாக்களையும், கவிதைகளையும் வரைந்தவர் பிறமொழி இலக்கியங்களிலிருந்து பல அரிய பொக்கிசங்களை மொழி பெயர்த்துத் தமிழர்களுக்கு வழங்கிய பேரறிஞர்.

'ஸ்ரீ ஆண்டாள்' பட இயக்குநரின் அன்பான அழைப்பை ஏற்று அப்படத்திற்காக சில பாடல்களை சுத்தானந்த பாரதி எழுதியுள்ளார்.

''எல்லாரும் ஓரினம் எல்லாரும் ஓர் குலம்
எல்லாரும் ஓர்தாயின் மக்கள் அன்றோ
எல்லாரும் வாழ்வதற்கே பிறந்தார்கள் என்ற நீதி
கொள்ளாமல் தாழ்வு செய்யும் கொடுமையைச் சகித்தல் நன்றோ''

என்று சாதிக் கொடுமைக்கெதிராக 'புரட்சிக் குரல் கொடுக்கும் அவர் அடுத்த வரிகளில் மேலும் ஆவேச முற்றவராகி ஜாதிமதப் பிரிவினைகளுக்கு வழிவகுத்து கொடுத்த மதவாதிகளுக்கு 'நெத்தியடி'யாக

''ஜாதி சமய பேதம் - மதவாதிகள் வாதம்
இதற்காக எத்தனை வேதம் - புரியாத மன விரோதம்''

என்று எழுதியுள்ளார்.

ஆண்டாள்' படத்திற்காக,

"சோலையிலே ஒருநாள் எனையே
தொட்டிழுத்தே முத்தமிட்டான்டி - சகியே"

என்று தொடங்கும் பாடலையும் சுத்தானந்தரே இயற்றியுள்ளார். அப் படத்திற்காக சுத்தானந்தர் இயற்றிய,

"உன் அருளில் அன்பு வைத்தேன் கண்ண பரமாத்மா
உலகெலாம் உன் மயமே கண்ணபரமாத்மா"

என்ற பாடலும் மிக நயமானதாகும்.

சுத்தானந்த பாரதியார் ஏற்கனவே எழுதிய பல அருமையான இசைப் பாடல்களை பல படங்களில் பயன்படுத்தியுள்ளார்கள்.

உதாரணமாக,

சீர்காழி கோவிந்தராஜன் முதன் முதலாக பாடிய திரைப்படப் பாடலான,

"சிரிப்புத்தான் வருகுதய்யா"

என்ற பாடல் (படம்: பொன்வயல்)

"மாலை மயங்குகிற நேரம் - பச்சை
மலைவளரும் அருவி ஓரம்"
(படம்: மரகதம்)

"உன்னடியில் அன்பு வைத்தேன்
கண்ணபரமாத்மா

(பி.யு.சின்னப்பாபாடிய 'சுதர்சன்' படப்பாடல்)

"வெட்கமாயிருக்குடி இந்த வேலவர்..."

('பார்மகளே பார்' படப்பாடல்)

ஆகியவற்றைச் சொல்லலாம்.

இனி சுத்தானந்தர் திரைப்படத்தின் நிமித்தம் எழுதிய சில பாடல்களை முழுமையாகச் சுவையுங்கள்

## எல்லாரும் ஓரினம்...

*படம்: ஸ்ரீ ஆண்டாள்*

*பாடியவர்கள்: வித்வான் சீனிவாசன்.*

*யு.ஆர்.ஜீவரத்தினம்.*

*ஆண்டு: 1948.*

அவன்: எல்லாரும் ஓரினம் எல்லாரும் ஓர்குலம்
எல்லாரும் ஓர் தாயின் மக்கள் அன்றோ
எல்லாரும் வாழ்வதற்கே, பிறந்தார்கள் என்ற நீதி
கொள்ளாமல் தாழ்வு செய்யும் கொடுமையைச்
சகித்தல் நன்றோ?
ஜாதி சமயபேதம் - மதவாதிகள் வாதம்
இதற்காக எத்தனை வேதம் - புரியாத மனவிரோதம்
(ஜாதி)

அவள்: அடிமையென ஒரு ஜாதி ஆட்சிசெய்ய ஒரு ஜாதி
கொள்ளை கொள்ள ஒரு ஜாதி சமுதாய உலகிலே
தீயஉயர்வு தாழ்வு ஏனிந்த மோகம்?
மாய உலக வாழ்வு நிலையாது கொள்விவேகம்!

இருவரும்: ஜாதி சமய பேதம் - மதவாதிகள் வாதம்!

## சோலையிலே ஒருநாள்...

*படம்: ஸ்ரீ ஆண்டாள்*

*பாடியவர்: யு.ஆர்.ஜீவரத்தினம்.*

*ஆண்டு: 1948.*

சோலையிலே ஒருநாள் எனையே
தொட்டிழுத்தே முத்தமிட்டான்டி - சகியே (சோலை)
மாலைப் பொழுதில் கண்ணன் மாயக்குழலிசைத்து
வாய்விட்டுச் சிரித்தபின் போய்விட்டான் - சகியே
ஓடி எங்கோ மறைந்தான் - ஆயினுமெந்தன்
உள்ளந்தனில் வந்து நிறைந்தான்!

வேடிக்கை என் சொல்வேன்! மின்னல் போலே எதிர்
நிற்றான்
அடுத்தெனைக் கைபிடித்தான்! துடுக்குத்தனமென்
சொல்வேன்!
ஆவியைக் கவரும் இன்ப ஆசைவலை வீசினான்
தாவி அணைக்கச் சென்றேன் தாண்டி நடந்துவிட்டான்!
(சோலை)

## ஜென்மமெல்லாம்...

*படம்: ஸ்ரீ ஆண்டாள்*
*பாடியவர்: யு.ஆர்.ஜீவரத்தினம்.*
*ஆண்டு: 1948.*

ஜென்மமெல்லாம் உந்தன் இன்பத் திருமுகத்தை
தேடித்தேடி இளைத்தேன் கண்ணா – என் (ஜென்ம)
துன்பச் சாகரத்தில் சுழன்று சுழன்று நான்
என்னை மறந்து கண்ணா உன்னைச் சரணடைந்தேன்
(ஜென்ம)
அல்லும் பகலும் உந்தன் அடிமலர் சேவித்து
ஆனந்த வெள்ளத்தில் அகத்தினைக் குளிர்வித்துக்
கல்லும் கரைந்துருகும் காதலைக் கொள்ளை கொண்ட
காலத்தை நினைக்கின்றேன் லோகத்தில் நான் எடுத்த
(ஜென்ம)

## உன் அருளில்...

*படம்: ஸ்ரீ ஆண்டாள்*
*பாடியவர்: யு.ஆர்.ஜீவரத்தினம்*
*ஆண்டு: 1948*

உன் அருளில் அன்புவைத்தேன் கண்ணபரமாத்மா
உலகெலாம் உன்மயமே கண்ணபரமாத்மா
வண்ணமலர்க் காலையிலே கண்ணபரமாத்மா
வாசமலர்ச் சோலையிலே கண்ணபரமாத்மா
புன்னகைபுரியும் அழகா கண்ணபரமாத்மா
பூங்குழல் இசைத்திடுவாய் கண்ணபரமாத்மா
மின்னென நடம்புரியும் கண்ணபரமாத்மா
மேதினியுன் ஆடலன்றோ கண்ணபரமாத்மா.

# தஞ்சை ராமையாதாஸ்

1913ஆம் ஆண்டில் தஞ்சையில் பிறந்த இவர் திரைப்படப் பாடலாசிரியராக மலர்வதற்கு முன்னர் தஞ்சை சுப்பையா நாயுடு நடுநிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி புரிந்தவர்.

பள்ளி ஆசிரியராக இருக்கும் போதே துருவன், கம்பர், மச்சரேகை, விதியின் வெற்றி போன்ற நாடகங்களுக்குக் கதை வசனம் பாடல்கள் தீட்டி மேடை ஏற்றினார்.

1948-இல் வெளியான 'மாரியம்மன்' படத்திற்கு முதன் முதலாக பாடல்கள் சில எழுதிப் பாடலாசிரியராக திரையுலகில் நுழைந்தார்.

இவர் உயர்ந்த இலக்கியச் சுவையோடும்; பாடல்கள் எழுதினார். பாமர மக்களின் மட்டமான ரசனைக்கேற்பவும் பாடல்கள் எழுதினார்.

கவிஞர் கு.மா.பா. ஒரு முறை என்னிடம்; ''தஞ்சை ராமையாதாசை அவருக்குப் பின் திரையுலகில் புகழ் பெற்ற கவிஞர் ஒருவர் மோசமாகத் திட்டிக் கொண்டிருந்தார். மட்டரகப் பாடல்கள் எழுதிக் குவித்தார் என்றெல்லாம் ஏசினார். எனக்குப் பொறுக்கவில்லை ''நீர் நினைப்பது தவறு. ராமையாதாஸ் இலக்கிய நயமுள்ள பல பாடல்களையும் எழுதியுள்ளார் என்று பல உதாரணங்களை எடுத்துச் சொல்லி வாதிட்டேன். அந்தக் கவிஞர் அடங்கிப் போனார்'' என்றார்.

கு.மா.பா.வின் கூற்று முற்றிலும் உண்மையாகும்.

திரைப்படப் பாடல் அனுபவங்களைப் பற்றி தஞ்சை ராமையாதாஸ் 1955-ஆம் ஆண்டு சினிமாக் கதிர் பொங்கல் மலரில் ''கவிகளும் கவிதைகளும்'' என்ற தலைப்பிலெழுதிய கட்டுரையில்

''சுதந்திரமான உணர்ச்சியின் சிகரத்தை அடைந்த ஒரு கவிஞர் தன் இஷ்டம் போல் மாலை, தென்றல், நிலவு, காதல், கடவுள் என்று தன் கற்பனையில் தோன்றியவற்றையெல்லாம் கவிதைகளாக இயம்பி மலையாகக் குவித்து விடலாம்.

ஆனால் அதே புலவன் சினிமாவுக்கு ஒரு பாடல் அமைப்பதில் எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கின்றன. பணத்தால் அடைந்த படிப்பும், படிப்பால் கிடைத்த ஆசுகவி, மதுர கவி, சித்திரக் கவி, வித்தாரக் கவி என்ற பட்டங்களும் அங்கே உபயோகமாவதில்லை!

ஏனென்றால் பாடலுக்கு இசை என்பது நடைமுறை விதி. இந்த விதி சினிமாவில் தலைகீழ். அதாவது இசைக்குப் பாடல் என்று ஆக்கப்பட்டிருக்கிறது. அரசன், அணங்கு, காதல், சந்திரன், தலைவன், தலைவி, மாருதம், மகிழ்ச்சி அத்தனையும் பாடலின் முதல் வரிசையில் இடம் பெறவேண்டும் என்பார் சினிமா டைரக்டர்.

எந்தச் சொல் எங்கே இடம் பெற்றாலும் தான் அமைத்த மெட்டுகளுக்குரிய ராகதாள கோணங்களுக்கு முரணில்லாமல் வார்த்தைகளை அமைக்க வேண்டுமென்பார் மியூசிக் டைரக்டர்.

கருத்தும், சொல்லும் பூவும் மணமும் போல பொருந்தியிருக்க வேண்டும் என்பார்கள் பாடகர்களும், பாடகிகளும். இத்தனையும் போதாதென்று கருத்தும், இசையும், சொல்லும் முக்கியமல்ல, என் பெட்டிக்குத் துட்டை கொண்டு வருகிற பாட்டுத்தான் வேண்டுமென்பார் பட முதலாளி.

எனது 'பாதாள பைரவி' படப்பாடலும் 'சிங்காரி'யில் ஒரு சாண் வயிறு இல்லாட்டா என்ற பாடலும், இன்றைய தூக்குத் தூக்கிப் படத்தில் சில பாடல்களும் ரசிக உள்ளங்களைக் கவர்ந்த காரணம் பணம் கண்ட படிப்பல்ல. அநுபவங்கண்ட அறிவுதான்'' என்று குறிப்பிடுகிறார்.

மேலுள்ள கட்டுரை சினிமாப் பாடல்க்ள் எழுதும் போது ஏற்படும் நிர்ப்பந்தங்களை மிகத் தெளிவாகச் சித்திரிக்கிறது அல்லவா?

இனி நாம் தஞ்சை ராமையாதாசின் தமிழ்த் திறனைப் பார்ப்போம்.

'பாதாள பைரவி' படத்தில் 'கனிந்த காதலர்க்கு' எனத் தொடங்கும் பாடலில்

''தமிழினமுதக் கடலிலே
தனிமையான படகிலே
சரச லீலையாடலாம் நமது வாழ்விலே''

என்ற வரிகளும்.

''கனவும் பலிதமானால் அநுராக போகமே
இணையிலாத நமது பிரேமை தான் அமோகமே''

என்ற வரிகளும் தஞ்சையாரால் மிக நுட்பமாக உருவாக்கப்பட்டுள்ளன.

'சந்திரஹாரம்' படத்தில் 'எனதாருயிர் வனிதாமணி' எனத் தொடங்கும் பாடலில்

'குமுதமலரின் சாயலாலே
குளிர்ந்த காதல் பார்வையாலே
அமுத நிலவின் கலையினாலே
கவர்ந்திடும் எழில் கற்பனை சுந்தரி''

என்று கவிநயமோங்க எழுதியுள்ளார் தஞ்சையார்.

'இரு சகோதரிகள்' படத்தில் தமிழ்த்தாயின் சீரினை வியந்து ஓர் அருமையான பாடல் எழுதியுள்ளார் கவிஞர்.

''தாயே உன் செயலல்லவோ - தமிழ்த்
தாயே உன் செயலல்லவோ இன்பத்
தாலாட்டி அறிவென்ற பாலூட்டும் - செந்தமிழ்த்
தாயே உன் செயலல்லவோ?''

என்ற ஆரம்ப வரிகளிலும்,

''இயல் இசை முறையோடு எழில்மேவும் ராணி
இலக்கியச் சுவையோடு இணைந்திடும் வாணி
உயிருடன் மெய்யோடு ஓங்காரமே
உன் மொழியில் உலவும் ரீங்காரமே''

என்ற வரிகளிலும் தஞ்சையாரின் கொஞ்சு தமிழ் நெஞ்சை அள்ளுகிறதல்லவா?

'பிரேம பாசம்' படத்தில் 'பாரத நாடு' எனத் தொடங்கும் பாடலில் கவிஞரின் தேசீய பற்றும்; சிந்தனைகளும் ஜொலித்திடக் காணலாம்!

''பாரத நாடு ஜெயபாரத நாடு - எங்கள்
பாரத நாடு...
பார்தனிலே பெரும் வீரத் தியாகிகளை
பண்புடன் தந்தது இன்புறவே!''

என்றும்

நாட்டினிலே நமதாட்சியிலே - நாம்
நன்மையைக் கண்டது எதனாலே?
ஏட்டினிலும் மறையாமல் விளங்கிடும்
ர்ாட்டினம் சுற்றிய நிலையாலே''

என்றும்

கம்பனொடு அவ்வையும் கவிபாரதியும் இன்பக்
காவியம் தந்த நாடு!''
திருக்குறள் அமுதீந்த திருவள்ளுவரென்ற
அருட்கவியைத் தந்த நாடு''

என்றும் 'பாரத நாடு' பாடலை மிகச் சிறப்பாக எழுதியுள்ளார் கவிஞர்! தமிழ் சினிமாவில் தாயின் பெருமை வியந்து பல பாடல்கள் அரும்பியுள்ளன.

தஞ்சைக் கவிஞர் தந்தையின் பெருமை வியந்து ஒரு பாடலைத் ''தாய்க்குப் பின் தாரம்'' படத்தில் வடித்துள்ளார்.

அப்பாடலில்

தந்தையைப் போல் உலகிலே
தெய்வமுண்டோ ஒரு மகனுக்குச்
சர்வமும் அவரென்றால் விந்தையுண்டோ?''

என்ற வரிகளும்

''உண்ணாமல் உறங்காமல் உயிரோடு மன்றாடி
என் வாழ்வின் இன்பமே எதிர்பார்த்த
தந்தை எங்கே என் தந்தை எங்கே''

என்ற வரிகளும்

''கண்ணிமை போலே என்னை வளர்த்தார்
கடமையை நான் மறவேனா?
காரிருள் போல பாழான சிதையில்
கனலானார் விதிதானா? - தந்தை
கனலானார் விதிதானா?''

என்ற வரிகளும் பாசத்தின் மகிமையறிந்த எவரையுமே கசிந்துருகுக் செய்யும்! ஆம்! அத்துணை அருமையாகக் கவிஞர் எழுதியுள்ளார்.

'குணசுந்தரி' படத்தில்

''கலையே உன் விழிகூட கவிபாடுதே தங்கச்
சிலையே உன் நிழல்கூட ஒளிவீசுதே.''

என்று எழிலார்ந்த காதல் பாடலொன்றை எழுதியுள்ளார். தஞ்சையார்.

நிலவோடு விளையாடும் தாரா உன்னாலே
அலைமோதும் வேளை வாராய் முன்னாலே
அநுராக நிலையே பாராய் தன்னாலே''

இந்த மிடுக்கான வரிகளை எத்துணை முறை வேண்டுமானாலும் இரசிக்கலாம் அல்லவா?

''வணங்காமுடி'' படத்தில் அமைந்த காதல் பாட்டொன்றை

''வாழ்வினிலே வாழ்வினிலே
இந்நாள் இனி வருமா?
வசந்தமுடன் தென்றலுமே
வாழ்ந்திடும் நாள் வருமா''

என்றும்

''வானமுதே உன் நினைவால்
வாடுகின்றேன் பாராய்!
தே னமுதே உன் நினைவால்
தேடி நின்றேன் வாராய்''

என்றும் ஒண்டமிழ்ச் சித்திரமாய் செதுக்கியிருக்கிறார் கவிஞர்.

''கடன் வாங்கிக் கல்யாணம்'' பட்த்தில் ராமையா தாஸ் இயற்றிய.

''எங்கிருந்து வீசுதோ - இனிதாகவே தென்றல்
இலைகளையும் தழுவியே மலர்களையும் மருவியே
இயற்கையாவும் அன்பினால் - ஆசையால் இன்பமாய்
இணைந்து ஊஞ்சல் ஆடவே!

என்ற வசந்த மலர்த் தமிழில் வசமாகாதோர் ரசனா பாவமேயற்ற ஜடங்களன்றோ?

'திருமணம்' படத்தில் காதல் சோகத்தை கவினோவியமாகச் சித்தரித்து தஞ்சையார் ஒரு பாடல் தீட்டியுள்ளார்.

இன்பம் யாவுமே துன்பம் ஆகுமே
இதுதான் வாழ்வின் அநுபவமே!
அன்பின் ஊற்றிலே மலர்ந்த மலரும்
அன்றே வாடிடுமே!

"என்ற வரிகளும்

''சோதனையாலே தென்றலும் ஒரு நாள்
புயலாச் சீறிடுமே
காதலர் வாழ்வும் எதிர்பாராமலே
கனவாய் மாறிடுமே''

என்ற வரிகளும் எத்துணை உணர்ச்சியோடு கவிஞரால் பின்னப்பட்டுள்ளன?

இதே பாடலில்

''கனவில் தோன்றிடும் காசும் பணமும்
கைதனில் கிடைத்திடுமா?
கலைவான் மதியைக் கவர்ந்திட நினைக்கும்
காரியம் நடந்திடுமா?''

என்றமைந்த பகுதியில் கவிப்பாங்கு சுடர் வீசுவதை யாரே மறுப்பர்?

இப்படியாக மிகச் சிறந்த பாடல்களை எழுதிப் புகழ் பெற்ற அருமையான பாடல் ஆசிரியர்களில் ஒருவரான தஞ்சை ராமையாதாஸ் 1965 ஆம் ஆண்டு உயிர் துறந்தார்.

அன்னார் அரிய திரைப்பாடல்கள் எழுதியதோடு அமையாது ''திருக்குறள் இசையமுதம்'' என்ற பேரில் 133 குறள்களை இசைப் பாடல்களாக அமைத்துப் பெருந்தொண்டாற்றியுள்ளார்.

இனி தஞ்சையாரின் பாடல்கள் சிலவற்றை முழுமையாகக் கண்டு மகிழுங்கள்.

## காதலே தெய்வீகக் காதலே...

*படம்: பாதாள பைரவி*
*பாடியவர்கள்: கண்டசாலா - லீலா*
*இசை: கண்டசாலா*
*ஆண்டு: 1951*

ஆ: கனிந்த காதலர்க்கு தேவியின் அருளாலே
காணிக்கை தருவேன் ப்ரிய ராணி!
காதலே தெய்வீக காதலே காதலே

பெ: தமிழினமுதக் ''கடலிலே
தனிமையான படகிலே
சரசலீலையாடலாம் நமது வாழ்விலே

ஆ: வானகமும் தாரகைபோல் வாழ்வில் யோகமே
காணும் இன்பம் யாவும் நமது காதல் தியாகமே!
(காதலே)

பெ: கனவும் பலிதமானால் அநுராக போகமே!
இணையில்லாத நமது பிரேமை தான் அமோகமே!
(காதலே)

## எனதாருயிர்...

*படம்: சந்திரஹாரம்*
*பாடியவர்: கண்டசாலா*
*இசை: கண்டசாலா*
*ஆண்டு : 1954*

எனதாருயிர் வனிதாமணி - என் மனோன்மணி
இணையில்லாத புனித பதனி
இவளே என் இதயராணி (இணை)

மனதில் கனிந்த ஆவல் மீறி
மலர்ந்திடும் எழில் சுகுண சுந்தரி (எனதா)

குமுதமலரின் சாயலாலே

குளிர்ந்த காதல் பார்வையாலே (குமுத)

அமுத நிலையின் கலையினாலே
கவர்ந்திடும் எழில் கற்பனை சுந்தரி (எனதா)

## தாயே உன் செயலல்லவோ...?

*படம்: இரு சகோதரிகள்*
*பாடியோர்: வசந்தகுமாரி - லீலா*
*இசை: ராஜேஸ்வரராவ்*
*ஆண்டு: 1957*

தாயே உன் செயலல்லவோ - தமிழ்த்
தாயே உன் செயலல்லவோ இன்பத்
தாலாட்டி அறிவென்ற பாலூட்டும் - செந்தமிழ்த்
தாயே உன் செயலல்லவோ?

நீயே என் கலைவானிலே - மின்னும்
நிதியான மதியல்லவோ? - கவி
நினைவோடு விளையாடும் திருவே
உனை மறவேன் இனி - செந்தமிழ்த்
தாயே உன் செயலல்லவோ?

இயல் இசை முறையோடு எழில் மேவும் ராணி
இலக்கியச் சுவையோடு இணைந்தாடும் வாணி
உயிருடன் மெய்யோடு ஓங்காரமே
உன் மொழியில் உலவும் ரீங்காரமே

உலகம் போற்றும் அமுதவாரி உனதிரு
மலர்ப்பாதமே மறவேன் இனி - செந்தமிழ்த்
தாயே உன் செயலல்லவோ?

## பாரத நாடு...

*படம்: பிரேம பாசம்*
*பாடியோர்: பி.லீலாகுழுவினர்*
*இசை: எஸ்.ராஜேஸ்வரராவ்*
*ஆண்டு: 1955*

பாரத நாடு ஜெயபாரத நாடு - எங்கள் பாரத நாடு

பார்தனிலே பெரும் வீரத்தியாகிகளை
பண்புடன் தந்தது இன்புறவே! (பாரத)

பதவி என்றதோர் பட்டம் வானில்
பறந்து செல்வது எதனாலே? - மக்கள்
உதவி என்றதோர் நூலைக் கொண்டு
உயர்ந்து செல்லும் அதனாலே?

நாட்டினிலே நமதாட்சியிலே - நாம்
நன்மையைக் கண்டது எதனாலே?
ஏட்டினிலும் மறையாமல் விளங்கிடும்
ராட்டினம் சுற்றிய நிலையாலே!

காருண்யமூர்த்தியாம் காந்தியெனும் புதையலை
கண்யமுடன் தந்த நாடு!
காசினியில் நேரெவரும் இல்லாத நேருவை
கண்களெனக் கண்ட நாடு!

கற்பனைச் சிகரமாம் ராஜாஜி என்றதோர்
கலைமணியைத் தந்த நாடு!
கம்பனொடு அவ்வையும் கவிபாரதியும் இன்ப
காவியம் தந்த நாடு!

திருக்குறள் அமுதீந்த திருவள்ளுவரென்ற
அருட்கவியைத் தந்த நாடு!
சிறந்த திருநாடு! பரந்த திருநாடு!
ஜெகந்தனில் மகிழ்ந்து
சுதந்திரம் நிறைந்தது! (பாரத)

## தந்தையைப் போல்...

*படம்: தாய்க்குப் பின் தாரம்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு: 1956*

தந்தையைப் போல் உலகிலே
தெய்வமுண்டோ? ஒரு மகனுக்குச்

சர்வமும் அவரென்றால் விந்தையுண்டோ? (தந்தை)

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
ஔவையின் பொன்மொழி வீணா?
ஆண்டவன் போலே நீதியைப் புகன்றான்
அனுபவமே இதுதானா? (அன்னை)

உண்ணாமல் உறங்காமல் உயிரோடு மன்றாடி
என் வாழ்வின் இன்பமே எதிர்பார்த்த
தந்தை எங்கே? என் தந்தை எங்கே?
கண்ணிமை போலே என்னை வளர்த்தார்
கடமையை நான் மறவேனா?
காரிருள் போல பாழான சிதையில்
கனலானார் விதிதானா? - தந்தை
கனலானார் விதிதானா?

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
ஔவையின் பொன்மொழி வீணா?
ஔவையின் பொன்மொழி வீணா?

## கலையே உன்விழி...

*படம்: குணசுந்தரி*
*பாடியவர்: ஏ.எம்.ராஜா*
*இசை: காண்டசாலா*
*ஆண்டு: 1955*

கலையே உன்விழிகூட கவி பாடுதே தங்கச்
சிலையே உன் நிழல் கூட ஒளி வீசுதே!
நிலவோடு விளையாடும் தாரா உன்னாலே
அலைமோதும் வேளை வாராய் முன்னாலே
அநுராக நிலையே பாராய் தன்னாலே (கலை)

இளங்காதல் அமுதாகும் ஏகாந்த ராணி
இசையோடு பாடும் வேதாந்த வாணி
இணையாருமிலையே எழில் மேவும் மேனி (கலை)

## வாழ்வினிலே...

படம்: வணங்காமுடி
பாடியவர்: ஏ.எம்.ராஜா - ஜிக்கி
இசை: ஜி.ராமநாதன்
ஆண்டு: 1957

ஆ: வாழ்வினிலே வாழ்வினிலே
இந்நாள் இனி வருமா?
வசந்தமுடன் தென்றலுமே
வாழ்ந்திடும் நாள் வருமா?

பெ: வாழ்வினிலே வாழ்வினிலே
இந்நாள் இனி வருமா?
வசந்தமுடன் தென்றலுமே
வாழ்ந்திடும் நாள் வருமா?

ஆ: வானமுதே உன்நினைவால்
வாடுகின்றேன் பாராய்
தேனமுதே உன்நினைவால்
தேடிநின்றேன் வாராய்

பெ: மதுநிலைமாறா புதுமலர் மேலே
மகிழ்ந்திடும் தேன்வண்டே
மனநிலை மாறா மானசதேவி
மகிழ்ந்திடுவோம் இன்றே!

ஆ: மதுநிலை மாறா புதுமலர் மேலே
மகிழ்ந்திடும் தேன் வண்டே!
மனநிலை மாறா மானசதேவி
மகிழ்ந்திடுவோம் இன்றே!

பெ: வாழ்வினிலே வாழ்வினிலே
இந்நாள் இனிவருமா?
வசந்தமுடன் தென்றலுமே
வாழ்ந்திடும் நாள் வருமா?

ஆ: வாழ்வினிலே வாழ்வினிலே

இந்நாள் இனி வருமா?
வசந்தமுடன் தென்றலுமே
வாழ்ந்திடும் நாள்வருமா?

## மோஹனப் புன்னகை...

*படம்: வணங்காமுடி*
*பாடியவர்கள்: டி.எம்.எஸ், ஜிக்கி*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு: 1957*

மோஹனப் புன்னகை செய்திடும் நிலவே
மேகத்திலே நீ மறையாதே!
பாகுடன் தேனுமே கலந்திடும் நேரம்
சாகசமே நீ புரியாதே! (மோஹன)

பெ: தியாகமும் யோகமும் சேர்ந்ததினாலே
தென்றலே நீயும் பிரியாதே
தேன்மலர் தூவும் நேரமிதே - என்
செல்வமே நீயும் மறையாதே!

ஆ: தேன் இதழ் மேலே சிந்திடும் மதுவை
தேடியே வாராய் இந்நாளே!
மான் விழியாலே வீசிடும் கணையே
மாரனும் மறைந்தான் உன்னாலே!

பெ: காவினில் யாருமே தேடியே வருவார்
கண்ணா நீயும் பாடாதே! (மோஹன)

## இன்பம் யாவுமே...

*படம்: திருமணம்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: எஸ்.எம்.சுப்பையா நாயுடு*
*ஆண்டு: 1958*

இன்பம் யாவுமே துன்பம் ஆகுமே

இதுதான் வாழ்வின் அனுபவமே!
அன்பின் ஊற்றிலே மலர்ந்த மலரும்
அன்றே வாடிடுமே!

பண்புடன் பழகும் பலநாள் கிளியும்
பறந்தே ஓடிடுமே!
இதுதான் வாழ்வின் அனுபவமே (இன்பம்)

சோதனையாலே தென்றலும் ஒருநாள்
புயலாய்ச் சீறிடுமே
காதலர் வாழ்வும் எதிர்பாராமலே
கனவாய் மாறிடுமே
இதுதான் வா்ழ்வின் அனுபவமே! (இன்பம்)

கனவில் தோன்றிடும் காசும் பணமும்
கைதனில் கிடைத்திடுமா?
கலைவான் மதியைக் கவர்ந்திட நினைக்கும்
காரியம் முடிந்திடுமா?

எண்ணம் போ்லவே எதுவும் நடந்தால்
இறைவன் இல்லையடா!
இகமீதினில் நீ இருக்கும் வரைதான்
இத்தனை தொல்லையடா!
இத்தனை தொல்லையடா! (இன்பம்)

## எங்கிருந்து வீசுதோ...

*படம்: கடன் வாங்கிக் கல்யாணம்*
*பாடியவர்கள்: ஏ.எம்.ராஜா - பீ.லீலா*
*இசை: எஸ்.ராஜேஸ்வரராவ்*
*ஆண்டு: 1958*

பெ: எங்கிருந்து வீசுதோ - இனிதாகவே தென்றல்!
இலைகளையும் தழுவியே மலர்களையும் மருவியே
இயற்கையாவும் அன்பினால் ஆசையால் இன்பமாய்
இணைந்து ஊஞ்சல் ஆடவே!

ஆ: எங்கிருந்து வீசுதோ - இனிதாகவே தென்றல்
வெண்ணிலாவில் ஆடியே, புன்னகையால் பாடியே
மனம் மயங்கி ஆசையால் - அன்பினால் - இன்பமாய்
மெய்ம் மறந்து போகவே

பெ: எங்கிருந்து வீசுதோ இனிதாகவே தென்றல்
இதயவீணை மீட்டியே இன்ப கீதம் பாடியே
இயற்கை யாவும் அன்பினால் - ஆசையால்
இன்பமாய் இணைந்து ஊஞ்சல் ஆடவே!

(எங்கிருந்து)

# கே.டி.சந்தானம்

1917 ஆம் ஆண்டு தென் ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள குறிஞ்சி பாடியில் பிறந்த சந்தானம் அவர்கள், கால காலமாய் வாழவல்ல பல மகத்தான திரைப் பாடல்களைத் தீட்டியவர்.

தமிழ்த் திரை இசைத்துறையிலேயே புதிய மாறுதலை உண்டாக்கி, வடநாட்டு திரை இசை மேதைகளான நௌஷாத் எஸ்.டி.பர்மன், சங்கர் ஜெய்கிஷன், சி.ராமச்சந்திரா போன்றோருடன் இணையாகச் சொல்லக் கூடிய அற்புதமான இசை அமைப்பாளர் சி.ஆர்.சுப்பராமன் அவர்கள்.

அவர் இசையமைத்த 'தேவதாஸ்' படத்தில் 'உலகே மாயம்' பாடலைத் தவிர பிற பாடல்கள் அனைத்தையும் எழுதியவர் சந்தானமே ஆவார்.

**''துணிந்தபின் மனமே**
**துயரம் கொள்ளாதே**
**சோகம் பொல்லாதே''**

என்று எடுப்பாகப் பாடலில் ஆரம்பித்து

**''அணையும் காற்றில் அகல்விளக்கேற்றி**
**மறைப்பதில் பயனுண்டோ? - கையால்**
**மறைப்பதில் பயனுண்டோ?''**

என்றும்

**''பாழும் ஆற்றில் நீவீழ்ந்த பின்னால்**
**நீந்துவதால் பயனேது?**

சீறும் புயலும் மழையும் சேர்ந்தால்
சின்னக் குடை தாங்காது!

என்றும் வரிகளை உருவாக்கி காதல் பிரிவால் மதுபக்தனாகி மரணத்தை நோக்கி விரையும் தேவதாசின் நிலைப்பாட்டை உயிரோவியத் தமிழாகத் தருகிறார் கவிஞர்.

தேவதாஸ் தன் அருமைக் காதலி பார்வதி நினைவில் ஆழ்ந்து ஆழ்ந்து மதுவில் வீழ்ந்து வீழ்ந்து சோகத் தீயில் கருகிய ஆத்மாவோடு,

''உறவுமில்லை பகையுமில்லை ஒன்றுமே இல்லை
உள்ளதெல்லாம் நீயேயல்லால் வேறே கதியில்லை
இனியாரும் துணையில்லை!''

என்று பாட,

மாற்றான் மனைவியாக - கண்காணா இடத்தில் இருக்கும் பார்வதி பதிலுக்கு,

''எனது வாழ்வின் புனித ஜோதி எங்கே சென்றாயோ?
இதயம் குளிர சேவை செய்யும் நினைவும் வீணானதே!
என் கனவும் பாழானதே''

என்று பாடுகிறாள்.

'தேவதாஸ் பதிலுக்கு

''முடிவில்லாத துன்பமதிலும் இன்பம் வேறேது
கெடுதி செய்வார் தனிலும் மேலாம் நண்பர் வேறேது?
அடைய முடியா பொருளின் மீது
ஆசை தீராது! அபிமானம் மாறாது!''

என்று பாடுகிறான்.

எத்துணை நயமுள்ள பாடல் இது! 'தேவதாஸ்' படத்தில் சந்தானத்தின் சத்தான தமிழ் முத்திரையைத் தாங்கிய பிற பாடல்களை பார்ப்போம்

அவள் விலை மாது!

பணத்துக்காக உடலை விற்கும் உல்லாசி

அத்தகைய மங்கையிடம் புனிதாத்மனாகிய தேவதாசை அழைத்து வருகிறான். அவன் நண்பன்.

அவள் விலைமாது என்பதனை அறிந்த தேவதாஸ் ''உனக்குப் பணந் தானே குறிக்கோள்'' என்று திட்டியபடி பண நோட்டுகளை அவள் முகத்

தில் அள்ளி வீசிவிட்டுப் போய் விடுகிறான்.

அன்றே விலைமாது நிலைமாறினாள். தனது கடந்த கால வாழ்வை எண்ணி வருந்தினாள்; மனம் திருந்தினாள். 'தேவதாஸ்' மீது தேவதா விசுவாசத்துடன் பழகத் துடிக்கிறாள்.

தேவதாசோ பார்வதி காதலை எண்ணி மதுவிலே மதுர சுகங்கண்டு பித்தனாய் அலைகிறான்.

மாஜி விலைமாது குலமாதாகி,

''அன்பே பாவமா அதில் ஏதும் பேதமா
ஆவல் கொள்ளும் பேதை எந்தன்
காதல் பாவமா?''

என்று கேட்கிறாள். மேலும்,

''இரு ள் மூடிக்கிடந்த என் வாழ்விலே
கலங் ரை விளக்கானார்
மருள்சேரும் மதுவினின்றும் அவரை மீட்கும்
திறனற்ற பாவியானேன்''

—று மனம் நொந்து கூறுகிறாள்.

மேற்காணும் பாடல் மிகுந்த பொருட்சிறப்போடு எழுதப் பட்டுள்ளது.

'தேவதாஸ்' படத்தில் 'கனவிதுதான் நிஜமிதுதான்' எனத் தொடங்கும் பாடலில்,

''மனம் ஓரிடமும் உடல் வேறிடமும் – இரு
கூறானது விதிவசமே
சிறுபோதுடனே வாழும் நறுமணம்
மலரானதும் வெகுதூரம் செல்வது போல்
காதலின் தன்மை விலகிப் போவதும் உண்மை''

என்று காதல் தத்துவத்தின் இயல்பு நில்லயை உயரிய உவமை நயத்தோடு இலக்கியச் சிற்பமாகச் செதுக்கியுள்ளார் கே.டி.சந்தானம்.

இனி கவிஞர், 'காதல்' படத்தில் 'இசைமேதை' சி.ஆர்.சுப்பராமன் இசையில் எழுதிய பாடலொன்றைப் பார்ப்போம்.

காதல் நெருப்பிலே வெந்து, மனம் நொந்து நாயகன்,

''நான் கொண்ட காதல் இவ்வாறுதான்
நட்டாற்றில் பாழாய் போனதே''

எனறு பாடுகிறான். தொடர்ந்து,

**"கரை கண்ணிலே தென்படு முன்னமே**
**சுக்கானும் சுழல் மூழ்கிப்போச்சே"**

என்கிறான்.

நிறைவேறும் காதல் பத்து சதவீதம் என்றால் நிறைவேறாத காதல் தொண்ணூறு சதவீதம் ஆகும். இதுதானே இந்த வக்கிர உலகின் மோசமான நடைமுறை?

இதனை கவிஞரின் பாடல் வரிகள் 'பளிங்கனைய' சொற்களால் புலப்படுத்துகிறது அல்லவா? மேலும் இப்பாடலிலுள்ள,

**"மின்னெழிலே உன் புன்னகையின்றி**
**வாழ்வே சூனியமானதே!**
**கனிந்த காதல் இழந்த நெஞ்சம்**
**கருகி சாம்பலானதே!"**

என்ற வரிகளும் இரத்தத்தால் தீட்டப்பட்ட சித்திரம் போல் அமைந்து சந்தானத்தின் சாகாத தமிழுக்குச் சாட்சி கூறுகிறது!

'காதல்' படத்தில் இடம்பெற்ற '**இன்பக் காவியமாகும் வாழ்வே காதலினாலே**' எனத் தொடங்கும் பாடலும் இலக்கிய நயம் செறிந்ததாகும். சண்டிராணி படத்தில் இசைமேதை சி.ஆர் சப்பராமன் இசையில்

**வான்மீதிலே இன்பம்**
**தேன்மாரி பேயுதே?"**

என ஆரம்பிக்கும் அருமையான காதல் பாடலொன்றைச் சந்தானம் எழுதியுள்ளார். அப்பாடலில் நாயகன்,

**"வசந்தத்தில் ஆடும்**
**மலர்ச்செண்டு நீயே**
**மையல் கொண்டு நாடும்**
**தமிழ்த் தென்றல் நானே"**

என்று பாடுவதும், பதிலாக நாய்கி பாடும்

**"நிஜந்தான் என் ஆருயிர்**
**நீ ; வாழ்வு நான்!"**

என்று பாடுவதும் இலக்கியப் பாங்கோடு அமைந்துள்ளது.

நாயகி ஆருயிராக நாயகனைச் சொல்லி அவனுக்கு "வாழ்வு" தான் என்று சொல்வதும் ஓர் அரிய சிந்தனை அல்லவா?"

'அம்பிகாபதி' படத்தில் 'அமராவதியே' எனத் தொடங்கும் சந்தானத்தின் பாடல் இலக்கியச் செறிவு மிகுந்து மின்னுகிறது!

அந்தப் பாடலில்,

"அந்தமேவும் அரவிந்த மாமலரில்
வந்தவேத வல்லியோ! - கடல்
தந்த பொன்னின் செல்வியோ - மதன்
சிந்தை வாழும் மெல்லியோ - என்று
கண்ட போதில் ஐயம் கொண்டு பேசும் எழில்
நின்றுலாவும் கிள்ளையாள்..."

என்று அற்புதமாக வர்ணனை செய்யும் கவிஞர், இதே பாடலில்

"அங்கம் யாவும் தங்கமே - முகம்
பொங்கும் சுந்தர பிம்பமே - சற்றும்
அங்கில்லை களங்கமே - பிறைத்
துண்டுபோல நெற்றி, சங்கு போலக் கழுத்தும்
சொல்லொணாத இன்பமே!

என்று வைரமணித் தமிழை கம்பீரமாகக் கையாண்டு தமது கவிதாசக்தியைத் தெளிவாக இனங்காட்டுகிறார்!

'அம்பிகாபதி' படத்திலிடம் பெற்ற 'சிந்தனை செய் மனமே' என்ற பாடலிலும்,

"சந்ததம் மூவாசை சகதியில் உழன்றனை
சமரச சன்மார்க்க நெறிதனை மறந்தனை
அந்தகன் வரும்போது அவனியில் யார் துணை?
ஆதலினால் இன்றே அருமறை பரவிய
சரவணபவ குகனை
சிந்தனை செய் மனமே"

என்ற வரிகள் சந்தானத்தின் பாத்திறனை பறை சாற்றுகிறது.

அம்பிகாபதி அமராவதியை வர்ணிப்பதாய் அமைந்த பாடலை

"அம்புலியைக் குழம்பாக்கி
அரவிந்த ரசமொடு அமுதுஞ் சேர்த்து
இன்பநிறை முகமாக்கி
கயிலிரண்டைக் கண்ணாக்கி
மன்னன் ஈந்த பைங்கிளியே"

என்றமைத்துத் தமது சந்தனத் தமிழாற்றில் எம்மை நீந்தச் செய்கிறார் சந்தானம்!

'ஆடிப் பெருக்கு' படத்தில்,

''காவேரி ஓரம் கவிசொன்ன காதல்
கதைசொல்லி நான் பாடவா - உள்ளம்
'அலைமோதும் நிலை கூறவா...''

என்று அழகுடன் சொல்லும் கவிஞர்,

பொருளோடு வாழ்வு உருவாகும்போது
புகழ்பாடப் பலர் கூடுவார் - அந்த
புகழ்ப் போதையாலே எளியோரின் வாழ்வை
மதியாமல் உரையாடுவார் - ஏழை
விதியோடு விளையாடுவார் அன்பை
மலிவாக எடை போடுவார்...''

என்ற வரிகள் மூலம் பொய்ம்மையும் மோசத்தனமும் மிக்க உலகில்' மெய் யன்புக்கு மரியாதை இல்லை என்பதனை தெளிவாகக் கூறுகிறார்.

இதே படத்தில் இடம் பெற்ற

''தனிமையிலே இனிமை காண முடியுமா?''

என்ற பாடலில் நாயகன்,

''துணை இல்லாத வாழ்வினிலே சுகம் வருமா''

என்று பாட நாயகி,

''அதைச் சொல்லிச் சொல்லித் திரிவத னாலே துணை வரு மா?''

என்று பதிலுப் பாடி தொடர்ந்து,

''மலர் இருந்தால் மணமிருக்கும் தனிமை இல்லை - செங்
கனி இருந்தால் சுவையிருக்கும் தனிமை இல்லை
கடல் இருந்தால் அலை இருக்கும் தனிமை இல்லை - நாம்
காணும் உலகில் ஏதும் தனிமை இல்லை''

என்று பாடுவது மிகவும் நயம் பொருந்தி விளங்குகிறது அல்லவா?

இப்படியாக இலக்கியச் சிறப்பு மிக்க பாட்ல்களைப் படைத்த கே.டி.சந்தானம் அவர்களை அண்மையில் பெசன்ட் நகரிலுள்ள அவர் இல்லத்தில் சந்தித்து உரையாடினேன்.

இன்றைய திரைப்படப் பாடல்கள் பற்றியும் இசைபற்றியும் அவர் மிகுந்த வேதனையுடன் ''இன்றைய இசைப்போக்கும், பெரும்பாலான பாடல்களின் தரமும் மங்கிப் போய்விட்டது! பாமர மக்களின் ரசனைக்குத் தீனி போட்டுப் பணம் பண்ணும் பேர்வழிகளே மிகுந்திருக்கிறார்கள்.

இத்தகையவர்களிடம் நல்ல தமிழையும் நல்ல இசையையும் எதிர்பார்ப்பதில் அர்த்தமே இல்லை'' என்றார்.

கவிஞருக்கு இப்பொழுது வயது எழுபத்தைந்து.

தமிழ்ப்பட உலகில் அவர் அழியாத பாடல்கள் எழுதியதால் மட்டும் வெற்றி பெற்றவரல்லர்.

பாசமலர், தேடிவந்த மாப்பிள்ளை உட்பட பல படங்களிலும், நாடகங்களிலும் நடித்தும் அவர் நடிகராக வெற்றி பெற்றவர்.

சில படங்களுக்கு சிறப்பாக வசனமெழுதியும் வெற்றி பெற்றவர்.

ஏ.பி.நாகராஜன் போன்ற பலராலும், ''வாத்தியார்'' என்று அழைக்கப்பட்டு மரியாதை செலுத்தப்பட்டவர்.

சரி; இனி கவிஞர் பாடல்கள் சிலவற்றை முழுமையாக அனுபவியுங்கள்

## வான்மீதிலே...

*படம்: சண்டிராணி*
*பாடியவர்கள்: கண்டசாலா - பானுமதி*
*இசை: சி.ஆர்.சுப்பராமன்*
*ஆண்டு: 1953*

அவன்: வான்மீதிலே இன்பத்
தேன் மாரி பேயுதே

அவள்: வண்ணம்சேர் கலா[illegible]
வீசு வெண்ணில[illegible]மேல (வான் மீதிலே!)

அவன்: சுகாதீதம் மேவும் அநுராக கீதம்
சுருதியோடு பாடும் மதுவண்டு கேளாய்!

அவள்: சதானந்த ஜீவிய கானம் இதே!

ஓ! வான்மீதிலே!

அவன்: வசந்தத்தில் ஆடும்
மலர்ச் செண்டு நீயே!
மையல் கொண்டு நாடும்!
தமிழ்த் தென்றல் நானே!

அவள்: நிஜந்தான் என் ஆருயிர்
நீ; வாழ்வு நான்!
வான் மீதிலே...

அவன்: மனம் ஒன்று சேர்ந்தே
உறவாடும் போது
மருவும் ஆனந்தம்
தனக்கீடு ஏது?

அவள்: இணை இந்த ர போகமும் ஆகாது!
வான் மீதிலே! (வான் மிதீலே)

## துணிந்த பின்...

*படம்: தேவதாஸ்*
*பாடியவர்: கண்டசாலா*
*இசை: சி.ஆர்.சுப்பராமன்*
*ஆண்டு : 1953*

துணிந்த பின் மனமே
துயரம் கொள்ளாதே
சோகம் பொல்லாதே
அணையும் காற்றில் அகல்விளக்கேற்றி
மறைப்பதில் பயனுண்டோ? - கையால்
மறைப்பதில் ப்யனுண்டோ? அதனால் (துணிந்த)
பாழும் ஆற்றில் நீவீழ்ந்த பின்னால்
நீந்துவதால் பயனேது?
சீறும் புயலும் மழையும் சேர்ந்தால்
சின்னக்குடை தாங்காது! (துணிந்த)
காதல் தந்த துயர்தீர, போதை

கடலில் மூழ்கிட லானாய்
சாவது நிஜமே நீ ஏன் வீணாய்
சஞ்சலப்பேய் வசம் ஆனாய் (துணிந்த)

## உறவுமில்லை...

*படம்: தேவதாஸ்*
*பாடியவர்கள்: கண்டசாலா - கே.ராணி*
*இசை: சி.ஆர்.சுப்பராமன்*
*ஆண்டு: 1953*

ஆ: உறவுமில்லை பகையுமில்லை ஒன்றுமே இல்லை
உள்ளதெல்லாம் நீயேயல்லால் வேறே கதியில்லை
இனி யாரும் துணை இல்லை

பெ: எனது வாழ்வின் புனித ஜோதி எங்கே சென்றாயோ?
இதயம் குளிர சேவை செய்யும் நினைவும் வீணானதே!
என் கனவும் பாழானதே!

ஆ: முடிவில்லாத துன்பமதிலும் இன்பம் வேறேது?
கெடுதிசெய்வார் தனிலும் மேலாம் நண்பர் வேறேது?
அடைய முடியா பொருளின் மீது
ஆசை தீராது! அபிமானம் மாறாது!

பெ: குளம் நிறைந்தால் ஜலம்வழிந்தே வேறு வழி ஏகும்
குமுறி புகையும் எரிமலையும் ஓர்நாள் அமைதியாகும்
மனதில் பொங்கும் துயர வெள்ளம் வடியும் நாளேது?
ஒரு முடிவு தானேது?

ஆ: உள்ளதெல்லாம் நீயே அல்லால் வேறே கதியில்லை
இனியாரும் துணையில்லை!

## எல்லாம் மாயை தானா...

*படம்: தேவதாஸ்*
*பாடியவர்: கே.ராணி*

*இசை: சி.ஆர்.சுப்பராமன்*
*ஆண்டு: 1953*

எல்லாம் மாயை தானா - பேதை
எண்ணம் யாவும் வீணா
ஏழை எந்தன் வாழ்வில் - இனி
இன்பம் காண்பேனா?
இணைபிரியாத சிநேகம் மறந்தனையோ
உன்னை ஈன்றவர் சொல்லை மீறவும் பயந்தனையோ?
என் ஏழ்மையினாலே பிரேம கபாடம்
தானே மூடியதோ? விதிதான் விளையாடியதோ?
கனவிலும் மறவாக் காதல் நினைவுடனே
முன் கண்டறியாத ஒருவன் துணையுடனே
மனவேதனை என்னும் தீயதனால் நான்
வெந்தே மாள்வதோ? இது நன்றோ தேவதாஸ்

## நான் கொண்ட காதல்...

*படம்: காதல்*
*பாடியவர்: கண்டசாலா*
*இசை: சி.ஆர்.சுப்பராமன்*
*ஆண்டு: 1952*

நான் கொண்ட காதல் இவ்வாறு தான்
நட்டாற்றில் பாழாய் போனதே!
கரைகண்ணிலே தென்படு முன்னமே
சுக்கானும் சுழல் மூழ்கிப் போச்சே! (கரை)

விதிவலியாலே எனை அறியாமல்
தலையில் இடியும் விழுந்ததே! (விதி)

விரைவினிலே என் காதல் கோட்டை
சரிந்து பூமியில் ஆழ்ந்ததே! (நான்)

மின்னெழிலே உன் புன்னகையின்றி
வாழ்வே சூனியமானதே!
கனிந்த காதல் இழந்த நெஞ்சம்
கருகி சாம்பலானதே! (நான்)

## அமராவதியே...

*படம்: அம்பிகாபதி*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு: 1957*

அமராவதியே! என் ஆசைக் கனியமுதே!
கமழும் தமிழ்மணமே! கட்டழகே! நித்திலமே!
இமையாது எனைநோக்கி என்னுயிரைக் கொள்ளை கொண்டு
அமையாத மின்போல் அகன்றாயே
ஆற்றுவேனோ! ஆற்றுவேனோ!

அந்தமேவும் அரவிந்த மாமலரில்
வந்த வேத வல்லியோ! - கடல்
தந்த பொன்னின் செல்வியோ - மதன்
சிந்தை வாழும் மெல்லியோ - என்று
கண்ட போதில் ஐயம் கொண்டு பேசும் எழில்
நின்றுலாவும் கிள்ளையாள்
துங்கமேவும் இளநங்கையாளின் - எழில்
அங்கம் யாவும் தங்கமே - முகம்
பொங்கும் சுந்தர பிம்பமே - சற்றும்
அங்கில்லை களங்கமே - பிறைத்
துண்டு போல நெற்றி சங்கு போலக் கழுத்தும்
சொல்லொணாத இன்பமே!
கொண்டல் நாணும் குழல் செண்டை நாடும் சுழல்
வண்டு நாணும் விழியாள் - கற்
கண்டு நாணும் மொழியாள் - மின்னல்

கண்டு நாணும் இடை, கொண்டு தேனும் சுவை
குன்றி நாணும் இதழாள்!

## மின்னுவதெல்லாம்...

*படம்: கோமதியின் காதலன்*
*பாடியவர்கள்: சீர்காழி - ஜிக்கி*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு: 1955*

பெ: மின்னுவதெல்லாம் பொன்னென்று எண்ணி
கண்ணிருந்தும் குருடானேன் - நான்
கண்ணிருந்தும் குருடானேன்!

ஆ: செல்வமிருந்தும் சீரோடு வாழ்ந்தும்
கள்வனெனும் பழிகொண்டேன்
காதலிலும் தோல்வி கண்டேன்

பெ: எண்ணத்திலே இடி வீழ்ந்ததே
இதயத்திலே இருள் சூழ்ந்ததே
கண்ணியமில்லாக் கள்வனின் நேசம்
பெண்மைக்கே இழிவானதே! (மின்னு)

ஆ. உண்மைக்கே திரை மூடினேன்
உருமாறி உறவாடினேன்
நம்பிக்கை கொண்ட நங்கையின் உள்ளம்
வெம்பவே வினை தேடினேன் (மின்னு).

## தமிழ்மாலை..

*படம் : அம்பிகாவதி*
*பாடியவர் : டி.எம்.எஸ்.*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு : 1957*

தமிழ்மாலை தனைச் சூடுவான் - கொன்றைத்

தளிர்மாலை மலர்மாலை ஜெபமாலையுடன் சந்தத்
(தமிழ்)

தாப மிகுவெப்பு வாதமொடு பித்த
மானபிணி மொய்த்து - உடம்போடு
சாருமுயிர் துன்ப சாகரம் உழன்று
சாதனை இழந்து வருந்தாமுன்
தாளை அளித்திட வேணுமெனத் துதி
பாட அருணகிரி நாதனழைத்திட
தயவுடன் விரைந்து அருள்மழை பொழிந்து
முத்தைத் தரு பத்தித்திரு நகையென
முதலடி உரைத்த தழைத்த கருணையை
நினைத்து நினைத்து கவிமலர் தொடுத்த (தமிழ்)

## சிந்தனை செய் மனமே...

*படம்: அம்பிகாபதி*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: ஜி.ராம்நாதன்*
*ஆண்டு: 1957*

சிந்தனை செய் மனமே - தினமும்
சிந்தனை செய் மனமே
செய்தால் தீவினை அகன்றிடுமே.
சிவகாமி மகனைச் சண்முகனை (சிந்தனை)

செந்தமிழ்க்கருள் ஞானதேசிகனை - செந்தில்
கந்தனை, வானவர் காவலனை - குகனை (சிந்தனை)

சந்ததம் மூவாசை சகதியில் உழன்றனை
சமரச சன்மார்க்க நெறிதனை மறந்தனை
அந்தகன் வரும்போது அவனியில் யார்துணை?

ஆதலினால் இன்றே அருமறை பரவிய
சரவணபவ குகனை
(சிந்தனை)

## அம்புலியைக் குழம்பாக்கி..

*படம்: அம்பிகாபதி*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு: 1957*

அம்புலியைக் குழம்பாக்கி
அரவிந்த ரசமொடு அமுதஞ் சேர்த்து
இன்பநிறை முகமாக்கி
கயலிரண்டைக் கண்ணாக்கி
மன்னன் ஈந்த பைங்கிளியே!
அயலொருவர் கண்படுமோ என்றஞ்சி
பயத்தோ டுன்னைக்
கங்குலிலே காண்ப தல்லால்
கணப்பொழுதும் இணைபிரியாக் காலம் என்றோ?

## கண்கவரும் சிலையே...

*படம்: காஞ்சித் தலைவன்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு: 1963*

கண்கவரும் சிலையே! காஞ்சிதரும் கலையே!
கவிபிறவா முன்பிறந்த தமிழகத்தின் நிதியே! (கண்)
பகைமுடிக்கப் பலவகையாம் படைக்கலங்கள் போதும் - எழில்
சிலைவடிக்க சிறு உளியும் இரு கரமும் போதும்
முகைவெடிக்கும் முறுவலென தெரிவாய் - சினம்
மூண்டெழுத்தால் ஆண்டவன் பேய்த் தாண்டவமும் புரிவார்!
(கண்)

படிக்குமுன்னே செவியினிலே தேன் பாயவரும்

தமிழ் போல் - நான்
நினைக்குமுன்னே பலவடிவாய் நெஞ்சமெல்லாம் நிறைவாய்!
உனக்கு முன்னே வாழ்ந்தவர்கள்
எத்தனையோ கோடி - அந்த
இடம் பெயர்ந்தார் பெருமை எல்லாம்
தொடர் கதையாய் தருவாய்! (கண்)

## காவேரி ஓரம்...

*படம்: ஆடிப்பெருக்கு*
*பாடியவர்: பி.சுசீலா*
*இசை: ஏ.எம்.ராஜா*
*ஆண்டு: 1962*

காவேரி ஓரம் கவிசொன்ன காதல்
கதைசொல்லி நான் பாடவா - உள்ளம்
அலைமோதும் நிலை கூறவா - அந்தக்
கனிவான பாடல் முடிவாகு முன்னே
கனவான கதை கூறவா - பொங்கும்
விழிநீரை அணை போடவா (காவேரி)

பொருளோடு வாழ்வு உருவாகும் போது
புகழ் பாடப்பலர் கூடுவார் - அந்த
புகழ்ப் போதையாலே எளியோரின் வாழ்வை
மதியாமல் உரையாடுவார் - ஏழை
விதியோடு விளையாடுவார் - அன்பை
மலிவாக எடைபோடுவார் என்ற
கனிவான பாடல் முடிவாகு முன்னே
கனவான கதை கூறவா - பொங்கும் விழிநீரை
அணைபோடவா
(காவேரி)

அழியாது காதல் நிலையானதென்றே
அழகான கவி பாடுவார் - வாழ்வில்
வளமான மங்கை பொருளோடு வந்தால்

மனமாறி உறவாடுவார் - கொஞ்சும்
மொழிபேசி வலை வீசுவார் - தன்னை
எளிதாக விலை பேசுவார் என்ற
கனிவான பாடல் முடிவாகு முன்னே
கனவான கதை கூறவா - பொங்கும்
விழிநீரை அணை போடவா
மணவாழ்வு மலராத மலராகுமா
மனதாசை விளையாத பயிராகுமா
உருவான உயர்அன்பு பறிபோகுமா
உயிர்வாழ்வு புவிமீது சுமையாகுமா, சுமையாகுமா

## தனிமையிலே...

*படம்: ஆடிப்பெருக்கு*
*பாடியவர்கள்: ஏ.எம்.ராஜா - ஜிக்கி*
*இசை: ஏ.எம்.ராஜா*
*ஆண்டு: 1962*

ஆ: தனிமையிலே இனிமை காண முடியுமா?
பெ: நடு இரவினிலே சூரியனும் தெரியுமா?
ஆ: துணை இல்லாத வாழ்வினிலே சுகம் வருமா?
பெ: அதைச் சொல்லிச் சொல்லி திரிவதினாலே துணை வருமா?
மனமிருந்தால் வழியில்லாமல் போகுமோ? - வெறும்
மந்திரத்தால் மாங்காய் வீழ்ந்திடுமோ? (தனிமை)

மலர் இருந்தால் மணமிருக்கும் தனிமை இல்லை! - செங்
கனி இருந்தால் சுவை இருக்கும் தனிமை இல்லை!
கடல் இருந்தால் அலை இருக்கும் தனிமை இல்லை - நாம்
காணும் உலகில் ஏதும் தனிமை இல்லை! (தனிமை)
பனிமலையில் தவமிருக்கும் மாமுனியும் - கொடி
படையுடனே பவனி வரும் காவலனும்
கவிதையிலே நிலைமறக்கும் பாவலனும் - இந்த
அவனியெல்லாம் போற்றும் ஆண்டவனாயினும்
(தனிமை)

# கா.மு.ஷெரீப்

தஞ்சை மாவட்டத்திலுள்ள அபிவிருத்தி ஈஸ்வரம் கிராமத்தில் 1914-இல் பிறந்தவர் இவர்.

சீறாப்புராணத்தில் பத்து பகுதிகளுக்கு திறனாய்வுப் பாங்குடன் உரை எழுதியுள்ளார். ஒளி, அமுதகலசம் போன்ற தரமான கவிதைத் தொகுதி களை வெளியிட்டுள்ளார். விதியை வெல்லுவோம், நல்ல மனைவி,தஞ்சை இளவரசி போன்ற நாவல்களை எழுதியுள்ளார். மேலும் பல நூல்களை வெளிக்கொணர்ந்துள்ள இக்கவிஞர், 'சாட்டை' என்ற பேரில் ஓர் பத்திரி கையையும் நடத்தியுள்ளார்.

திரைப்படத் துறையில் பாடலாசிரியராக நுழைந்து காலத்தால் அழிக்க முடியாத பல பாடல்களை ஷெரீப் எழுதியுள்ளார்.

'அன்னையின் ஆணை' படத்தில் பெற்றதாயின் மகோன்னதத் தியா கத்தை எடுத்துக் காட்டும்வண்ணம்,

''பத்துமாதம் சுமந்திருந்து பெற்றாள்
பகலிரவாய் விழித்திருந்து வளர்த்தாள்
வித்தகனாய் கல்விபெறச் செய்தாள்
மேதினியில் நாம் வாழச் செய்தாள்
அன்னையைப் போலொரு தெய்வமில்லை - அவள்
அடிதொழ மறுப்பவர் மனிதரில்லை''

என்று ஜீவனுள்ள பாடலொன்றைக் கவிஞர் தீட்டியுள்ளார்.

அப்பாடலில்,

''நாளெல்லாம் பட்டினியாய் இருந்திடுவாள் - ஒரு
நாழிகை நம் பசி பொறுக்க மாட்டாள்!
மேலெல்லாம் இளைத்திட பாடுபட்டே
மேன்மையாய் நாம் வாழ செய்திடுவாள்''

என்று எழுதியுள்ளது நெஞ்சை நெகிழச் செய்து விழிகளில் நீரை வரவழைக்கும் வண்ணம் அமைந்துள்ளது.

சுமார் இருபது வருடங்களுக்கு முன் யாழ்ப்பாண மாவட்டத்திலுள்ள சுன்னாகம் என்ற ஊரில் ஓர் ஓட்டலில் நான் தேனீர் அருந்திக் கொண்டிருந் தேன்,

'அன்னையைப் போல்' ,என்று ஆரம்பிக்கும் இப்பாடல் ரேடியோ வில் போய்க் கொண்டிருந்தது.

ஒரு இளைஞன் இப்பாடலைக் கேட்டு விம்மி விம்மி அழுது கொண்டி ருந்தான்.

'என்ன விஷயம்? ஏன் அழுகிறாய்?'' என்று அந்த இளைஞனை விசாரித்தேன்.

''ஐயா நான் என் தாய்க்குச் செய்ய வேண்டிய கடமைகளை செய்யாது துஷ்ட சகவாசத்தால் சீரழிந்து விட்டேன். இந்தப் பாட்டைக் கேட்கும் போது என் தவறுகள் எனக்குப் புரிந்து விட்டது. இனி என் தாயை தெய்வ மாகக் கொண்டாடி அவருடைய கடைசிக் காலம் வரை அவரைக் காப்பாற் றுவேன்'' என்றான் அவன்.

ஒரு நல்ல திரைப்பாடல் உன்னதமான இலக்கியத்திற்குரிய தகுதியு டையது. சிறந்த அறிவு நூலுக்கு ஒப்பானது என்பதனை அன்றுதான் நானும் உணர்ந்தேன்!

கா.மு.ஷெரீப் எழுதிய எந்தப் பாடலுமே சோடை போகவில்லை. 'பணம் பந்தியிலே' படத்தில்,

''இருக்கும் இடத்தை விட்டு இல்லாத இடத்திலெல்லாம்
விருப்புடன் தேடிடுவார் ஞானத்தங்கமே - அவர்
ஏதும் அறியாரடி ஞானத்தங்கமே!

என்ற பாடலில்தான் எத்துணை ஆழமான தத்துவச்சிந்தனை மின்னுகிறது?

இதே பாடலில் முத்தாய்ப்பாக,

''பந்தமெது பாசமெது பக்திஎது முக்திஎது

அந்தமெது ஆதிஎது ஞானத்தங்கமே - இதை
அறிந்தவர் யாருமில்லை ஞானத்தங்கமே''

என்ற வரிகள் பேராற்றல் பிழம்பாக,மறைபொருளாக சுடரும் இறைவன் சூட்சுமத்தை மாந்தனால் அத்துனை இலகுவில் அறிந்து கொள்ள முடியாது என்ற பேருண்மையை உணர்த்தி நிற்றலைக் காண்க.

தெருக்கூட்டும் பெண்டிர் பற்றி 'புதுயுகம்' படத்தில் ஷெரீப் ஒரு பாட்டெழுதியுள்ளார்.

''ஜாதியிலே நாங்க தாழ்ந்தவங்க
ரொம்பத் தாழ்ந்தவங்க ஆனா
நாங்கதான் இல்லேன்னா
எந்த வேலைதான் ஆகுமுங்க?''

என்று பின் தங்கிய ஜாதிப் பெண்கள் குரல் கொடுக்கிறார்கள்.

இதே பாடலில்,

''அஞ்சி அஞ்சி நெஞ்சொடிய
பஞ்சையாகி பாடுபட்டோம்....''

என்ற வரிகளிலும்,

''ஓய்ந்திருக்கக் கூடாதுங்க
சும்மா வீட்டிலே
உழைப்பவனே உயர்ந்த ஜாதி
இனிநம் நாட்டிலே''

என்ற வரிகளிலும் கவிஞரின் முற்போக்குச் சிந்தனைப் புலப்படுகிறது!

ஒரு தந்தை தன் பிள்ளையைப் பார்த்து பாடுவதாக அமைந்த நெஞ்சுருக்கும் பாடல் ஒன்றை ''நான் பெற்ற செல்வம்'' படத்தில் ஷெரீப் எழுதியுள்ளார்.

''நான் பெற்ற செல்வம் நலமான செல்வம்
தேன்மொழி பேசும் சிங்கார செல்வம்''

என்ற வரிகளில் கவிஞரின் உணர்ச்சிப் பெருக்கை நாம் காணலாம்.

இதேபாட்லில்,

''தொட்டாலே மணக்கும் ஜவ்வாது
சுவைத்தால் இனிக்கும் தேன்பாகு!
எட்ட இருந்தே நினைத்தாலும்

இனிக்கும் மணக்கும் உன் உருவம்''

என்ற வரிகளில் இலக்கிய நயம் உயர்ந்து விளங்குகிறது.

'நான் பெற்ற செல்வம்' படத்தில் இடம் பெற்ற ஷெரீப்பின் இன்னு மொரு பாடலைப் பார்ப்போம்.

''வாழ்ந்தாலும் ஏசும்
தாழ்ந்தாலும் ஏசும்
வையகம் இதுதானடா!''

இது உலகியலை அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டும் ஜீவனுள்ள வரிகள் அல்லவா?

''வீழ்ந்தாரைக் கண்டால்
வாய்விட்டுச் சிரிக்கும்
வாழ்ந்தாரைக் கண்டால்
மனதுக்குள் வெறுக்கும்''

என்று கவிஞர் எழுதியிருப்பது சராசரி மனித குணத்தைப் பட்டவர்த்தனமாகத் தோலுரித்துக் காட்டுகிறதல்லவா?

'பணம் பந்தியிலே' படத்திலே கவிஞர் எழுதிய பாடலொன்று பணத்தின் அருமை தெரியாது வாழ்பவர்களுக்கு விழிப்புணர்ச்சியை ஊட்டும் வண்ணம்.

''பணம் பந்தியிலே குணம் குப்பையிலே - இதைப்
பார்த்து அறிந்து நடக்காதவன் மனிதனில்லே
பிழைக்கும் மனிதனில்லே''

என்று தொடங்குகிறது.

அறிவோ, நேயபாவமோ இல்லாத வெட்டி ஆசாமிகள் பலர் கையிலே பணமிருக்கிற காரணத்தால் சமூக அந்தஸ்தைப் பெற்று விடுகின்றனர்.

இதனைக் கவிஞர்,

''ஒண்ணுந் தெரியா ஆளாலும் பணமிருந்தாலே அவனை
உயர்த்தி பேச மனிதக் கூட்டம் நாளும் தப்பாதே''

என்று சிறப்பாக எழுதிவிட்டு,

''என்ன அறிவு இருந்திட்டாலும் பணமில்லாத ஆளை - உலகம்
எந்த நாளும் மனிதனாக மதிக்க மாட்டாதே''

என்று அறிவாளிகளுக்கு கொடுக்கப்படும் மரியாதையும் பணத்தை வைத்துத்தான் தீர்மானிக்கப்படுகிறது என்ற பேருண்மை ஒன்றை அற்புதமான முறையில் வெளிப்படுத்துகிறார்.

காதல் பாடல்கள் எழுதுவதிலும் ஷெரீப் சிறந்தவரே யாவார்.

"ஏரிக்கரையின் மேலே
போறவளே பெண்மயிலே
என்னருமைக் காதலியே
என்னைக் கொஞ்சம் பாருநீயே"

என்று 'முதலாளி' படத்திற்காக எழுதினார் அவர்

"வானில் முழுமதியைக கண்டேன்
வனத்தில் ஒரு பெண்ணைக் கண்டேன்
வான மதுமதியைப் போலே
மங்கையவள் வதனங் கண்டேன்".

என்று "சிவகாமி" படத்தில் இளமை துள்ளும் பாடல் தீட்டினார் கவிஞர்

"டவுன் பஸ்' படத்தில் இடம் பெற்ற,

"சிட்டுக்குருவி சிட்டுக்குருவி
சேதி தெரியுமா? - என்னை
விட்டுப் பிரிந்து போன கணவன்
வீடு திரும்பல"

பாடல்தான் எத்துணை இனிமையானது!

அதே படத்தில் காதல் சோகத்தை கவி ஷெரீப் உன்னதமான முறையில்,

"பொன்னான வாழ்வு மண்ணாகிப் போமா
துயரம் நிலைதானா? உலகம் இதுதானா?"

என்று வெளிப்படுத்தியுள்ளார்.

கவிஞர் தமது வாழ்வில் ஒழுக்கத்துக்கு முதலிடம் கொடுத்து வாழ்நது வருகிறார் எழுபதெட்டு வயதுடைவரென்றாலும்: கம்பீரமாக உரையாடுகிறார் இறைவன் மாட்சி பற்றியும், தமிழ் இலக்கியங்கள் பற்றியும் பேசுவதில் அதிக ஆர்வங்காட்டுகிறார்.

இன்றைய சினிமாப் பாடல்கள் பற்றிக் கேட்டேன். கவிஞர் கடுங் கோபத்துடன் "இசையையும் கெடுத்துப் பாட்டையும் கெடுத்து நாசப்ப

டுத்தி விட்டார்கள்'' என்றார்

இனி கா.மு.ஷெரீப்பின் அர்த்தமும் அழகுமுள்ள சில பாடல்களை முழுமையாக அனுபவியுங்கள்.

## ஜாதியிலே நாங்க...

*படம்: புது யுகம்*
*பாடியவர்கள்: ஜிக்கி - குழுவினர்*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு: 1954*

ஜாதியிலே நாங்க தாழ்ந்தவங்க
ரொம்பத் தாழ்ந்தவங்க ஆனா
நாங்கதான் இல்லேன்னா
எந்த வேலைதான் ஆகுமுங்க? (ஜாதி)

நித்த நித்தம் மத்தவங்க
சுத்தமாய் வாழ்ந்திருக்க
நாங்க வேணும் இல்லேன்னா
ஊருகெட்டு போகுங்க

தாழ்ந்தவங்க உயர்ந்தவங்க இல்லே
நம்ம நாட்டிலே
ஜாதிரெண்டே என்று சொன்னா
ஔவையும் தன் பாட்டிலே
ஆனாலுந்தா பெரியவங்க
மனசு மட்டும் மாறலே!
அஞ்சி அஞ்சி நெஞ்சொடிய
பஞ்சையாகி பாடுபட்டோம்
ஆனா பலன் ஒன்றுமில்லே
காலம் என்று மாறுமோ?
ஓய்ந்திருக்கக் கூடாதுங்க
சும்மா வீட்டிலே
உழைப்பவனே உயர்ந்த ஜாதி

இனி நம் நாட்டிலே
ஓராயிரம் தடவையிதைச்
சொல்லிச் சொல்லி ஆடுவோம்!

## நான் பெற்ற செல்வம்...

*படம்: நான் பெற்ற செல்வம்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: ஜி.ராமநாதன்*

நான் பெற்ற செல்வம் நலமான செல்வம்
தேன்மொழி பேசும் சிங்கார செல்வம்

நான் பெற்ற செல்வம்
நலமான செல்வம்
தேன் மொழி பேசும்
சிங்கார செல்வம் - நீ (நான்)

தொட்டாலே மணக்கும் ஜவ்வாது
சுவைத்தால் இனிக்கும் தேன் பாகு!
எட்ட இருந்தே நினைத்தாலும்
இனிக்கும் மணக்கும் உன் உருவம் - நீ (நான்)

அன்பே இல்லா மானிடரால்
அன்னையை இழந்தாய் இளம் வயதில்
பண்பே அறியாப் பாவியர்கள்
வாழுகின்ற பூமிஇது நீ அறிவாய் - கண்ணே! (நான்)

## பணம் பந்தியிலே...

*படம்: பணம் பந்தியிலே*
*பாடியவர்: சீர்காழி*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு: 1961*

பணம் பந்தியிலே குணம் குப்பையிலே - இதை

பார்த்து அறிந்து நடக்காதவன் மனிதனில்லே
பிழைக்கும் மனிதனில்லே!

ஒண்ணுந் தெரியா ஆளாலும் பணமிருந்தாலே - அவனை
உயர்த்திப் பேச மனிதக்கூட்டம் நாளும் தப்பாதே!
என்ன அறிவு இருந்திட்டாலும் பணமில்லாத ஆளை - உலகம்
எந்த நாளும் மனிதனாக மதிக்க மாட்டாதே (பணம்)

ஆளை ஆளு புகழ்வதெல்லாம் பணத்துக்காகத்தான் - பணம்
அகன்றுவிட்டால் புகழ்ந்த கூட்டம் இகழும் உன்னைத்தான்
ஏழ்மை நிலை வந்தால் நேசர் யாரும் இல்லை - இதை
எண்ணிப் பார்த்து நடக்காதவன் அடைவான் தொல்லை!
(பணம்)

உன்னால் உயர்ந்த நிலையை அடைந்தோர்
நிறைய பேர்கள் உண்டு - அவர்கள்
உனது நிலை தாழ்ந்த பின்பு ஒதுங்குவார் கண்டு
மண்ணாய் அவரை மதித்து நீயும் துணிவுமேகொண்டு
நாளும் முயன்று மேலும் பாடுபட்டால் வெற்றியும் உண்டு!
(பணம்)

## வாழ்ந்தாலும் ஏசும்...

*படம்: நான் பெற்ற செல்வம்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு: 1956*

வாழ்ந்தாலும் ஏசும்
தாழ்ந்தாலும் ஏசும்
வையகம் இதுதானடா! (வாழ்ந்தாலும்)

வீழ்ந்தாரைக் கண்டால்
வாய்விட்டுச் சிரிக்கும்
வாழ்ந்தாரைக் கண்டால்
மனதுக்குள் வெறுக்கும்

இல்லாரைக் கண்டால்
ஏளனம் செய்யும்

இருப்பவன் கேட்டால்
நடிப்பென மறுக்கும்!
பண்பாடு இன்றிப் (வாழ்ந்தாலும்)
பாதகம் செய்யும்
பணத்தாலே யாவும்
மறைத்திட நினைக்கும்!
குணத்தோடு வாழும்
குடும்பத்தை அழிக்கும்
குணம்மாறி நடந்தே
பகைமையை வளர்க்கும் (வாழ்ந்தாலும்)

## பொன்னான வாழ்வு...

*படம்: டவுன் பஸ்*
*பாடியவர்கள்: திருச்சிலோகநாதன், ராஜேஸ்வரி*
*இசை: கே.வி.மகாதேவன்.*
*ஆண்டு: 1955*

பெ: பொன்னான வாழ்வு மண்ணாகிப் போமா?
துயரம் நிலைதானா? உலகம் இதுதானா?
பண்போடு முன்னாளில் அன்பாக என்னோடு வாழ்ந்தாரே!
வீணான பாலாய் விரும்பாத பூவாய்
இன்றென்னை வெறுத்தாரே என் அன்பை மறந்தாரே!

ஆ: பொன்னான வாழ்வு மண்ணாகிப் போமா?
துயரம் நிலைதானா? உலகம் இதுதானா?
பண்பாடு இல்லாமல் மண்மீதே பாழாகி நொந்தேனே!
தேனான வாழ்வு திசைமாறிப் போச்சே!
நிம்மதி இழந்தாச்சே! தீராத பழியாச்சே!

பெ: பொன்னான வாழ்வு மண்ணாகிப் போமா?
துயரம் நிலைதானா? உலகம் இதுதானா?
பெண்ணென்று பாராமல் - எல்லோரும்
என்மீது பழிசொல்வார்!

உள்ளன்பு கொண்டேன் அவர்மீது நானே
ஊராரும் அறிவாரோ?
என் வாழ்வை அழிப்பாரோ? (பொன்)

## அன்னையைப் போலொரு...

*படம்: அன்னையின் ஆணை*
*பாடியவர்: டி.எம்.எஸ்*
*இசை: எஸ்.எம்.சுப்பையாநாயுடு*
*ஆண்டு: 1958*

பத்துமாதம் சுமந்திருந்து பெற்றாள்
பகலிரவாய் விழித்திருந்து வளர்த்தாள்
வித்தகனாய் கல்விபெற வைத்தாள்
மேதினியில் நாம்வாழச் செய்தாள்
அன்னையைப் போலொரு தெய்வமில்லை - அவள்
அடிதொழ மறுப்பவர் மனிதரில்லை மண்ணில் மனிதரில்லை
(அன்னை)
துன்பமும் தொல்லையும் ஏற்றுக் கொண்டே - நம்மை
சுகம் பெறச் செய்திடும் கருணை வெள்ளம்
(அன்னை)
நாளெல்லாம் பட்டினியாய் இருந்திடுவாள் - ஒரு
நாழிகை நம்பசி பொறுக்க மாட்டாள்!
மேலெல்லாம் இளைத்திட பாடுபட்டே
மேன்மையாய் நாம்வாழ செய்திடுவாள்! (அன்னை)

## ஏரிக்கரையின் மேலே...

*படம்: முதலாளி*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு: 1958*

ஏரிக்கரையின் மேலே

போறவளே பெண் மயிலே
என்னருமைக் காதலியே
என்னைக் கொஞ்சம் பாருநீயே
அன்னம் போல நடை நடந்து
சென்றிடும் மயிலே
ஆசை தீர நில்லு கொஞ்சம் பேசுவோம் குயிலே!

(ஏரி)

தென்னைமரச் சோலையிலே
சிட்டுப் போல போறப்பெண்ணே
நில்லு கொஞ்சம் நானும் வாறேன்
சேர்ந்து பேசிப் போவோம் கண்ணே

அன்னம் போல நடை நடந்து
சென்றிடும் மயிலே
ஆசைதீர, நில்லு கொஞ்சம்
பேசுவோம் குயிலே

மாமரத் தோப்பினிலே
மச்சான் வரும் வேளையிலே
கோபங் கொண்ட மானைப் போலே
ஓடலாமோ பெண் மயிலே

அன்னம் போல நடை நடந்து
சென்றிடும் மயிலே
ஆசை தீர நில்லு கொஞ்சம்
பேசுவோம் குயிலே!

## வானில் முழு...

*படம்: சிவகாமி*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு: 1960*

வானில் முழு மதியைக் கண்டேன்
வனத்தில் ஒரு பெண்ணைக் கண்டேன்
வான் மதுமதியைப் போலே

மங்கையவள் வதனங் கண்டேன்!

கோவைபழம் கொடியில் கண்டேன்
குடிசைமுன்னே பெண்ணைக் கண்டேன்
கோவைப்பழ நிறத்தைப் போலே
குமரியவள் உதட்டைக் கண்டேன் (வானில்)

சோலையிலே தென்னை கண்டேன்
தோட்டத்திலே பெண்ணைக் கண்டேன்
சோலை தென்னம்பாலை போலே
தோகையவள் சிரிக்கக் கண்டேன்.

மலைமேலே தேனைக் கண்டேன்
மலையடியில் பெண்ணைக் கண்டேன்
மலைத்தேனின் இனிப்பைப் போலே
மாது அவள் பேசக் கண்டேன்

தூக்கம் கண்ணைச் சுற்றக் கண்டேன்
தூங்கும் போது கனவு கண்டேன்
கனவிலேயும் அந்தப் பெண்ணே
கண்ணெதிரே நிற்கக் கண்டேன்! (வானில்

## இருக்குமிடத்தை விட்டு...

*படம்: பணம் பந்தியிலே*
*பாடியவர்: டி.எம்.எஸ்*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு: 1957*

இருக்கும் இடத்தைவிட்டு இல்லாத இடத்திலெல்லாம்
விருப்புடன் தேடிடுவார் ஞானத்தங்கமே - அவர்
ஏதும் அறியாரடி ஞானத் தங்கமே!
உண்மையே பேசிடுவார் ஒரு பிழையும் செய்தறியார்
ஊரெல்லாம் தூற்றிடுமே ஞானத்தங்கமே - அவரை
ஒதுக்கியே வைத்திடுமே ஞானத்தங்கமே!
ஓதாத நூல்களில்லை உரைக்காத ஞானமில்லை
ஏது உண்மை என்றறியார் ஞானத்தங்கமே - உலகில்

இவர்களும் வாழுகின்றார் ஞானத்தங்கமே!
பந்தமெது பாசமெது பக்திஎது முக்திஎது
அந்தமெது ஆதிஎது ஞானத்தங்கமே - இதை
அறிந்தவர் யாருமில்லை ஞானத்தங்கமே! (இருக்கும்)

# மருதகாசி

மேலக்குடிகாடு எனும் ஊரில் 1920-இல் பிறந்தவர் மருதகாசி. 'மாயாவதி' படத்தின் மூலம் திரைப்படப் பாடலாசிரியராக அரும்பினார். இருநூற்று ஐம்பது படங்களுக்கு மேல் பாடல்கள் எழுதிக் குவித்தவர். இவர் 1989-இல் புவிவாழ்வைத் துறந்தார்.

சொற்சுவை, பொருட்சுவை, நிரம்பிய பல நல்ல திரைப்பாடல்களை மருதகாசி இயற்றியுள்ளார்.

''நீலவண்ணக் கண்ணா வாடா
நீ ஒரு முத்தந் தாடா
நிலையான இன்பந் தந்து
விளையாடும் செல்வா வாடா''

என்ற அற்புதமான பாடலை 'மங்கையர் திலகம்' படத்திற்காக கவிஞர் இயறறினார்.

இப்பாடலில்,

''வானம் பாடி கானம் கேட்டு
வசந்த காலத் தென்றல் காற்றில்
தேன் மலர்கள் சிரிக்கும் காட்சி
செல்வன் துயில் நீங்கும் காட்சி''

என்ற வரிகளில் தான் எத்துணை நளினம்! எத்துணை இனிமை!

''நடுங்கச் செய்யும் வாடைக்காற்றே
ஞாயமல்ல உந்தன் செய்கை!

தடை செய்வேன் தாளைப் போட்டு
முடிந்தால் உன் திறமை காட்டு''

என்று சிறு குழந்தையை வாட்டும் வாடைக் காற்றைக் கடிந்து, ''கதவை மூடி அதன் வேகத்தைத் தடை செய்வேன்'' என பெற்றதாய் பாடுவதில் தான் எத்துணை உணர்ச்சி!

குழந்தைகளுக்காகத் தமிழ்த் திரைப்படங்களில் தீட்டப்பட்ட பாடல்களுக்கெல்லாம் மருதகாசியின் இப்பாடல் மகுடம் போன்றதென்றால் நிச்சயமாக இது மிகையான கணிப்பெனக் கூற முடியாது.

''பாக்கியவதி'' படத்திலும்,

''எல்லோரும் உன்னை நல்லவனென்றே
கொண்டாட வேண்டும்டா''

எனத் தொடங்கும் அருமையான குழந்தைப் பாடலொன்றை மருதகாசி எழுதியுள்ளார்.

காதல் பாடல்கள் எழுதுவதிலும் இக்கவிஞர் மிகச்சிறந்தவர்.

''மல்லிகா'' படத்தில்,

''வருவேன் நானுனது மாளிகையின் வாசலுக்கே
ஏனோ அவசரமே எனையழைக்கும் வானுலகே''

என்ற வரிகள் நெஞ்சைப் பிழிகின்றதல்லவா?

''காதலே கனவு எனும் கவிதை தன்னை வாழ்நாளில்
ஓர்முறை பாடியே உறங்கிடுவேன் உன் மடியில்''

என்ற மொழி ஆளுகையானது. கல்நெஞ்சரையும் கண்கலங்க வைத்திடும் எழில்மிக்க தல்லவா?

காதலின் மகோன்னத சக்தியைக் காட்டும் வண்ணம் ''ஆடவந்த தெய்வம்'' படத்தில் ஒரு பாடல் எழுதியுள்ளார். அப்பாடலில் வரும்,

''தீ இந்த உயிர்க்கூட்டை எரித்தாலும் அது
நீ இருக்கும் என் நெஞ்சை நெருங்காது''

என்ற வரிகள் ''மருதகாசி நல்ல இலக்கியக்காரர் என்பதனைத் தெட்டத் தெளிவாக உணர்த்த வல்லது!''

மருதகாசியின் தத்துவப் பார்வைக்குச் சான்றாக,

''சமரசம் உலாவும் இடமே - நம்

வாழ்வில் காணா சமரசம் உலாவும் இடமே''

என்று மயானத்தைக் குறிப்பிடும் பாடலைச் சொல்லலாம்.

''ஜாதியில் மேலோரென்றும் தாழ்ந்தவர்
தீயோரென்றும் பேதமில்லாது
எல்லோரும் முடிவில் சேர்ந்திடுங்காடு''

என்ற வரிகள் ''ஆணவமனிதன் மரணத்தைத் தழுவிய பின்தான் 'அனைவரும் சமம்' என்ற பேருண்மைத் தத்துவத்தை உணர முடிகிறது. மயானத்தில் வைத்து'' என்று பொருட்சிறப்போடு கவிஞர் கூறுகிறார்.

''ஆண்டி எங்கே? அரசனும் எங்கே?
அறிஞன் எங்கே? அசடனும் எங்கே?
ஆவி போனபின் கூடுவார் இங்கே''

என்ற வரிக் கவிஞரின் தத்துவப் பாத் திறனுக்கு உன்னதமான எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது!

மருதகாசியின் 'வீரபாவம்' தொனிக்கும் பாடலுக்கு உதாரணமாக ''நீலமலைத் திருடன்'' படத்தில் இடம்பெற்ற

''சத்தியமே லட்சியமாய்க் கொள்ளடா
தலைநிமிர்ந்து உனை உணர்ந்து செல்லடா''

என்று தொடங்கும் பாடல் சான்றாக அமைகிறது.

''எத்தனையோ மேடுபள்ளம் வழியிலே - உன்னை
இடறவைத்துத் தள்ளப்பார்க்கும் குழியிலே
அத்தனையும் தாண்டிக் காலை முன்வையடா நீ
அஞ்சாது கடமையிலே கண்வையடா''

என்ற வரிகள் வாழ்விலே முன்னேறத் துடிக்கும் ஒருவனுக்கு புது உற்சாகத்தைத் தர வல்லதாக உள்ளது.

உழைக்கும் ஏழை விவசாயிகளின் மாட்சியினை விளக்கும் வண்ணம்,

''ஏர்முனைக்கு நேர் இங்கே எதுவுமே இல்லை''
என்றும் நம்ம வாழ்க்கையில் பஞ்சமே இல்லை''

என்று ''பிள்ளைக் கனியமுது'' படத்திற்காக எழுதிய மருதகாசி உழைக்கும் வர்க்கம் முழுமைக்கும் ஆதரவாக நின்று ''சபாஷ் மாப்பிள்ளே'' படத்தில்,

''சிரிப்பவர் சிலபேர் அழுபவர் பலபேர்

இருக்கும் நிலையென்று மாறுமோ?''

எனத் தொடங்கும் அருமையான பாடலொன்றை எழுதியுள்ளார். அப்பாட்டில்,

''உழைப்பவர் வாழ்வோ வீதியிலே
உறங்குவதோ நடைப் பாதையிலே
இரக்கங் காட்டத்தான் நாதியில்லே''

என்று உருக்கமாக எழுதியுள்ளார். உண்மைதானே!

'ஏழ்மையை ஒழிப்போம்' என்று மேடைகள் தோறும் முழங்கி, ஏழை மக்களின் வாக்குகளைப் பெற்ற அரசியல் வாதிகள் குறுக்கு வழியில் சம்பாதித்து மாடி வீடுகளில் குளிரூட்டப்பட்ட அறைகளில் தூங்குகின்ற போது - சினிமாக்களில் ஏழை பங்காளராக நடித்து பொதுமக்கள் கொடுக்கும் பணத்திலேயே பங்களாகட்டி கோதையருடன் நிறை போதையிலே 'அரிதார அவதாரங்கள் ஆனந்த சயனம்' செய்யும் போது, படிப்பறிவில்லாத ஏழைகள் எத்தனை எத்தனை பேர் நடைப்பாதைகளிலே நாய்களோடு நாய்களாகப் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள்?

இப்பாடலின் மற்றுமோர் பகுதியில்,

''உயர்ந்தவர் தாழ்ந்திடத் தேவையில்லை
உள்ளதை இழந்திடச் சொல்லவில்லை
உழைப்பவர் உயர்ந்தால் போதுமையா!

என்று சீரிய கருத்தினைச் சொல்கிறார் கவிஞர்

இனி மருதகாசியின் பாடல்கள் சிலவற்றை முழுமையாக கண்டு மகிழுங்கள்.

## நீலவண்ணக் கண்ணா...

*படம்: மங்கையர் திலகம்*

*பாடியவர்: பாலசரஸ்வதி*

*இசை: தட்சணாமூர்த்தி*

*ஆண்டு: 1955*

நீல வண்ணக் கண்ணாவாடா நீ ஒரு முத்தம் தாடா

நிலையான இன்பம் தந்து விளையாடும் செல்வா வாடா
(நீல)

பிள்ளையில்லாக் கலியும்தீர வள்ளல் உந்தன் வடிவில் வந்தான்
எல்லையில்லாக் கருணை தன்னை என்னவென்று
சொல்வேனப்பா!

வானம்பாடி கானம் கேட்டு வசந்த காலத்தென்றல் காற்றில்
தேன்மலர்கள் சிரிக்கும் காட்சி செல்வன் துயில் நீங்கும் காட்சி
(நீல)

தங்கநிறம் உந்தன் அங்கம் அன்புமுகம் சந்திர பிம்பம்
கண்ணால் உன்னைக் கண்டால் போதும்
கவலையெல்லாம் பறந்தே போகும்!
சின்னஞ்சிறு திலகம் வைத்து சிங்காரமாய் புருவம் தீட்டி
பொன்னாலான நகையும் பூட்டக்
கண்ணா கொஞ்சம் கருணை காட்டு! (நீல)

நடுங்கச் செய்யும் வாடைக் காற்றே!
ஞாயமல்ல உந்தன் செய்கை!
தடை செய்வேன் தாளைப் போட்டு
முடிந்தால் உன் திறமை காட்டு
விண்ணில் நானிருக்கும் போது மண்ணில் ஒரு சந்திரன் ஏது?
அம்மா என்னபுதுமை என்றே கேட்கும் மதியைப் பாரு!
இன்ப வாழ்வின் பிம்பம் நீயே! இணையில்லா செல்வம் நீயே!
புகழ்மேவி வாழ்வாய் நீயே! புகழ்மேவி வாழ்வாய் நீயே! (நீல)

## சமரசம் உலாவும்...

*படம்: ரம்பையின் காதல்*

*பாடியவர் : சீர்காழி*

*இசை: டி.ஆர்.பாப்பா*

*ஆண்டு: 1956.*

சமரசம் உலாவும் இடமே
நம்வாழ்வில் காணா (சமரசம்)

ஜாதியில் மேலோரென்றும் தாழ்ந்தவர்,
தீயோரென்றும் பேதமில்லாது
எல்லோரும் முடிவில் சேர்ந்திடுங்காடு
தொல்லையின்றியே தூங்கிடும் வீடு
உலகிலே இதுதான்! (நம் வாழ்வில்)

ஆண்டி எங்கே? அரசனும் எங்கே?
அறிஞன் எங்கே? அசடனும் எங்கே?

ஆவிபோன பின் கூடுவார் இங்கே!
ஆகையினாலே இதுதான் (நம் வாழ்வில்)

சேவை செய்யும் தியாகி சிங்கார போகி
ஈசன் பொற்பாதம் தன்னை நாடிடும் யோகி
எல்லோரும் இங்கே ஒன்றாய் உறங்குவதாலே
உண்மையிலே இதுதான் (நம் வாழ்வில்)

## சத்தியமே லட்சியமாய்...

*படம்: நீலமலைத் திருடன்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு: 1957*

சத்தியமே லட்சியமாய்க் கொள்ளடா!
தலை நிமிர்ந்து உனை உணர்ந்து செல்லடா!

சத்தியமே லட்சியமாய்க் கொள்ளடா!
தலை நிமிர்ந்து உனை உணர்ந்து செல்லடா!
எத்தனையோ மேடுபள்ளம் வழியிலே - உன்னை
இடற வைத்து தள்ளப் பார்க்கும் குழியிலே
அத்தனையும் தாண்டிக் காலை முன் வையடா - நீ
அஞ்சாது கடமையிலே கண் வையடா!

குள்ளநரிக் கூட்டம் வந்து குறுக்கிடும்
நல்லவர்க்குத் தொல்லை தந்து மடக்கிடும்!

எள்ளளவும் பயங்கொண்டு மங்காதேடா - அவற்றை
எமனுலகு அனுப்பி வைக்கத் தயங்காதேடா
(சத்தியமே)

## முல்லை மலர் மேலே...

*படம்: உத்தமபுத்திரன்*
*பாடியவர்கள்: டி.எம்.எஸ், சுசீலா*
*இசை: ஜி.ராமநாதன்*

பெ: முல்லை மலர் மேலே மொய்க்கும் வண்டு போலே
உள்ளம் உறவாடுது உங்கள் அன்பாலே
(முல்லை)

ஆ: வெள்ளியலை மேலே துள்ளும் கயலைப் போலே
அல்லி விழித் தாவக்கண்டேன் என் மேலே

பெ: வெண்ணிலவைப் பூமியின் மேலே புன்னகையாலே
கண்ணெதிரில் காணுகின்றேன் பிரேமையினாலே

ஆ: மின்னல் உருமாறி மண்மேலே கன்னியைப் போலே
அன்னநடை பயிலக் கண்டேன் ஆசையினாலே

பெ: விந்தைமிகு மகுடி முன்னாலே நாகத்தைப் போலே
எந்தன் மனம் ஆடக் கண்டேன்! இன்பத்தினாலே

ஆ: சிந்தைநிலை மாறினதாலே எந்தன் முன்னாலே
செம்பவளம் நெருங்கக் கண்டேன் என்மனம் போலே

பெ: முல்லை மலர் மேலே மொய்க்கும் வண்டு போலே
உள்ளம் உறவாடுது உங்கள் அன்பாலே
(முல்லை)

## மனதில் கொண்ட ஆசைகளை...

*படம்: மாடப்புறா*
*பாடியவர்கள்: சுசீலா, சூலமங்கலம் ராஜலட்சுமி*
*இசை: மகாதேவன்*
*ஆண்டு: 1962*

பெ 1: மனதில் கொண்ட ஆசைகளை மறந்து போய்விடு!

இனிய காதல் நினைவே போதும் பிரிந்து போய்விடு!

பெ 2: மனதில் கொண்ட ஆசைகளை மறந்து போய்விடு
இனிய காதல் நினைவே போதும் பிரிந்து போய்விடு

பெ 1: விதைப்பதெல்லாம் முளைப்பதில்லை மண்ணின் மீதிலே
முளைப்பதெல்லாம் விளைவதில்லை இந்த உலகத்திலே

பெ 2: மலர்வதெல்லாம் மணப்பதில்லை சோலையினிலே
வளர்ந்த அன்பு நிலைப்பதில்லை பலரின் வாழ்விலே
ஒரு நிலாதான் உலவ முடியும் நீல வானிலே
உணர்ந்த பின்னால் கலங்கலாமோ உள்ளம் வீணிலே

பெ 1: உருகி உருகி கரைவதாலே பலனுமில்லையே
ஓடிப்போன காலம் மீண்டும் வருவதில்லையே!

பெ 2: மனதில் கொண்ட ஆசைகளை மறந்துபோய்விடு!
இனியகாதல் நினைவே போதும் பிரிந்து போய்விடு!

## சிரிப்பவர் சிலபேர்...

*படம்: சபாஷ் மாப்பிள்ளே*
*பாடியவர்: சீர்காழி*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு: 1961*

சிரிப்பவர் சிலபேர் அழுபவர் பலபேர்
இருக்கும் நிலை என்று மாறுமோ?

உழைப்பவர் வாழ்வே வீதியிலே
உறங்குவதோ நடைப்பாதையிலே
இரக்கங் காட்டத்தான் நாதியில்லே - தினம்
(சிரிப்பவர்)

இருப்பவர் உள்ளம் திறந்திடுமா?
ஏழ்மையும் வறுமையும் பறந்திடுமா?
அழுபவர் சிரிக்கும் நாள் வருமா? - தினம் (சிரிப்பவர்)

உயர்ந்தவர், தாழ்ந்திடத் தேவையில்லை
உள்ளதை இழந்திடச் சொல்லவில்லை
உழைப்பவர் உயர்ந்தால் போதுமையா தினம்
(சிரிப்பவர்)

## விவசாயி...

*படம்: விவசாயி*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1967*

விவசாயி... விவ்சாயி...
கடவுள் என்னும் முதலாளி
கண்டெடுத்த தொழிலாளி
விவசாயி!

முன்னேற்றப் பாதையிலே மனசை வச்சு
முழுமூச்சாய் அதற்காகத் தினம் உழைத்து
மண்ணிலே முத்தெடுத்து பிறர் வாழ
வழங்கும் குணமுடையோன் விவசாயி!

என்னவளம் இல்லை இந்தத் திருநாட்டில்?
ஏன்கையை ஏந்த வேணும் வெளிநாட்டில்?
ஒழுங்காப் பாடுபடு வயக்காட்டில்
உயரும் உன்மதிப்பு அயல்நாட்டில் (விவசாயி)

கறுப்பென்றும் சிவப்பென்றும் வேற்றுமையாய்
கருதாமல் எல்லோரும் ஒற்றுமையாய்
பொறுப்புள்ள பெரியோர்கள் சொன்னபடி
உழைத்தால் பெருகாதோ சாகுபடி (விவசாயி)

இருந்திடலாம் நாட்டில் பல வண்ணக்கொடி
எத்தனையோ கட்சிகளின் எண்ணப்படி
பறக்கவேணும் எங்கும் ஒரே சின்னக்கொடி - அது
பஞ்சம் இல்லையெனும் அன்னக்கொடி...!

# சுரபி

1911 ஆம் ஆண்டு வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள பனைப்பாக்கத்தில் பிறந்தவர் கவிஞர் சுரபி.

இவர் தேசீய சிந்தனைமிக்க உயர்ந்த கவிஞர். பாரதம் அந்நியரிடமிருந்து விடுதலை பெற்ற ஆனந்தநாளைக் கொண்டாடி 'சக்தி பிறக்குது' என்ற கவிதை நூலைப் படைத்தவர் இவர்.

இந்திய சுதந்திர வரலாற்றை இசைப் பாக்களாக இவரெழுதி அது இசைத் தட்டாக வெளி வந்துள்ளது.

காந்திஜியின் கீர்த்தியை ''அமரன் காந்தி'' ''காந்தி சரித்திரம்'' என்ற பெயர்களில் இவர் இசைப் பாடல்களாக வடித்தார். அவையும் இசைத் தட்டுகளாக வெளி வந்து திசையெட்டும் முழங்கிற்று.

ஆல் இந்தியா ரேடியோ நிலையத்தில் செய்தி ஆசிரியராக (1965-1969) பணியாற்றியுள்ள இவர், மத்திய அரசின் ஐந்தாண்டு திட்டக் குழுவில் ஓர் அதிகாரியாகவும் பணியாற்றி ஓய்வு பெற்றவர்.

அண்மையில் ராஜா அண்ணாமலைபுரத்திலுள்ள இல்லத்தில் இவரைச் சந்தித்தேன்.

81 வயது நிரம்பிய கவிஞர் சுரபி சுறுசுறுப்பாக என்னோடு உரையாடினார்.

''சுப்புரத்தின பித்தன்'' என்பதன் சுருக்கம் தான் 'சுரபி' என்கிறார்களே என்ற போது அதை பலமாக மறுத்தார்.

''நான் தேசீய சிந்தனையாளன். டி.கே.சி. போன்ற இலக்கிய மேதைக

ளால் ஈர்க்கப்பட்டு இலக்கியத்தில் ஓர் தனிப்பாதையை வகுத்துக் கொண்டவன்.

எப்போதும் சுரக்கும் இயல்புடையது என்ற பொருள் அமையுமாறு 'சுரபி' என்ற பெயரை வைத்துக் கொண்டேன். மேலும் வற்றாது பால் சுரப்பதாக நம்பப்படும் 'காமதேனு'வுக்கும் சுரபி என்று பெயர் உள்ளது. இதனாலேயே இப்பெயரை வைத்துக் கொண்டேன்'' என்றார்.

''சினிமா பாடலாசிரியராக எப்போது மலர்ந்தீர்கள்?'' எனக் கேட்டேன்.

''நான் கலைமகளில் எழுதிய ''அந்த நாளும் வந்திடாதோ'' என்ற கவிதையின் சில அடிகளை ஜெமினியின் மிஸ்மாலினி படத்தில் பயன்படுத்தினார்கள்.

அந்தப் படத்தின் விசேடக் காட்சிக்கு நான் சென்றிருந்தேன். அங்கு வந்திருந்த பேர் பெற்ற சினிமா டைரக்டர் கே.ராம்நாத் அவர்கள் ''சுரபி நீங்கள் ஏன் சினிமாவுக்குப் பாட்டெழுதக் கூடாது?'' என்று கேட்டு என்னைச் சினிமாவில் பாடலாசிரியனாக நுழையப் பண்ணினார்

'ரத்னகுமார்' படத்தில்

**''பம்பரம் போலே சுழலும் இவ்வுலகம்**<br>
**பார்த்து மதி மயங்கி ஓடாதே''**

என்று பாடல் எழுதினேன். எல்லாமாக சுமார் இருபது படங்களுக்குப் பாடல்கள் எழுதியுள்ளேன்'' எனறெனக்குச் சொன்னார்.

இனி சுரபியின் திரைப் பாத்திறனைப் பார்ப்போம்.

டி.கே.எஸ். 'மனிதன்' படத்தில்

**''பெண்ணே உலகின் கண்ணே இந்தப்**<br>
**பெருமையை இழந்த பின்னே**<br>
**மண்ணில் வாழ்ந்திடலாமா?''**

என்ற அருமையான பாடல் எழுதியுள்ளார்.

'தாய் உள்ளம்' படத்தின் அனைத்துப் பாடல்களும் சுரபியால் அருமையாக எழுதப்பட்டுள்ளன.

**''கொஞ்சும் புறாவே நெஞ்சோடு நெஞ்சம்**<br>
**ஜெகமெங்கணும் உறவாடிடும் ஜாலம் ஈதேதோ''**

என்று வசந்தகுமாரி பாடிய வசந்த கானத்தை ஈழத்தில் அடிக்கடி ஒலி பரப்பி

நேயர்களை ஆனந்தத்தில் ஆழ்த்துவார்கள்.

இதே படத்திற்காக கவிஞர்,

''மாலை நிலா வரவேண்டும். மந்த
மாருதம் வீசிடவேண்டும்''

என்று தொடங்கும் இனிமையான காதல் பாடலொன்றைத் தீட்டியுள்ளார்.

இப்பாடலில்

''இளகுசோடிக் குயில் இன்பமாகக்
கூவ வேண்டும்''

என்ற அடிகளிலும்;

''சுனைநீரின் அலைமேலே இளவேனில்
விளையாட வேண்டும்''

''உந்தன் அழகுண்டு
எந்தன் மனவண்டு
துதிபாடி வரவேண்டும்''

என்ற அடிகளிலும் இலக்கியம் நயம் பொங்கி வழிகிறதல்லவா?

'தாய் உள்ளம்' படத்தில் இடம் பெற்ற

''பொன்வண்டு நீ
பூச்செண்டு நான்''

என்ற அருமையான பாடலும் சுரபி எழுதியதாகும்.

''மனம்போல் மாங்கல்யம்'' படப்பாடல்கள் இன்று கேட்டாலும் எவரையும் ஈர்க்கும் வண்ணம் அமைந்தவை.

அப்படத்தின் அனைத்துப் பாடல்களையும் கவிஞர் சுரபியே யாத்துள்ளார்.

இக்கவிஞரின் புகழ்பெற்ற பாடல்களில் 'எதிர்பாராதது' படத்திறகாக எழுதிய

''திருமுருகா என்று ஒரு தரம் சொன்னால்''

'திருட்டுராமன்' படத்திற்காக எழுதிய

''ஊர் சிரிக்கப் பேர் எடுத்தாயா நீ
உலகை ஏய்க்கும் திருடனென்றே''

பாடலும் 'என் வீடு' படத்தின் சில பாடல்களும் அடங்கும்.

'தங்க வேலு' என்ற இயற்பேரேந்திய இந்தத் 'தங்கமான' கவிஞர் ''பாடி நகர்ந்து வரும் நதிகள்'' என்ற சிறந்த கவிதை நூலையும் அண்மையில் வெளியிட்டுள்ளார். கவிஞரின் சில பாடல்களை இனிக் காணுங்கள்.

## மாலை நிலா

*படம்: தாய் உள்ளம் ஆண்டு : 1952*
*பாடியவர்கள்: டி.ஏ.மோதி - பாலசரஸ்வதி*
*இசை: வி.நாகையா - ஏ.ராமராவ்*

பெ: மாலை நிலா வரவேண்டும் - மந்த
மாருதம் வீசிட வேண்டும்! (மாலை)

இளஞ்சோடிக் குயில் இன்பமாகக்
கூவ வேண்டும்! (மாலை)

சுனை நீரின் அலைமேலே இளவேனில்
விளையாட வேண்டும்! (மாலை)
மதுவுண்டு வண்டினம்
இதமாக ரீங்கார சுருதி பாடி வரவேண்டும்!
(மாலை)

ஆ: உந்தன் அழகுண்டு
எந்தன் மனவண்டும்
துதி பாடிவர வேண்டும் (மாலை)

ஆ/பெ: மாலை நிலா வரவேண்டும் - மந்த
மாருதம் வீசிட வேண்டும்!

## திருமுருகா என்று...

*படம்: எதிர்பாராதது*
*பாடிவர் : வி.நாகையா*
*இசை: சி.என்.பாண்டுரங்கன்*

திருமுருகாவென்று ஒரு தரம் சொன்னால்

உருகுது நெஞ்சம் பெருகுது கண்ணீர் (திரு)

திரு முருகாவென்று ஒருதரம் சொன்னால்
உருகுது நெஞ்சம் பெருகுது கண்ணீர் (திரு)

சிறுமதியால் உள்ளம் இருண்டிடும் வேளையில்
அருளொளி வீசும் ஆண்டவன் நீயே (திரு)

அப்பனும் பிள்ளையும் நீதானையா
அடிப்பதும் அணைப்பதும் உன் கைதானையா
கற்பனை வாழ்வினில் கதியினி ஏது
கருணாநிதியே கதிர் வடிவேலா (திரு)

# நாஞ்சில் நாடு ராஜப்பா

இந்தக் கவிஞர் 1915இல் பிறந்தார். இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் இறைவனடி சேர்ந்துவிட்டார்.

1988இல் ராஜப்பாவை அண்ணா நகரிலிருந்த அவர் இல்லத்தில் சந்தித்தேன். அப்போதே கண் பார்வை போய்விட்ட நிலையில் நோய் வாய்ப்பட்டுப் படுக்கையில் இருந்தார்.

அந்த நிலையிலும் தமது கலையுலக அனுபவங்களைப் பற்றி சுறுசுறுப்பாக என்னிடம் எடுத்துச் சொன்னார்.

கவிஞர் ராஜப்பா திரைப்படங்களுக்கு பாடல்கள் எழுதியதைக் காட்டிலும் அதிகமாக கதை - வசனங்களே எழுதியுள்ளார்.

ஜோசப் தளியத்தின் சிட்டாடல் நிறுவனம் தயாரித்த 'மல்லிகா' என்ற அருமையான குடும்பச் சித்திரத்தின் கதை வசன கர்த்தா இவரே.

சிட்டாடல் நிறுவனத்தின் இதய கீதம், இரவும் பகலும், ஆத்ம சாந்தி, விஜய புரிவீரன் போன்ற படங்களின் வசனகர்த்தா இவரே.

தாம் சிட்டாடல் நிறுவனத்தின் ''ஆஸ்தான கதாசிரியர் - வசனகர்த்தாவாக இருந்தவன்'' என்று பூரிப்போடு எனக்குச் சொன்னார்.

பாகவதர் நடித்த 'ராஜமுக்தி' படத்திற்கும் சில காட்சிகளுக்குத் தாமே வசனமெழுதியுள்ளதாகச்சொன்னார்.

அசோகன், முத்துராமன், முஸ்தபா போன்ற நடிகர்கள் தம்மால் தான் உருவாக்கப்பட்டவர்கள். என்று சொன்ன ராஜப்பா தாம் நடத்திய நாடகக்குழு பற்றியும் நிரம்பச் சொன்னார்.

ராஜப்பா, ஞான சௌந்தரி, ஆத்மசாந்தி படங்களில் சில நல்ல பாடல்கள் தீட்டியுள்ளார். அவை பற்றி பார்ப்போம்.

'ஞான சௌந்த ரி' படத்தில்

''நெஞ்சமே நீ அஞ்சாதே - நம்
ஆண்டவரே துயரால் வருந்தினாரே''

எனத் தொடங்கும் பாடலை மிகச் சிறப்பாக யாத்துள்ளார் கவிஞர்.

அப்பாடலில், கடவுளின் குமாரனாகிய கிறிஸ்து ராஜாவைப் பற்றி

''வீண்பழி சுமத்தித் தீயோர் பிடித்தார்
தூணோடிணைத்தே கசையால் அடித்தார்''

என்ற வரிகளையும் கவிஞர் மிக உருக்கமாக வரைந்துள்ளார்

''ஆறாத்துயர் தரவே ஆணியினால்
முடிசெய்தே சிரசில் சூட்டினாரே - பெரும்
சிலுவையதைத் தோள் மேல் ஏற்றி கால்
இடரிட ஓட்டி வாட்டினாரே''

என்ற வரிகளில் தான் எத்துணை நெகிழ்ச்சி!

'ஆத்மசாந்தி படத்தில் ராஜப்பா சுமார் நாற்பதாண்டு காலத்திற்கு முன்பிருந்த நாட்டு நடப்பை

''அரிசி இல்லாமத்தான் ஆறவுன்ஸ் போடுகிறார்
அயலார் நாடுகளைத் தேடுகிறாரே!

என்று உணர்ச்சியோடு எழுதியுள்ளார்.

இன்றும் கூட இந்த வரிகள் பொருந்தக் கூடியதாக உள்ளதல்லவா? அப்பாடலில்

''பாடுபடுவோம் பயிரை நடுவோம்
கூடும் வினையினாலே சுய தேவைகளைத் தேடியே -
பசியை நீக்கிடுவோம் நீக்கிடுவோம் வையகமீதே''

என்று முற்போக்குக் குரல் கொடுக்கிறார் கவிஞர்.

''ஓ... நித்தம் உழைச்சு நெல்லைத் தந்தவர்களால்
ஊழியமே தன் ஜீவிதமென்றே
உழுதிடும் ஏழை தயாளனாம்
தானியம் நாட்டில் ஏதேஷ்டமாக
தளராது உழைப்போம் நாளுமே...''

என்ற வரிகளிலும் கருத்தழகு மின்னுகிறதல்லவா?

''ஆத்மசாந்தி படத்தில் ராஜப்பா

''வள்ளுவன் சொல்லே வேதமாம் - ஞானி
வாழ்வினிலே கண்ட அனுபவமாம்''

என்று உலக அளவில் தமிழனறிவை இனங்காட்டிய வள்ளுவர் மாட்சியை வியக்கிறார்.

தமிழின மேம்பாட்டுக்கு ஆதாரமாக இருக்கவல்ல தகுதி 'திருக்குறள்' ஒன்றுக்கே உள்ளது என்பதனை

''செந்தமிழ்ச் செல்வம் இதுவேமேலாம்
சிந்தனையாலே சேர்ந்த செந்தேனாம்
உந்தனுக்கே தமிழா உற்றதோர் ஆதாரம்
சொந்தத் திருக்குறளறம் ஒன்றே தான் பாரில்''

என்ற வரிகளால் ஆணித்தரமாகச் சொல்கிறார் கவிஞர்.

''ஆத்மசாந்தி'' படத்தில்

''புது ரோஜா போலே
புவிமீதே வாழ்வோமே''

என்ற இனிமையான காதல் பாடலும் ராஜப்பா எழுதியதே ஆகும்.

அடிக்கடி இந்தப் பாடலை இலங்கை வானொலியில் நான் கேட்டு மகிழ்ந்திருக்கிறேன்.

இனி நாஞ்சில் நாட்டுக் கவிஞரின் சில பாடல்களை முழுமையாகப் பாருங்கள்.

## நெஞ்சமே அஞ்சாதே...

*படம்: ஞானசௌந்தரி*
*ஆண்டு: 1948*
*இசை: எஸ்.வி.வெங்கட்ராமன்*

நெஞ்சமே நீ அஞ்சாதே - நம்
ஆண்டவரே துயரால் வருந்தினாரே! (நெஞ்சமே)

வீண்பழி சுமத்தித் தீயோர் பிடித்தார்
தூணோடிணைத்தே கசையால் அடித்தார் (நெஞ்சமே)

ஆறாத்துயர் தரவே ஆணியினால்
முடிசெய்தே சிரசில் சூட்டினாரே - பெரும்
சிலுவையதைத் தோள் மேல் ஏற்றி கால்
இடறிட ஓட்டி வாட்டினாரே!
அநியாயமிதாமே தேவனை
அறைந்தாரே சிலுவை மீதினிலே
யார் சோதனை சூழ்ந்திட நோவாரோ
பேரருளால் அவரே மேம்படுவார்! (நெஞ்சமே)

## அரிசி இல்லாமத்தான் ...

*படம்: ஆத்மசாந்தி*

அரிசி இல்லாமத்தான் ஆறவுன்ஸ் போடுகிறார்
அயலார் நாடுகளைத் தேடுகிறாரே!

பாடுபடுவோம் பயிரை நடுவோம்
கூடும் வினையினாலே சுயதேவைகளை தேடியே
பசியை நீக்கிடுவோம் நீக்கிடுவோம் வையகமீதே
உழவரின் வியர்வையால் மணிமணியாய்
பலனிதோ பொலியுதே செல்வமணிகள்
பூமியில் ஜீவன் சோபிதமாக
வாழ்வது யாரால் அறிவாயா - இந்த (பூமியிலே)

ஓ... நித்தம் உழைச்சு நெல்லைத் தந்தவர்களால்
ஊழியமே தன் ஜீவிதமென்றே
உழுதிடும் ஏழை தயாளனாம்
தானியம் நாட்டில் ஏதேஷ்டமாக
தளராது உழைப்போம் நாளுமே - இந்த (பூமியிலே)

# வள்ளுவன் சொல்லே...

படம்: ஆத்மசாந்தி

வள்ளுவன் சொல்லே வேதமாம் - ஞானி
வாழ்வினிலே கண்ட அனுபவமாம் - பாரில்
(வள்ளுவன்)

வெள்ளையன் பாராட்டி வேண்டிய நூலாக்கி
கொள்ளை கொண்ட குறளைக் கொண்டாடுவோமே
(வள்ளுவன்)

செந்தமிழ்ச் செல்வம் இதுவே - மேலாம்
சிந்தனையாலே சேர்ந்த செந்தேனாம்
உந்தனுக்கே தமிழா உற்றதோர் ஆதாரம்
சொந்தத் திருக்குறளறம் ஒன்றேதான் பாரில்
(வள்ளுவன்)

# கண்ணதாசன்

1927 ஆம் ஆண்டு சிறு கூடல் பட்டியில் பிறந்தவர் இவர்.

1949 இல் 'கன்னியின் காதலி' படத்தில் ''கலங்காதிரு மனமே'' எனத் தொடங்கும் பாடலை முதன் முதலாக எழுதித் திரைப்படப் பாடலாசிரியராக மலர்ந்தார்

அதன் பின்னர் பணம், கல்யாணி உட்பட பல படங்களில் பாடல்கள் எழுதினார்.

1954 இல் 'இல்லற ஜோதி' படத்திற்குக் கதை - வசனம் - பாடல்கள் எழுதினார்.

அந்தப் படமே கண்ணதாசனை அனுபவமுள்ள நல்ல பாடலாசிரியராக அடையாளங் காட்டியது.

**''கண்கள் இரண்டில் ஒன்று போனால்**
**காண முடியுமா'' - நல்லழகைக்**
**காண முடியுமா?**

**''சிறுவிழி குறுநகை''**

**''உனக்கும் எனக்கும் உறவு காட்டி**
**உலகம் சொன்னது கதையா?**
**நினைத்து நினைத்து மகிழ்ந்து நாங்கள்**
**நேசங் கொண்டதும் கனவா''**

**''கேட்பதெல்லாம் காதல் கீதங்களே''**

உட்பட "இல்லற ஜோதி"யின் அனைத்துப் பாடல்களும் அருமையாக இருந்தன.

1957 இல் தாமே தயாரிப்பாளராகி "மாலையிட்ட மங்கை" என்ற படத்திற்கு கதை - வசனம் பாடல்களைத் தீட்டினார் கவிஞர். அப்படத்தில்

**"செந்தமிழ்த் தேன்மொழியாள்**
**நிலாவெனச் சிரிக்கும் மலர்க்கொடியாள்"**
**"எங்கள் திராவிடப் பொன்னாடே"**
**"மழை கூட ஒரு நாளில்"**

உட்பட எல்லாப் பாடல்களும் தேனாக இனித்துக் "கண்ணதாசன் ஒரு தரமான பாடலாசிரியர்" என்ற அந்தஸ்தைப் பெற்றுக் கொடுத்தன.

1960 ஆம் ஆண்டிலிருந்து கண்ணதாசனின் திரைப்படப் பாடல்கள் திக்கெல்லாம் வலம்வர ஆரம்பித்தது.

இசை அமைப்பாளர்கள் விஸ்வநாதன் - ராமமூர்த்தி, கே.வி.மகாதேவன் பேன்றவர்கள் சினிமாத் துறையில் கோலோச்ச ஆரம்பித்த நேரமது!

அவர்கள், உடுமலையார், கம்பதாசன், சுரதா, மருதகாசி உட்பட வேறெந்த் கவிஞர்களையும் சட்டை செய்யாது மிக அதிகமான வாய்ப்புகளைக் கண்ணதாசன் ஒருவருக்கே கொடுத்தார்கள்.

கண்ணதாசன் தமக்குக் கிடைத்த அந்த வாய்ப்புகளை மிக நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார்.

"பாசமலர்' படத்தில்

**"மலர்களைப் போல் தங்கை உறங்குகிறாள்"**
**"வாராயோ தோழி வாராயோ"**
**"மலர்ந்தும் மலராத"**

உட்பட கேட்கக் கேட்கத் திகட்டாத இலக்கிய நயமுள்ள பாடல்களை எழுதினார் கண்ணதாசன்.

'பச்சை விளக்கு' படத்தில்

**'ஒளிமயமான எதிர்காலம் - என்**
**உள்ளத்தில் தெரிகிறது — இந்த**
**உலகம்பாடும் பாடல் எந்தன்**
**காதில் விழுகிறது"**

என்று தெள்ளிய தமிழிலும்,

கடந்த காலக் காதலைப் பற்றி நாயகி நினைவு கூர்ந்து பார்க்கும் வண்ணம் அமைந்த 'புதிய பறவை'' பாடலை

''பார்த்த ஞாபகம் இல்லையோ
பருவ நாடகம் தொல்லையோ
வாழ்ந்த காலங்கள் கொஞ்சமோ
மறந்ததே இந்த நெஞ்சமோ''

என்று ஆரம்பித்து

''அந்த நீலநதிக் கரையோரம் - நீ
நின்றிருந்தாய் அந்திநேரம்
நான் பாடிவந்தேன் ஒரு ராகம்
நாம் பழகிவந்தோம் சில காலம்''

என்று இலக்கிய நயத்தோடு அருமையான வரிகளை எழுதினார் கவிஞர்.

''பாலும் பழமும்'' படத்தில்

''நான் பேச நினைப்பதெல்லாம்
நீ பேச வேண்டும்
நாளோடும் பொழுதோடும்
உறவாட வேண்டும்''

என்றும்,

''மனதாலும் நினைவாலும்
தாயாக வேண்டும்
நானாக வேண்டும்
மடிமீது விளையாடும்
சேயாக வேண்டும்
நீயாக வேண்டும்''

என்றும்,

மிக உன்னத அழகோடு தமிழ்த் தேனை பெய்கிறார் கண்ணதாசன்.

இதே பாடலில்

''சொல்லென்றும் மொழியென்றும்
பொருள் என்றும் இல்லை
சொல்லாத சொல்லுக்கு
விலையேதும் இல்லை''

என்ற வரிகள் மூலம் மகோன்னத காதல் மௌனத்தின் சங்கமத்திலே

லயிக்கும் போது வாய்ச் சொல்லால் பயனுமில்லை. அதற்கு அவசியமும் இல்லை என்ற உண்மையைக் கவிஞர் நயமாகச் சொல்கிறார்.

'பாலும் பழமும்' படத்திலுள்ள

''காதல் சிறகைக் காற்றினில் விரித்து
வான வீதியில் பறக்கவா?''.

என்ற பாடலில் கவிஞர்

''பிரிந்தவர் மீண்டும் சேர்ந்திடும் போது
அழுதால் கொஞ்சம் நிம்மதி
பேச மறந்து சிலையாய் நின்றால்
அதுதான் தெய்வத்தின் சந்நிதி
அதுதான் காதல் சந்நிதி''

என்று எழுதியுள்ளது உன்னதமான இலக்கியப் பாங்கோடு அமைந்துள்ளது.

காதல் உலகில் ஏமாற்றும் இயல்பு படைத்த பெண்கள் ஏராளமாக இருக்கிறார்கள். இந்த உண்மையை உணர்த்தும் வண்ணம் கவிஞர் 'வாழ்க்கைப் படகு' படத்தில்

''பூப்போன்ற நெஞ்சினிலும்
முள்ளிருக்கும் பூமியடா
பொல்லாத கண்களடா
புன்னகையும் வேஷமடா''

என்று எழிலோங்க எழுதியுள்ளார்.

உயிருக்குயிராகப் பழகும் காதலர்களையும் உயிர் நண்பர்களையும் காலம் பிரித்து விடுகிறது. இந்த அனுபவங்களை இரத்தத் 'திலகம்' படத்தில் இடம் பெற்ற பாடலொன்றில் அருமையாகக் கூறுகிறார் கண்ணதாசன்.

''பசுமை நிறைந்த நினைவுகளே
பாடித் திரிந்த பறவைகளே
பழகிக் களித்த தோழர்களே
பறந்து செல்கின்றோம்''

என்ற வரிகளையும்,

''வரவில்லாமல் செலவுகள் செய்து
மகிழ்ந்திருந்தோமே

வாழ்க்கைத் துன்பம் அறிந்திடாமல்
வாழ்ந்து வந்தோமே''

என்ற வரிகளையும்,

''எந்த ஊரில் எந்த நாட்டில்
என்று காண்போமோ?
எந்த அழகை எந்த விழியில்
கொண்டு செல்வோமோ''

என்ற வரிகளையும் பொன்னோவியமாகத் தீட்டியுள்ளார் கவிஞர்.

இந்த அருமையான பாடல் ஈழத்துக் கல்லூரி மேடைகளில் மாணவர்கள் தமது படிப்பு முடிந்து நெருங்கிப் பழகிய நேச உறவை நெஞ்சில் சுமந்தபடியே பிரியும் போது 'வேதகீதமாகப் பாடப்படுகிறது.

காதலின் மேன்மையை 'தங்கத் தமிழ்ச் சித்திரம்' எனக் கூறத்தக்கவாறு ஓர் பாடலை 'இதயக்கமலம்' படத்தில் எழுதியுள்ளார் கவிஞர்.

''உன்னைக் காணாத கண்ணும் கண்ணல்ல!
உன்னை எண்ணாத நெஞ்சும் நெஞ்சல்ல!
நீ சொல்லாத சொல்லும் சொல்லல்ல
நீ இல்லாமல் நானும் நானல்ல!

என்று எழுதும் அவர்,

இங்கு நீ ஒரு பாதி நானொரு பாதி
இதில் யார் பிரிந்தாலும் வேதனை பாதி
காலங்கள் மாறும், காட்சிகள் மாறும்
காதலின் முன்னே நீயும் நானும் வேறல்ல''

என்றெழுதி தாமொரு முதல்த்தரப் பாடலாசிரியர் என்பதனை அற்புதமாக நிறுவுகிறார்!

''ஆனந்தி'' படத்தில்

''கண்ணிலே அன்பிருந்தால்
கல்லிலே தெய்வம் வரும்
நெஞ்சிலே கருணை வந்தால்
நீரிலும் தேனூறும்''

என்று கண்ணதாசன் எழுதியுள்ளது உன்னத இலக்கியம் என்பதனை எவரால் மறுக்க முடியும்?

இதே பாடலில்

''அந்த நாள் மறைந்ததம்மா
இன்று நான் மனிதனம்மா
செண்டாடும் வடிவழகைக்
கண்டாடும் கலைஞனம்மா''

என்ற வரிகளில்தான் எத்துணை நயம்!

''சங்கே முழங்கு'' படத்தில் ஓர் அருமையான தத்துவப் பாடலைக் கவிஞர் எழுதியுள்ளார்.

நாலு பேருக்கு நன்றி' என்ற தொடங்கும் அந்தப் பாடலில்

''உறவு என்றும் பாசம் என்றும்
இறைவன் பூட்டிய விலங்கு
அழுவதற்கும் சிரிப்பதற்கும்
அமைந்த உள்ளம் ஒன்று''

என்றும்,

''ஆற்றுவெள்ளம் தானே ஓடும்
ஆசைவெள்ளம் சொந்தம் தேடும்''

என்றும்,

''இன்பத்தையே பங்கு வைத்தால்
புன்னகை சொல்வது நன்றி
துன்பத்திலே பங்கு கொண்டால்
கண்ணீர் சொல்வதும் நன்றி''

என்றும் அற்புத இலக்கியப் பாங்கோடு பாடலை அமைத்துள்ளார் கவிஞர்.
'அபூர்வராகங்கள்' படத்தில்

''ஏழு ஸ்வரங்கட்குள் எத்தனை பாடல்
இதய சுரங்கத்துள் எத்தனை கேள்வி?''

என்றும்,

''ஆரம்பத்தில் பிறப்பும் உன்கையில் இல்லை - என்றும்
அடுத்தடுத்த நடப்பும் உன்கையில் இல்லை
பாதை வகுத்த பின் பயந்தென்ன லாபம் - அதில்
பயணம் நடத்திவிடு மறைந்திடும் பாவம்''

என்றும் கண்ணதாசன் ஆழமான தத்துவப் போக்கில் எழுதியுள்ளார்.

''வளர்பிறை'' படத்தில்

''பூஜ்ஜியத்துக்குள்ளே ஒரு
ராஜ்ஜியத்தை ஆண்டு கொண்டு
புரியாமலே இருப்பான் ஒருவன் - அவனை
புரிந்து கொண்டால் அவன்தான் இறைவன்''

என்று கவிஞர் எளிய சொற்களில் மெய்ப் பொருளுக்கு நயமாக விளக்கம் தருகிறார்.

'தரிசனம்' படத்தில் கவிஞர் தலை சிறந்த தத்துவப் பாடலொன்றை எழுதியுள்ளார்.

''மாலை நேரத்து மயக்கம்''

எனத் தொடங்கும் அந்தப் பாடலில் ஒவ்வொரு வரியையும் ஆணிமுத்துசளைக் கோத்தது போல் அமைத்துள்ளார் அவர்.

நாயகன்

''பாயில் படுத்து நோயில் வீழ்ந்தால்
காதல் கானல்நீரே! - இதில்
மேடு பள்ளம் தேடும் உள்ளம்
போகும் ஞானத் தேரே!''

என்று பாட

நாயகி,

''இல்லறம் கேட்டால் துறவறம் பேசும்
இதயமே மாறிவிடு''

என்று பாடுகிறாள்.

முடிவாக நாயகன்,

''நான் வாழ்ந்து பார்த்துச் சாய்ந்த தென்னை
உன்னை நீ மாற்றிவிடு''

என்கிறான்.'

கண்ணதாசன் ஒரு மகத்தான பாடலாசிரியர் என்பதற்கு இந்த ஒரு பாட்டே போதுமல்லவா?

தமிழ்த் திரைப்படங்களில் மிக அதிகமான பாடல்களை எழுதிய பெருமை கவிஞரையே சாரும்.

பாடலாசிரியராக மட்டுமல்லாது இல்லற ஜோதி, மதுரை வீரன், மகா

தேவி, கறுப்புப்பணம், லட்சுமிகல்யாணம் உட்பட பல படங்களுக்குக் கதை - வசனங்களையும் கவிஞர் அழகாக அமைத்துள்ளார்.

கவிஞரின் கவிதைத் தொகுதிகள் பல வெளி வந்துள்ளன. அவர் எழுதிய ''அர்த்தமுள்ள இந்துமதம்'' என்ற உரைநடை நூல் தமிழ் உலகில் மிகப் பிரபலம் பெற்றதாகும்.

ஆற்றல் வாய்ந்த இலக்கியச் சிற்பியான கண்ணதாசன் 1981 இல் அமர நிலை எய்தினார்.

கவிஞர் பாடல்கள் மிகச் சிறந்தவை என்பதை தமிழறிந்த எவருமே மறுக்க முடியாது.

ஆனால் கவிஞர் வேறு கவிஞர்களது பாடல் வரிகளையும், சிந்தனைகளையும் தமதாக்கி எழுதியுள்ளார் என்ற குற்றச்சாட்டு கால்நூற்றாண்டுக்கு முன்னர் ''தமிழ் சினிமா'' பத்திரிகையில் வெளி வந்ததிலிருந்து இன்று வரை தொடர்ந்து கொண்டே இருக்கிறது.

இத்தகைய ஒரு குற்றச்சாட்டை மற்றுமொரு பாடலாசிரியரான மருதகாசி மீது சுமத்தி தி.ரா.ராசியப்பன் என்ற கவுண்டன் புதூர் வாசி 25.7.59 இல் வெளிவந்த 'தென்றல் இதழில் கண்ணதாசனிடம் ஒரு கேள்வி கேட்கிறார். அந்தக் கேள்விக்குக் கவிஞர் தெளிவாக விடை அளித்துள்ளார்.

கேள்வி: *திரைப்பாடல்கள் எழுதும் மருதகாசி என்பவர் ''எழுதிச் செல்லும் விதியின் கை எழுதி எழுதி மேற் செல்லும்'' என்று தொடங்கும் தேசிக விநாயகம் பிள்ளையின் மொழி பெயர்ப்புப் பாடலையும், ''முத்துவீராயி'' என்ற கிராமியப் பாடலையும் திருடித் தன் பெயரில் போட்டு வெளியிட்டிருக்கிறாரே இது சரியா?*

*கண்ணதாசன்:* திருக்குறள் வார்த்தைகள் அப்படியே சிலப்பதிகாரத்தில் வருகின்றன. அப்படியே இராமகாதையில் வருகின்றன. இதற்கு இலக்கியத்தில் ''எடுத்தாளல்'' என்று பெயருண்டு. மூல ஆசிரியர் பெயரைச் சொல்லாமலே எடுத்தாளலாம் என்பது விதி. ஆனால் முழுப் பாடலும் மற்றவர் பாட்டாக இருப்பது திருட்டாகும்.

கவிஞரின் இந்த விளக்கம் கவிஞர் மீது சுமத்தப்படும் குற்றங்களுக்கும் பதிலாக அமைந்தபடியால் இங்கிதனை எடுத்துக் காட்டினேன்.

சரி அன்பர்களே! இனி கண்ணதாசனின் அருமையான சில பாடல்களை முழுமையாக அனுபவியுங்கள்.

# நான் பேச நினைப்பதெல்லாம்.

*படம்: பாலும் பழமும்*
*ஆண்டு: 1961*
*பாடியோர்: டி.எம்.எஸ். - சுசீலா*
*இசை: விஸ்வநாதன் - ராமமூர்த்தி*

பெ: நான் பேச நினைப்பதெல்லாம்
நீ பேச வேண்டும்!
நாளோடும் பொழுதோடும்
உறவாட வேண்டும்!

ஆ: நான் காணும் உலகங்கள்
நீ காண வேண்டும்!
நீ காணும் பொருள் யாவும்
நானாக வேண்டும்!

பெ: பாலோடு பழம் யாவும்
உனக்காக வேண்டும்!
பாவை உன் முகம் பார்த்துப்
பசியாற வேண்டும்!
மனதாலும் நினைவாலும்
தாயாக வேண்டும்!
நானாக வேண்டும்!
மடிமீது விளையாடும்
சேயாக வேண்டும்
நீயாக வேண்டும்! (நான்)

பெ: சொல்லென்றும் மொழியென்றும்
பொருள் என்றும் இல்லை!
சொல்லாத சொல்லுக்கு
விலையேதும் இல்லை!
ஒன்றோடு ஒன்றாக
உயிர்சேர்ந்த பின்னே
உலகங்கள் நமையன்றி
வேறேதும் இல்லை! (நான்)

## பசுமை நிறைந்த...

*படம்: இரத்தத் திலகம்*
*ஆண்டு: 1963*
*பாடியோர்: டி.எம்.எஸ். - சுசீலா*
*இசை: கே.வி.மகாதேவன்*

பசுமை நிறைந்த நினைவுகளே
பாடித் திரிந்த பறவைகளே
பழகிக் களித்த தோழர்களே
பறந்து செல்கின்றோம்

குரங்குகள் போலே மரங்களின் மேலே
தாவித் திரிந்தோமே!
குயில்கள் போலே இரவும் பகலும்
கூவித் திரிந்தோமே!

வரவில்லாமல் செலவுகள் செய்து
மகிழ்ந்திருந்தோமே!
வாழ்க்கைத் துன்பம் அறிந்திடாமல்
வாழ்ந்து வந்தோமே! (பசுமை)

எந்த ஊரில் எந்த நாட்டில்
என்று காண்போமோ?
எந்த அழகை எந்த விழியில்
கொண்டு செல்வோமோ?

இந்த நாளை வந்த நாளில்
மறந்து போவோமோ?
இல்லங் கண்டு பள்ளி கொண்டு
மயங்கி நிற்போமோ! (பசுமை)

## உன்னைக் காணாத...

*படம்: இதயக்கமலம்*
*பாடியவர்: பி.சுசீலா*
*இசை: கே.வி.மகாதேவன்*

உன்னைக் காணாத கண்ணும் கண்ணல்ல!
உன்னை எண்ணாத நெஞ்சும் நெஞ்சல்ல!
நீ சொல்லாத சொல்லும் சொல்லல்ல!
நீ இல்லாமல் நானும் நானல்ல!

இங்கு நீ ஒரு பாதி நானொரு பாதி
இதில் யார் பிரிந்தாலும் வேதனை பாதி
காலங்கள் மாறும் காட்சிகள் மாறும்
காதலின் முன்னே நீயும் நானும் வேறல்ல! **(உன்னை)**

ஒரு தெய்வமில்லாமல் கோயிலுமில்லை
ஒரு கோயிலில்லாமல் தீபமுமில்லை!
நீ எந்தன் கோயில்; நானங்கு தீபம்
தெய்வத்தின் முன்னே நீயும் நானும் வேறல்ல!

என் மேனியில் உன்னைப் பிள்ளையைப் போலே
நான் வாரி அணைப்பேன் ஆசையினாலே!
நீ தருவாயோ? நான் தருவேனோ?
யார் தந்த போதும் நீயும் நானும் வேறல்ல? **(உன்னை)**

## கண்ணிலே அன்பிருந்தால்...

*படம்: ஆனந்தி*
*ஆண்டு: 1964*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை:*

கண்ணிலே அன்பிருந்தால்
கல்லிலே தெய்வம் வரும்!
நெஞ்சிலே கருணை வந்தால்

நீரிலும் தேனூறும

உன்னைப்போல் குழந்தையில்லை
உன்னைப்போல் துணையுமில்லை
உன்னாலே மலர்ந்த உள்ளம்
எண்ணாத நாளுமில்லை!

அந்தநாள் மறைந்ததம்மா
இன்று நான் மனிதனம்மா!
செண்டாடும் வடிவழகைக்
கண்டாடும் கலைஞனம்மா!

அன்னையே உன் வடிவம்
தந்தையே உன் இதயம்
அன்பே உன் துணையிருக்க
என்பாடல் முடிவதெங்கே? (கண்)

## நாலு பேருக்கு நன்றி...

*படம்: சங்கே முழங்கு*
*ஆண்டு: 1972*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்.*

உள்ளத்தில் இருப்பதெல்லாம்
சொல்லவோர் வார்த்தையில்லை - நான்
ஊமையாய் பிறக்கவில்லை!
உணர்ச்சியோ மறையவில்லை!

என் தங்கமே உனது மேனி தாங்கி - நான்
சுமந்து செல்ல எனக்கொரு பந்தமில்லை
எவருக்கோ இறைவன் தந்தான்!

நாலு பேருக்கு நன்றி - அந்த
நாலு பேருக்கு நன்றி!
தாயில்லாத அனாதைக் கெல்லாம்
தோள் கொடுத்துத் தூக்கிச் செல்லும்
நாலு பேருக்கு நன்றி! (நாலு)

உறவு என்றும் பாசம் என்றும்
இறைவன் பூட்டிய விலங்கு
அழுவதற்கும் சிரிப்பதற்கும்
அமைந்த உள்ளம் ஒன்று!

ஆற்றுவெள்ளம் தானே ஓடும்
ஆசைவெள்ளம் சொந்தம் தேடும்
சொந்தம் ஏதும் இல்லையென்றால்
அந்த நேரம் நால்வர் வேண்டும் - அந்த
நாலு பேருக்கு நன்றி! (நாலு)

இன்பத்தையே பங்கு வைத்தால்
புன்னகை சொல்வது நன்றி
துன்பத்திலே பங்கு கொண்டால்
கண்ணீர் சொல்வதும் நன்றி

வாழும்போது வருவோர்கெல்லாம்
வார்த்தையாலே நன்றி சொல்வோம்
வார்த்தையின்றி போகும் போது
மௌனத்தாலே நன்றி சொல்வோம்
நாலு பேருக்கு நன்றி.

## எல்லாரும் எல்லாமும்...

*படம்: கறுப்புப்பணம்*
*ஆண்டு: 1964*
*பாடியவர்: சீர்காழி*
*இசை: விஸ்வநாதன் - ராமமூர்த்தி.*

எல்லாரும் எல்லாமும் பெற வேண்டும் - இங்கு
இல்லாமை இல்லாத நிலை வேண்டும்!
வல்லான் பொருள் குவிக்கும் தனியுடமை - நீங்கி
வரவேண்டும் திருநாட்டில் பொதுவுடமை!

இருட்டில் மறைந்து கொள்ள விளக்கணைப்பார் சிலர்
கிணற்றில் இருந்துகொண்டு உலகளப்பார்!
நெருப்பை மடியில்வைத்து ம்றைத்திருப்பார் - அந்த

நீசரை யார்உலகில் பொறுத்திருப்பார்?

பாலென அழுவோர்க்குப் பால்தருவோம் - பசுங்
கூழெனத் துடிப்போர்க்குச் சோறிடுவோம்!
தாயகம் காப்போரின் தாள் பணிவோம் - யாவும்
தமக்கென நினைப்போரைச் சிறையிடுவோம்!

## ஏழு ஸ்வரங்களுக்குள்...

*படம்: அபூர்வ ராகங்கள்*
*ஆண்டு: 1975*
*பாடியவர்: வாணிஜெயராம்*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்*

ஏழு ஸ்வரங்கட்குள் எத்தனை பாடல்!
இதய சுரங்கத்துள் எத்தனை கேள்வி?
காணும் மனிதருக்குள் எத்தனை சலனம்? - வெறும்
கற்பனை சந்தோசத்தில் அவரது கவனம்! (ஏழு)

காலை எழுந்தவுடன் நாளைய கேள்வி - அது
கையில் கிடைத்த பின்னும் துடிக்குது ஆவி!
ஏனென்ற கேள்வி ஒன்று என்றைக்கும் தங்கும் - மனிதன்
இன்ப துன்பமெதிலும் கேள்விதான் மிஞ்சும்! (ஏழு)

என்க்காக நீ அழலாம் இயற்கையில் நடக்கும் - நீ
எனக்காக உணவு உண்ண எப்படி நடக்கும்
நமக்கென்று பூமியிலே கடமைகள் உண்டு - அதை
நமக்காக நம்கையால் செய்வது நன்று! (ஏழு)

ஆரம்பத்தில் பிறப்பும் உன்கையில் இல்லை - என்றும்
அடுத்தடுத்த நடப்பும் உன்கையில் இல்லை!
பாதை வகுத்த பின்பு பயந்தென்ன லாபம் - அதில்
பயணம் நடத்திவிடு மறைந்திடும் பாவம். (ஏழு)

நாளையபொழுது என்றும் நமக்கென வாழ்க - அதை
நடத்த ஒருவன் உண்டு கோயிலில் காண்க!
வேளை பிறக்கும் என்று நம்பிக்கை கொள்க - எந்த

## மாலை நேரத்து மயக்கம்...

*படம்: தரிசனம்*
*ஆண்டு: 1970*
*பாடியவர்கள்: டி.எம்.எஸ். - எல்.ஆர்.ஈஸ்வரி*
*இசை: சூலமங்கலம் ராஜலட்சுமி*

பெ: மாலை நேரத்து மயக்கம் - பூ
மாலை போல் உடல் மறைக்கும்
இதழ் மேலே இதழ் மோதும் - அந்த
இன்பம் தேடுது எனக்கும் (இது மாலை)

ஆ: கால தேவனின் கலக்கம் - இதைக்
காதல் என்பது பழக்கம்
ஒரு ஆணும் ஒரு பெண்ணும் - பெறப்
போகும் துன்பத்தின் துவக்கம் (இது மாலை)

பெ: பனியும், நிலவும் பொழியும் நேரம்
மடியில் சாய்ந்தாலென்ன? - பசும்
பாலைப் போலும் மேனி எங்கும்
பழகிப் பார்த்தாலென்ன?

ஆ: உடலும் உடலும் சேரும் வாழ்வை
உலகம் மறந்தாலென்ன? - தினம்
ஓடி ஆடி ஓயுமுன்னே
உண்மை அறிந்தாலென்ன?

பெ: உறவுக்கு மேலே சுகம் கிடையாது
அணைக்கவே தயக்கமென்ன?

ஆ: இது ஓட்டை வீடு ஒன்பது வாசல்
இதற்குள்ளே ஆசை என்ன? (இது மாலை)

பெ: முனிவன் மனமும் மயங்கும் பூமி
மோக வாசல் தானே? - மனம்
மூடி மூடிப் பார்க்கும் போதும்

தேடும் பாதை தானே!

ஆ: பாயில் படுத்து நோயில் வீழ்ந்தால்
காதல் கானல் நீரே! - இதில்
மேடுபள்ளம் தேடும் உள்ளம்
போகும் ஞானத் தேரே!

பெ: இல்லறம் கேட்டால் துறவறம் பேசும்
இதயமே மாறிவிடு!

ஆ: நான் வாழ்ந்து பார்த்துச் சாய்ந்த தென்னை
உன்னை நீ மாற்றிவிடு! (இது கால)

## ஆயிரம் மலர்களே...

*படம்: நிறம் மாறாத பூக்கள்*
*பாடியோர்: மலேசியா வாசுதேவன், ஜென்சி,*
*இசை: இளையராஜா*

ஆயிரம் மலர்களே மலருங்கள்
அமுதகீதம் பாடுங்கள் பாடுங்கள்
காதல் தேவன் காவியம் நீங்களோ நீங்களோ
நெருங்கி வந்து சொல்லுங்கள் சொல்லுங்கள்
(ஆயிரம்)

வானிலே வெண்ணிலா
தேய்ந்து தேய்ந்து வளர்லாம்
மனதிலுள்ள கவிதைகோடு மாறுமோ?
ராகங்கள் நூறு பாவங்கள் நூறு
என் பாட்டும் உன் பாட்டும் ஒன்றல்லவோ
(ஆயிரம்)

கோடையில் மழை வரும்
வசந்த காலம் மாறலாம்
எழுதிச் செல்லும் விதியின்கைகள் மாறுமோ?
காலதேவன் சொல்லும் பூர்வ ஜென்ம பந்தம்
நீ யாரோ? நான் யாரோ? யார் சேர்த்ததோ?

(ஆயிரம்)

ஆ: பூமியில் மேகங்கள் ஓடியாடும் யோகமோ?
மலைகள் மீது ரதிஉலாவும் நேரமோ?
சாயாத குன்றும் தாளாத நெஞ்சும்
தாலாட்டுப் பாடாமல் தாயாகுமோ?

பெ/ஆ: ஆயிரம் மலர்களே மலருங்கள்!

# எஸ்.டி.சுந்தரம்

1921 ஆம் ஆண்டில் சேலம் மாவட்டத்திலுள்ள ஆத்தூரில் பிறந்தவர் இவர்.

'கவியின் கனவு' நாடகமெழுதியதன் மூலம் நாடறிந்த நாடகாசிரியராகப் புகழ்பெற்றார். அந்த நாடகம் தமிழ்நாடெங்கும் எழுநூறு தடவைகளுக்கு மேல் மேடை ஏறியது.

மிகச் சிறந்த தேசபக்தரான சுந்தரம் 'வானமுதம்' என்ற கவிதைத் தொகுதி மூலமும் பல படங்களுக்குப் பாடல்கள் எழுதியதன் மூலமும் தமது கவிதா ஞானத்தை இனங்காட்டினார்.

பல நாடக நூல்களை எழுதியுள்ள இவர், அவன், கள்வனின் காதலி, கப்பலோட்டிய தமிழன் போன்ற சுமார் பதினைந்து படங்களுக்கு வசனங்களும், சில படங்களுக்குக் கதைகளும் எழுதியுள்ளார்.

எஸ்.டி.சுந்தரத்தின் பிரபல நாடகங்களில் ஒன்று ''மனிதனும் மிருகமும்'' இதனை இவர் சினிமாவாகத் தயாரித்தார்.

''நடிகன் குரல்'' பத்திரிகைக்கு ஆசிரியராகச் சில காலம் பணியாற்றி, தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றச் செயலாளராக அமைந்து பல ''தகுதியான'' கலைஞர்களைக் கெளரவித்தவர்.

'மனிதனும் மிருகமும்' படத்தில் சுந்தரம் எழுதிய

''காலமெனும் சிற்பி செய்யும்
கவிதைத்தாய் கோயிலடா
கோலமின்னும் இயற்கை அருள்
கோடி மலர்த் தோட்டமடா''

என்று உன்னத இலக்கியத்தரத்தோடு பாடல் எழுதியுள்ளார்.

அப்பாடலில்

''வான்பறவை கூட்டத்திலே
வேற்றுமைகள் இல்லையடா
கானலையும் பிராணிகளும்
கண்ணியமாய் வாழுதடா

வீண்பெருமை பேசுகிறாய்
வீம்பு செய்யும் மானிடனே
வாழத் தெரியவில்லை
வேதனைகள் தீரவில்லை''

என்று மானுட வர்க்கம் ஒற்றுமை, அன்பு, கண்ணியம் ஆகிய உயர்ந்த கோட்பாடுகளை உதறித் தள்ளி விட்டு வாழ்வதனாலேயே சோகத்தில் சுழல வேண்டியுள்ளதென்று தார்மிக ஆவேசத்துடன் கூறுகிறார் கவிஞர்.

இப்படத்திலுள்ள ஓர் பாட்டில்,

''தனியொருவனுக் குணவில்லையெனில்
ஜெகத்தினை அழித்திடுவோம் என்ற
மணிக்கவிஞர் பாரதியின் மந்திரத்தை
மறந்து விளையாடுவது நீதியாமோ?''

என்று ஆவேசமாகக் கேட்கும் சுந்தரம்

''ஓய்வில்லாத நகரத்திலே ஒரே கொண்டாட்டம்
அந்தக் கொண்டாட்டத்திலே ஏழை பாடு திண்டாட்டம்

என ஏழைகளின் இழிநிலையை எடுத்தியம்புகிறார்.

தொடர்ந்து

''பண்புமிக்க பெரியநாடுங்க கொடை
பாரிவள்ளல் பிறந்த நாடுங்க பெரும்
படிப்பு, ஞானம் நிறைந்த ஊருங்க
இதில் பசியும் பிணியும் போகப் பாருங்க''

என்று சொல்கிறார்.

''மனிதனும் மிருகமும்'' படத்திலுள்ள

''இமயமலைச் சாரலிலே
இசைபாடும் கங்கையென

இதயமதில் அன்பெழுந்து
இன்பநிலை காட்டுதடி''

என்று
அழகொழுக தமிழிசைக்கிறார் கவிஞர்.

அப்பாடலில்

''பொதியமலைத் தென்றலிலே
பொங்கியெழும் அலையெனவே
புனிதமயப் பிரேமையிலே
பொழியுதடி ஜீவ சுகம்''

என்ற வரிகளிலும் கவிதா லாவண்யம் சதிராடுகிறது அல்லவா? அப்பாட லின் இறுதி அடிகளாக அமைந்துள்ள

''அமுதமய அன்பெழுந்து
ஆருயிரை மீட்டுதடி''

என்பதுதான் எத்துணை கம்பீரமாய், அமைந்திருக்கிறது பாருங்கள்!

'கோகிலவாணி' படத்திற்காக சுந்தரம்

''அன்பொளிவீசி உயிர்வழிந்தாடும்
விழியில் வான் கண்டேன்''

என்று மகோன்னத கவியழகு பொதிந்த பாடலை யாத்திருக்கிறார்.

''தண்ணிதழ் ஓசை இசையினில் வாணியின்
வீணையை நான் கேட்டேன் - பசும்
பொன்னுடல் வாரி வீசிய ஜோதியில்
வாட்டிய குளிர் உணர்ந்தேன்''

என்று வரிக்குவரி ஜீவ எழில் மின்ன எழுதியுள்ளார்.

அதே ''கோகிலவாணி'க்காக

''அழகோடையில் நீந்தும் இள அன்னம்
அழகோடையில் நீந்தும் இள அன்னம்
... உனதெண்ணம்''

என்று எழிலான சொற்கோத்து எழுதும் கவிஞர்.

''மழை சூழ்ந்திடும் மாலை - குளிர்
தழை தாழ்ந்திடும் சோலை அதில்
விழைவாய் கனிதேடி - தமிழ்
மொழி பேசிடும் கிளியோ?''

என்பது ஆத்மாவை அபகரிக்கும் அழகோடு அமைந்துள்ளது அல்லவா?

கவிஞர் எஸ்.டி.சுந்தரம் மறைந்து சில ஆண்டுகள் கழித்து அவரின் 'நினைவு தினக்' கூட்டம் ஒன்று (1980 இல் என்று ஞாபகம்) அவர் இல்லத்தில் கூட்டப்பட்டது.

அதில் நான் கலந்து கொண்டு ''சுந்தரம், கம்பதாசன் போன்ற உன்னதமான இலக்கிய மேதைகள், எவர்கள் ஆளுகிறார்களோ அவர்களுக்கு ஏற்ற மாதிரி 'பச்சோந்தி' வாழ்க்கை வாழத் தெரியாதவர்கள்! தத்தம் இலட்சியங்களை விட்டுக் கொடாது வாழ்ந்தவர்கள். ஆதலால் அவர்கள் செல்வத்திலும், செல்வாக்கிலும் உயர்நிலையை தமிழ்நாட்டில் எய்த முடியவில்லை'' என்று ஆவேசத்தோடு உரையாற்றினேன். என் பேச்சைக் கேட்டு அங்கு வந்திருந்த சில போலி பிரமுகர்களின் முகம் கறுத்துவிட்டது.அக்கூட்டத்திலிருந்தகவிஞர் வானம்பாடி ஆவேசத்தோடு என்னருகே வந்து, கவிஞர் கம்பதாசனையும், சுந்தரத்தையும் பற்றி இவ்வளவு ஆணித்தரமாக பேசுகிறாயே ஐயா'' என்றபடி என்னை அணைத்துக் கொண்டார்.

கவிஞர் சுந்தரத்தின் துணைவியார் கூட்டம் முடிந்தவுடன் என்னிடம் ''கவிஞர் உயிரோடு இருந்திருந்தால் உங்கள் பேச்சைக் கேட்டு ரொம்ப சந்தோசப்பட்டிருப்பார்'' என்றார்.

சரி அன்பர்களே இனி எஸ்.டி.சுந்தரத்தின் மந்திரத் தமிழ்ப் பாடல்கள் சிலவற்றை முழுமையாகப் பாருங்கள்.

## காலமென்னும்...

*படம்: மனிதனும் மிருகமும்*
*ஆண்டு: 1953*
*பாடியவர்: சி.எஸ்.ஜெயராமன்*
*இசை: கோவிந்தராஜுலு நாயுடு*

காலமென்னும் சிற்பி செய்யும்
கவிதைத்தாய் கோயிலடா
கோலமின்னும் இயற்கை அருள்
கோடிமலர்த் தோட்டமடா (கால)

ஓலமிடும் மானிடனே
உன்னறிவின் ஊட்டமடா
சோலையெழும் ஞானவெளிச்
சங்கீதம் கேட்டிடடா (கால)

வான்பறவை கூட்டத்திலே
வேற்றுமைகள் இல்லையடா
கானலையும் பிராணிகளும்

கண்ணியமாய் வாழுதடா
வீண்பெருமை பேசுகிறாய்
வீம்புசெய்யும் மானிடனே
வாழத் தெரியவில்லை
வேதனைகள் தீரவில்லை! (கால)

## இமயமலைச் சாரலிலே...

*படம்: மனிதனும் மிருகமும்*
*ஆண்டு: 1953*
*பாடியவர்: எம்.எல்.வசந்தகுமாரி*
*இசை: கோவிந்தராஜுலு நாயுடு*

இமயமலைச் சாரலிலே
இசைபாடும் கங்கையென
இதயமதில் அன்பெழுந்து
இன்பநிலை காட்டுதடி (இமய)

பொதிய மலைத் தென்றலிலே
பொங்கியெழும் அலையெனவே
புனிதமயப் பிரேமையிலே
பொழியுதடி ஜீவசுகம் (இமய)

கமலமுக வாணியின் கை
கானரச வீணையென
அமுதமய அன்பெழுந்து
ஆருயிரை மீட்டுதடி (இமய)

## தனி ஒருவனுக்கு...

*படம்: மனிதனும் மிருகமும்*
*ஆண்டு: 1953*
*பாடியவர்: எம்.எம்.மாரியப்பா*
*இசை: கோவிந்தராஜுலு நாயுடு*

தனியொருவனுக் குணவில்லையெனில்
ஜெகத்தினை அழித்திடுவோம் என்ற
மணிக்கவிஞர் பாரதியின் மந்திரத்தை
மறந்து விளையாடுவது நீதியாமோ?
ஓய்விலாத நகரத்திலே ஒரே கொண்டாட்டம்

அந்தக் கொண்டாட்டத்திலே ஏழை பாடு திண்டாட்டம்
கோயிலிருக்குது குளமிருக்குது
கோடி கோடி கலையிருக்குது
காவேரி கங்கை ஓடுது, ஓ ஐயா மாரே!
கருணைகாட்டி வந்த நாடிது! (ஓய்வில்லாத)

பண்புமிக்க பெரிய நாடுங்க கொடை
பாரிவள்ளல் பிறந்த நாடுங்க பெரும்
படிப்பு ஞானம் நிறைந்த ஊருங்க
இதில் பசியும் பிணியும் போகப் பாருங்க!

## அன்பொளி வீசி...

*படம்: கோகிலவாணி*
*ஆண்டு: 1956*
*பாடியவர்: சீர்காழி கோவிந்தராஜன்*
*இசை: ஜி.ராமநாதன்*

அன்பொளிவீசி உயிர் வழிந்தாடும்
விழியில் வான் கண்டேன்!
தண்ணிதழ் ஓசை இசையினில் வாணியின்

வீணையை நான் கேட்டேன் - பசும்
பொன்னுடல் வாரி வீசிய ஜோதியில்
வாட்டிய குளிர் உணர்ந்தேன்!
பின்னவள் அருகே புன்னகையோடுவர
என்னை நான் மறந்தேன்!
அந்நியமென்று என்னை எண்ணவே இல்லை
என்னுயிர் உறவானாள் - அவள்
சின்னக்கரங்களில் செம்மலர் விரல்களில்
சிந்திய அழகமுதால் - நல்ல
எண்ணமென்னும் பல வண்ணம் குழைத்தே
தண்மொழித் தேன் சுவையால் - நிதம்
என் மன ஏட்டினிலே எழுதிய காவியம்
எண்ணில் அடங்காவே! (அன்)

## அழகோடையில்...

*படம்: கோகிலவாணி*
*ஆண்டு: 1956*
*பாடியவர்: ஜிக்கி - சீர்காழி*
*இசை: ஜி.ராமநாதன்*

அழகோடையில் நீந்தும் இள அன்னம்
அழகோடையில் நீந்தும் இள அன்னம்
... உனதெண்ணம் (அழ)
எழில் தோய்ந்திடும் கலைமாமயில் வண்ணம்
... உடை வண்ணம் (அழ)
சுழல் மேவிடும் பார்வை - அதில்
எழும் போதையின் இனிமை சுவை!
பழம் ஊறிடும் தேனோ - பசும்
பொழில் தாமரை சுகமோ? (அழ)
மழை சூழ்ந்திடும் மாலை - குளிர்
தழை தாழ்ந்திடும் சோலை - அதில்
விழைவாய் கனிதேடி - தமிழ்
மொழி பேசிடும் கிளியோ? (அழ)

# மு.கருணாநிதி

கலைஞர் மு.கருணாநிதி பராசக்தி, மனோகரா போன்ற படங்களுக்கு ஆவேசமான வசனங்களை எழுதியதன் மூலம் தமிழ்த் திரைப்படவுலகில் ஓர் உன்னதமான இடத்தைப் பிடித்தவர்.

மிகச் சிறந்த எழுத்தாளர்களில் ஒருவரான அவர், பல நாவல்களையும், சிறுகதைகளையும் படைத்தவர்.

''நெஞ்சுக்கு நீதி'' என்ற பேரில் தன் வரலாற்று நூலும் எழுதியவர்.

மேடைகளில் ஏறி அற்புதமாகப் பேசும் திறன் படைத்தவர்.

தமக்கென அமைந்த ஒரு தனிப் போக்கில் கவிதைகளும் எழுதி வருபவர்.

கலைஞர் 1950 இல் 'மந்திரிகுமாரி' படத்தில் இடம் பெற்ற

**''ஊருக்கு உழைப்பவன்டி**
**ஒரு குற்றம் அறியான்டி**
**உதைபட்டுச் சாவானடி**
**எருமை கண்ணுக்குட்டி''**

என்ற பாடலை மூதன் முதலாக எழுதி திரைப்படப் பாடலாசிரியர் வரிசையில் இடம் பிடித்தவர்.

''மந்திரிகுமாரி''யில் ஆரம்பித்து சில வருடங்களுக்கு முன்வெளி வந்த ''காவலுக்குக் கெட்டிக்காரன்'' வரை எல்லாமாக நாற்பத்தியொரு பாடல்கள் எழுதியுள்ளார்.

அவர் எழுதிய திரைப் பாடல்கள் பல நல்ல கருத்துகளோடும், எழுச்

சியோடும் அமைந்துள்ளன.

'காஞ்சித் தலைவன்' படத்தில

''வெல்க நாடு வெல்க நாடு வெல்க வெல்கவே
வீர சங்க நாதங்கேட்டுச் செல்க செல்கவே
தாயின் ஆணை கேட்பதற்குத் தலைவணங்கும் தங்கமே
தலைகொடுத்துத் தாயின்மானம் காத்திடுவாய் சிங்கமே

என்று வீராவேசத்தோடு கருணாநிதி பாடல் யாத்துள்ளார்.

'தூக்குமேடை' படத்திற்காக அவர் 'குடி உயர' என்று தொடங்கும் அரிய பாடலொன்றை எழுதியுள்ளார்.

அந்தப் பாட்டில்

''எல்லாரும் இந்நாட்டு
மன்னர் என்றார் பாட்டிலே
எங்கள் மக்கள் வாழ்கிறார்
மண்ணாங் கட்டி வீட்டிலே

என்று யதார்த்த நிலையை நயமாகச் சொல்கிறார்.

மேலும் அப்பாட்டில்

''இடி இடித்தால் மழை பொழிந்தால்
மக்கள் எல்லாம் ரோட்டிலே
ஐயோ! ஐயோ!''

என்றும்,

''புருசன் மனைவி சேர்வதுண்டு
வெளிச்சம் போட்ட காரு வந்தா
விலகி விலகிப் படுப்பதுண்டு''

என்றும் இல்லாத மக்களின் பொல்லாத வறுமை நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறார் கலைஞர்.

'குறவஞ்சி' படத்தில் அவரெழுதிய 'அலையிருக்குது' எனத் தொடங்கும் பாடலில்,

''வலையிருக்குது விழியிலே - பழக்
குலையிருக்குது மொழியிலே
விலை யிருக்குதா உலகிலே - எனக்கு

விலையிருக்குதா உலகிலே?''

என்ற வரிகள் நயமானவை.

'தூக்குமேடை' படத்திற்காக கலைஞர்

''ஆயிரம் பிறைகள் காணும் வரை
அலைகடல் ஓசை அடங்கும் வரை
தனியே உனக்காக - நீ
தனியே எனக்காக
காத்திருப்பேன் நான் காத்திருப்பேன்''

என்றும்,

''கதிரவன் ஊர்வலம் நிற்கும் வரை
கனிவளம் உலகில் வற்றும் வரை
பொதிகைத் தென்றல் தூங்கும் வரை
தனியே உனக்காக - நீ
தனியே எனக்காக''

என்றும்,

அழகிய சொற்களை மலர்களாக்கி பாமாலை கட்டியுள்ளார்.

கலைஞர் எழுதிய திரைப்பாடல்களில் மிகமிகச் சிறந்ததாகச் சொல்லத்தக்கது அவர் ''மறக்க முடியுமா?'' படத்திற்காக எழுதிய பாடலாகும்.

''காகித ஓடம் கடல் அலைமீது
போவது போலே மூவரும் போவோம்
ஆதரவின்றி ஆழ்ந்திடும் ஓடம்
அதுபோல் ஒன்றாய் மூழ்குதல் நன்றாம்''

என்ற வரிகளிலும்,

''தாயின் மடியும் நிலைத்திடவில்லை
தந்தையின் நிழலும் காத்திடவில்லை
ஆறிலும் சாவு நூறிலும் சாவு
அம்மா எங்களை அழைத்திடு தாயே!

என்ற வரிகளிலும் எத்துணை சோகம்! நெகிழ்ச்சி!

'பராசக்தி' படத்திற்காக அவரெழுதிய ''பூமாலை நீயே'' எனத் தொடங்கும் பாடலும் மிகவும் உருக்கமானதாகும்.

அப்பாடலில்

''பறவை வீட்டில் நீ பிறந்தாலும்
பசி நீங்கவே உணவும்
பறந்தோடி வந்திடும்!
கோடானு கோடி ஏழை மாந்தர் வாடும்
சீமான்கள் வாழும் நாட்டில் பிறந்தாய்
ராஜா நீயேன் பிறந்தாய்

என்ற வரிகள் நெஞ்சைப் பிழியும் வண்ணம் ஓர் சோகச் சித்திரமாக வரையப்பட்டுள்ளதல்லவா?

இனி டாக்டர் கலைஞர் மு.கருணாநிதியின் சில பாடல்களை முழுமையாகச் சுவைத்துப் பாருங்கள்.

## பேசும் யாழே...

*படம்: 'நாம்'*
*இசை: சிதம்பரம் ஜெயராமன்*
*பாடியவர்கள்: ராஜா - ஜிக்கி*
*ஆண்டு : 1953.*

அவன்: பேசும் யாழே பெண் மானே
வீசும் தென்றல் நீதானே

அவள்: நீலவானே தன்னை மறந்து
நிலவினைப் புகழ்ந்திடலாமோ

அவன்: எழிலே! தமிழ்க் காவியமே
எழுதாத ஓவியமே

அவன்: பேசும் யாழே பெண் மானே

அவள்: யாழே நானென்றால் நாதம் நீதானே

அவன்: நாதத்தில் பேதமுண்டு
நமக்கது வேண்டாமே

இருவரும்: காதல் வாழ்வே கனிரசமே
மாதர் மறவர் உல்லாசமே

## வெல்க நாடு வெல்க

*படம்: காஞ்சித் தலைவன்*
*பாடியவர்: சி.எஸ்.ஜெயராமன்*
*ஆண்டு: 1963*

வெல்க நாடு வெல்க நாடு வெல்க வெல்கவே
வீர சங்க நாதங்கேட்டுச் செல்க செல்கவே (வெல்க)

தாயின் ஆணை கேட்பதற்குத் தலைவணங்கும் தங்கமே
தலை கொடுத்துத் தாயின் மானம் காத்திடுவாய் சிங்கமே
சென்று வா வென்று வா (வெல்க)

குழலைப் போல மழலை பேசும்
குழந்தைகளின் முத்தமும்
கொஞ்சுகின்ற அஞ்சுகத்தின்
கோல மொழிச் சத்தமும்
உன் குன்றத் தோளில் புது பலத்தை
வழங்குமடா நித்தமும் (வெல்க)

மகிமை கொண்ட மண்ணின் மீது எதிரிகளின் கால்கள்
மலர் பறிப்பதில்லையடா வீரர்களின் கைகள்
மாவீரர்களின் கைகள்
சென்று வா வென்று வா (வெல்க)

ஓங்கிய வாள் போன்ற வடிவமடா - அவர்
ஒளிவிழியில் உலகத்தின் படிவமடா
வேங்கைப்புலி மன்னனடா
வீரர்களின் தலைவனடா - அவர்
கட்டளைக்கு காத்திருந்த நல்லவனே
களம் நோக்கிப் புறப்படடா வல்லவனே (வெல்க)

## பூமாலை நீயே..

*படம்: 'பராசக்தி*
*இசை: ஆர்.சுதர்சனம்*

ஆண்டு: 1952

பூமாலை நீயே...
புழுதி மண் மேலே வீணே
வந்தேன் தவழ்ந்தாய்? (பூமாலை)

பாராயோ என் பன்னீர் செல்வமே
சீரோடு வாழ்ந்தோம்
வேரோடு சாய்ந்தோம்
ராஜாங்கம் போலே வாழ்ந்த
வாழ்வும் வீழ்ந்தே பாழ்ன
எந்தன் வயிற்றில் பிறந்தாய்
ராஜா நீ யேன் பிறந்தாய் (பூமாலை)

பறவை வீட்டில் நீ பிறந்திருந்தாலும்
பசி நீங்கவே உணவும்
பறந்தோடி வந்திடும்
கோடானு கோடி ஏழை மாந்தர் வாடும்
சீமான்கள் வாழும் நாட்டில் பிறந்தாய்
ராஜா நீயேன் பிறந்தாய்? (பூமாலை)

## காகித ஓடம்...

*படம்: 'மறக்க முடியுமா'*
*இசை: டி.கே.ராமமூர்த்தி*
*பாடியவர்: பி.சுசீலா*
*ஆண்டு: 1966*

காகித ஓடம் கடல் அலைமீது
போவது போலே மூவரும் போவோம்
ஆதரவின்றி ஆழ்ந்திடும் ஓடம்
அதுபோல் ஒன்றாய் மூழ்குதல் நன்றாம்

கோலமும் போட்டுக் கொடிகளும் ஏற்றித்
தேரையும் ஓட்டித் தீயையும் வைத்தான்

காலமும் பார்த்து நேரமும் பார்த்து
வாழ்வையும் ஈந்து வதைக்கவும் செய்தான்

அழுவதைக் கேட்க ஆட்களும் இல்லை
ஆறுதல் வழங்க யாருமே இல்லை
ஏழைகள் வாழ இடமே இல்லை
ஆலயம் எதிலும் ஆண்டவன் இல்லை

தாயின் மடியும் நிலைத்திட வில்லை
தந்தையின் நிழலும் காத்திட வில்லை
ஆறிலும் சாவு நூறிலும் சாவு
அம்மா எங்களை அழைத்திடு தாயே.

## ஒருவனுக்கு ஒருத்தி...

படம்: பூம்புகார்
பாடியவர்: கே.பி.சுந்தராம்பாள்
இசை: ஆர்.சுதர்சனம்
ஆண்டு: 1964

ஒருவனுக்கு ஒருத்தி என்ற
உயிர் மூச்சை உள்ளடக்கி
அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன் பழிப்பதில்லாயின் நன்று - எனும்
திருக்குறளை மறவாதே! திசை தவறிப் போகாதே!

வாழ்க்கை எனும் ஓடம்
வழங்குகின்ற பாடம்
மானிடரின் மனதிலே
மறக்கவொண்ணா வேதம்! (வாழ்க்கை)

வாலிபம் என்பது கலைகின்ற வேடம் - அதில்
வந்தது வரட்டும் என்பவன் முழு மூடம்
வருமுன் காப்பவன் தான் அறிவாளி - புயல்
வருமுன் காப்பவன் தான் அறிவாளி
வந்தபின்னே தவிப்பவன் தான் ஏமாளி! (வாழ்க்கை)

துடுப்புகள் இல்லாத படகு - அலைகள்
அழைக்கின்ற திசையெல்லாம் போகும் - தீமையைத்
தடுப்பவர் இல்லாத வாழ்வும் - அந்தப்
படகின் நிலை போல ஆகும்!

## குறிஞ்சி மலரொன்று...

*படம்: 'தூக்கு மேடை'*
*இசை: சங்கர் – கணேஷ்*
*பாடியவர்கள்: ஜெயச்சந்திரன், வாணி ஜெயராம்*

குறிஞ்சி மலரொன்று குலுங்கி அழைக்குது
குலவிட வருவாய் குளிர்த்தென்றலே

தென்றலின் சுகத்தில்
தேனிதழ் கலந்து
அன்றிலாய் வாழ்வோம்
இன்பத்தில் திளைத்து

கற்கண்டு தோட்டத்தில் பால்பாய்ந்து
கரும்பு கலப்பையால் ஏர் ஓட்டி
அற்புதமாய் விளைந்த கதிர்மணியே
அணைத்து மகிழ்வோம் கண்மணியே (குறிஞ்சி)

இன்ப நூலுக்கு முன்னுரை எழுதியே வருக
இயல் இசைக் கூத்தென முத்தமிழ் சுவையைத் தருக.
முத்தமிழ் கயல் விழி முக்கனி தனிமொழி
முத்திக்கு ஒரு வழி முத்தமாரி பொழி (குறிஞ்சி)

அணைத்தால் விளக்கே இருண்டு விடும்
அன்பின் தேகம் துவண்டு விடும்
பிணைத்தாள் நம்மைத் தமிழன்னை - இனி
பிரியேன் என்றும் நானுன்னை (குறிஞ்சி)

## ஆயிரம் பிறைகள்...

*படம்: 'தூக்கு மேடை'*

இசை: சங்கர் - கணேஷ்
பாடியவர்கள்: ஜெயச்சந்திரன், வாணி ஜெயராம்

ஆயிரம் பிறைகள் காணும் வரை
அலைகடல் ஓசை அடங்கும் வரை
தனியே உனக்காக - நீ
தனியே எனக்காக
காத்திருப்பேன் நான் காத்திருப்பேன் (ஆயிரம்)

கதிரவன் ஊர்வலம் நிற்கும் வரை
கனிவளம் உலகில் வற்றும் வரை
பொதிகைத் தென்றல் தூங்கும் வரை
தனியே உனக்காக - நீ
தனியே எனக்காக (ஆயிரம்)

இயற்கை வளங்கள் இருக்கும் வரை
இலக்கியச் செல்வம் வாழும் வரை
இளமை அழகு தீரும் வரை
முதுமை உடலில் பாயும் வரை
தனியே உனக்காக நீ
தனியே எனக்காக (ஆயிரம்)

# சுரதா

1921-இல் தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த நாகை வட்டத்தில் அடங்கிய பழையனூரில் பிறந்தவர் இவர்.

முதன் முதலாக 'மங்கையர்க்கரசி' படத்திற்கு வசனமெழுதித் திரையுலகிற்கு அறிமுகமானார்.

1951 - இல் 'என் தங்கை' படத்திற்காக

''ஆடும் ஊஞ்சலைப் போலே அலையே ஆடுதே
ஆறுவந்து கடலிலே சேருதே''

என்ற பாடல் எழுதியதன் மூலம் திரைப் படப்பாடலாசிரியராக அறிமுகமானார்.

இவர் திரைப்படங்களுக்கு அதிகமாகப் பாடல்கள் எழுதியவரல்லர். ஆனால் இவரெழுதிய எந்தப் பாடலுமே சோடை போனதில்லை.

கவிஞர் சுரதா இருபதாம் நூற்றாண்டின் மிகச்சிறந்த தமிழ்க் கவிஞர்களில் ஒருவர்.

கவிஞர் கம்பதாசனைப் போலவே எதையும் புதிய கோணத்தில் சிந்தித்து எழுதும் பேராற்றல் படைத்தவர் இவர்.

சாவின் முத்தம், தேன் மழை, அமுதும் தேனும் போன்ற அருமையான கவிதை நூல்களைப் படைத்த இவர், அமரகவி, புதுவாழ்வு போன்ற படங்களின் வசனகர்த்தாவுங் கூட.

இனி கவிஞரின் திரைப்பாத் திறனைப் பார்ப்போம்.

''அமுதும் தேனும் எதற்கு - நீ
அருகினில் இருக்கையில் எனக்கு''

என்று தொடங்கும் அற்புதமான பாடலைத் 'தை பிறந்தால் வழி பிறக்கும்'' படத்திற்காக எழுதினார்.

இப்பாடலில்,

''நிலவின் நிழலோ உன் வதனம் - புது
நிலைக் கண்ணாடியோ மின்னும் கன்னம்
மலையில் பிறவா மாமணியே - நான்
கொய்யும் கொய்யாக் கனியே''

என இலக்கிய எழிலோடு அடிகளை அமைத்துள்ளார் கவிஞர்

'நிலவு வதனம்' என்பது ஆயிரம் கவிஞர்கள் ஏற்கனவே சொல்லிய உவமை.

பெண்ணின் முகத்தை ''நிலவின் நிழலோ உன் வதனம்'' என்கிறார் புதுமைக் கவிஞர் சுரதா.

'திருமணம்' படத்திற்காக,

''எண்ணமெல்லாம் ஓர் இடத்தையே நாடுதே
கண்ணிரண்டும் ஓர் முகத்தையே தேடுதே''

என்று தொடங்கும் பாடலில்,

''செங்கதிர் சுடர்போலே என்கரம் நீண்டிருந்தால்
அந்தச் சிங்கார சிலைதன்னை
இங்கிருந்தே தொடுவேன்''

என்ற வரிகள் சுரதாவின் புதிய சிந்தனைத் திறனுக்குச் சரியான எடுத்துக் காட்டாகும்.

மேலும் இப்பாடலில்,

''மனம் விரும்பும் காட்சியைக்
கனவினில் கண்டாலும்
மையல் தீருமா?... நுரை தின்று பசியாறுமா?''

என்றெழுதுகிறார்.

வரிக்கு வரி இலக்கிய நயம் செறிந்திருக்கிறதல்லவா?

கவிஞர் ''நுரைதின்று பசியாறுமா?'' என்கிறாரே! எத்துணை ஆழ

மான புலமை இவருக்கு!

இதே பாடலில்,

**''நெய்யும் தறியில் நூல்நெருங்குவது போலே**
**நேசமுகம் இரண்டும் நெருங்குமா?''**

என்ற வரிகளை ஓர் உன்னதமான கவிஞனின் பேனாவால் மட்டுமே எழுத முடியுமல்லவா?

கவிஞர் சுரதா நீர்க்குமிழி படத்திற்காக,

**''ஆடி அடங்கும் வாழ்க்கையடா''**

என்று தொடங்கும் நேர்த்தியான தத்துவப் பாடலொன்று எழுதியுள்ளார்.

அப்பாடலில்,

**''பிறந்தோம் என்பதே முகவுரையாம்**
**பேசினோம் என்பதே தாய்மொழியாம்**
**மறந்தோம் என்பதே நித்திரையாம்**
**மரணம் என்பதே முடிவுரையாம்''**

என்று எத்துணை நயமாக, சுருக்கமாக மானுட ஜீவிதத்தைச் சொல்கிறார் கவிஞர்!

இதே பாடலில்,

**''சிரிப்பவன் கவலையை மறக்கின்றான்**
**தீமைகள் செய்பவன் அழுகின்றான்**
**இருப்போம் என்றே நினைப்பவன் கண்களை**
**இறந்தவன் அல்லவோ திறக்கின்றான்''**

என்ற அடிகளில் தான் எத்துணை ஆழமும் அழகும் ஒளி வீசுகிறது!

கவிஞர் ''நாடோடி மன்னன்' படத்திற்காக எழுதிய,

**''கண்ணில் வந்து மின்னல் போல் காணுதே!''**

என்று தொடங்கும் பாடலில்,

**''சுடர் மின்னல் கண்டு தாழை மலர்வது போலே**
**உன்னைக் கண்டு உள்ளம் மகிழ்ந்தேனே''**

என்றும்,

''நீலவானம் இல்லாத ஊரே இல்லை
உலகினில் மழையின்றி வாழ்வே இல்லை
அமுதே உனையன்றி வாழ்வே இல்லை
அன்பே இது உண்மையே''

என்றும் சுரதா புதிய உவமைத் திறன் மின்ன எழுதியுள்ளார்.

1959 - இல் வெளிவந்த 'நாடோடி மன்னன்' சிறப்பு மலரில் டாக்டர் எம்.ஜி.ஆர். இந்தப் பாடலை ஆழமாக அனுபவித்துப் பாராட்டியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

'மறக்க முடியுமா?' படத்திற்காக கவிஞர் எழுதிய,

''வசந்த காலம் வருமோ?''

எனத் தொடங்கும் பாடலில்,

''ஆசை அரும்பு மலராகி நெஞ்சில்
ஆடும் நினைவு கனியாகி
மடி மீதிலே விளையாடவே
கொடி போலவே உறவாடவே
எனையே தேடி...''

என்ற அடிகளில் உள்ள இலக்கிய நயமும், இதே பாடலில்,

''குயில் கூவுமோ மழை நாளிலே?
கயல் நீந்துமோ சுடு நீரிலே''

என்ற அடிகளும் சுரதா ஒரு பெரிய இலக்கியக்காரர் என்பதனைத் தெட்டத் தெளிவாக உணர்த்துகிறதல்லவா?

'ஆடிப்பெருக்கு' படத்திற்காக எழுதிய,

''புரியாது புரியாது''

என்ற பாடலில்,

''பெருமைகள் பேசும் பூமியில் பிறந்தார்
பிறந்தவர் தாயின் மடியினில் வளர்ந்தார்
வளர்ந்தவர் வாழ்வில் கொடுப்பதை மறந்தார்
ஒரு பிடி சாம்பலில் முடிவானார்''

என்ற அடிகள் மூலம் வாழ்க்கைத் தத்துவத்தை எழிலார் சொல்லோவிய மாக வரைந்துள்ளார் கவிஞர்.

'நாணல்' படத்தில் இடம்பெற்ற இவருடைய,

"விண்ணுக்கு மேலாடை
பருவ மழை மேகம்"

என்ற பாடலும் உயர்ந்த இலக்கியச் சுவை மிக்கதேயாகும்.

இனி சுயசிந்தனை மிக்க தன்மானக் கவிஞர் சுரதாவின் சில பாடல்களை முழுமையாகப் பார்த்து மகிழுங்கள்.

## அமுதும் தேனும்..

*படம்: 'தை பிறந்தால் வழி பிறக்கும்'*
*பாடியவர்: சீர்காழி கோவிந்தராஜன்*
*இசை: கே.வி.மகாதேவன்*

அமுதும் தேனும் எதற்கு - நீ
அருகினில் இருக்கையில் எனக்கு! (அமுதும்)

அருவிதரும் குளிர்நீர் அன்பே இனிமேல்
பிரிந்தால் சுடுநீர் ஆகும் நமக்கு! (அமுதும்)

நிலவின் நிழலோ உன் வதனம்? - புது
நிலைக் கண்ணாடியோ மின்னும் கன்னம்!
மலையில் பிறவா மாமணியே - நான்
கொய்யும் கொய்யாக் கனியே! (அமுதும்)

விழியாலே காதல் கதைபேசு!
மலர்க்கையாலே சந்தனம் பூசு! - தமிழ்
மொழியாலே சுவை யூட்டும் செந்தேனே!
உடல் நான்; உயிர் நீ தானே! (அமுதும்)

## எண்ணமெல்லாம்...

*படம்: திருமணம்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: எஸ்.எம்.சுப்பையா நாயுடு*

எண்ணமெல்லாம் ஓர் இடத்தையே நாடுதே

கண்ணிரண்டும் ஓர் முகத்தையே தேடுதே (எண்)

தேனேந்தும் மலராகி வானேந்தும் நிலவாகி
சிந்தை கவர்ந்திடுதே - எந்தன்
மணி விழி மயங்கிடுதே!

செங்கதிர் சுடர்போலே என்கரம் நீண்டிருந்தால்
அந்தச் சிங்காரச் சிலைதன்னை
இங்கிருந்தே தொடுவேன்! (எண்)

மனம் விரும்பும் காட்சியைக்
கனவினில் கண்டாலும்
மையல் தீருமா?.... நுரைதின்று பசியாறுமா?

மாமலரின் நிழல்தான்
மணம் வீசுமா? முத்து
மாலையின் நிழல்தான் விலை போகுமா?

நெய்யும் தறியில் நூல் நெருங்குவது போலே
நேசமுகம் இரண்டும் நெருங்குமா?
எங்கள் பிரிந்த உறவும் திரும்புமா? (எண்)

## ஆடி அடங்கும்...

படம்: *'நீர்க்குமிழி'*

பாடியவர்: *சீர்காழி*

இசை: *வி.குமார்*

ஆண்டு : *1965*

ஆடி அடங்கும் வாழ்க்கையடா
ஆறடி நிலமே சொந்தமடா
முதலில் நமக்கெல்லாம் தொட்டிலடா
கண்மூடினால் காலில்லாக் கட்டிலடா! (ஆடி)

பிறந்தோம் என்பதே முகவுரையாம்
பேசினோம் என்பதே தாய்மொழியாம்
மறந்தோம் என்பதே நித்திரையாம்
மரணம் என்பதே முடிவுரையாம் (ஆடி)

சிரிப்பவன் கவலையை மறக்கின்றான்
தீமைகள் செய்பவன் அழுகின்றான்
இருப்போம் என்றே நினைப்பவன் கண்களை
இறந்தவன் அல்லவோ திறக்கின்றான்

வகுப்பார் அதுபோல் வாழ்வதில்லை
வந்தவர் யாரும் நிலைத்ததில்லை
தொகுப்பார் சிலரதைச் சுவைப்பதில்லை
தொடங்குவார் சிலரதை முடிப்பதில்லை. (ஆடி)

## கண்ணில் வந்து...

*படம்: 'நாடோடி மன்னன்'*
*பாடியவர்கள்: டி.எம்.எஸ். - ஜிக்கி*
*இசை: எஸ்.எம்.சுப்பையா நாயுடு*
*ஆண்டு: 1958*

பெ: கண்ணில் வந்து மின்னல் போல் காணுதே - இன்பக்
காவியக் கலையே ஒவியமே!

ஆ: செங்கனிபோல் சுவைதரும் மாமணி என
பாடிடும் பூங்குயிலே - இன்பக்
காவியக் கலையே! ஓவியமே!

பெ: சுடர் மின்னல் கண்டு தாழை மலர்வது போலே
உன்னைக் கண்டு உள்ளம் மகிழ்ந்தேனே!

ஆ: நீலவானம் இல்லாத ஊரே இல்லை!
உலகினிலே மழையின்றி வாழ்வே இல்லை
அமுதே உனையன்றி வாழ்வே இல்லை!
அன்பே இது உண்மையே

பெ: அங்கும் இங்கும் விளையாடி அலை - போலே உறவாடி
ஆனந்தம் காணும் நேரம் தானே
உள்ளத்தில் ஆசையே உன்னைத் தேடுதே!

ஆ: கொஞ்சிப் பேசுங்கிளியே நல் - இன்பம் தரும் ஜோதியே!
மானே! மலரினும் மெல்லியது - காதலே!

பெ: மகிழ்வோம் நாமே

புதுமை வாழ்விலே (கண்ணில்)

## வசந்த காலம்...

*படம்: 'மறக்க முடியுமா?'*
*பாடியவர்: பி.சுசீலா*
*இசை: டி.கே.ராமமூர்த்தி*

வசந்த காலம் வருமோ? நிலை மாறுமோ?
வைகை பெருகி வருமோ? குறை தீருமோ?

ஆசை அரும்பு மலராகி நெஞ்சில்
ஆடும் நினைவு கனியாகி
மடி மீதிலே விளையாடவே
கொடி போலவே உறவாடவே
எனையே தேடி.... (வசந்த)

வீணை இருந்தும் பயனேது? - வந்து
மீட்டும் வரையில் இசையேது?
குயில் கூவுமோ? மழை நாளிலே!
கயல் நீந்துமோ சுடும் நீரிலே?
எனையே தேடி... (வசந்த)

## புரியாது புரியாது...

*படம்: 'ஆடிப்பெருக்கு' ஆண்டு : 1962*
*பாடியவர்: பி.பி.சீனிவாஸ்*
*இசை: ஏ.எம்.ராஜா*

புரியாது புரியாது வாழ்க்கையின்
ரகசியம் புரியாது!
வளரும் ஆசைக்கு அளவேது?
முடிவேது? முடிவேது?
முடிந்தபின் உலகம் நமக்கேது?
முடிந்ததை நினைத்தால் பயனேது?

ஒரு சிலர் வாழ்வு தியாகத்தில் கூடும்
உரிமையும் அன்புயும் மறுபடி சேரும்.
திருமணமாகி ஒரு மனமாகும்
பெண்மனம் தாய்மையை தினம் தேடும்
வாழ்க்கையின் ரகசியம் புரியாது. (புரியாது)
பெருமைகள் பேசும் பூமியில் பிறந்தார்
பிறந்தவர் தாயின் மடியினில் வளர்ந்தார்
வளர்ந்தவர் வாழ்வில் கொடுப்பதை மறந்தார்
ஒரு பிடி சாம்பலில் முடிவானார்
வாழ்க்கையின் ரகசியம் புரியாது (புரியாது)

# ராஜகோபால்

கவி ராஜகோபால் 1929 இல் வட ஆர்க்காடு மாவட்டத்தில் அமைந்த திருப்பத்தூர் வட்டத்தில் - அகரபுரம் கிராமத்தில் பிறந்தவர்.

பள்ளியில் படிக்கும் போதே பா இயற்றும் திறன் இவர்பால் மிகுந்திருந்தது. பத்தாம் வகுப்பு தேறுமுன்பே பள்ளியைவிட்டு மட்டுமல்ல, வீட்டை விட்டே வெளியேறிவிட்ட இக்கவிஞர், கோவை சென்ட்ரல் பிக்ஸர்ஸ்ஸில் கடைநிலை பணியாளராகச் சேர்ந்தார். அப்பொழுது அவர்கள் எடுத்துக் கொண்டிருந்த 'வால்மீகி'' படத்தில் ஒரு சிறு வேடத்தில் நடித்தார்.

அச்சமயம் அவர்கள் எடுத்துக் கொண்டிருந்த அபிமன்யு படத்தில் நடிக்க டாக்டர் எம்.ஜி.ஆர். அங்கே வந்தார். அவர் ராஜகோபாலின் தமிழ்ப் புலமையை போற்றினார். ஒரு சமயம் தாம் கடும் ஜுரத்தில் விழ, எம்.ஜி.ஆர். பணம் கொடுத்து உடனடியாக வைத்தியத்திற்கு ஏற்பாடு செய்ததை உணர்ச்சிவசப்பட்ட நிலையில் என்பால் நினைவு கூர்ந்தார் கவிஞர்.

படிப்படியாக முன்னேறிய இவர் மூத்த திரைப்படப் பாடலாசிரியர் ராஜகோபாலய்யரிடம் உதவியாளராகச் சேர்ந்து போதிய தமிழ்ப் பயிற்சியைப் பெற்றார்.

1951 - இல் வெளிவந்த 'என் தங்கை' படமே இவர் பாட்டெழுதிய முதல் படமாகும்.

''மாமியார் மெச்சிய மருமகள்'' படத்தில்

''மழையும் பெய்யுது மஞ்சள் வெயிலும் காயுது
மண்ணோடு மழையும் சேர்ந்து

மணம் வீசுது - வசந்த மணம் வீசுது''

என்று நயமுள்ள பாடல் இவருக்கு புகழ் தந்த பாடல்களில் ஒன்றாகும்.

'பூமாலை' படத்திற்காக தலைவன்

''உன் எண்ணத்தை எந்தன் கன்னத்தில் எழுதிவிடு

என்று பாட தலைவி,

''என் பெண்மையை காக்கும் தன்மைக்குக் கொஞ்சம் தவணை கொடு''

என்று பாடுவாள்.

இந்த அடிகளை கலைஞர் கருணாநிதி மிகவும் ரசித்ததாகக் கவிஞர் எனக்குச் சொன்னார்.

இப்பாடலிலுள்ள,

''மாம்பழ வாயின் வாசலிலே கண்டது குங்குமமா – இனி
வழங்கிடப் போகும் இன்பங்கள் அங்கே சங்கமமா

என்ற அடிகள் கூட சிறப்பாகவே அமைந்துள்ளன..

'திலகம்' படத்தில்,

''ஏழைக்கும் வாழ்வுக்கும் வெகுதூரமா – பணம்
இல்லார் என்றாலே இளக்காரமா
சூழும் வாழ்வின் கரையோரமா - எம்மைத்
தூக்கி எறிவது முறையாகுமா?

என்றும்,

''ஏழ்மையை இறைவா நீக்கிவிடு - இல்லை
எங்களின் உயிரைப் போக்கிவிடு
ஏய்க்கும் வலியோரைத் தூக்கிலிடு - இன்றே
இன்பமாய் எங்களை வாழவிடு''

என்றும் அழகிய அடிகளை ஏந்திய அரிய பாடலொன்றைத் தீட்டியுள்ளார் கவிஞர்.

'நல்லவன் வாழ்வான்' படத்திற்காக கவிராஜகோபால் ஒரு அருமையான பாடலைத் தீட்டியுள்ளார்.

''நித்தம் நித்தம் மனது சித்தரித்த கனவு
நிறைவேறப் போகுதடி நாளை

நெடுந்தூரம் இல்லை அந்த வேளை''

என்று எழிலோடு எழுதியுள்ள அவர்,

''முத்திரை இடாத இன்னும்
மற்றவர் தொடாத இளம்
மொட்டு கைபடாத எந்தன் அங்கம் - இதை
முற்றுகை இடுவாரந்த சிங்கம்''

என்று இலக்கியம் நயம் ததும்பும் வண்ணம் பாடலை வடித்துள்ளார்.

'சீமான் பெற்ற செல்வங்கள்' படத்தில்,

''கண்டது ஒன்று கேட்பது ஒன்று
கதையும் வேறொன்று - இரு
கண்களும் காதும் ஆடிய நாடகம்
கவலையில் முடிந்தது இன்று''

என்றும்,

''காலம் வந்தது இலையும் உதிர்ந்தது
காற்றின்மேல் பழி நேர்ந்ததே
காகம் நகர்ந்தது கனியும் வீழ்ந்தது
காரணம் அதுவென்றானதே''

என்றும் பொருள் நயத்தோடு ஒரு பாடலை வடித்துள்ளார் கவிஞர்.

'படித்த மனைவி' படத்திற்காக,

''அன்பே உன்பெயர் அன்னை
அழகே உன் பெயர் மங்கை
அறிவே உன் பெயர் தலைவி
இந்த அமைப்பே எந்தன் மனைவி''

என்றெழுதிய கவிஞர்,

''பொன்மகள் தந்த முகம் கொண்டாய்
பூமகள் வாழும் எழில் கொண்டாய்
மணமகள் பொறுமையை நீ கொண்டாய்
குலமகளே பயம் நீ ஏன் கொண்டாய்''

என எழிலோடு தொடர்ந்து எழுதியுள்ளார்.

'கடவுள் தந்த பரிசு' படத்தில் கவிராஜ கோபால் எழுதிய

''அல்லி மகள் மெல்ல வந்தாள்
மல்லிகை முல்லை சூடி நின்றாள்''

எனத் தொடங்கும் பாடல் மிகப்பிரபலம் பெற்ற நல்ல பாடலாகும். அப்பாடலில்,

''மலரும் போது ஒரு திருநாள்
மணக்கும் போது மறு திருநாள்
பேறாகும் நாள் பெண் தாயாகும் நாள்
பெண்மைக்கு வாழ்வில் மூன்று நன்னாள்
அந்நாள் எந்நாள் இன்னாள் பொன்னாள்''

என்ற அடிகளும் அருமையாக அமைந்துள்ளன.

இனி கவிஞர் தம் பாடல்கள் சிலவற்றை முழுமையாகச் சுவையுங்கள்.

## மழையும் பெய்யுது...

*படம்: மாமியார் மெச்சிய மருமகள்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: ஆர்.சுதர்சனம்*
*ஆண்டு: 1959*

மழையும் பெய்யுது மஞ்சள் வெய்யிலும் காயுது
மண்ணோடு மழையும் சேர்ந்து
மணம் வீசுது! வசந்த மணம் வீசுது!
நாளை எங்க கல்யாணம் நடக்கப் போகுது - இப்பவே
நாதசொரமாகக் காத்து நலங்கு பாடுது
கொட்டு மேளமாக இடிஇடிக்க மின்னல் தங்கத் தாலிகட்ட
தாளத்தோடு தவளையெல்லாம் வேத கோஷம் புரியுது
வாழைப்பூ விளக்கெடுக்க காளான் வெள்ளிக் குடை பிடிக்க
தாழைமடல் சிலம்பாட தாமரை பெண் சிரிக்குது!
நத்தை முத்துப் பல்லாக்குத் தூக்க நண்டு நடனமாடுது
வான்முகில் பந்தல்போட வண்ண முத்துச்சரம்போலே
(மழையும்)

## உன் எண்ணத்தை...

*படம்: பூமாலை*
*பாடியவர்: டி.எம்.எஸ்.சுசீலா*
*ஆண்டு: 1965*

ஆ: உன் எண்ணத்தை எந்தன் கன்னத்தில் எழுதிவிடு

பெ: என் பெண்மையைக் காக்கும் தன்மைக்கு கொஞ்சம் தவணை கொடு

ஆ: என் இளமையுடன் உன் இளமையைக் கொஞ்சம் பழக விடு

பெ: உன் பெருமையைக் காக்கும் பொறுமைக்கு இன்னும் பயிற்சி கொடு

ஆ: மாம்பழ வாயின் வாசலில் கண்டது குங்குமமா? - இனி
வழங்கிடப்போகும் இன்பங்கள் அங்கே சங்கமமா?

பெ: இரு கோவைக் கனிகளை இயற்கை அன்னை கொடுத்து வைத்தாள் - அதை
கொண்டவள் கணவனின் தாகம் தணிந்திட எடுத்து வந்தாள்!

(உன்)

ஆ: சிட்டெனப் பறந்து செந்தமிழ் பொழிந்து பழகுகிறாய் - நான்
தொட்டதும் கை பட்டதும் ஏனோ விலகுகிறாய்?

பெ: உன் கண்படும்போது என்மனம் ஆசையில் துடிக்கிறது!
நீ கைதொடும் போது பெண்மனம் ஏனோ தடுக்கிறது!

(உன் எண்ணத்தை)

## ஏழைக்கும் வாழ்வுக்கும்...

*படம்: திலகம்*
*பாடியோர்:*
*இசை: ஆர்.சுதர்சனம்*
*ஆண்டு: 1960*

பெ: ஏழைக்கும் வாழ்வுக்கும் வெகுதூரமா? - பணம்

இல்லார் என்றாலே இளக்காரமா?

ஆ: சூழும் வாழ்வின் கரையோரமா - எம்மை
தூக்கி எறிவது முறையாகுமா? (ஏழை)

பெ: பணம் இருப்பவர்க்கே இன்பம் சொந்தமா?
இளங்காதல் வளராமல் போகுமா?

ஆ: இருவரும் பிரிவது நீதியோ - பாரில்
எளியோர்கள் வாழ்வது எந்தத் தேதியோ? (ஏழை)

பெ: குலையோடு பழுத்த மலைவாழை போன்ற
குடும்பம் அலைமோதிச் சிதறியதே!

ஆ: மலைப்பாம்பும் பொல்லா வல்லூறும்
என்னை வாழ முடியாது விரட்டியதே! (ஏழை)

பெ: ஏழ்மையை இறைவா நீக்கிவிடு - இல்லை
எங்களின் உயிரைப் போக்கிவிடு

ஆ: ஏய்க்கும் வலியோரைத் தூக்கிலிடு இன்றே
இன்பமாய் எங்களை வாழவிடு!

## நித்தம் நித்தம் மனது...

*படம்: நல்லவன் வாழ்வான்*
*இசை : டி.ஆர்.பாப்பா*
*ஆண்டு: 1961*

நித்தம் நித்தம் மனது சித்தரித்த கனவு
நிறைவேற போகுதடி நாளை
நெடுந்தூரம் இல்லை அந்தவேளை

முத்திரை இடாத இன்னும்
மற்றவர் தொடாத இளம்
மொட்டு கைபடாத எந்தன் அங்கம் - இதை
முற்றுகை இடுவாரந்த சிங்கம் - வரும்
சித்திரையில் உறவை குத்தகை எடுத்து புது
சிங்கார இல்வாழ்வு தொடங்கும் - குழந்தை
செல்வமெனும் பேறொடு விளங்கும்.

பொங்கும் புனலோடை
முல்லைமலர் மேடை
போலே மணக்கும் இனி வாழ்க்கை - அதற்கு
பொருந்த இருக்கும் எங்கள் சேர்க்கை - அங்கு
திங்களொளி பாயும் தேன்குடமும் சாயும்
சிந்தையெல்லாம் இன்பம்தனில் தோயும் கரும்பாய்
தித்திக்கும் எங்களிருவாயும்

## கண்டது ஒன்று...

*படம்: சீமான் பெற்ற செல்வங்கள்*
*பாடியவர்: சீர்காழி*
*இசை: டி.ஆர்.பாப்பா*
*ஆண்டு: 1962*

கண்டது ஒன்று கேட்டது ஒன்று
கதையும் வேறொன்று - இரு
கண்களும் காதும் ஆடிய நாடகம்
கவலையில் முடிந்தது இன்று!

கண்டவர் போதனை என்னும்
நஞ்சு கலந்தது ரத்தத்திலே - அதனால்
உண்மையும் பொய்யாய் உருவம் கொண்டது
அவனது நெஞ்சத்திலே (கண்ட)

காலம் வந்தது இலையும் உதிர்ந்தது
காற்றின்மேல் பழி நேர்ந்ததே
காகம் நகர்ந்தது கனியும் வீழ்ந்தது
காரணம் அதுவென்றானதே! (கண்ட)

சந்தேகம் கொண்ட தந்தையின் பார்வையில்
மகனும் வேறானான் அதனால்
பந்தமிகுந்த அண்ணனும் தம்பியும்
பார் இரு கூறானார்.

## அன்பே உன் பெயர்...

*படம்: படித்த மனைவி*
*பாடியவர்: டி.எம்.எஸ்*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு: 1965*

அன்பே உன்பெயர் அன்னை
அழகே உன் பெயர் மங்கை
அறிவே உன் பெயர் தலைவி
இந்த அமைப்பே எந்தன் மனைவி (அன்பே)

பொன்மகள் தந்த முகம் கொண்டாய்
பூமகள் வாழும் எழில் கொண்டாய்
குலமகளே பயம் நீ ஏன் கொண்டாய் (அன்பே)

ஏவல் செய்வதில் பணிமகள் நீ
ஏற்றம் செய்வதில் மந்திரி நீ
அழகுச்சிலை நீ மஞ்சத்திலே பேசிப்
பழகும் தமிழ்நீ இன்பத்திலே (அன்பே)

படித்த பெண்ணை மணப்பதற்கும்
பயப்படுவார் அஞ்சி ஓடிடுவார் உன்
பண்பையும் அறிவையும் பார்த்தால் அவர்கள்
படித்த பெண்ணையே தேடிடுவார்! (அன்பே)

## அல்லி மகள்...

*படம்: கடவுள் தந்த செல்வம்*
*பாடியவர்: பானுமதி*
*இசை: சங்கர் - கணேஷ்*

அல்லி மகள் மெல்ல வந்தாள்
மல்லிகை முல்லை சூடி நின்றாள்
நில்லென்றது மனம் சொல்லென்றது

நினைந்து நினைந்து நாணுகின்றாள்
அத்தான் முத்தை தந்தான் என்றாள் (அல்லி)

மலரும்போது ஒரு திருநாள்
மணக்கும்போது மறு திருநாள்
பேறாகும் நாள் பெண் தாயாகும் நாள்
பெண்மைக்கு வாழ்வில் மூன்று நன்னாள்
அந்நாள் எந்நாள் இன்னாள் பொன்னாள் (அல்லி)

அன்று செல்வி நேற்று கன்னி
இன்று மனைவி நாளை அன்னை
நான்கானது பெண்மை பாங்கானது
நாளை நமது செல்வன் வந்தால்
நம்மை அம்மா வாவா என்பான் (அல்லி)

# கு.மா.பாலசுப்பிரமணியம்

தஞ்சை மாவட்டத்தில் அமைந்த திருவாரூர் மருங்கே உள்ள வேருக்குடி கிராமத்தில் 1920 இல் பிறந்தவர் கவிஞர் கு.மா.பா.

தமது 22 ஆம் வயதிலேயே கவிதைகள், கதைகள், கட்டுரைகள், எழுதும் ஆற்றலில் முழுமை பெற்றவரானார்.

'தமிழர் தந்தை' ஆதித்தனார் நடத்திய 'தமிழன்' பத்திரிகையில் உதவி ஆசியராகவும் கொழும்பில் இருந்து வெளிவந்து ஈழமெங்கணும் பிரசித்தி பெற்ற 'வீரகேசரி' பத்திரிகையில் துணை ஆசிரியராகவும் பணியாற்றி பத்திரிகைத் துறையில் போதிய அனுபவத்தைப் பெற்றார். பின்னர் புதுக் கோட்டை சமஸ்தானம் இராயவரத்தில் 'தமிழ்க் குரல்' எனும் பேரில் தாமே சொந்தமாக ஒரு பத்திரிகையை ஆரம்பித்து நடாத்தினார்.

கு.மா.பா. தமது கவிதையாற்றல் காரணமாகப் பாவேந்தர் பாரதிதா சன், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை போன்றோரின் பாராட்டுக ளைப் பெற்றார்.

1950 இல் ஏ.வி.எம். நிறுவனம் தயாரித்த 'ஓர் இரவு' படத்தில் துணை இயக்குநர்களில் ஒருவராகப் பணியாற்றியதோடு அப்படத்தில் சில பாடல் களைத் திறனுறத் தீட்டித் திரைப்படப் பாடலாசிரியராக அரும்பினார்.

கவிஞர் கு.மா.பா. திரைப்படப் பாடல்களைப் பொறுத்தவரை கவி ஞர் கே.பி.காமாட்சியைக் குருவாக வரித்துக் கொண்டவர்.

இவர் திரைப்படப் பாடல்கள் எளிமையாகவும், இலக்கிய நயத் தோடும் மின்னுகின்றன.

''ஓர் இரவு'' படத்தில் இவரெழுதிய

''புவிமீது மானமுடன் உயிர்வாழ
வழியேதும் இல்லையே!''

என்று தொடங்கும் பாடலில்,

''பெண்ணாகப் பிறந்தாலே - வாழ்வில்
எந்நாளும் துயர்தானே - உன்
ஆசைக் கனவெல்லாம்
மண்ணாகிப் போனதே''.

என்னும் வரிகளை உணர்ச்சித் துடிப்போடு அமைத்துள்ளார் இவர்.

இந்த வரிகளால் ஈர்க்கப்பட்ட கண்ணதாசன் தமது 'தென்றல்' பத்திரிகையில் தொடராக எழுதிய 'வேலங்குடி திருவிழா' நாவலின் அத்தியாயமொன்றினுக்குத் தொடக்கமாக இதனைப் பயன்படுத்தியுள்ளார்.

(ஆதாரம்: தென்றல் 22.10.55 இதழ்)

கு.மா.பா. 'இன்ஸ்பெக்டர்' படத்திற்காக

''மூடியிருந்த என் விழியினுள் வந்தொரு
மோகனக் கள்வன் விளையாடினான் - மையல்
மூட்டிடும் மோன இசை பாடினான்''

என்று நயமோங்க எழுதியுள்ளார்.

'கோமதியின் காதலனு'க்காக,

''வானமீதில் நீந்தியோடும் வெண்ணிலாவே - நீதான்
வந்ததேனோ ஜன்னலுக்குள் வெண்ணிலாவே

என்றெழுதிய கவிஞர்,

''வட்டமான உன்முகத்தில் வெண்ணிலாவே - இரண்டு
வண்டுகள் சுழல்வதேனோ வெண்ணிலாவே''

என்று இலக்கியச் செறிவோடு ஈற்றடிகளை அமைத்துள்ளார்.

கவிஞருக்கு மிகமிகப் பிரபலம் தந்த பாடல்களில் ஒன்று 'தங்கமலை ரகசியம்' படத்தில் இடம்பெற்ற,

''அமுதைப் பொழியும் நிலவே''

என்ற பாடலாகும். அப்பாடலில்,

''இதயம் மேவிய காதலினாலே
ஏங்கிடும் அல்லியைப் பாராய்!
இனிமை நினைவும் இளமைக் கனவும்
கனவாய் கதையாய் முடியுமுன்னே
அருகில் வராதது ஏனோ
அருகில் வராதது ஏனோ''

என்றமைந்த வரிகளில் இதயம் ஈர்க்கும் கவிநயம் சுடர் வீசுகிறதல்லவா?

'கோமதியின் காதலன்' படத்தில்

தலைவி,

''அன்பே என் ஆரமுதே வாராய்'

என்று பாட தலைவன்,

''தென்றல் அலை மீதினிலே திங்கள் பிறைத் தோணியிலே
தேன்மொழியுனை அழைத்தே செல்வேனே''

என்று பாட, மீண்டும் தலைவி,

''வெண்ணிலவுக் கிண்ணியிலே என்னி தயக்காதலையே!
உண்ணும் மதுவாய் நினைத்தே தருவேனே''

என்று பாடுகிறாள்.

இது ஒரு திரைப்படப் பாடல் மட்டுமா? இலக்கியம்! இலக்கியம்!!

'உத்தம புத்திரன்' படத்தில் மிகவும் பிரபலம் பெற்ற,

**''யாரடி நீ மோகினி
கூறடி என் கண்மணி''**

என்ற 'குளுகுளு' பாடல் கு.மா.பா. எழுதியதுதான்.

அப்பாடலில்,

**''திராட்சையின் தேன் சாரடி!
மோட்சமே நீதானடி!
மீறுகின்ற போதை ஏறுகின்ற போதே
மேலும் மேலும் நீ ஊற்றடி''**

என்ற வரிகளும்

**''மன்மதா நீ ஓடிவா**

அன்புடன் சீராடி வா
மின்னல் போலே துள்ளி
உந்தன் நெஞ்சை அள்ளி
இன்பவல்லி நான் ஆடவா''

என்ற வரிகளும் நமக்கும் தமிழ்ப் போதையை ஏற்றுகின்றதல்லவா?

'அம்பிகாபதி' படத்தில் இடம் பெற்ற,

''மாசிலா நிலவே''

சித்ராங்கியில் இடம் பெற்ற,

''நெஞ்சினிலே நினைவு முகம்''

போன்ற இனிய பாடல்களையும் யாத்தவர் நம் கு.மா.பா.வே ஆவார்.

''சபாஷ் மீனா'' படத்தில்,

''சித்திரம் பேசுதடி - எந்தன்
சிந்தை மயங்குதடி!
முத்துச் சரங்களைப் போல்
மோகனப் புன்னகை மின்னுதடி''

என்று மென்தமிழில் மேன்மையான பாச்சித்திரம் தீட்டும் கு.மா.பா.,

''காதல் நிலாவினிலே - இன்ப
கானம் இசைத்திருந்தோம்!
கண்கட்டு வித்தையைப் போல் - அந்தக்
காட்சி மறைந்ததடி!

என்ற வரிகளால் நேயர்களின் உயிர்களை முத்தமிடுகிறார்.

'சபாஷ் மீனா'வில்,

''காணா இன்பம் கனிந்ததேனோ
காதல் திருமண ஊர்வலம் தானோ
வானம் சிந்தும் மாமழை எல்லாம்
வானோர் சிந்தும் தேன் மலரோ?''

என்ற வரிகளில் தான் எத்துணை வசீகரம்!

'கணவனே கண்கண்ட தெய்வம்' படத்தில் இடம் பெற்று மிகவும் பிரபலம் பெற்ற,

''உன்னைக் கண் தேடுதே''

'கொஞ்சும் சலங்கை' படத்திலுள்ள,

''சிங்கார வேலனே தேவா''

'கட்ட பொம்மன்' படத்திலுள்ள,

''இன்பம் பொங்கும் வெண்ணிலா வீசுதே''

போன்ற பல அருமையான பாடல்களை வடித்த கவிஞர் கு.மா.பா. விளம்பரங்களை விழையாது அமைதியாக வாழ்ந்து வருகிறார்.

இனி கவிஞரின் பாடல்கள் சிலவற்றை முழுமையாகப் பார்த்து ஆனந்தமுறுங்கள்.

## பெண்ணாகப் பிறந்தாலே...

*படம்: ஓர் இரவு*
*பாடியவர்:*
*இசை: சுதர்சனம்*
*ஆண்டு: 1951*

புவிமேல் மானமுடன் உயிர்வாழ
வழியேதும் இல்லையே!

பெண்ணாகப் பிறந்தாலே - வாழ்வில்
எந்நாளும் துயர்தானே! - உன்
ஆசைக் கனவெல்லாம்
மண்ணாகிப் போனதே!

கண்ணிருந்தும் நீ வழிதடுமாறி
பெண்மை மறந்தாயே!
காதலெனும் பெரும் போதையினாலே
வேதனை அடைந்தாயே! (பெண்)

## வானமீதில்...

*படம்: கோமதியின் காதலன்*
*பாடியவர்: சீர்காழி கோவிந்தராஜன்*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு: 1955*

வானமீதில் நீந்தியோடும் வெண்ணிலாவே - நீதான்
வந்ததேனோ ஜன்னலுக்குள் வெண்ணிலாவே!
நானுமுன்னைப் பார்த்துவிட்டால் வெண்ணிலாவே - முகம்
நாணி மறைவதேனோ வெண்ணிலாவே!

பட்டப் பகலில் ஜோதி வீசும் வெண்ணிலாவே - உன்னைப்
பார்ப்பதுமோர் விந்தையன்றோ வெண்ணிலாவே!
வட்டமான உன்முகத்தில் வெண்ணிலாவே - இரண்டு
வண்டுகள் சுழல்வதேனோ வெண்ணிலாவே!

## அன்பே என் ஆரமுதே...

*படம்: கோமதியின் காதலன்*
*பாடியவர்கள்: சீர்காழி - ஜிக்கி*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு: 1955*

பெ: அன்பே என் ஆரமுதே, வாராய்!

ஆ: தென்றல் அலை மீதினிலே திங்கள் பிறைத் தோணியிலே
தேன்மொழியுனை அழைத்தே செல்வேனே!

பெ: வெண்ணிலவுக் கிண்ணியிலே என்னிதயக் காதலையே
உண்ணும் மதுவாய் நினைத்தே தருவேனே! (அன்பே)

ஆ: வண்ணமிகு வானவில்லை பொன்னுடையாய் முடித்தே
வல்லியுனக்கே பரிசு தருவேனே!

பெ: மின்னல் ஒளிக்கோடுகளால் மேகமெனும் வெண் திரையில்
உன்னழகை ஓவியமாய் வரைவேனே!

ஆ: விண்ணின் மழைத் தாரைகளை வீணை நரம்பாக்கி அதில்
இன்னொளியை மீட்டி இசை பொழிவேனே! (அன்பே)

## யாரடி நீ மோகினி...

படம்: உத்தம புத்திரன்
பாடியோர்: டி.எம்.எஸ். -
ஜிக்கி, கோமளா, ஜமுனா ராணி
இசை: ஜி.ராமநாதன்
ஆண்டு: 1958

ஆ: யாரடி நீ மோகினி?
கூறடி என் கண்மணி
ஆசையுள்ள ராணி
அஞ்சிடாமலே நீ
ஆட ஓடிவா காமினி!

பெ: விந்தையான வேந்தனே
வீராவேசம் ஆகுமா?
வேங்கை போலே பாயணுமா?
சந்தோஷமா? கோபமா? - நான்
சொந்தங் கொண்டாடி ஆடிப்பாடி
கொஞ்சவே நெஞ்சம் அஞ்சுதே!

ஆ: திராட்சையின் தேன் சாரடி!
மோட்சமே நீதானடி!
மீறுகின்ற போதை ஏறுகின்ற போதே
மேலும் மேலும் நீ ஊற்றடி

பெ2: தேன் வேணுமா...? நான் வேணுமா
தீராக் காதல் மாறுமா

தேவ கானமே பாடி
ஆவல் தீரவே ஆடி
பேரின்பந்தான் காண்போம்
வா மன்னவா! (தேன்)

பெ3: மன்மதா நீ ஓடிவா
அன்புடன் சீராடி வா
மின்னல் போலே துள்ளி
உந்தன் நெஞ்சை அள்ளி
இன்ப வல்லி நான் சூடவா
ஒண்ணும் ஒண்ணும் ரெண்டு
உன்மேல் ஆசை கொண்டு
ரெண்டும் மூணும் அஞ்சு
என்னை நீயும் கொஞ்சு
ı ன்னாதி மன்னா
சின்னக் கன்னி
எந்தன் உள்ளம்
மயக்கும் மதுக்கிண்ணமே!
கண்ணால் என்னைக் கண்டாலே
உந்தன் உள்ளம் துள்ளும்!
தன்னாலே போதை கொள்ளுமே!

பெ3: அன்பே! என் அன்பே!
என் அன்பே வா
என் அன்பே நீ வா!
பண்பாடும் என் அன்பே நீவா!
நானும் நீயும் நல்ல ஜோடி
தேனும் பாலும் போல கூடி
நேசமாகப் பாடிப்பாடி
ஆசையாக ஆடிஆடி
காதலாலே போதை ஏறி
பாதைமாறி வாழவே
ஓடிநீ இங்கு வா
பாபமேது? புண்யமேது?
லாபமேது? நஷ்டமேது?
நானுமேது? நீயுமேது?

ஆணுமேது? பெண்ணுமேது?
உண்மை ஏது? பொய்யுமேது?
நன்மை ஏது? தீமை ஏது? - தன்
மானம் ஏது? ஈனம் ஏது?
தானம் ஏது? தர்மம் ஏது?
மாரா, தீரா, வீரா நீயே வாராய்! (அன்பே)

## மாசிலா நிலவே...

*படம்: அம்பிகாபதி*
*பாடியோர்: டி.எம்.எஸ். - பானுமதி*
*இசை: ஜி.ராமநாதன்*
*ஆண்டு : 1957*

ஆ: மாசிலா நிலவே நம் காதலை மகிழ்வோடு
மாநிலம் கொண்டாடுதே - கண்ணே

பெ: பேசவும் அரிதான பிரேமையின் திறம்கண்டு
பேதங்கள் பறந்தோடுதே - கண்ணா

ஆ: சீருடன் வான்மீதில் தாரகை பலகோடி
தீபமாய் ஒளிவீசுதே - கண்ணே

பெ: மாருதம் தனிலாடும் மாந்தளிர் கரம் நீட்டி
மௌனமாய் நம்மை வாழ்த்துதே!

ஆ: அன்பே

பெ: இன்பம்

ஆ: எங்கே?

பெ: இங்கே!

ஆ: மாறாத பேரின்ப நீராடுவோம்

பெ: நீரோடு நீர்போல - நாம் கூடுவோம்

ஆ: நீந்தும் அலையின்மீது நிலவின் - தண்ணொளி விளையாடுதே!

பெ: தேன் துளிகளை ஏந்தும் மலரும் தென்றலும் உறவாடுதே!

ஆ: உந்தன் மீன்விழிகளைக் காணும்நதியின் மீன்களும் துள்ளிவி
ளையாடுதே!

பெ: ஆணெழில் முகம் வான் மதியென அல்லியும் உமை நாடுதே!

## காணா இன்பம்...

*படம்: சபாஷ் மீனா*
*பாடியவர்கள்: டி.ஏ.மோதி - பி.சுசீலா*
*ஆண்டு: 1958*

ஆ: காணா இன்பம் கனிந்ததேனோ
காதல் திருமண ஊர்வலம் தானோ
வானம் சிந்தும் மாமழை யெல்லாம்
வானோர் தூவும் தேன் மலரோ?

பெ: மேகம் யாவும் பேரொலியோடு
மேளம் போலே முழங்குவதாலே (காணா)

ஆ: கன்னல் மொழியே மின்னல் எல்லாம்
விண்ணில் வாண வேடிக்கையோ? (காணா)

பெ: மண்ணில் பெருகும் வெள்ளம் போலே
மனதில் பொங்கும் பிரேமையினாலே (காணா)

## சித்திரம் பேசுதடி...

*படம்: சபாஷ் மீனா*
*பாடியவர்: சூலமங்கலம் ராஜலட்சுமி*
*இசை: டி.ஜி.லிங்கப்பா*
*ஆண்டு: 1958*

சித்திரம் பேசுதடி - எந்தன்
சிந்தை மயங்குதடி!
முத்துச் சரங்களைப்போல்
மோகனப் புன்னகை மின்னுதடி! (சித்திரம்)

காதல் நிலாவினிலே - இன்ப
கானம் இசைத்திருந்தோம்!
கண்கட்டு வித்தையைப் போல் - அந்தக்

காட்சி மறைந்ததடி!
அன்பென்னும் ஓடையிலே - நான்
ஆடி மகிழ்ந்திருந்தேன்!
எண்ணம் குலைந்ததினாலே - வெறும்
ஏமாற்றம் ஆனதடி! (சித்திரம்)

## மூடியிருந்த என் விழியினுள்...

*படம்: இன்ஸ்பெக்டர்*
*பாடியவர்:*
*இசை:*
*ஆண்டு: 1953*

மூடியிருந்த என் விழியினுள் வந்தொரு
மோகனக் கள்வன் விளையாடினான் - மையல்
மூட்டிடும் மோன இசை பாடினான! (மூடி)
ஈடிணையில்லாத ஜாலத்தினால் - வெறும்
இன்பக் க்னவாக மறைந்தோடினான் - எல்லாம்
வேடிக்கையாகவே கேளிக்கை காட்டியே
பேதை என் நெஞ்சம் கவர்ந்தோடினான் (மூடி)
வானவில்·போலே மறைந்தவன் மீண்டுமென்
வாழ்வினில் ஒளிவீச வாரானோ?
தேனிருந்தும் வண்டு தீண்டா மலராய் - தினம்
வாடி மெலிவேனோ? ஏக்கம்
தீராமலே என்றும் நலிவேனோ (மூடி)

# குயிலன்

கவிஞர் குயிலன் 'வழிப்போக்கன்', 'நனவாக வேண்டிய கனவு' போன்ற தரமான மரபுக் கவிதை நூல்களை எழுதியவர்.

பிரெஞ்சு எழுத்தாளர் எமிலி ஜோலாவின் நாவலொன்றைத் 'தெரெசா' என்ற பெயரிலும், மலையாள இலக்கிய மேதை பாரபுரத்து எழுதிய மலையாள நாவலொன்றை ''இரத்தக் கறை படிந்த அடிச்சுவடுகள்'' என்ற பெயரிலும் மிக அருமையாக மொழி பெயர்த்தவர்

இவர் பல திரைப்படங்களில் அருமையான பாடல்களை எழுதியுள்ளார். அதிகமாகப் பணியாற்றியது மொழிமாற்றுப் படங்களில்தான். அத்தகைய படங்களில் கூட தமது முத்திரையைப் பதித்துப் பாடல்கள் எழுதியுள்ளார்.

'எல்லாம் இன்பமயம்' படத்தில்,

**''உலகே சமாதான ஆலயமாம்**
**உயிர் யாவும் ஒன்றெனும் எண்ணமே கொண்டால் - இந்த**
**உலகே சமாதான ஆலயமாம்''**

என்று அருமையாக எழுதும் கவிஞர் தொடர்ந்து,

**''கொலையேது போரேது குண்டுகள் தானேது?**
**கூடிக்கெ டுக்கும் வஞ்சகக் கேடுகள் கிடையாது''**

என்று சமாதானம் பற்றி ஆனந்தக் கனவு காண்கிறார்.

உண்மைதானே ''சமாதானம் செய்கிறவர்கள் பாக்கியவான்கள்'' என்கிறாரே இயேசு கிறிஸ்து.

இன்று உலகநாடுகளில் அன்பில்லை; அமைதியில்லை; சாந்தி இல்லை சமாதானம் இல்லை; யுத்த வெறியும், வஞ்சனைப் போக்குகளும் தானே மலிந்திருக்கிறது!

கவிஞர் குயிலன் இதனை சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் எழுதினார்.

அது இன்றும் பொருந்தக் கூடிய சிந்தனையாகத்தான் இருக்கிறது அல்லவா?

இதே படத்திற்காக இக்கவிஞர்,

"எல்லாம் இன்பமயம் புவியினிலே
நல்ல குணம் செழித்து நாடு வளங்கொழித்து
பல்கும் தொழில் வளர்த்துப் பாடுபட்டாலே"

என்று சிறந்த தேசீய சிந்தனையோடு ஒரு பாடல் யாத்துள்ளார்.

மேலும் இப்பாடலில்,

"அன்பினில் உலகாளலாம் எந்நாளும்
அமைதியினில் நலங்காணலாம் எல்லோரும்"

என்று அன்பின் பெருமையையும், அமைதியின் அருமையையும் வலியுறுத்தும் கவிஞர்,

"இல்லார் இருப்பவர் என்றிடும் பேதம்
இலையெனச் செய்தால் சமமுயர்ந்தோங்கும்"

என முற்போக்கு முழக்கமிடுகிறார்!

வறுமையின் கொடுமையைப் பற்றி இக்கவிஞர் 'சந்தானம்' படத்தில்

"புவிமீதிலே பணமில்லா மனிதரானால்
இதுதானடா சேதி
இங்கேதடா நீதி?
பாரடா! பாரடா"

என்று அருமையாக பாடலை ஆரம்பித்து,

"வறுமை கண்டே உதவி செய்வார்
உலகிலே யாரடா?
கொடுமை கண்டே வாயைமூடிக்
கொள்கின்ற மனித ஜாதி"

என்று ஆவேசமாகச் சொல்கிறார்.

வறுமைபட்ட கோடானு கோடி மக்கள் சார்பாக,

''முடிவே இல்லையோ ஏழைவாழ்வு
இருளில் மூழ்கிப் போகுமோ?
விடிவு காலம் இவர்கள் காணப்
போகின்றதே எந்த நாளோ?

என சோகத்தோடு குரல் கொடுக்கிறார் கவிஞர்

'சந்தானம்' படத்திற்காக,

''மனமகிழ்வுடன் புதுவாழ்வினில் நாமே''

எனத் தொடங்கும் காதல் பாடல் ஒன்றையும் இவரெழுதியுள்ளார். இப்பாடலில்

''சந்தோசமேதான் சங்கீதமாக
பொங்கிப் பொழிகின்ற மகிழ்ச்சி வேளை
மதிஒளி கண்டே மோகமதானேன்
மனமகிழ் நல்நேரமிதானே''

என்று காதலனுபவத்தை மிக இனிமையாகக்கவிஞர் கூறுகிறார்.

'நகரத்தில் ஜிம்போ' படத்திற்காக,

''மோகம் பிறந்திடாதா?
இன்பம் சுரந்திடாதா?
கேளாமல் கேட்டிடும்
காதல் பாட்டில் சுதி
மீட்டி வந்த இரவில்''

என்று நயமாக எழுதியுள்ளார் கவிஞர்.

இப்பாடலில், உள்ள

''மனதை துளைக்க வந்தே
மலரை சுவைத்த தென்றல்
இமையோடு கண்கள் சண்டை
இடச்செய்தல் என்ன இன்றே?''

என்ற அடிகளும் சிறப்பாக அமைந்துள்ளதல்லவா?

'எங்கள் செல்வி' படத்தில் இடம்பெற்ற,

''சிலசில ஆண்டுகள் முன்னம்
பலரும் போற்றும் வண்ணம்

சேர்ந்து வாழ்ந்ததே இரண்டன்னம்''

என்று அநியாய சந்தேகத்தால் பிரிந்துபோன இளந் தம்பதி பற்றிய அ( மையான பாடலும் இக்கவிஞரெழுதியதேயாகும்.

தரமான கவிதை நூல்களையும், பிற இலக்கியப் படைப்புகளையு நூல்களாக வெளியிட்ட குயிலன் திரைப்படப் பாடல்களிலும் தனது த தியை தகுந்த முறையில் இனங் காட்டியவர்.

இவரோடு உரையாடி பலமுறை நான் மகிழ்ந்திருக்கிறேன்.

கவிஞர் இப்போது திரைப்பட உலகிலிருந்து தாமே 'துறவு' பூண்( மானாமதுரையில் வாழ்ந்து வருகிறார்.

இவர்தம் இனிய பாடல்கள் சிலவற்றை முழுமையாகச் சுவைத்து பாருங்கள்.

## உலகே சமாதான...

*படம்: எல்லாம் இன்பமயம் ஆண்டு : 1955*
*பாடியவர் : பி.லீலா*
*இசை: கண்டசாலா*

உலகே சமாதான ஆலயமாம்
உயிர்யாவும் ஒன்றெனும் எண்ணமே கொண்டால் - இந்த
(உலகே)
கொலையேது? போரேது? குண்டுகள் தானேது?
கூடிக்கெடுக்கும் வஞ்சகக் கேடுகள் கிடையாது
(உலகே)
கலையோங்கும் மொழியோங்கும் காவியம் ஓங்கும்
கைத்தொழில் மேலோங்கிச் செல்வமே தேங்கும்!
தலைமீதுகதிரேந்தும் நன்செய்கள் வளமோங்கி
தானியம் மிகுத்தந்து பூமியில் பசிநீங்கும்
தேனூறும் மணமலர்மிகு பூஞ்சோலை
தனில் ஒயில்மயில் நின்றாடும்!
தேசங்கள் இன்பங்கள் பொங்கிடும் எழிலோடு
(உலகே)

## எல்லாம் இன்பமயம்...

*படம்: எல்லாம் இன்பமயம் ஆண்டு : 1955*
*பாடியவர்: கண்டசாலா*
*இசை: கண்டசாலா*

எல்லாம் இன்பமயம் புவியினிலே (எல்லாம்)

நல்லகுணம் செழித்து நாடுவளங் கொழித்து
பல்கும் தொழில் வளர்த்துப் பாடுபட்டாலே (எல்லாம்)

அன்பினில் உலகாளலாம் எந்நாளும்
அமைதியினில் நலங்காணலாம் எல்லோரும்
இல்லார் இருப்பவர் என்றிடும் பேதம்
இலையெனச் செய்தால் சமமுயர்ந்தோங்கும்
(எல்லாம்)

## புவி மீதிலே...

*படம்: சந்தானம்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: தட்சிணாமூர்த்தி*

புவிமீதிலே பணமில்லா மனிதரானால்
இதுதானடா சேதி
இங்கேதடா நீதி?
பாரடா! பாரடா!

வறுமை கண்டே உதவிசெய்வார்
உலகிலே யாரடா?
கொடுமை கண்டே வாயை மூடிக்
கொள்கின்ற மனித ஜாதி
முடிவே இல்லையோ ஏழை வாழ்வு
இருளில் மூழ்கிப் போகுமோ?
விடிவு காலம் இவர்கள் காணப்
போகின்றதே எந்த நாளோ? (புவி)

## மனமகிழ்வுடன்...

*படம்: சந்தானம்*
*பாடியோர்: ஏ.எம்.ராஜா, ஜமுனா ராணி*
*இசை: தட்சிணா மூர்த்தி.*

அவள்: மனமகிழ்வுடன் புதுவாழ்வினில் நாமே
இன்பந்தனைத் தேடி வாழ்ந்திடவே
ஆசி பெறுவோமே!

சந்தோசமேதான் சங்கீதமாக
பொங்கிப் பொழிகின்ற மகிழ்ச்சிவேளை
மதிஒளி கண்டே மோகமதானேன்
மனமகிழும் நல் நேரமிதானே

அவன்: பரவச மெய்தி பிரியமதானேன்
மனஇருள் மாறிட வந்தொளி தாராய்

அவள்: என்சிறு நினைவுதானென்றும் தேவன் உன்கோயில்
சிந்தனை மேலோர் ஒளிவரும் உன்னாலே
காதலினாலே இன்புறவே நான்
கருணை தன்னைக் காண்பதெப்போது? - நின்
கருணைதன்னைக் காண்பதெப்போது?

அவன்: என் ஆனந்தம் என் ஆவேசம்
நீயல்லா திங்கே யாரையுங்காணேன்!

அவள்: அநுராகம் இதோ நவயோகம் இதோ!
மனதில் மகிழ்வே அடைகின்றேனே!

## மோகம் பிறந்திடாதா...

*படம: நகரத்தில் ஜிம்போ*
*பாடியோர்: ஜமுராணி குழுவினர்*

மோகம் பிறந்திடாதா?
இன்பம் சுரந்திடாதா?
கேளாமல் கேட்டிடும்

காதல் பாட்டில் சுதி
மீட்டி வந்த இரவில் (மோகம்)

இன்பநீள் கரங்களாலே
எமைத்தீண்டி மையலாகி
நெஞ்சில் காதல் போதை ஏற்றி
கொஞ்ச ஆசைதானே காட்டி
ஒருபாட்டிலே யாரையே
ஏங்கவைக்கும் இரவில் (மோ

மனத்தை துளைக்க வந்தே
மலரை சுவைத்த தென்றல்
இமையோடு கண்கள் சண்டை
இடச்செய்தல் என்ன இன்றே
இருள்கோட்டையில் ஆட்சி செய்
இந்த நல்ல இரவில் (மோகம

# அண்ணல் தங்கோ

கவிஞர் அண்ணல் தங்கோ இலக்கியங்களைக் கற்றறிந்தவர். ஆழ்ந்த கவிப்புலமை மிக்கவர்.

பராசக்தி, பசியின் கொடுமை, பெற்றமனம், கோமதியின் காதலன் போன்ற மிகச்சில படங்களில் சில பாடல்களை பாங்கோடு எழுதியவர்.

பராசக்தி படத்தில்,

''எல்லோரும் வாழ வேண்டும் - உயிர்கள்
இன்புற்றிருக்க வேண்டும்''

என்று பரந்த சிந்தனைப் போக்கோடு பாடலை ஆரம்பித்து.

''கல்லாதார் என்றொருவர் நம்மிடையே
இல்லாமல் ஆக்க வேண்டும்?''

என வள்ளுவப் பெருமான், சுவாமி விவேகானந்தர் போன்றோரின் சீரிய சிந்தனையை திரைப்பாடலில் பாங்கோடு எடுத்தாளுகிறார்.

''இல்லாதாரை படைத்தான் என்றொருவன்
இருந்தால் அழியட்டுமே''

என்று,

''இரந்தும் உயிர் வாழுதல் வேண்டிற்
பரந்து கெடுக இவ்வுல கியற்றியான்''

என்ற திருக்குறள் ஒன்றின் கருத்தை எளிமையாக எடுத்துச் சொல்கிறார்.

மேலும் இப்பாடலில்,

"இல்லாதார் உள்ளாரென்று - முத்தம்மா
ஏனிந்த வேற்றுமைகள்?"

எனக் கேட்டு சமத்துவ சிந்தனைகளில் தமக்குள்ள ஈடுபாட்டை வெளிப்படுத்துகிறார்.

கவிஞர் அண்ணல் தங்கோ 'பசியின் கொடுமை' படத்திற்கெழுதிய பாடலொன்றில்,

"வேலை தேடியே போயினள் அங்கோ
வேதனைதரும் பசிப்பிணியாலே
கற்பினைக் காக்க தொழில்களை
நீக்கிக் கலங்குகிறாள் பசிப்பிணியாலே
வருந்தி வாடிடும் ஏழையாகியே
மடிகிறாள் பசிப்பிணியாலே"

என்று பசியின் கொடுமை பற்றி எழுச்சியோடும் உருக்கத்தோடும் எழுதியுள்ளார் கவிஞர்.

'கோமதியின் காதலன்' படத்திற்காகக் கவிஞர்,

"தெள்ளித்தரும் தினைமா - முத்தம்மா
தித்திக்கும் நன்மலைத்தேன்
அள்ளித்தரும் சர்க்கரை - கற்கண்டும்
அன்புத் தமிழாமோ?"

என்று தண்டமிழ்ப் பெருமையை எழிலோடு சொல்கிறார். இதே பாடலில்,

"முத்தெடுத்த தமிழர் - முத்தம்மா
மூடர்களாவாரோ?
முத்தளித்த கடலை - பகைவர்கள்
முற்றுகை போடுவதோ?"

என்று வீரத்தமிழர்கள் சார்பில் எழுச்சி முரசு கொட்டுகிறார்.

இனி அண்ணல் தங்கோ யாத்த மூன்று பாடல்களை கண்டு மகிழுங்கள்.

## எல்லோரும் வாழவேண்டும்...

*படம்: பராசக்தி*
*பாடியவர்:*
*இசை: சுதர்சனம்*
*ஆண்டு : 1952*

எல்லோரும் வாழவேண்டும் - உயிர்கள்
இன்புற்றிருக்க வேண்டும்
நல்லோர்கள் எண்ணமிது - முத்தம்மா
நல்லற வாழ்வுமிதே (எல்லோரும்)

கல்லாதார் என்றொருவர் - நம்மிடையே
இல்லாமல் ஆக்க வேண்டும்
கொல்லாமை போற்ற வேண்டும் - மனிதர்கள்
கூட்டுறவாக வேண்டும்.

இல்லாதாரைப் படைத்தான் என்றொருவன்
இருந்தால் அழியட்டுமே!
இல்லார்கள் உள்ளாரென்று - முத்தம்மா
ஏனிந்த வேற்றுமைகள்! (எல்லோரும்)

## தாயே பாரில்...

*படம்: பசியின் கொடுமை*

தாயே பாரில் துணை இனியாரே
பாரில் துணை இனியாரே (தாயே)

ஆதரிப்பார் அண்ணன் எனவே நீ
எண்ணியதும் பகற்கனவே (தாயே)

கொஞ்சி அன்பாய் வளர்த்தென்னைக் கரும்
பாலையில் கொடுத்தாயே
அந்தோ நான்படும் துயரமெல்லாம்
வந்து நீ காண்பாயோ?

அம்மா எந்தன் எதிர்காலம் இருள்
அடர்ந்து தோன்றுவதாலே!

## தெள்ளித் தரும்...

படம்: கோமதியின் காதலன்
பாடியவர்: திருச்சி லோகநாதன்
இசை: ஜி.ராமநாதன்
ஆண்டு : 1955

தெள்ளித்தரும் தினைமா - முத்தம்மா
தித்திக்கும் நன்மலைத் தேன்
அள்ளித்தரும் சர்க்கரை - கற்கண்டும்
அன்புத் தமிழாமோ?

சொல்லினிற் தீரன் என்றும் - முத்தம்மா
வில்லினிற் சேரன் என்றும்
சொல்லித் திரிவதல்லால - முத்தம்மா
தொண்டென்ன செய்தோமடி
முத்தெடுத்த தமிழர் - முத்தம்மா
மூடர்கள் ஆவாரோ?
முத்தளித்த கடலை - பகைவர்
முற்றுகை போடுவதோ?

# விந்தன்

மூன்றாம் பாரம் வரை படித்த விந்தன் குடும்ப வறுமை காரணமாக மேற் கொண்டு படிக்க இயலவில்லை.

இவர் முதன்முதல் 'தமிழரசு' பத்திரிகையில் கம்போசிடராகப் பணி யாற்றினார்.

'சுதேச மித்திரன்', 'பாரத தேவி', 'ஆனந்தவிகடன்' போன்ற பத்திரி கைகளிலும் சுமார் பத்து ஆண்டுகள் கம்போசிடராகப் பணியாற்றினார்.

பின்பு ஜெமினி விளம்பர இலாகாவிலும் கொஞ்சக் காலம் பணியாற்றி விட்டு தொடர்ந்து வேலூர் விக்டோரியா பிரஸ்சிலும் பணியாற்றிவிட்டு கல்கி பத்திரிகையில் கம்போசிடராகச் சேர்ந்தார். அங்குதான் விந்தனின் பொற்காலம் அரும்பியது.

விந்தனுடைய இலக்கிய ஆற்றலை இனங்கண்ட 'கல்கி' கிருஷ்ண மூர்த்தி அவரை ஊக்குவித்து எழுத்துத் துறையில் பிரகாசிக்க வழி பண்ணி னார்.

''என்னை ஊக்குவித்து மனிதனாக்கியவர் கல்கி கிருஷ்ண மூர்த்தி'' என்று குறிப்பிட்டுள்ளார். விந்தன்.

மேலுள்ள தகவல்கள் முழுதும் விந்தன் பேசும்பட பத்திரிகைக்கு கொடுத்த பேட் !டியில் இருந்து திரட்டி த தந்துள்ளேன்.

இனி விந்தனின் திரைப்பட வாழ்க்கை பற்றிப் பார்ப்போம்.

முதன்முதலாக 'வாழப் பிறந்தவள்' படத்திற்கு வசனமெழுதி திரைப் பட உலகில் பிரவேசித்தார் விந்தன்.

தொடர்ந்து, அன்பு, கூண்டுக்கிளி போன்ற படங்களுக்கு திரைக்கதை வசனம் எழுதியதோடு சில அருமையான பாடல்களையும் எழுதினார். முதலில் 'அன்பு' படப்பாடலைப் பார்ப்போம்.

**"சுத்தாத இடமில்லே கேட்காத பேரில்லே**
**சோத்துக்கு வழிகாட்ட ஆளில்லே**
**செத்தபின்பு சிவலோகம் செல்ல வழிகாட்டும்**
**பித்தர்கள் ஏனிந்த நாட்டிலே"**

என்று ஆவேசத்தோடு பாடலை ஆரம்பிக்கிறார் விந்தன். பசியின் கொடுமை எத்தகையது என்பதனை தமது சொந்த வாழ்க்கையில் அனுபவித்தவர் என்பதால் இயல்பான சிந்தனை வருகிறது இவருக்கு.

மேலும் இப்பாடலில்,

**"ஒண்ணும் புரியவில்லை தம்பி - எனக்கு**
**ஒண்ணும் புரியவில்லை தம்பி**
**கண்ணு ரெண்டும் சுத்துது காதை அடைக்குது**
**கஞ்சி கஞ்சி என்று வயிறு கெஞ்சிக் கெஞ்சிக் கேட்குது"**

என்று இவர் அமைத்த வரிகளை படிக்கும்போது நெஞ்சம் நெகிழ்கிறது அல்லவா?

தொடர்ந்து,

**"கடவுளை நம்பினேன் கற்பூரம் செலவு**
**கல்வியை நம்பினேன் காசெல்லாம் செலவு**
**மனிதனுக்கு மனிதன் மனமிரங்கவில்லை**
**மானத்தோடு வாழ மார்க்கம் ஏனோ இல்லை"**

என்று கல்லும் உருகும் வண்ணம் சத்தியாவேசத்தோடு விந்தன் 'தமிழ்' செய்துள்ளார்.

இப்பாடலில்,

**"சாலையிலே தொழிலாளி**
**சம்சாரம் நடக்குது!**
**ஆலையிலே அவனாவி**
**புகையாக போகுது"**

என்று விந்தன் உணர்ச்சி பிழம்பாகி எழுதியுள்ளார்.

"கடலைப்போல உலகமெல்லாம்
கஷ்டப்படும் கூட்டம்
கப்பல்போல முதலாளி
போடுகிறான் ஆட்டம்"

என இப்பாடலில் இவர் குறிப்பிட்டுள்ளது எவ்வளவு பெரிய உண்மை?

முடிவாக விந்தன்,

"கொந்தளித்து கடலெழுந்தால்
கப்பல் கதி என்ன?
கொடுமைக்கெல்லாம் இன்றே ஓர்
எல்லையிட்டால் என்ன?"

என்கிறார்!

விந்தனுக்கு புகழ் கொடுத்த பாடல்களில் 'கூண்டுக்கிளி' படத்தில் இடம் பெற்ற..

"கொஞ்சும் கிளியான பெண்ணைக்
கூண்டுக்கிளி ஆக்கிவிட்டு
கெட்டி மேளம் கொட்டுவது
சரியா? தப்பா?"

என்ற கருத்தாழமுள்ள அழகிய பாடலும் ஒன்றாகும். இப்பாடலில்,

"தீந்தமிழ்ப் பாட்டைப் பாடி
கேட்காதே என்று காதை
பொத்திவிட்டுக் கத்துவது
சரியா? தப்பா?"

என்ற அடிகளிலும்,

"காதல் செய்த குற்றம்
எனது கண்கள் செய்த குற்றமானால்
கண்ணைப் படைத்த கடவுள் செய்கை
சரியா? தப்பா?"

என்ற அடிகளிலும்,

"மண்ணும் பொன்னும் மாயையென்று
மக்களுக்குச் சொல்லிவிட்டு

பெண்ணைப் பார்த்துக் கண்ணடித்தல
சரியா? தப்பா?''

என்ற அடிகளிலும் விந்தனின் பாடல் புனையும் திறன் தெட்டத் தெளி வாக புலனாகிறதல்லவா?

'கூண்டுக்கிளி' படத்திற்காக இவர் யாத்த,

''பார் என் மகளே பார்! பார்!''

என்று தொடங்கும் பாடல் வறுமையின் கொடுமையை சித்தரிக்கும் உன்னதமான பாடலாகும்.

இப்பாடலில்,

''மனிதனுக்கில்லாத இதயம்
மண்ணுக்கிருப்பதைப் பார்பார்
மாடிவீட்டு எச்சில் இலைக்கு
மண்டை உடையுது பார் பார்''

என்ற வரிகள் நெஞ்சை கசிந்துருகச் செய்யும் வண்ணம் அமைந்துள்ளன.

மேலும் இப்பாட்லில் விந்தன்,

''பணத்தாலே பாதபூஜை செய்யும்
பரம பக்தரைப் பார் பார்
அழுதால் சிரிக்கும் அந்த உலகம்
அன்பு காட்டும் இந்த உலகம்
அது வேண்டுமா இது வேண்டுமா?
எதுவேண்டும் என்று நீ பார்''

என ஜீவ்துடிப்போடு எழுதியுள்ளார்.

விந்தன் 'குலேபகாவலி' படத்தில் எழுதிய பாடலைப் பார்ப்போம்.

நாயகி,

''மயக்கும் மாலைப் பொழுதே நீ போபோ
இனிக்கும் இன்ப இரவே நீ வாவா
இன்னலைத் தீர்க்க வா''

என்று விரக தாபத்தின் விளிம்பிலே நின்று பாடுகிறாள்.

நாயகன்,

''பன்னீர்த் தெளிக்க பனிபெய்யுமே
பசும்புல் படுக்க பாய்போடுமே''

என்று பாடுகிறான்.

பதிலுக்கு நாயகி,

"பாலூட்டும் நிலவு தேன் ஊட்டுமே
பாடும் தென்றல் தாலாட்டுமே
புன்னை மலர்கள் அன்பினாலே
போடும் போர்வை தன்னாலே"

என்று பாடுகிறாள்.

இந்தப் பாடல் மகத்தான இலக்கியச் சிறப்போடு அமைந்துள்ளது என்பதனை தமிழின்பத்தில் திளைக்கும் கலை அறிந்தவன் மறுக்க மாட்டான் அல்லவா?

விந்தன் 'பார்த்திபன் கனவு' படத்திற்காக எழுதியுள்ள,

"இதயவானின் உதயநிலவே
எங்கே போகிறாய்? - நீ
எங்கே போகிறாய்?"

என்று தொடங்கும் பாடலும் இலக்கியச் சுவையுள்ள பாடலாகும்.

விந்தன் எழுதிய சிறுகதைகளும், சில நாவல்களும் அவருக்குத் தமிழ் இலக்கிய உலகில் அழியாத இடத்தைக் கொடுத்துள்ளன. அவருடைய திரைப்பாடல்களும் என்றும் வாழக்கூடிய தகுதி படைத்தவை என்பது என் அபிப்ராயமாகும்.

வாழ்வில் வறுமையை அனுபவித்த போதும் இலட்சிய மிடுக்கோடு வாழ்ந்து மறைந்த இலக்கிய மேதை விந்தனின் பாடல்கள் சிலவற்றை முழுமையாகக் காணுங்கள்.

## சுத்தாத இடமில்லே...

*படம்: அன்பு ஆண்டு : 1953*
*பாடியவர்: ஏ.எம்.ராஜா*
*இசை : டி.ஆர்.பாப்பா*

**சுத்தாத இடமில்லே! கேட்காத பேரில்லே!**
**சோத்துக்கு வழிகாட்ட ஆளில்லே!**
**செத்த பின்பு சிவலோகம் செல்ல வழிகாட்டும்**

பித்தர்கள் ஏனிந்த நாட்டிலே?

ஒண்ணும் புரியவில்லை தம்பி - எனக்கு
ஒண்ணும் புரியவில்லை தம்பி
கண்ணு ரெண்டும் சுத்துது காதை அடைக்குது
கஞ்சி கஞ்சி என்று வயிறு கெஞ்சிக் கெஞ்சிக் கேட்குது

(ஒண்ணும்)

கடவுளை நம்பினேன் கற்பூரம் செலவு!
கல்வியை நம்பினேன் காசெல்லாம் செலவு!
மனிதனுக்கு மனிதன் மனமிரங்கவில்லை
மானத்தோடு வாழ மார்க்கம் ஏனோ இல்லை!

(ஒண்ணும்)

இயற்கையின் செல்வமெல்லாம்
ஏழையாலே பெருகுது!
சேர்க்கை பணம் ஒருவனை ஏய்த்து
செல்லாக் காசா ஆக்குது!

விதியை, நம்பி எத்தனை நாள்
வீணாய் காலம் கழிப்பது?
வீணர் வாழ எத்தனை நாள்
வீரங்குன்றி வாழ்வது?

பாடுபடும் பாட்டாளி
பசியாலே துடிக்கிறான்
பசியைப் பணமாக்கி
முதலாளி பதுக்குறான்

சாலையிலே தொழிலாளி
சம்சாரம் நடக்குது!
ஆலையிலே அவனாவி
புகையாகப் போகுது

கடலைப்போல உலகமெல்லாம்
கஷ்டப்படும் கூட்டம்!
கப்பல்போல முதலாளி
போடுகிறான் ஆட்டம்!
கொந்தளித்துக் கடலெழுந்தால்
கப்பல் கதி என்ன?

கொடுமைக்கெல்லாம் இன்றே ஓர்
எல்லையிட்டால் என்ன? (ஒண்ணும்)

## கொஞ்சுங் கிளியான பெண்ணை......

படம்: கூண்டுக்கிளி
பாடியவர்: டி.எம்.எஸ்.
இசை: கே.வி.மகாதேவன்
ஆண்டு : 1954

கொஞ்சுங் கிளியான பெண்ணைக்
கூண்டுக்கிளி ஆக்கிவிட்டுக்
கெட்டி மேளம் கொட்டுவது
சரியா? தப்பா?

பஞ்சபூதச் சாட்சியெல்லாம்
நெஞ்சமிலாச் சாட்சி என்று
தொட்டுமாலை சூட்டுவது
சரியா? தப்பா?
சரியா? தப்பா?
சரியா? தப்பா?

தின்னப்பழம் தந்துவிட்டு
தின்னாதே என்று கையைத்
தட்டிவிட்டுத் திட்டுவது
சரியா? தப்பா?

தமிழ்ப் பாட்டைப் பாடி
கேட்காதே என்று காதைப்
பொத்திவிட்டுக் கத்துவது
சரியா? தப்பா?
சரியா? தப்பா?
சரியா? தப்பா

காதல் செய்த குற்றம்
எனது கண்கள் செய்த குற்றமானால்
கண்ணைப் படைத்த கடவுள் செய்கை
சரியா? தப்பா?

சரியா? தப்பா?
சரியா? தப்பா?

கல்யாணம் செய்த குற்றம் எனது
நண்பன் செய்த குற்றமானால்
கற்பைப் படைத்த மனிதன் செய்கை
சரியா? தப்பா?

சரியா? தப்பா?
சரியா? தப்பா?

காதல் பிச்சை வேண்டிக் கையை
ஏந்தி வாசல் காத்து நின்றால்
சாத்திரங்கள் பேசுவது
சரியா? தப்பா?

அன்புகொண்ட உள்ளத்தோடுக்
கள்ளமில்லாக் காதல் கொண்டால்
ஆத்திரம் கொண்டேசுவது
சரியா? தப்பா?
சரியா? தப்பா?
சரியா? தப்பா?

மண்ணும் பொண்ணும் மாயையென்று
மக்களுக்குச் சொல்லிவிட்டு
பெண்ணைப் பார்த்துக் கண்ணடித்தல்
சரியா? தப்பா?

விண்ணுலக ஆசையின்றி
விரும்பும் பெண்ணை நேசத்தோடு
கண்ணியமாய்க் காதலித்தல்
சரியா? தப்பா?
சரியா? தப்பா?
சரியா? தப்பா?

மற்றொருவன் வாழ்வுக்காக
மனமறிந்த பெண்ணை விட்டு
மனமுடைந்து சுற்றுவது
சரியா? தப்பா?

மறுமலர்ச்சி வேண்டும் வாழ்வில்
மறக்க மாட்டேன் உன்னையென்று
மலர்க்கரத்தைப் பற்றுவது
சரியா? தப்பா?
சரியா? தப்பா?
சரியா? தப்பா?
சரியா? தப்பா?

## பார்! பார்! பார்...

படம்: கூண்டுக்கிளி
பாடியவர்: ராதா ஜெயலட்சுமி
இசை: கே.வி.மகாதேவன்
ஆண்டு : 1954

பார் என் மகளே பார்! பார்!
பரந்து கிடக்கும் அன்னை பூமி
பரிந்துன்னை அழைக்குது
பார்! பார்! பார்! (பார் என்)

இருந்த வீடு இரவல் வீடு
இருக்கப் போவது சொந்த வீடு!
வருந்த வேண்டாம்! உருளும் உலகில்
இருளும் ஒளியும் இயற்கை! (பார் என்)

பயப்படாதே, பாரில் உன் போல்
பலர் என் மடியில் பார்! பார்!
விய[illegible]டையாதே விரிந்த வானம்
வளைந்துனைக் காக்குது பார்! பார்!

மனிதனுக்கில்லாத இதயம்
மண்ணுக்கிருப்பதைப் பார்! பார்!
மாடிவீட்டு எச்சில் இலைக்கு
மண்டை உடையுது பார்! பார்! (பார் என்)
பணத்தால் பாதபூஜை செய்யும்
பரம பக்தரைப் பார் பார்!
அழுதால் சிரிக்கும் அந்த உலகம்

அன்பு காட்டும் இந்த உலகம்
அது வேண்டுமா? இது வேண்டுமா?
எது வேண்டும் என்று நீ பார்! பார்! (பார் என்)

## மயக்கும் மாலை...

படம்: குலேபகாவலி
பாடியோர்: ஏ.எம்.ராஜா - ஜிக்கி
ஆண்டு : 1955

பெ: மயக்கும் மாலைப் பொழுதே நீ போ! போ!
இனிக்கும் இன்ப இரவே நீ வா! வா!
இன்னலைத் தீர்க்கவா?

ஆ: பன்னீர்த் தெளிக்க பனி பெய்யுமே!
பசும்புல் படுக்கப் பாய் போடுமே!

பெ: பாலூட்டும் நிலவு தேன் ஊட்டுமே!
பாடும் தென்றல் தாலாட்டுமே!
புன்னை மலர்கள் அன்பினாலே
போடும் போர்வை தன்னாலே!

ஆ: கனி இதழ் காதல் பசி தீர்க்குமே
பெ: காண்போம் பேரின்பமே!.

ஆ/பெ: மயக்கும் மாலை பொழுதே நீ போ! போ!
இனிக்கும் இன்ப இரவே நீ வா! வா!
இன்னலைத் தீர்க்க வா!

## இதயவானின்...

படம்: பார்த்திபன் கனவு
பாடியவர்கள்: ஏ.எம்.ராஜா - சுசீலா
இசை: வேதா.

பெ: இதயவானின் உதயநிலவே
எங்கே போகிறாய்? - நீ

எங்கே போகிறாய்?
ஒளி இல்லாத உலகம் போல
உள்ளம் இருளுதே - என்
உள்ளம் இருளுதே!

கண்கள் செய்த பாவம் உன்னைக்
கண்டும் காணாதேங்குதே!
கண்டும் காணாதேங்குதே!
பாய்விரித்துக் கப்பல் செல்ல
பாவிநெஞ்சம் துடிக்குதே!
பாவிநெஞ்சம் துடிக்குதே! (இதய)

ஆ: இருளகற்றும் ஒளியென்றென்னை
எண்ணும் நீயாரோ?
எண்ணும் நீயாரோ?
கண்டும் காணாதேங்கும் கண்கள்
காதல் கண்களோ?
காதல் கண்களோ?
இதயவானின் உதய நிலவே
எங்கே போகிறேன் - நான்
எங்கே போகிறேன்?

பெ: ஆசைமிஞ்சி நேசக் கரங்கள்
அணைக்க உன்னை நீளுதே!
அணைக்க உன்னை நீளுதே!
பறந்து வந்து உன்னைத் தழுவ
பாழும் சிறகில்லையே!
பாழும் சிறகில்லையே! (இதய)

# சுப்பு ஆறுமுகம்

இன்று வில்லுப் பாட்டுத்துறையில் மிகவும் புகழ் பெற்று விளங்கும் இவர், ஒரு கால கட்டத்தில் தமிழ்ப் படங்களுக்கு வசனங்கள் எழுதியும், கருத்தாழமுள்ள பாடல்களை எழுதியும் பணியாற்றியவர். கலைவாணர் என்.எஸ்.கே.மீது தனி மரியாதையும், அன்பும் மிக்கவர்.

சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னரே 'கலையரங்கம்' சினிமா இதழில் சினிமாப் பாடல்களை விமர்சித்து சிறப்பாக கட்டுரை ஒன்றைத் தீட்டியுள்ளார்.

எனது ஞாபகத்தில் அது இன்றும் இருக்கிறது!

கவிஞர் சுப்பு ஆறுமுகம் சினிமாவுக்கு எழுதிய பாடல்களில் அவர் 'விடுதலை' படத்திற்கு எழுதியவை மிகச் சிறந்து விளங்குகின்றன.

''அன்போடு இன்பமாக வாழலாம் நண்பனே
என்னாலே நீ உன்னாலே நான் என்றுமே''

எனத் தொடங்கும் இப்பாடலில்,

''இல்லார்க்கு இல்லையென்று சொல்லாமலே
பொல்லாதார் சகவாசம் கொள்ளாமலே
நல்லாரின் வார்த்தைகளைத் தள்ளாமலே''

என்ற வரிகளில் அறிவார்ந்த சிந்தனைகள் மின்னுகின்றன.

''முதன்முதலில் கடமையதைச் செய்யணும்
முடிவினிலே உரிமைகளைக் கேக்கணும்

எல்லோர்க்கும் எல்லாம் பொதுவாக்கணும் - - அப்புறம்
ஏழைகளைக் கதைகளில்தான் பாக்கணும்''

என்ற வரிகளில் சுப்பு ஆறுமுகத்தின் பொதுமை நோக்கு ஓங்கிப் பொலிகிறது! மேலும் இப்பாடலில்,

''வீட்டைப் போல நாட்டையும் நினைக்கணும்
வித்தியாசப் புத்திதன்னை நீக்கணும்''

என்ற அடிகளிலும்,

''வறுமையதை உழைப்பினாலே வெல்லணும்
கொடுமைகளை குணத்தினாலே ஓட்டணும்''

என்ற அடிகளிலும் கவிஞரின் முற்போக்குச் சிந்தனைப் போக்கு சுடர் வீசுகிறதல்லவா?

'அதிசயப் பெண்' படத்தில் இவர் பாட்டாளி வர்க்கத்திற்காக உன்னதமான பாடலொன்றை வடித்துள்ளார்.

''பாரில் ஆதியில் பேதமே இல்லை
பாதியில் வந்ததே தொல்லை

ஏருழுவோன் பேருக்கே பூமியென்று
எழுதிடுவோம் சாசனமே சாசனமே''

என்று வீரமுரசு கொட்டுகிறார். தொடர்ந்து,

''சிலபேர் வாழப் பலபேர் உழைக்கும்
நிலமையும் சரிதானோ - மனித
நீதி இதுதானோ நாட்டில்
நீதி இதுதானோ இந்த
நிலமையும் சரிதானோ?''

என ஆவேசமாக வினவுகிறார். மேலும் இப்பாடலில்,

''கண்ணீர் சிந்தும் பாட்டாளி ரத்தம்
பன்னீராவது முறையோ?''

என்று உணர்ச்சிப் பிழம்பாகி எழுதுகிறார்.

மேலும் இப்பாடலில்,

''ஏழையின் வாழ்வே செல்வரின் கையில்
இனித்திடும் தின் பண்டமாச்சு''

என்று கவிஞர் ஆவேசத்துடன் சொல்கிறார்.

சுப்பு ஆறுமுகம் மிகச்சில பாடல்களை சினிமாவில் எழுதினாலும் அவற்றை அழுத்தமாகவும், அழகாகவும் எழுதியுள்ளார்.

'விடுதலை' படத்தில்,

''இனிதான தென்றல்
எனைப்பாட தூண்டுதே''

என்கிறார். இந்த இடத்தில், 'அழகிய மலர்கள் என்னைப் பாடத் தூண்டுகிறது' என்ற மகாகவி தாகூரின் கவிதை வரி எனக்கு ஞாபகம் வருகிறது.

இந்தப் பாடலில்,

''ஏழை குடிசையிலே
இருப்பவன் மாடிதனிலே
வேற்றுமை பாராமலே
வீசிடும் இளந்தென்றல்''

என்று அழகான அடிகளை அமைத்திருக்கிறார் எம்கவிஞர்.

'புனர்ஜென்மம்', 'பத்தரை மாற்றுத் தங்கம்' உட்பட வேறு சில படங்களிலும் இவர் பாட்டு சிறந்து விளங்குகின்றன.

இனிக் கவிஞரின் மிகச்சிறந்த மூன்று பாடல்களை முழுமையாகக் காணுங்கள்.

## சிலபேர் வாழ...

*படம்: அதிசயப் பெண்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: எஸ்.எம்.சுப்பையா நாயுடு.*
*ஆண்டு : 1959*

பாரில் ஆதியில் பேதமே இல்லை!
பாதியில் வந்ததே தொல்லை!
ஏருழுவோன் பேருக்கே பூமி என்று
எழுதிடுவோம் சாசனமே சாசனமே!
சிலபேர் வாழப் பலபேர் உழைக்கும்
நிலமையும் சரிதானோ? மனித

நீதி இதுதானோ? நாட்டில்
நீதி இதுதானோ? இந்த
நிலைமையும் சரிதானோ?

கண்ணீர் சிந்தும் பாட்டாளி ரத்தம்
பன்னீராவது முறையோ?
ஏழையின் நீதி இதுதானோ?
காலம் மாறின போதிலும் ஏழை
கண்ணீர் மாறிட வகையில்லையோ?
கேளீர் நீதி இதுதானோ? (நாட்டில்)

வானில் பறவைகள் இனமே
உரிமையாகவே பறந்திடும் அழகினைப் பார்
மீனினம் நீந்திடும் சுதந்திரம் பார்
அடிமை நிலையில் மனிதனைப் பார்!
ஏழையின் வாழ்வே செல்வரின் கையில்
இனித்திடும் தின்பண்டமாச்சு (ஏழை)

உலகிலே இல்லாதவன் என்னும் சொல்லை
ஏட்டினில் இருந்தே எடுத்திடுவோம்!
எல்லோரும் சமமே; நாட்டில் யாவுமே
பொதுச் செல்வம் என்றிடுவோம்!
எளியோன் துயரை வலியோன் உணரா
இழிநிலை உலகினில் ஏனோ? (ஏழையின்)

## அன்போடு இன்பமாக...

*படம்: விடுதலை ஆண்டு : 1954*
*பாடியவர்: பி.பி.சீனிவாஸ்*
*இசை: லக்ஷ்மண் - ரகுநாத்*

அன்போடு இன்பமாக வாழலாம் நண்பனே
என்னாலே நீ உன்னாலே நான் என்றுமே

இல்லார்க்கு இல்லையென்று சொல்லாமலே
பொல்லாதவர் சகவாசம் கொள்ளாமலே (அன்போடு)

அல்லாத பாதையிலே செல்லாமலே
நல்லாரின் வார்த்தைகளைத் தள்ளாமலே
(என்றும் அன்போடு)

முதன்முதலில் கடமையைச் செய்யணும்
முடிவினிலே உரிமைகளைக் கேக்கணும்
எல்லோர்க்கும் எல்லாம் பொதுவாக்கணும் - அப்புறம்
ஏழைகளைக் கதைகளில்தான் பாக்கணும்
(அன்போடு)

வீட்டைப்போல நாட்டையும் நினைக்கணும்
வித்தியாசப் புத்திதன்னை நீக்கணும்
வறுமையதை உழைப்பினாலே வெல்லணும்
கொடுமைகளை குணத்தினாலே ஓட்டணும்
என்னாலே நீ; உன்னாலே நான்
என்றுலகில் எல்லோரும் எண்ணினால் என்றுமே
(அன்போடு)

## இனிதான தென்றல்...

*படம்: விடுதலை ஆண்டு : 1954*
*பாடியவர்: சூலமங்கலம் ராஜலட்சுமி*
*இசை: லக்ஷ்மண் - ரகுநாத்*

இனிதான தென்றல்
எனைப்பாடத் தூண்டுதே!
என் பாட்டைத் தான்சுமந்தே
எங்கெங்கும் செல்லுமே! (இனிதான)

ஏழை குடிசையிலே!
இருப்பவன் மாடிதனிலே
வேற்றுமை பாராமலே
வீசிடும் இளந்தென்றல் (எனைப்பாட)

பயிர்கள் அசைவினிலே
குயிலின் இசைதனிலே
ஒலிக்கும் நீரோடை மீதே
மிதக்கும் இளந்தென்றல் (எனைப்பாட)

# எம்.கே.ஆத்மநாதன்

1928இல் வலையபட்டியில் பிறந்த இவர் டி.கே.எஸ். சகோதரர்கள் கொடுத்த ஊக்கத்தால் பதின்மூன்று வயதிலேயே பாட்டெழுதும் திறன் பெற்றார்.

இதுவரை எழுபத்தைந்து படங்களுக்குப் பாட்டெழுதியுள்ளார். இருநூற்றியைம்பது நாடகங்களுக்குப் பாடல்கள் யாத்துள்ளார். மனிதன், இரத்தபாசம்உடபட டி.கே.எஸ். சகோதரர்கள் நடித்த சிலபடங்களுக்கும் 'பாரதி கலைஞர்' எஸ்.வி.சகஸ்ரநாமம் பங்கேற்ற நாலு வேலிநிலம், மல்லியம் மங்களம் போன்ற படங்களுக்கும் இவரே இசையமைத்துள்ளார்.

வாழ்க்கையில் பல சோதனைகளுக்கு மத்தியில் சாதனைகளை நிகழ்த்திக் காட்டிய இந்த அருமையான பாடலாசிரியர் - இசையமைப்பாளர் இப்போது அம்பத்தூரில் அமைதியாக வாழ்ந்து வருகிறார்.

'இரத்த பாசம்' படத்தின் மூலம் பாடலாசிரியராக மலர்ந்த ஆத்மநாதன் அப்படத்தில் இடம் பெற்று அந்தக் காலத்தில் மிகவும் பிரபலம் பெற்ற

**''பாதகம் செய்வதும் ஏனோ**
**இரத்த பாசம் அழிப்பதும் ஏனோ'',**
**''எங்கே சென்றாயோ - இனி**
**இன்பம் காண்பாயோ?''**

போன்ற பாடல்களை பொருட் சிறப்போடும், மொழிநயத்தோடும் எழுதியுள்ளார்.

ஆயிரக்கணக்கான நேயர்களால் அன்றும் இன்றும் வானொலியில் விரும்பிக் கேட்கப்படும் 'புதையல்' படப்பாடலான,

"விண்ணோடும் முகிலோடும்
விளையாடும் வெண்ணிலவே"

என்ற அருமையான இலக்கிய நயமுள்ள பாடல் இவரெழுதியதேயாகும்

அப்பாடலைத் தாம் எழுதும்போது நடந்த ஒரு சம்பவத்தை கவிஞரை சந்தித்தபோது எனக்குச் சொன்னார்.

பாடல் கம்போசிங் நடக்கும் இடத்தில் புதையல் பட கதை - வசன கர்த்தா கலைஞர் கருணாநிதி, தயாரிப்பாளர்கள் கமால் சகோதரர்கள், இசையமைப்பாளர்கள் விஸ்வநாதன் - ராமமூர்த்தி உட்பட பலர் இருந்தார்களாம். தான்

"விண்ணோடும் முகிலோடும்
விளையாடும் வெண்ணிலவே"

என்று பல்லவி எழுதியவுடன் இசையமைப்பாளர் எம்.எஸ்.விஸ்வநாதன் தம்மிடம் "இந்தப் பல்லவி இலக்கியப் பாணியில் உள்ளது. கொஞ்சம் எளிமைப் படுத்துங்கள்" என்றாராம்.

அந்த இடத்தில் இருந்த கலைஞர், "இந்தப் பல்லவி மிகச் சிறப்பாக அமைந்துள்ளது" இதையே பயன்படுத்தினால் நன்றாக இருக்கும்" என்று சொன்னாராம்.

இதை என்னிடம் சொன்ன ஆத்மநாதன் தாம் 'மகேஸ்வரி' படத்திற்காக எழுதிய

"அழகு நிலாவின் பவனியிலே
அமைதி கொஞ்சும் இரவினிலே"

என்ற பாடலின் இலக்கிய நயத்தைப் பாராட்டி 'தென்றல்' பத்திரிகையில் கண்ணதாசன் எழுதியதாகச் சொன்னார்.

ஆத்மநாதனுக்கு புகழை அள்ளிக் கொடுத்த பாடல்களில் ஒன்று "நல்லவன் வாழ்வான்" படத்தில் இடம்பெற்ற,

"ஆண்டவன் ஒருவன் இருக்கின்றான் - அவன்
அன்பு மனங்களில் சிரிக்கின்றான்"

எனத் தொடங்கும் பாடலாகும்.

அப்பாடலில்,

"நல்லவர்போல் வெளிவேஷங்கள் அணிந்து
நடிப்பவர் நடுவில் இருப்பதில்லை.

நாணயத்தோடு நல்லறங் காத்து
நடப்பவர் தம்மை மறப்பதில்லை''

என்ற அடிகளிலும்,

''தன்மானம் காப்பதிலே - அன்னை
தந்தையைப் பணிவதிலே
பிறந்த பொன்னாட்டின் நல்ல முன்னேற்றம் காண
பொதுப்பணி புரிபவர் மகிழ்ச்சியிலே
ஆண்டவன் ஒருவன் இருக்கின்றான்''

என்ற அடிகளிலும், 'ஆண்டவன் எங்கே இருக்கிறான்?'' என்ற கேள்விக்கு அருமையான பதில் தருகிறார் கவிஞர்.

நல்லவன் வாழ்வான்' படத்தில் கதாநாயகனாக நடித்த டாக்டர் எம்.ஜி.ஆர். இந்தப் பாடலை மிகவும் பாராட்டினாராம்.

'எதையும் தாங்கும் இதயம்' படத்தில்

'உனக்கும் எனக்கும் வெகுதூரமில்லை - நான்
நினைக்காத நேரமில்லை - உன்னை
நினைக்காத நேரமில்லை''

என்றோர் அற்புதப்பாடலை எழுதியுள்ளார் கவிஞர்.

இப்பாடலில்,

''செல்வப் பரம்பரையில் பிறந்தாலும் - அதன்
சிங்காரப் பிடியில் வளர்ந்ததில்லை!
உல்லாச உலகத்தில் இருந்தாலும் - நான்
உழைப்பவர் துயரத்தை மறந்ததில்லை!''

என்று கருத்தமைதி பொருந்திய அடிகளை அமைத்துள்ளார் கவிஞர்.

'நாட்டுக்கு ஒரு நல்லவள்' படத்தில் ஆத்மநாதனின் அருமையான பாடலொன்று உளளது.

''வண்ண மலரோடு கொஞ்சும்
வாசத் தென்றல் போலே வாழ்விலே - காதல்
கதைபேச இதுநல்ல நேரமே - நாமே''

எனத் தொடங்கும் இப்பாடலில்,

''நீல ஒளிவீசும் நிலாவிலே
நெஞ்சம், ஒன்றானோம் இந்நாளிலே

என்றும் அழியாத புது இன்பம்
உருவாகும் வாழ்விலே - காதல்
கதை பேச இது நல்ல நேரமே - நாமே
கதைபேச இது நல்ல நேரமே''

என்ற அடிகள் ஒவ்வொன்றின் மூலமும் இலக்கிய இன்பத்தை நாம் அனுப விக்க முடிகிறதல்லவா?

இப்பாடல் கடந்த முப்பது வருடங்களுக்கு மேலாக அடிக்கடி இலங்கை வானொலியில் ஒலிபரப்பாகி ஆயிரமாயிரம் நேயர்களை ஈர்த்து வருகிறது என்பது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

'மல்லிகா' பட்த்தில்,

''நீலவண்ணக் கண்ணனே உனது
எண்ணமெல்லாம் நானறிவேன்
கண்ணா என் கையைத் தொடாதே
மோகன கண்ணா என்கையைத் தொடாதே''

என்று அருமையாக ஒரு பாடலை எழுதியுள்ளார் ஆத்மநாதன்.

இப்பாடலில்,

''வல்லி என்கரத்தை விட்டு வந்தவழி செல்லுவாய்
நல்லதல்ல உன் செயலை நாடறிய்ச் சொல்லுவேன்
கள்ளனே உன்னை எல்லோரும் பொல்லாப் பிள்ளை''
என்று சொல்லிக் கண்டபடி ஏசுவார்.

இளங்கன்னி எந்தன் உள்ளந்தன்னை
துன்புறச் செய்யாதே கண்ணா என்கையைத் தொடாதே
கண்ணா என்கையைத் தொடாதே''

என்று அமைந்த அடிகள் ஒவ்வொன்றும் சிருங்கார ரசத்தை உன்னத முறையில் வெளிப்படுத்தி, இலக்கிய மிடுக்கோடு அமைந்துள்ளமை குறிப் பிடத் தக்கதாகும்.

இனி கவிஞரின் சில பாடல்களை முழுமையாக அனுபவிக்கும்படி வேண் டுகிறேன்.

## ஆண்டவன் ஒருவன்...

படம்: நல்லவன் வாழ்வான்
பாடியவர்: சீர்காழி
இசை: டி.ஆர்.பாப்பா
ஆண்டு : 1961

ஆண்டவன் ஒருவன் இருக்கின்றான் - அவன்
அன்புமனங்களில் சிரிக்கின்றான் (ஆண்டவன்)
வேண்டுதல் வேண்டாமை அற்ற மெய்ப்பொருளாய்
விளக்கிட முடியாத தத்துவப் பொருளாய்
(ஆண்டவன்)
நல்லவர்போல் வெளிவேஷங்கள் அணிந்து
நடிப்பவர் நடுவில் இருப்பதில்லை
நாணயத்தோடு நல்லறங்காத்து
நடப்பவர் தம்மை மறப்பதில்லை (ஆண்டவன்)
தன்மானம் காப்பதிலே - அன்னை
தந்தையைப் பணிவதிலே
பிறந்த பொன்னாட்டின் நல்ல முன்னேற்றம் காண
பொதுப்பணி புரிபவர் மகிழ்ச்சியிலே (ஆண்டவன்)

## வண்ண மலரோடு கொஞ்சும்...

படம்: நாட்டுக்கொரு நல்லவள்
பாடியோர்: சீர்காழி - சுசீலா
இசை: வேணு
ஆண்டு : 1959

வண்ண மலரோடு கொஞ்சும்
வாசத்தென்றல் போலே வாழ்விலே - காதல்
கதைபேச இது நல்ல நேரமே - நாமே
கதைபேச இது நல்ல நேரமே (வண்ண)
நீல ஒளிவீசும் நிலாவிலே
நெஞ்சம் ஒன்றானோம் இந்நாளிலே
என்றும் அழியாத, புது இன்பம்

உருவாகும் வாழ்விலே - காதல்
கதைபேச இது நல்ல நேரமே - நாமே
கதைபேச இது நல்ல நேரமே (வண்ண)
நெஞ்சில் நடமாடும் சிந்தாமணி!
நம்மைத் தடை செய்வாரில்லையினி!
நாளும் இணையாக மனம் போலவே
புதுவாழ்வு தேடுவோம் - காதல்
கதை பேச இதுநல்ல நேரமே - நாமே
கதை பேச இது நல்ல நேரமே! (வண்ண)

## உனக்கும் எனக்கும்...

*படம்: எதையும் தாங்கும் இதயம்*
*பாடியவர்: சூலமங்கலம் ராஜலட்சுமி*
*ஆண்டு : 1962*

உனக்கும் எனக்கும் வெகுதூரமில்லை - நான்
நினைக்காத நேரமில்லை - உன்னை.
நினைக்காத நேரமில்லை (உனக்கும்)
இனிக்க இனிக்க நீ பேசவில்லை
என்றாலும் என் நெஞ்சம் மறக்கவில்லை! (உனக்கும்)
செல்வப் பரம்பரையில் பிறந்தாலும் - அதன்
சிங்காரப் பிடியில் வளர்ந்ததில்லை!
உல்லாச உலகத்தில் இருந்தாலும் - நான்
உழைப்பவர் துயரத்தை மறந்ததில்லை (உனக்கும்)
இரவுக்கு நிலவால் அழகுவரும் - என்
இதயம் உன் நினைவால் அமைதி பெறும்
உயிருக்கு உடலால் பெருமை வரும் - நம்
உறவும் ஒருநாள் புதுமை பெறும்! (உனக்கும்)

# கே.எஸ்.கோபாலகிருஷ்ணன்

பிரபலத் திரைப்பட இயக்குநராகவும், கதை - வசன கர்த்தாவாக வும் திகழும் கே.எஸ்.ஜி. சில படங்களுக்கு சீரிய பாடல்களைத் தீட்டிய பாடலாசிரியருமாவார்.

''எதிர்பாராதது' படத்தில்,

''காதல் வாழ்வில் நானே
கனியாத காயாகிப் போனேன்''

எனத் தொடங்கும் பாடல் எத்துணை முறை கேட்டாலும் அலுக்காத அழகு மிக்க பாடலாகும்.

அப்படத்தின் நாயகன் விமான விபத்தினால் விழிகளை இழந்து அழகு குன்றிப் போய்விடுகின்றான். அந்த நிலையில் அவன் -

''எழில்போன உடலானதாலே
ஏற்பாயோ நீயே முன்போலே
சுழல்போலத் துயர் சூழ்ந்த போதும்
நிழல்போல உனை நாடுவேனே''

என்று நெஞ்சுருகி மிகு காதலால் பாடுகிறான்.

நாயகியோ பதிலுக்கு,

''என்காதல் இன்ப ஓடம
கரைசேரப் போகும் நேரம்
விதியான பேய்க்காற்றினாலே
வீணானதைய்யோ இந்நாளே''

என நெஞ்சொடிந்து பாடுகிறாள்.

பாடலாசிரியர் பொருத்தமான வார்த்தைகளை உணர்ச்சி பூர்வமாகக் கையாண்டுள்ளார் இப்பாடலில்! இப்பாடலின் இறுதியில் நாயகன்,

**" நீறாகி உடல் வெந்த போதும்**
**நினைவாலென் உயிர் வாழும் நாளும்**
**வேறாகி நாம் வாழ்ந்த போதும்**
**விலகாது நம்ஜீவன் நாளும்''**

எனப்பாடுவது மிகவும் உருக்கமாக உள்ளது.

'அமரதீபம்' படத்தில்,

''நாணயம் மனுஷனுக்கு அவசியம்''

என்ற பிரசித்தி பெற்ற பாடலும் கே.எஸ்.ஜி. எழுதியதே.

அப்பாடலில்,

''வாணிபத்தில் புரளுவது இந்த நாணயம் - மனிதன்
வாக்கைக் காக்க உதவுவது சொந்த நாணயம்
வயித்துப் பசியை தீர்த்து வைக்கும் இந்த நாணயம்
மனிதன் வாங்கும் கடனைக் கொடுக்கச் சொல்லும்
சொந்த நாணயம்...''

என்ற வரிகளில் ஆழமான கருத்துகள் சுடர் வீசுகிறதல்லவா?

இதே பாட்டலில்,

''கறுப்பு மார்க்கெட் செய்து பணத்தைத் திரட்டக் கூடாது
கோர்ட்டில் காசுக்காகப் பொய் சாட்சி சொல்லக் கூடாது''

என்று எழுதப்பட்ட வரிகள் இன்று இந்த நாட்டுக்குத் தேவையாக இருக்கிற தல்லவா?

இப்பாடலில்,

''மானம் போக்கும் லஞ்சம் எதிலும் வாங்கக்கூடாது
மாடாய் உழைத்தே சாப்பிடத் தயங்கக் கூடாது''

என்ற வரிகளை மக்களும், மக்களுக்கு வழிகாட்டுவதாகச் சொல்லிக் கொள்ளும் தலைவர்களும் பின்பற்றினால் உன்னத இந்தியா உருவாகி விடுமல்லவா?

'பிரசிடென்ட் பஞ்சாட்சரம்' படத்தில் சுவாரஸ்யமான ஒரு பாடல் எழுதியுள்ளார் இயக்குநர் திலகம்.

அப்பாடலில் நாட்டு நடப்பைக் காட்டுகிறார்.

''நான் சுகவாசி - தினம்
கைவீசிப் பயமில்லாமல் வாழும் மதராசி''

எனத் தொடங்கும் அப்பாடலில்,

''பட்டதாரி கூட்டத்திற்கு வேலையில்லை - உழைக்கும்
பாட்டாளிக் கூட்டத்திற்கு மதிப்பும் இல்லை!
கெஞ்சிக் கேட்டாலும் கொடுக்கிற மனுஷரில்லே - இவரை
கீழோராய் மதிப்பதில் பாபமில்லை''

என்று எழுச்சியோடு பாடுகிறார் கே.எஸ்.ஜி.

வக்கற்ற ஏழை ஒருவனைப் பற்றி

''இந்தச் சோளக் கொல்லை பொம்மைக்காச்சு
சொக்காச் சட்டை இருக்குது
இதுக்குச் சுத்தகூடத் துணியில்லாமல் படுத்துக் கிடக்குது''

என்று நயமாக எழுதுகிறார்.

மற்றுமொரு பகுதியில்,

''அவன் வகைவகையாய் தின்னுபிட்டு
வயிறு உப்பி நடக்கிறான் - இவன்
வயித்துக்கு இல்லாமல்
உயிரைப் பிடிச்சுத் துடிக்கிறான்''

என்று ஆவேசமாகச் சொல்கிறார் கே.எஸ்.ஜி.

கே.எஸ்.ஜி. 'உத்தம புத்திரன்'படத்திற்காக ஒருஅழகிய பாடலை தீட்டியுள்ளார்:

''உன்னழகைக் கன்னியர்கள் சொன்னதினாலே
உள்ளமெல்லாம் உன்வசமாய் ஆனதினாலே
கன்னியெந்தன் மீதிலாசைக் கொண்டதினாலே
காரியம் நிறைவேறும் எந்தன் எண்ணத்தைப் போலே''

என்று எழிலோங்க எழுதுமிவர்

''பொன்போலே மின்னும் மன்னா உன் அங்கம்

கண்ணாலே கண்டாலே பேரின்பம் பொங்கும்
உன்போலே ஆண்பிள்ளை காணேனே எங்கும்''

எனச் சொல்வதும் பாடலின் நயமான பகுதி அல்லவா?

இவர் மஞ்சள் மகிமை, அடுக்கு மல்லி போன்ற படங்களிலும் சில நல்ல பாடல்கள் எழுதியுள்ளார்.

கதாசிரியராக - வசனகர்த்தாவாக - இயக்குநராக சிறந்த வெற்றிகளைப் பெற்ற இவர் எழுதியுள்ள திரைப் பாடல்களைப் பார்க்கும்போது பாடலாசிரியராகவும் சிறந்த வெற்றிபெற்று மிகுபுகழ் அடைந்திருக்கக் கூடும். ஏனோ பாடல்கள் எழுதுவதில் இவர் அதிகம் முனைப்புக் காட்டவில்லை!

இனி கே.எஸ்.ஜி. எழுதிய பாடல்கள் சிலவற்றை முழுமையாகப் பார்த்து மகிழுங்கள்

## காதல் வாழ்வில்...

*படம்: எதிர்பாராதது*
*பாடியோர்: ஏ.எம்.ராஜா - ஜிக்கி*
*இசை: சி.என்.பாண்டுரங்கன்*
*ஆண்டு : 1954*

அவள்: காதல் வாழ்வில் நானே
கனியாத காயாகிப் போனேன்! (காதல்)
அவன்: எழில்போன உடலானதாலே
ஏற்பாயோ நீயே முன்போலே
சுழல்போலத் துயர் சூழ்ந்த போதும்
நிழல்போல உனை நாடுவேனே! (காதல்)
அவள்: என்காதல் இன்ப ஓடம்
கரைசேரப் போகும் நேரம்
விதியான பேய்க்காற்றினாலே
வீணானதைய்யோ இந்நாளே! (காதல்)
அவன்: நீறாகி உடல்வெந்த போதும்
நினைவாலென் உயிர்வாழும் நாளும்
வேறாகி நாம் வாழ்ந்த போதும்
விலகாது நம்ஜீவன் கூடும்! (காதல்)

## நாணயம் மனுஷனுக்கு...

*படம்: அமரதீபம்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: டி.சலபதிராவ்*
*ஆண்டு : 1956*

நாணயம் மனுஷனுக்கு அவசியம் - தம்பி
நாணயம் மனுஷனுக்கு அவசியம்
மிகவும் அவசியம் - அதுவே
நல்லோர்கள் சொல்லிவைத்த நன்மையான ரகசியம்!
(நாணயம்)

வாணிபத்தில் புரளுவது இந்த நாணயம் - மனிதன்
வாக்கைக் காக்க உதவுவது சொந்த நாணயம்
வயித்துப் பசியைத் தீர்த்துவைக்கும் இந்த நாணயம்
மனிதன் வாங்கும் கடனைக் கொடுக்கச் சொல்லும்
சொந்த நாணயம் - தம்பி (நாணயம்)

கடனை வாங்கி மாடிவீடு கட்டக்கூடாது - அதை
உடனடியாய் மனைவிபேரில்
எழுதக் கூடாது - உயிலும் எழுதக் கூடாது
கறுப்பு மார்க்கெட் செய்து பணத்தைத் திரட்டக் கூடாது!
கோர்ட்டில் காசுக்காகப் பொய்சாட்சி சொல்லக் கூடாது - தம்பி
(நாணயம்)

நாணயத்தைப் பேச்சில் மட்டும் காட்டக் கூடாது - நம்மை
நம்பினோர்க்குத் திருட்டுக் கணக்குக் காட்டக் கூடாது!
(நாணயம்)

மானம் போக்கும் லஞ்சம் எதிலும் வாங்கக் கூடாது - காளை
மாடாய் உழைத்தே சாப்பிடத் தயங்கக் கூடாது!
(நாணயம்)

## நான் சுகவாசி...

*படம்: பிரசிடெண்ட் பஞ்சாட்சரம்*
*பாடியவர்: சீர்காழி*

இசை: ஜி.ராமநாதன் ஆண்டு : 1959

நான் சுகவாசி - தினம்
கைவீசிப் பயமில்லாமல் வாழும் மதராசி
ஏழை எளியவரின் விசுவாசி - ஊரில்
எல்லோரும் மதித்திடும் முகராசி அமைஞ்ச (நான்)

பட்டதாரிக் கூட்டத்திற்கு வேலையில்லை - உழைக்கும்
பாட்டாளிக் கூட்டத்திற்கு மதிப்பு இல்லை!
கெஞ்சிக் கேட்டாலும் கொடுக்கிற மனுஷரில்லே - இவரை
கீழோராய் மதிப்பதில் பாபமில்லை (நான்)

இவங்க பிச்சை எடுத்துத்தான் சாப்பிடணும் - பிள்ளை
பெறுவதில் குசேலர் பிச்சை வாங்கணும்!
பாடுபட்டுச் சோறுதிங்க வேலைதரணும் - நல்ல
படிப்பும் வசதியும் செய்து தரணும் (நான்)

இது காலக்கையை வச்சுக்கிட்டு வேலையத்து நிக்குது - அது
கைத்தடியை வச்சுக்கிட்டு ஜாலியாக நடக்குது
இந்தச் சோளக் கொல்லை பொம்மைக்காச்சு
சொக்காச் சட்டை இருக்குது
இதுக்குச் சுத்தக் கூடத் துணியில்லாமல் படுத்துக் கிடக்குது!
(நான்)

அவன் வகைவகையாய் தின்னுப்பிட்டு
வயிறு உப்பி நடக்கிறான் - இவன்
வயித்துக்கு இல்லாமல்
உயிரைப் பிடிச்சுத் துடிக்கிறான்!

அவன் புகைச் சுருட்டை விட்டுவிட்டு
பொருளை விரயமாக்கிறான்
இவன் பொறுப்பில்லாமல் சோத்துக்குத்தான்
தந்தனந்தானா போடுறான்! (நான்)

## உன்னழகை...

படம்: உத்தமபுத்திரன்
பாடியோர்:

இசை: ஜி.ராமநாதன்
ஆண்டு : 1958

உன்னழகை கன்னியர்கள் சொன்னதினாலே
உள்ளமெல்லாம் உன்வசமாய் ஆனதினாலே
கன்னியெந்தன் மீதிலாசைக் கொண்டதினாலே
காரியம் நிறைவேறு மெந்தன் எண்ணத்தைப் போலே

பொன்போலே மின்னும் மன்னா உன் அங்கம்
கண்ணாலே கண்டாலே பேரின்பம் பொங்கும்
உன்போலே ஆண்பிள்ளை காணேனே எங்கும்
உன்னாசை ஒன்றே இன்பம் என்றே

விழியாலே பேசும் கலைமானைப் பாராய்
இனிதான மொழியாளின் எழில்காண வாராய்
அன்பே என் அமுதா என்றொரு வார்த்தை கூறாய்
ஆசை சிங்காரா தீரா மாரா (உன்)

# வில்லிப்புத்தன்

1968இல் வில்லிப்புத்தனைச் சென்னையில் சந்தித்தேன். கரிய மெல்லிய உருவம். அப்போது என் உத்தேசத்தில் ஐம்பது வயதிருக்கலாம். கேசத்தில் ஒரு முடிகூட நரையில்லை. மிகச் சிறந்த பாடலாசிரியரான அவர் பாரிமுனையில், தெருவோரத்தில் தன் கதையை முடித்துக் கொண்டார்.

எம்.எல்.ஏ. ஹாஸ்டலினுள்ளே இருந்த பொன்னுசாமி ஓட்டலின் உரிமையாளரின் மருமகன் ஒரு நாடகக் கலைஞர். அவரோடு ஒதுக்குப்புறமாக உள்ள இடத்தில்தான் வில்லிப்புத்தன் தங்குவார். ராமகிருஷ்ணன், முத்துக்குமார் போன்றோர் நடத்திய நாடகங்களுக்குப் பாடல்கள் எழுதிக் கொடுப்பார். அந்த நாடகங்களுக்கு நானே இசையமைப்பாளர். கவிஞர் வில்லிப்புத்தன் வறுமையின் கோரப் பிடியில் சிக்குண்டு வாடி வதங்கினார். ஆனாலும், அவர் தன்மானத்தைப் பேணி வாழ்ந்தவர்.

அந்த சமயத்தில் ஒரு நடிகை நடத்திய நாடகத்திற்கு பாட்டெழுத ஏற்பாடு செய்தேன். அந்த நடிகை ஒரு குருவிக்காரி என்பதனை அறிந்த கவிஞர், 'அவள் பணம் எனக்குத் தேவையில்லை' என்று சொல்லி நடிகை வீட்டிலிருந்து பொடி நடையாகவே தன் இருப்பிடம் வந்துவிட்டார்.

வில்லிப்புத்தன் சாப்பாட்டில் அக்கறை அற்றவர். எப்போதும் டீயும், பீடியும்தான். பழகுவதற்கு இனிமையான மனிதர். எனக்கு 'ராக்கெட்' பட்டம் தந்து கௌரவித்தவர் அவரே.''

மேற்கண்டவாறு மிகச்சிறந்த பாடலாசிரியராக விளங்கி, பசியின் கொடுமையில் பரிதவித்து, மாண்டு மறைந்த வில்லிப்புத்தனைப் பற்றி என்பால் உணர்ச்சிவசப்பட்டுச் சொன்னார் நடிகரும், பலகுரல் வித்தகருமான 'ராக்கெட் ராமநாதன்

வில்லிபுத்தன் வாழ்க்கையில் வறுமைச் சூறாவளியில் வாடி வதங்கிய போதும், புலவன் என்ற முறையில் அவரிடம் 'மொழி வறுமை' இல்லை. இலக்கிய நயமுள்ள மொழியை எழுச்சியோடு கையாண்டு அழகிய திரைப்பாடல்களை வடித்தவர் அவர்!

'மர்ம வீரன்' படத்தில்,

''பவளநாட்டு எல்லையிலே முல்லை ஆடுது''

என்ற மிகப்பிரபலமான பாடலை அவரே எழுதினார்.

'பூலோக ரம்பை' படத்தில்,

''வாழ்வில் நீ மணிமகுடம்
வளரும் இடம் சிறைக் கூடம்
கடவுள் செயல் யாரறிவார்
காலமெனும் ஊஞ்சலிலே
கண்ணே நீ கண்வளராய்''

என எழிலோங்க எழுதும் கவிஞர், தொடர்ந்து,

''தென்றல் தமிழ்க் காவியமே
அன்றொருநாள் உன் தந்தை
கன்னல் காதல் சோலையிலே
சொன்ன உண்மை வீண்கனவோ?''

என்றுபுலமையை இனங்காட்டி அடிகளை அமைத்துள்ளார்.

இப்பாடலில்,

''ஜோதிநிலாத் தாதியர்கள்
சூழ்ந்திருந்தே தாலாட்ட''

என்ற அடிகளிலும்,

''வான்முகில் பஞ்சணையில்
வைரமணித் தாரகைகள்
கானக்குயில் இசைதழுவும்
காலம்மாறிப் போனதடா?''

என்ற வரிகளிலும், இலக்கிய நயம் பொங்கி புரள்கிறதல்லவா?

'மாலா ஒ( : மங்கல விளக்கு' படத்தில், ஓர் இனிமையான பாடல் வில்லிப்புத்தன் ;ற்பனையில் பூத்தி(ருக்கிறது.

''நான்பாட நீ ஆடு கண்ணே
என் உயிரோடு உறவாடும்
கலையே நல்லிசையோடு''

என அழகாக எழுதும் அவர்,

''தேன்கூடு உலகாளும் காதல்
தெய்வச் சிலையே நீ இல்லாது புதுவாழ்வு ஏது?''

என்றும்,

''வானாடும் நிலவோடு கொஞ்சும்
விண்மீன்கள் உனைக்கண்டு அஞ்சும்''

என்றும்,

''காணாத உயிரோட்டம் நீயே - நான்
காணாத உயிரோட்டம் நீயே
அன்பின் கலைக்கூடம் தனில்
ஆடும் இளவேனில் தமிழே''

என்றும் அருமையாக பாடலை வடித்துள்ளார்.

'பெண்குலத்தின் பொன் விளக்கு' படத்திற்காக கவிஞர் வில்லிப்புத்தன் தமது முத்திரையை ஆழமாகப் பதித்து ஒரு அருமையான காதல் பாட்டைப் படைத்துள்ளார்.

''விழிவாசல் அழகான
மணிமண்டபம் - உன்
விழிவாசல் அழகான
மணிமண்டபம் - மின்னல்
விளையாடும் புதுப்பார்வை
உயிர்த்தாண்டவம்''

என்ற அடிகளில் உன்னத இலக்கியத்தின் அழகு ஆரவாரம் செய்கிறதல்லவா?

இப்பாடலில் நாயகி,

''முல்லையோடு தென்றல் சேரும் நேரம்''

என்றுபாட, நாயகன்

''முதல் முத்தம் ஒன்று கேட்டு
வண்டு பாடுதே சிங்காரம்''

என்று சொல்வதும், தொடர்ந்து நாயகி

''குறும்பு வார்த்தை ஏனோ? - பனி
கொஞ்சும் கண்கள் பாரும்''

என்று பாட, நாயகன்

''பிறை அரும்பும் இதழில் ஊறும்தேனை
எனக்குத்தா இந்த நேரம்''

என்று சொல்வதும் கவி எழிலோடு பொலிகின்றதல்லவா?

'பெண் குலத்தின் பொன்விளக்கு' படத்திற்காக பிறிதொரு பாடல் சிந்தனைச் செறிவோடு நகைச்சுவைப் பாங்கோடு அமைந்துள்ளது.

''விநோதமான உலகத்திலே - பார்
விதவிதமான பைத்தியம் - நம்ம
வீட்டுலே, ரோட்டிலே, நாட்டிலே
இப்போ கூட்டம் கூட்டமாய் பைத்தியம்''

என்ற அடிகளிலும்,

''குலவிளக்கான தன்கொண்ட மனைவி...
கூடாது என்பதோர் பைத்தியம் - கெட்ட
குணமான விலைமாதர் குரங்காக இருந்தா... ம்
ரதி என்று விரும்புகிற பைத்தியம்''

என்ற அடிகளிலும்

''பாபத்தைத் தீர்க்க பக்தி மார்க்கத்தில்
பணத்தை இறைக்குது பைத்தியம்
பழைய சோத்துக்கும் வழியில்லாமலே
பாதையில் சாகிற பைத்தியம்''

என்ற அடிகளிலும்,

''உழைத்துக் கூலியைக் கேக்குறபோது
உர்ருண்ணு உறுமுது பைத்தியம்
உலகத்துக்கெல்லாம் உழைச்சி கொடுத்திட்டு,
ஓட்டாண்டியாகிற பைத்தியம்''

என்ற அடிகளிலும் சிந்தனைக்கு விருந்தான அம்சங்கள் நிறைய உள்ளதல் லவா?

மேலும் இப்பாடலை

''மண்ணுக்குள்ளே போற மண்பொம்மை
கண்ணுக்கு ஒண்ணும் தெரியாதடி - ஞானம்மா''

என்றும்,

''...வெறும் உயிருக்கும்
உடலுக்கும், பொருளுக்கும், புகழுக்கும்
ஒட்டாமே நிக்குதடி சத்தியம் செத்துப் பிழைக்குதடி''

என்றும் தத்துவ திருஷ்டியோடு நயமுற எழுதியுள்ளார் கவிஞர்.

''பழைய சோத்துக்கும் வழியில்லாமே பாதையில் சாகிற பைத்தியங்களில்'' ஒருவராக பரிதாப சாவைத் தழுவிக் கொண்ட சிறந்த பாடலாசிரியர் வில்லிப்புத்தனைப் போற்றுவது தமிழறிந்தவர் கடமை.

இனி இப்புலவன் புனைந்த இனிய பாடல்கள் சிலவற்றை முழுமையாக துய்த்து மகிழுங்கள்.

## வாழ்வில் நீ...

*படம்: பூலோக ரம்பை*
*பாடியவர்: பி.சுசீலா*
*இசை: சி.என்.பாண்டுரங்கன்*
*ஆண்டு : 1958*

வாழ்வில் நீ மணிமகுடம்
வளரும் இடம் சிறைக்கூடம்
கடவுள் செயல் யாரறிவார்?
காலமெனும் ஊஞ்சலிலே
கண்ணே நீ கண்வளராய்!

தென்றல் தமிழ்க் காவியமே
அன்றொருநாள் உன் தந்தை
கன்னல் காதற் சோலையிலே
சொன்ன உண்மை வீண்கனவோ?

நீதிதேவன் சோதனையோ?
நானறியேன் தேன்துளியே
ஊமையாகி உன்தந்தை

உலகநீதி தவறிவிட்டார்!
கண்ணே நீ கண்வளராய்
ஜோதிநிலாத் தாதியர்கள்
சூழ்ந்திருந்தே தாலாட்ட
சூழ்நிலையின் கோலமடா
தூங்குகிறாய் மண்மீதே!
கண்ணே நீ கண்வளராய்
வான்முகில் பஞ்சணையில்
வைரமணித் தாரகைகள்
கானக்குயில் இசைதழுவும்
காலம்மாறிப் போனதடா
கண்ணே நீ கண்வளராய்
ஆ... ஆ... ஆ... (வாழ்வில் நீ)

## நான்பாட...

*படம்: மாலா ஒரு மங்கல விளக்கு*
*பாடியவர்: பி.பி.சீனிவாஸ்.*
*இசை : சி.என்.பாண்டுரங்கன்*
*ஆண்டு : 1959*

நான்பாட நீ ஆடு கண்ணே
என் உயிரோடு உறவாடும்
கலையே நல்லிசையோடு (நான் பாட)

தேன்கூடு உலகாளும் காதல்
தெய்வச்சிலையே நீ இல்லாது புதுவாழ்வு ஏது?

வானாடும் நிலவோடு கொஞ்சும்
விண்மீன்கள் உனைக்கண்டு அஞ்சும்
எழில் வளமூட்டும் விளை மின்னல்
உனைக் கண்டு அஞ்சும்!
காணாத உயிரோட்டம் நீயே - நான்
காணாத உயிரோட்டம் நீயே!
அன்பின் கலைக்கூடம் தனில்
ஆடும் இளவேனில் தமிழே! (நான்பாட)

# விழிவாசல் அழகான...

படம்: பெண்குலத்தின் பொன்விளக்கு
பாடியோர்: சீர்காழி - சுசீலா
இசை: எம்.ஏ.வேணு
ஆண்டு : 1959

அவன்: விழிவாசல் அழகான
மணிமண்டபம் - உன்
விழிவாசல் அழகான
மணிமண்டபம் - மின்னல்
விளையாடும் புதுப்பார்வை
உயிர்த்தாண்டவம்
விழிவாசல் அழகான மணிமண்டபம்

வண்டாடும் மலர்வீதி
அலங்காரமே ஆ... ஆ... ஆ...
வண்டாடும் மலர்வீதி
அலங்காரமே - என்னை
வரவேற்க வரும் இன்ப
சாம்ராஜ்யமே! (விழிவாசல்)

ஆண்: செடியில் பூவிருக்கு அழகாக
உன் சிரிப்பில் நானிருக்கேன் - உனக்காக

பெண்: கொடியில் கோணலிருக்கு எதற்காக - பூங்
கொடியிலே கோணலிருக்கு எதற்காக

ஆண்: பெண்கள் குலத்திலே நாணமிருக்கு அதற்காக

பெண்: நாணம்தான் பெண்களுக்கு நாணயம் - இந்த
நல்ல பண்புகொண்ட பெண்கள்
குடும்ப வாழ்விலே ஆலயம்

ஆண்: ஞானமொடு பேசுதிங்கே ஓவியம் - தமிழ்
வானிலாடும் தாரகை நீ
உலக மகா இலக்கியம்

பெண்: முல்லையொடு தென்றல் சேரும் நேரம்

ஆண்: முதல்முத்தம் ஒன்று கேட்டு

வண்டு பாடுதே சிங்காரம்!

பெண்: குறும்பு வார்த்தை ஏனோ? - பனி
கொஞ்சும் கண்கள் பாரும்!

ஆண்: பிறை அரும்பும் இதழில் ஊறும் தேனை
எனக்குத்தா இந்த நேரம் (விழிவாசல்)

பெண்: உன்புகழ் மாலை அழகான
கவிமாளிகை

ஆண்: புகழ்மாலை அமுதான
கவிமாளிகை - உன்
புகழ்மாலை அமுதான
கவிமாளிகை -
புதுமாலை உனைநாடி
வரும் தாரகை (புகழ்மாலை)

புனல் வான தேன்கூடு
பார் வெண்ணிலா
புனல் வான தேன்கூடு
பார் வெண்ணிலா - வந்த
பொழுதெல்லாம் உன்பாடல்
என்நெஞ்சிலே (புகழ்மாலை)

## விநோதமான உலகத்திலே...

*படம்: பெண்குலத்தின் பொன்விளக்கு*
*பாடியவர்: சீர்காழி*
*ஆண்டு : 1959*

வினோதமான உலகத்திலே - பார்
விதவிதமான பைத்தியம்! - நம்ம
வீட்டுலே ரோட்டிலே - நாட்டிலே
இப்போ கூட்டம் கூட்டமாப் பைத்தியம் (விநோதமான)

பேனா பிடிக்கிற பெரிய மனுஷனுங்க
பேச்சிலே எழுத்திலே பைத்தியம்
பெத்தவ பிள்ளையை வளக்கிற

வகையொரு பிரியமும் பாசமும் பைத்தியம்
ஆணொடு பொண்ணு அளந்து நடக்கிற
வயசிலே காதல் பைத்தியம்
ஆண்டிக்குக் கூட சமயம் கிடைச்சாக்க
அவனும் காதல் பைத்தியம் (விநோதமான)

குலவிளக்கான தன் கொண்ட மனைவியை
கூடாது என்பதோர் பைத்தியம் - கெட்ட
குணமான விலைமாதர் குரங்காக இருந்தாலும்
ரதி என்று விரும்புகிற பைத்தியம்
சொந்த மதியை இழந்திட்ட பைத்தியம்
(விநோதமான)

பாபத்தைத் தீர்க்க பக்தி மார்க்கத்தில்
பணத்தை இறைக்குது பைத்தியம்
பழைய சோத்துக்கும் வழியில்லாமே
பாதையில் சாகிற பைத்தியம்
உழைச்ச கூலியைக் கேக்குறபோது
உர்ருண்ணு உறுமுது பைத்தியம்
உலகத்துக்கெல்லாம் உழைச்சி கொடுத்துட்டு
ஓட்டாண்டியாகிற பைத்தியம் (விநோதமான)

மண்ணுக்குள்ளே போற மண்பொம்மை
கண்ணுக்கு ஒண்ணும் தெரியாதடி - ஞானம்மா
கண்ணுக்குக் கிடையாதடி - வெறும் உயிருக்கும்
உடலுக்கும் பொருளுக்கும் புகழுக்கும்
ஒட்டாமே நிக்கிதடி சத்தியம் செத்துப் பொழைக்குதடி!
(விநோதமான)

# லட்சுமணன்

வித்துவான் லட்சுமணன் 'புரட்சி இயக்குநர்', 'இசைமேதை' எஸ்.பாலசந்தர் படங்களுக்கு அதிகமான பாடல்கள் எழுதியவர்.

பாலசந்தர் இசையில் இவரெழுதிய 'பொம்மை' படப்பாடல்கள் மிக வும் பிரபலம் பெற்றவை.

''நீயும் பொம்மை நானும் பொம்மை
நினைச்சு பாத்தா எல்லாம் பொம்மை''

என்று தொடங்கும் அந்தப் பாடல் மிகவும் கருத்துச் செறிவு மிக்கதாகும்.

'பொம்மை' படத்திற்காக வித்வான் எழுதிய,

''தத்தி தத்தி நடந்து வரும் செல்ல பாப்பா
நீ இத்தனை நாள் எங்கிருந்தாய்
சொல்லு பாப்பா''

என்ற பாடல் மூலை முடுக்கில் எல்லாம் ஒலித்த அரிய பாடலாகும்.

வித்வான் யாத்த பாடல்களில் என்னை மிகமிக ஈர்த்தது எஸ்.ராஜேஸ் வரராவின் அற்புதமான இசையமைப்பில் உருவாக்கப்பட்ட ''அவள் யார்'' படப்பாடல்களாகும்.

''கண்காணும் மின்னல் தானோ
காதல் கலைதானோ?
என் வாழ்வு அன்புகீத ரூபம் நீயோ
இன்பம் காண்பேனே காணாத இன்பம் காண்பேனே''

இந்த அடிகளில் தான் எத்துணை இனிமை!

தொடர்ந்து வரும்,

"பண்பாடும் சோலைப் பூங்குயிலே
விண்பாயும் காதல் பெண் மயிலே
உல்லாசம்தான் காண்பாயே
உன் வாழ்வில் நான் கலந்ததாலே"

என்ற வரிகளில் தான் எத்துணை வசீகரம்!

இப்பாடலின் இறுதி அடிகளை,

"மங்காத வான் நிலா நீயே
உன் பார்வைத் தென்றல் வீசிடுதே"

என்று இலக்கியச் செறிவுடன் அமைத்துள்ளார் வித்வான்.

'அவள் யார்' படத்திலுள்ள,

"நான் தேடும் போதே நீ ஓடலாமோ?
ஏன் ஊடலோ வெண்ணிலாவே
வா வா..."

என்ற பாடலின் வரிகளில்தான் எத்துணை எழில்! தொடர்ந்து வரும்,

"வாடாத பூவும் மலராதபோதே
பாடாது வண்டும் கூடாமலே",

என்ற அடிகளில் தான் எத்துணை நளினம்.

இப்பாடலின் இறுதி நான்கு வரிகளும்,

"ஆறாகப் பாயும் அநுராக கீதம்
ஆனந்தமே தரும் வாழ்வில்
சேராத உள்ளம் சுவைகாண்பதேது
நீயாக வாராய் நாணாமலே"

என்றமைந்து காதல்தாகத்தை மேலான இலக்கிய பாவத்தோடு இனங் காட்டி நிற்கிற தல்லவா?

சிறந்த பாடல் ஆசிரியரான வித்வான் லட்சுமணன் சினிமா வாழ்வைத் துறந்து பிரபல ஜோதிடராக - 'பாலஜோதிடம்' பத்திரிகை ஆசிரியராக சென்னையில் இப்போது வாழ்ந்து வருகிறார்

இனி இவருடைய இரண்டு மதுரம் பொங்கும் பாடல்களை முழுமை யாக அனுபவியுங்கள்.

## கண்காணும்...

*படம் : அவள் யார்*
*பாடியவர் : பரணிகிரஹீ*
*இசை : எஸ்.ராஜேஷ்வரராவ்*
*ஆண்டு : 1959*

கண்காணும் மின்னல்தானோ
காதல் கலை தானோ
என் வாழ்வின் அன்புகீத ரூபம் நீயோ
இன்பம் காண்பேனே காணாத இன்பம் காண்பேனே!

பண்பாடும் சோலைப் பூங்குயிலே
விண்பாயும் காதல் பெண்மயிலே
உல்லாசம்தான் காண்பாயே
உன் வாழ்வில் நான் கலந்ததாலே (கண்காணும்)

கைமேவும் வீணை நீயானால்
கலைமேவும் நாதம் நானா வேன்
மங்காத வான் நிலா நீயே
உன்பார்வை தென்றல் வீசிடுதே (கண்காணும்)

## நான் தேடும்போது...

*படம்: அவள் யார்*
*பாடியவர்: பாணிக்கிரஹி*
*இசை: எஸ்.ராஜேஸ்வரராவ்*
*ஆண்டு : 1959*

நான்தேடும் போதே - நீ ஓடலாமோ?
ஏன் ஊடலோ? வெண்ணிலாவே
வா வா... (நான் தேடும்)
வாடாத பூவும் மலராத போதே
பாடாது வண்டும் கூடாமலே (நான் தேடும்)
ஆறாகப் பாயும் அநுராக கீதம்
ஆனந்தமே தரும் வாழ்வில்

சேராத உள்ளம் சுவைகாண்பதேது?
நீயாக வாராய் நாணாமலே (நான்தேடும்)

# பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்

1930 ஆம் ஆண்டு தஞ்சை மாவட்டத்திலுள்ள பட்டுக் கோட்டை யில் அரும்பிய கல்யாண சுந்தரம் 1956-இல் வெளிவந்த 'படித்த பெண்' படத்திற்குப் பாடல்கள் யாத்து திரைப்படப் பாடலாசிரியராக மலர்ந்தார்.

1959-இல் இரக்கமற்ற காலன் அந்த மகத்தான மக்கள் கவியின் இன்னுயிரைப் பறித்து கொண்டான்.

1956-இல் ஆரம்பித்து 1959 வரை மூன்றே ஆண்டுகளில் தமது சிந்தனைத் திறனால் அற்புதமான முற்போக்குப் பாடல்களையும், காதல் பாடல்களையும் தத்துவப் பாடல்களையும் எழுதி தமது தனித்துவ முத்திரையை ஆழமாகப் பதித்துவிட்டார் அந்த அமரகவி.

**''ஈடற்ற பத்தினியின் இன்பத்தைக் கொன்றவன்நான் - அவள்**
**இதயத்தில் கொந்தளித்த எண்ணத்தைக் கொன்றவன் நான்**
**வாழத் தகுந்தவளை வாழாமல் வைத்துவிட்டு**
**பாழும் பரத்தையினால் பண்பதனைக் கொன்றவன் நான்''**

மேற்காணும் அருமையான அடிகள் தன் அன்பு மனைவிக்குத் துரோகமிழைத்த ஒருவன் கண்களை இழந்து - தன் தவற்றை உணர்ந்து பாடுவதாக அமைந்தவை.

இந்தப் பாடல் 'தங்கப்பதுமை' படத்திற்காக கவிஞர் தீட்டியது.

இப்பாடலில்,

**''மனிதன் ஆரம்பமாவது பெண்ணுக்குள்ளே - அவன்**
**ஆடி அடங்குவது மண்ணுக்குள்ளே**

ஆராய்ந்து பார் மனக் கண்ணுக்குள்ளே
ஆத்திரங் கொள்ளாதே நெஞ்சுக்குள்ளே''

என்ற அடிகள் மூலம் வாழ்க்கைத் தத்துவத்தை எளிய முறையில் கவிஞர் அழகாக வடித்துள்ளார்.

இப்பாடலில்,

''சிங்காரம் கெட்டுச் சிறைப்பட்ட பாவிக்குச்
சம்சாரம் ஏதுக்கடி என் தங்கமே சம்சாரம் ஏதுக்கடி
மனைவியை குழந்தையை மறந்து திரிந்தவனை
வாழ்த்துவதாகாதடி - என் தங்கம்
மன்னிக்கக் கூடாதடி''

என்றமைந்த அடிகளில் தான் எத்துணை உருக்கம்

'தங்கப் பதுமை'க்காக கவிஞர் எழுதிய ''இன்று நமதுள்ளமே பொங்கும் புதுவெள்ளமே''

என்ற பாடலில்,

''நேற்று நம்மை கண்ட நிலா
நெஞ்சுருகி சென்ற நிலா
வாழ்த்துக்கள் சொல்லுமே
மனதினைக் கிள்ளுமே''

என்று காதல் உணர்வை இலக்கிய ஓவியமாக வரைகிறார் கவிஞர்

இப்படத்தில் இடம்பெற்ற,

''முகத்தில் முகம் பார்க்கலாம் - விரல்
நகத்தில் பவளத்தின் நிறம் பார்க்கலாம்''

என்ற பாடலையும் இலக்கியப் பாங்கோடு வடித்துள்ளார் கவிஞர்

'பதிபக்தி' படத்தில் கவிஞர், உலகோரின் சுயநலப் போக்கை - போலி அனுதாப செயற்பாட்டை மிக அழகாக

''இரை போடும் மனிதருக்கே
இரையாகும் வெள்ளாடே
இதுதான் உலகம் வீண்
அநுதாபம் கண்டு நீ
ஒருநாளும் நம்பிடாதே''

என்று எழுதியுள்ளார்.

இப்பாடலில்,

"காலொடிந்த ஆட்டுக்காக
கண்ணீர்விட்ட புத்தரும்,
கடல்போல உள்ளங்கொண்ட
காந்தி ஏசுநாதரும்
கழுத்தறுக்கும் கொடுமை கண்டு
திருந்த வழி சொன்னதுமுண்டு

என்று எழிலோடு எடுத்தியம்பி,

"காதில் மட்டும் அதைக் கேட்டு ரசிச்சாங்க - ஆனா
கறிக்கடையின் கணக்கைப் பெருக்கி வந்தாங்க!"

எனக் குத்தலாகக் கூறி முத்தாய்ப்பு வைக்கிறார்.

சினிமாப் பாடலென்றாலே காதைப் பொத்திக் கொள்ளும் இயல்பு மிக்க தமிழறிஞர் குன்றக்குடி அடிகளாரையே இந்தப் பாடல் ஈர்த்துவிட்டதென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

'கல்யாணிக்குக் கல்யாணம்' படத்தில் பட்டுக்கோட்டையாரின் பட்டனைய மென்தமிழை ஏந்திய பாடல்.

"உன்னை நினைக்கையிலே - கண்ணே
எண்ணச் கனவுக்கும் எண்ணிக்கை ஏதடி

என்று ஆரம்பிக்கிறது.

இப்பாடலில்,

"பொன்னை உருக்கிய வார்ப்படமே - அன்பு
பொங்கிடும் காதல் தேன்குடமே
தன்னந் தனியாக நாளைக்கழிப்பது
சங்கடமன்றோ தமிழ்ச்சுடரே
சந்தனக் காட்டுப் புதுமலரே"

என்று இலக்கிய அழகு பொங்க எழுதியுள்ளார் கவிஞர்

"வட்டக்கருவிழி மங்கையே - ஒளி
கொட்டும் நிலவுக்குத் தங்கையே
கட்டுக்குலையாத பட்டுத் தளிர்மேனி
கண்ணில் அபிநயம் காட்டுதே - இன்பக்
காவியத் தேனள்ளி ஊட்டுதே"

என்ற பகுதியும் கவிஞரால் உயரிய கவிதா லட்சணம் மின்னும் வண்ணம் பின்னப்பட்டுள்ளது!

''அமுத வல்லி''க்காகக் கவிஞர்,

''ஆடைகட்டி வந்த நிலவோ - கண்ணில்
மேடைகட்டி ஆடும் எழிலோ - இவள்
ஆடைகட்டி வந்த நிலவோ - குளிர்
ஓடையில் மிதக்கும் மலர்
ஜாடையில் சிரிக்கும் இவள்
காடுவிட்டு வந்த மயிலோ - நெஞ்சில்
கூடுகட்டி வாழும் குயிலோ?

என்று உவமை எழில் சிந்த இலக்கிய நயமோங்க எழுதியுள்ளார்.

இப்பாடலில்,

''அந்திவெயில் பெற்ற மகளோ - குலுங்கும்
அல்லிமலர் இனத்தவளோ - குன்றில்
உந்திவிழும் நீரலையில்
ஓடி விளையாடி மணம்
சிந்திவரும் தென்றல் தானோ - இன்பம்
தந்து மகிழ்கின்ற மானோ?

என்ற பகுதியும் அற்புதமான மொழியாட்சியுடன் புனையப்பட்டுள்ளது.

'கல்யாணப்பரிசு' படத்தில் பட்டுக் கோட்டையார் எழுதிய அனைத்துப் பாடல்களும் இனிமையானவை.'

''வாடிக்கை மறந்ததும் ஏனோ?''

எனத் தொடங்கும் பாடலில்,

''அந்தி நேரத்தின் ஆனந்தக் காற்றும்
அன்பு மணக்கும் தேன் சுவைப் பாட்டும்
அமுதவிருந்தும் மறந்து போனால்
உலகம் வாழ்வதும் ஏது - பல
உயிர்கள் மகிழ்வதும் ஏது - நெஞ்சில்
இனித்திடும் உறவை இன்பமெனும் உணர்வை
தனித்துப் பெற முடியாது?

என்று காதலின் அருமையை - ஈருயிர் ஒருயிராக வேண்டிய அவசியத்தை

அழகுத் தமிழ்ச் சித்திரமாகத் தீட்டியுள்ளார் கவிஞர்

இப்படத்திலுள்ள "உன்னைக் கண்டு நான் வாட " எனத் தொடங்கும் பாடலில்,

"நெஞ்சமும் கனலாகி நீறாகும் போது
நிம்மதி என் வாழ்வில் இனியேது?
கொஞ்சிடும் மொழிகேட்டு மகிழ்ந்தவள் எங்கே?
குலத்தின் விளக்காய் திகழ்ந்தவளெங்கே?
கண்ணுக்குள் நடந்த காட்சிகளெல்லாம்
கனவாகிப் போனதடா'! கனவாகிப் போனதடா"

என்று காதலின் மகோன்னதத்தை வைரமணித் தமிழாகத் தரும் கவிஞர்,

"ஆசைக்கு அணைபோட்ட அறிவான நங்கை
அன்புக்குப் பொருள் சொன்ன அருள் மங்கை
பாசத்தின் சுமையோடு பறந்து சென்றாளே
பழகும் உன்னையும் மறந்து சென்றாளே
கண்டதும் நினைவில் கொண்டதும் முடிவில்
கதையாகிப் போனதடா! கதையாகிப் போனதடா"

என்றெழுதி, நெஞ்சுருகி நேத்திரங்கள் நீர் சொரியும் நிலைக்கு நேயர்களை தமது பாத்திறனால் கொண்டு போகிறார்!

இப்படத்திலுள்ள,

"காதலிலே தோல்வி உற்றான் காளை ஒருவன்"

எனத் தொடங்கும் பாடலில்,

"அன்புமயில் ஆடலுக்கு மேடை அமைத்தான்
துன்பமெனும் நாடகத்தைக் கண்டு களித்தான்"

என்று ஜீவனுள்ள தமிழைப் பெய்கிறார் பட்டுக்கோட்டையார்.

இந்தக் கவிஞர் திரைப்படப் பாடல்களை முற்போக்குச் சிந்தனைகளை முழக்குவதற்குரிய ஆயுதமாகவும் கையாண்டுள்ளார்.

'புதுமைப் பெண்' படத்திற்காக,

"பொங்காத பெருங்கடல் பொங்கி வந்தது போல்"

எனத்தொடங்கும் பாடலில் பரிதாபத்திற்குரிய சேரி மக்களுக்காக ஆவேசமாகக் குரல் கொடுக்கிறார்.

''நீதியின் வெற்றியடா சேரியின் வெற்றி - அதை
நிரந்தர மாக்குதுபார் பொதுஜன சக்தி''

எனச் சொல்லுமவர், தொடர்ந்து,

''பகலும் இரவும் மாடாய் உழைத்து
பட்டினி கிடந்து ஓடாய் இளைத்து
பயந்து பயந்து காலங் கழித்து
நலிந்த எளியோரை வலியவர் பார்த்து
போன ஜென்மத்தின் வினையென்றும்
விதியென்றும் சொல்லி வச்சாங்க - அவங்க
பொழச்சிக்கிட்டாங்க - அதைப்
புரிஞ்ச மக்களும் நல்ல சமயத்தில்
முழிச்சிக்கிட்டாங்க - ஆமா
முழிச்சிக் கிட்டாங்க''

என்று வீறோடு எழுதுகிறார்.

'திருடாதே' படத்திற்காக கவிஞர் நேர்மையான உழைப்பே கை கொடுக்கும் என்பதனை வலியுறுத்தி,

''திருடாதே பாப்பா திருடாதே''

என ஆரம்பமாகும் பாட்டில்,

''சிந்தித்துப் பார்த்துச் செய்கையைமாத்து - தவறு
சிறிசாய் இருக்கையில் திருத்திக்கோ''

என்றும்,

''திருடராய்ப் பார்த்து திருந்தாவிட்டால்
திருட்டை ஒழிக்க முடியாது''

என்றும், கூறி உண்மையான பொதுவுடமைச் சமுதாயம் பூத்து விரிந்தால் அங்கே திருட்டு நிகழாது என்பதனை,

''கொடுக்கிறகாலம் நெருங்குவதால் - இனி
எடுக்கிற அவசியம் இருக்காது

என்று அழகாகக் கூறுகிறார்.

பாடலின் இறுதியடிகளில்,

''உழைக்கிற நோக்கம் உறுதியாயிட்டா
கெடுக்கிற நோக்கம் வளராது!

மனம் மேலும் கீழும் புரளாது''

என்று ஆணித்தரமாக அறைகிறார்.

கவிஞர் தூங்கிக் கொண்டிருக்கும் எமது சமுதாயத்திற்கு விழிப்புணர்வை ஊட்டும் வண்ணம் 'நாடோடி மன்னன்' படத்தில், இடம்பெற்ற,

''தூங்காதே தம்பி தூங்காதே''

எனத் தொடங்கும் பாடலில்,

''நல்ல பொழுதையெல்லாம் தூங்கிக் கெடுத்தவர்கள்
நாட்டைக் கெடுத்ததுடன் தானுங்கெட்டார் - சிலர்
அல்லும் பகலும் தெருக்கல்லாயிருந்து விட்டு
அதிர்ஷ்டமில்லையென்று அலட்டிக் கொண்டார்''

என்று கருத்துச் செறிவோடு எழுதியுள்ளார்.

'நாடோடி மன்னன்' படத்தில் பாடுபடும் பாட்டாளி வர்கத்தின் மேம்பாட்டைக் கருத்தில் கொண்டு கவிஞர்,

''.....
காடு வெளைஞ் சென்ன மச்சான் - நமக்கு
கையுங் காலுந்தானே மிச்சம்''

என்று நாயகிபாட, நாயகன்,

''இப்போ காடுவெளையட்டும் பெண்ணே நமக்கு
காலமிருக்குது பின்னே
மண்ணைப் பொளந்து சுரங்கம் வெச்சு
பொன்னை எடுக்க கனிகள் வெட்டி
மதிலுவெச்சு மாளிகை கட்டி
கடலில் மூழ்கி முத்தையெடுக்கும்
வழிகாட்டி மரமான தொழிலாளிகள் வாழ்க்கையிலே
பட்ட துயரினிமாறும் - ரொம்பக்
கிட்ட நெருங்குது நேரம்''

என்று பாடுவதாகப் பாடலை அமைத்து தமது கொள்கைப் பற்றை நிறுவுகிறார் ''அரசிளங்குமரி''யில இடம்பெற்ற கவிஞரின்,

சன்னப்பயலே சின்னப் பயலே சேதிகேளடா'

என்று தொடங்கும் பாடலிலும்,

''தனிஉடமைக் கொடுமைகள் தீர

தொண்டு செய்யடா - நீ
தொண்டு செய்யடா!
தானாய் எல்லாம் மாறும் என்பது
பழைய பொய்யடா - தம்பி
பழைய பொய்யடா"

என்று ஆவேசமாக முற்போக்கு முரசு கொட்டுகிறார்.

'காலம் வரும் காத்திருப்போம்' என்றால் அது நடக்காது! நாமே தனி உடமைக் கொடுமைகளைத் தவிடு பொடியாக்கி பொன்னான பொதுவுடமைக் காலத்தை நிர்மாணிப்போம் என்ற கவிஞரின் எழுச்சிப் பாடல் நம்மை சிலிர்க்க வைக்கிறதல்லவா?

இப்படியாக உன்னதமான முற்போக்குப் பாடல்களையும், காதல் பாடல்களையும் எழுதி தமக்கு வாய்த்த மூன்று வருடகாலத்திற்குள்ளாகவே ஆழமான தாக்கத்தைத் திரையுலகில் நிறுவினார் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்.

1959-இல் இந்த மகத்தான மக்கள் கவிஞர் மூளைப்பகுதியிலுள்ள இரத்தக் குழாய் வெடித்ததினால் மரணத்தைத் தழுவிக் கொண்டார். பட்டுக்கோட்டையார் மரணித்த போது கண்ணதாசன் நெஞ்சுருகி தென்றல் 10.10.59 இதழில்.

**"திரையுலகில் பாட்டெழுதுவோர் வரலாம்; போகலாம்! ஆனால் ஒரு பட்டுக் கோட்டை கல்யாணசுந்தரம் இனி வரமாட்டான்! ஆரம்பமானான் பெண்ணுக்குள்ளே! அவன் ஆடி அடங்கினான் மண்ணுக்குள்ளே! திரையுலகில் அவனே தத்துவஞானி! ஆழ்ந்த சிந்தனை, அழுத்தமான சொல்லாட்சி, ஒரு வரிக்கு மறுவரி உயிர் கொடுக்கும் தன்மை, அவன் எழுதிய பாட்டெல்லாம் அப்படி அமைந்தன"**

என்று எழுதியுள்ளார்.

சரி. இனி மக்கள் கவிஞரின் மகத்தான சில பாடல்களை முழுமையாகக் காண்போமா!

## இரைபோடும் மனிதருக்கே...

படம்: 'பதிபக்தி'
பாடியவர்: பி.சுசீலா
இசை: விஸ்வநாதன் - ராமமூர்த்தி
ஆண்டு : 1958

இரைபோடும் மனிதருக்கே
இரையாகும் வெள்ளாடே
இதுதான் உலகம்
வீண் அனுதாபம் கண்டு நீ
ஒரு நாளும் நம்பிடாதே!

டேயண்ணா... டேயண்ணா... டேயண்ணா
ட்ரியோ டேயண்ணா ட்ரியோ டேயண்ணா
முறையோடு உழைத்துண்ண
முடியாத சோம்பேறி
நரிபோல திரிவார் புவிமேலே - நல்ல
வழியோடு போகின்ற
வாய்பேசா உயிர்களை
வதச்சு வதச்சு தின்பார் வெறியாலே (இரை)

காலொடிந்த ஆட்டுக்காக
கண்ணீர்விட்ட புத்தரும்
கடல் போல் உள்ளங்கொண்ட
காந்தி ஏசுநாதரும்
கழுத்தறுக்கும் கொடுமை கண்டு
திருத்த வழி சொன்னதும் உண்டு
காதில் மட்டும் கேட்டு
அதை ரசிச்சாங்க - ஆனா
கறிக்கடையின் கணக்கைப் பெருக்கி வந்தாங்க!
(இரை)

## உன்னை நினைக்கையிலே...

படம்: 'கல்யாணிக்கு கல்யாணம்
பாடியவர்: டி.எம்.எஸ்.

ஆண்டு : 1959

உன்னை நினைக்கையிலே - கண்ணே
எண்ணக் கனவுக்கும் எண்ணிக்கை ஏதடி (உன்னை)
பொன்னை உருக்கிய வார்ப்படமே - அன்பு
பொங்கிடும் காதல் தேன்குடமே!
தன்னந்தனியாக நாளைக் கழிப்பது
சங்கடமன்றோ தமிழ்ச் சுடரே!
சந்தனக் காட்டுப் புதுமலரே! (உன்னை)
வட்டக்கருவிழி மங்கையே - ஒளி
கொட்டும் நிலவுக்குத் தங்கையே
கட்டுக் குலையாத பட்டுத் தளிர் மேனி
கண்ணில் அபிநயம் காட்டுதே - இன்பக்
காவியத் தேனள்ளி ஊட்டுதே! (உன்னை)

## சேரியின் வெற்றி...

*படம்: 'புதுமைப் பெண்'*
*பாடியோர்: டி.எம்.எஸ். - குழுவினர்*
*இசை: டி.ஜி.லிங்கப்பா*
*ஆண்டு : 1959*

பொங்காத பெருங்கடல் பொங்கி வந்தது போல்
பொங்குது உள்ளமெல்லாம் அன்பில் முழக்குதடா
போகாத துன்பமெல்லாம் போனதே என்றும்
தீராத சண்டைகளும் தீர்ந்ததடா
உரிமை நிலைத்ததடா உண்மை பிழைத்ததடா
உழைப்பவன் கேள்வியை உலகம் மதித்ததடா
நீதியின் வெற்றியடா சேரியின் வெற்றி - அதை
நிரந்தரமாக்குது பார் பொதுஜன சக்தி! (நீதியின்)
ஜாதிகள் பேசி நம்மைத் தள்ளிவச்சி வாழ்ந்தவங்க
சாக்கடைப் பூச்சிகளாய் ஏழைகளை நினைச்சவங்க
தனக்கே ஊர் முழுதும் சொந்தமென்று வளைச்சவங்க

சட்டங்கள் மாறிவரும் நேரம் என்ன ஆனாங்க எல்லாம்
சரிசமமாப் போனாங்க! (நீதியின்)

பகலும் இரவும் மாடாய் உழைத்து
பட்டினி கிடந்து ஓடாய் இளைத்து
பயந்து பயந்து காலங் கழித்து
நலிந்த எளியோரை வலியவர் பார்த்து
போன ஜென்மத்தின் வினையென்றும்
விதியென்றும் சொல்லி வச்சாங்க - அவங்க
பொழச்சிக் கிட்டாங்க - அதை
புரிஞ்ச மக்களும் நல்ல சமயத்தில்
முழிச்சிக் கிட்டாங்க - ஆமா
முழிச்சிக் கிட்டாங்க (நீதியின்)

கொத்தும் பணக்கழுகு கொள்ளைப் பெருச்சாளி
எத்திப் பிழைக்கவே சுத்தும் நரிக்கூட்டம்
ரத்தவெறி கொண்டலையும் யுத்தப் பெரும் முதலை
திட்டம் உடைந்தது சித்தம் தெளிந்தது
தேசத்தில் மாசற்ற தீபம் பிறந்தது
ஒற்றுமை மக்களின் ஒற்றுமை வந்தது
உலகம் விடிந்ததும் கலகம் ஒழிந்தது - சோர்ந்த
கைகள் உயர்ந்தது! (நீதியின்)

## ஆடை கட்டி...

*படம்: 'அமுதவல்லி' ஆண்டு : 1959*
*பாடியோர்: டி.ஆர்.மகாலிங்கம் - பி.சுசீலா*
*இசை: விஸ்வநாதன் - ராமமூர்த்தி*

ஆ: ஆடைகட்டி வந்த நிலவோ? - கண்ணில்
மேடை கட்டி ஆடும் எழிலோ? - இவள்
ஆடை கட்டி வந்த நிலவோ - குளிர்
ஓடையில் மிதக்கும் மலர்
ஜாடையில் சிரிக்கும் இவள்
காடு விட்டு வந்த மயிலோ - நெஞ்சில்
கூடு கட்டி வாழும் குயிலோ? (ஆடை)

பெ: துள்ளித் துள்ளி ஆடுமின்ப லோக மங்கை
எல்லையற்ற ஆசையிலே ஓடி வந்தாள்
தள்ளிவிட்டுப் போனபின் தேடி வந்தாள்
கிளை தானிருந்தும் கனியே சுமந்து
தனியே கிடந்த் கொடிதானே...
கண்ணாளனுடன் கலந்தானந்தமே பெற
காவினில் வாடும் கிளிதானே?

ஆ: ஓ... ஓ...
அந்திவெயில் பெற்றமகளோ? - குலுங்கும்
அல்லிமலர் இனத்தவளோ - குன்றில்
உந்திவிழும் நீரலையில்
ஓடி விளையாடி மணம்
சிந்திவரும் தென்றல் தானோ? - இன்பம்
தந்து மகிழ்கின்ற மானோ?

பெ: அன்புமனம் கூடுவதில் துன்பமில்லை!

ஆ: அஞ்சி அஞ்சி ஓடுவதில் இன்பமில்லை!

பெ: வீணை மட்டும் இருந்தால் நாதமில்லை

ஆ/பெ: இதயம் கனிந்து எதையும் மறந்து இருவர் மகிழ்ந்து உறவாட
நன் நேரமிதே! மனம் மீறிடுதே!
வனமாளிகை ஓரம் ஆடிடுவோம் (ஆடை)

## திருடாதே...

*படம்: 'திருடாதே'*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: எஸ்.எம். சுப்பையா நாயுடு*
*ஆண்டு : 1961*

திருடாதே பாப்பா திருடாதே!
வறுமை நிலைக்குப் பயந்துவிடாதே
திறமை இருக்கு மறந்து விடாதே (திரு)

சிந்தித்துப் பார்த்துச் செய்கையை மாத்து - தவறு

சிறிசாய் இருக்கையில் திருத்திக்கோ
தெரிஞ்சும் தெரியாமே நடந்திருந்தா - அது
திரும்பவும் வராமே பாத்துக்கோ (திரு)

திட்டம் போட்டுத் திருடற கூட்டம்
திருடிக் கொண்டே இருக்குது! - அதைச்
சட்டம் போட்டுத் தடுக்கிற கூட்டம்
தடுத்துக் கொண்டே இருக்குது!
திருடராய்ப் பார்த்துத் திருந்தாவிட்டால்
திருட்டை ஒழிக்க முடியாது! (திரு)

கொடுக்கிற காலம் நெருங்குவதால் - இனி
எடுக்கிற அவசியம் இருக்காது
இருக்கிறதெல்லாம் பொதுவாய் போனால்
பதுக்குற வேலையும் இருக்காது
ஒதுக்குற வேலையும் இருக்காது!

உழைக்கிற நோக்கம் உறுதியாயிட்டா
கெடுக்கிற நோக்கம் வளராது!
மனம் கீழும் மேலும் புரளாது (திரு)

## தஞ்சமென்று வந்தவரை...

*படம்: 'கலையரசி'*
*பாடியவர்: சீர்காழி*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1963*

தஞ்சமென்று வந்தவரை தாய்போல ஆதரித்து
வஞ்சகரின் செயல்களுக்கு வாள் முனையில் தீர்ப்பளித்து
அஞ்சாத நெஞ்சில் அன்புக்கு இடங்கொடுத்து
அறங்காக்கும் மக்களிடம் பார்த்த வித்தையை சொல்லட்டுமா

அதிசயம் பார்த்தேன் மண்ணிலே - அது
அப்படியே நிக்குது கண்ணிலே - நான்
அதிசயம் பார்த்தேன் மண்ணிலே - அது
அப்படியே நிக்குது கண்ணிலே

மூணு பக்கமும் கடல் தாலாட்டுது.- தன்
மானமுள்ள மக்களைப் பாராட்டுது
வானுயரும் மலையில் அருவி பெருகியே
வந்து வந்து நிலத்தை நீராட்டுது - பல
வளம் பெருகி மறவர் பேர் நாட்டுது (அதிசயம்)

மலையைச் செதுக்கிவச்ச சிலையிருக்கு - அதில்
மனங்கவரும் அழகுக் கலையிருக்கு
மானிருக்கு வண்ண மயிலிருக்கு
செந்தேனிருக்கு வீரச் செயலிருக்கு (அதிசயம்)

அங்கே-
சந்தன மரக்கிளையும் தமிழ்க் கடலும் - தழுவி
சந்தமிசைத்து த் தென்றல் தவழ்ந்து வரும்
செந்தாழை மலர்த் தொட்டு மணம் சுமந்து வரும்
இங்கே-
தங்கிட நிழலுமில்லைப் பொங்கிடக் கடலுமில்லை - சற்று
நேரங்கூட வெயில் மறைவதில்லை
நம்மைத் தழுவிடத் தென்றலேதும் வருவதில்லை
(அதிசயம்)

# பி.கே.முத்துச்சாமி

புலவர் ஏ.கே. வேலனார் தயாரித்த சில படங்களில் காலத்தால் அழியாத அருமையான பாடல்களைத் தீட்டியவர் கவிஞர் பி.கே.முத்துச் சாமி.

'தை பிறந்தால் வழி பிறக்கும்' படத்தில் நாட்டுப்புறப் பாடல்களின் சாயல்கள் மிகுந்த,

''மண்ணுக்கு மரம் பாரமா
மரத்துக்கு இலை பாரமா
கொடிக்கு காய் பாரமா - பெற்றெடுத்த
குழந்தை தாய்க்குப் பாரமா?''

என்று எழிலோங்க எழுதுகிறார் கவிஞர்.

''வாடிய நாளெல்லாம்
வருந்தி வருந்தி தவமிருந்து
தேடிய நாள் தன்னில்
செல்வமாய் வந்தவளே''

என்ற அடிகளில் தான் எத்துணை உயிர்ப்பு!

தமது மழலையைப் பார்த்து தாய்,

''மலடி மலடி என்று
வையகத்தார் ஏசாமல்
தாயென்ற பெருமைதனை
மனம் குளிர தந்தவளே''

என்று பெருமிதமாய் பாடுவது மனத்தில் ரம்மியத்தை தோற்றுவிக்கும் வண்ணம் அமைந்துள்ளதல்லவா?

இந்தப் பாடலில்,

''அழுதால் அரும்புதிரும்
அண்ணாந்தால் பொன்னுதிரும்
சிரித்தால் முத்துதிரும்
வாய்திறந்தால் தேன் சிதறும்''

என்ற அடிகளில் உன்னதமான கவியழகு பொலிகிறதல்லவா?

'பொன்னித் திருநாள்' படத்திற்காகக் கவிஞர் முத்துச்சாமி,

''ஏன் சிரித்தாய் என்னைப் பார்த்து - உன்
எழில் தன்னைப் பாடவா தமிழைச் சேர்த்து

என்று புலமைச் செறிவோடு தமது பாடலை ஆரம்பிக்கிறார். தொடர்ந்து,

''விந்தைகள் பேசும் விண்மீன்கள் - கூட்டத்திலே
விளையாடும் வெண்மதி நீதானா
எந்தை முன்னோர்கள் இயலிசை நாடகம்
பயின்றதெல்லாம் உன்னிடம்தானா''

என்று நயம் பொங்க எழுதுகிறார். மேலும்,

''சோலை நடுவிலே தூயதமிழ் பபாடும்
நீலக் குயிலும் நீதானா?
கானில் வாழ்ந்திடும் மானின் இனத்திலே
கவரிமான் என்பது உன்னினம் தானா?''

என்று குறிப்பிட்டுள்ளது முத்துச்சாமி மொழி வளம் மிக்க கவிஞர் என்பதனை உறுதி செய்கிறதல்லவா?

''காவேரியின் கணவன்'' படத்திற்காகக் இக்கவிஞர்,

''கன்னிவயது இளம் பருவத்திலே
கணவன் என்ற உருவத்திலே
யாரோ எனக்கு மாலையிட்டார் - அவர்
ஊர் பேர் தெரியாமல் பிரிந்து விட்டார்''

என்றோர் பாடலை எடுப்பாக எழுதியுள்ளார். இப்பாடலில்,

''இதயமில்லாதவர் செயலாலே
இல்லறப் படகும் கவிழ்ந்ததடா

சிதறிய நாங்கள் இதுவரையில்
திரும்பவும் ஒன்றாய் சேரவில்லை''

என்ற வரிகள் எமது விழிகளை நனைக்கின்றன அல்லவா?

'மண்ணுக்கு மரம் பாரமா'' பாடல் போல் மழலைச் செல்வத்தைப் பற்றிக் 'காவேரியின் கணவன்' படத்தில் ஓர் அருமையான பாடல் படைத்துள்ளார் கவிஞர்.

''சின்ன ச் சின்ன நடை நடந்து
செம்பவள வாய் திறந்து
அம்மா என்று நீ அழைக்கையிலே
அமுதகானம் பொழியுதடா''

என்று முதல் நான்கு வரிகளையும் அமைத்த கவிஞர்.

''விண்ணிலாடும் வெண்ணிலவே
வீட்டிலாடும் மணிவிளக்கே
உன்னில் உயர்ந்தவர் உலகில் யாரே
கண்ணிலாடும் காவியமே''

என்று அடுத்த நான்கு வரிகளையும் இலக்கிய அழகோடு அமைத்துள்ளார்.

இனி கவிஞர் முத்துச்சாமியின் முத்தான நான்கு பாடல்களையும் முழுமையாக அனுபவியுங்கள்.

## ஏன் சிரித்தாய்...

*படம்: 'பொன்னித் திருநாள்'*
*பாடியவர்: பி.பி.சீனிவாஸ்.*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1960*

ஏன் சிரித்தாய் என்னைப் பார்த்து - உன்
எழில் தன்னைப் பாடவா தமிழைச் சேர்த்து (ஏன்)

விந்தைகள் பேசும் விண்மீன்கள் கூட்டத்திலே
விளையாடும் வெண்மதி நீதானா?
எந்தை முன்னோர்கள் இயலிசை நாடகம்
பயின்றதெல்லாம் உன்னிடம் தானா! (ஏன்)

சோலை நடுவிலே தூயதமிழ்ப் பாடும்
நீலக்குயிலும் நீதானா?
கானில் வாழ்ந்திடும் மானின் இனத்திலே
கவரிமான் என்பது உன்னினம் தானா? (ஏன்)

## மண்ணுக்கு மரம் பாரமா...

*படம்: 'தை பிறந்தால் வழி பிறக்கும்'*
*பாடியவர்: எம்.எஸ்.ராஜேஸ்வரி*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1958*

மண்ணுக்கு மரம் பாரமா
மரத்துக்கு இலை பாரமா
கொடிக்குக் காய் பாரமா - பெற்றெடுத்த
குழந்தை தாய்க்குப் பாரமா? (மண்ணுக்கு)
வாடிய நாளெல்லாம்
வருந்தி வருந்தி தவமிருந்து
தேடிய நாள் தன்னில்
செல்வமாய் வந்தவளே (மண்ணுக்கு)
மலடி மலடி என்று
வையகத்தார் ஏசாமல்
தாயென்ற பெருமைதனை
மனம்குளிர தந்தவளே
கொடிக்கு காய் பாரமா - பெற்றெடுத்த
குழந்தை தாய்க்குப் பாரமா
அழுதால் அரும்புதிரும்
அண்ணாந்தால் பொன்னுதிரும்
சிரித்தால் முத்துதிரும்
வாய்திறந்தால் தேன்சிதறும்
பிள்ளையைப் பெற்றுவிட்டால் போதுமா
பேணி வளர்க்க வேணும் தெரியுமா
அல்லலைக் கண்டு மனசு அஞ்சுமா

குழந்தை அழுவதைக் கேட்டு மனசு மிஞ்சுமா
(மண்ணுக்கு)

## கன்னி வயது...

படம்: 'காவேரியின் கணவன்'
பாடியவர்: சுசீலா
இசை: மகாதேவன்
ஆண்டு : 1959

கன்னி வயது இளம் பருவத்திலே
கணவன் என்ற உருவத்திலே
யாரோ எனக்கு மாலையிட்டார் - அவ்வர்
ஊர் பேர் தெரியாமல் பிரிந்துவிட்டார் (கன்னி)

தாலிகட்டிய நாள் முதலாய்
தலைவரின் நிழலையும் கண்டதில்லை!
ஆழிசூழ்ந்த உலகத்திலே - என்னை
அவதிக்கு ஆளாக்கி பிரிந்து விட்டார் (கன்னி)

இதயமில்லாதவர் செயலாலே
இல்லறப்படகும் கவிழ்ந்ததடா!
சிதறிய நாங்கள் இதுவரையில்
திரும்பவும் ஒன்றாய்ச் சேரவில்லை (கன்னி)

## சின்னச் சின்ன...

படம்: 'காவேரியின் கணவன்'
பாடியவர்: சுசீலா
இசை: மகாதேவன்
ஆண்டு : 1959

சின்னச் சின்ன நடைநடந்து
செம்பவள வாய் திறந்து
'அம்மா' என்று நீ அழைத்தால்
அமுதகானம் பொழியுதடா! (சின்ன)

விண்ணிலாடும் வெண்ணிலவே
வீட்டிலாடும் மணிவிளக்கே
உன்னில் உயர்ந்தவர் உலகில் யாரோ?
கண்ணிலாடும் காவியமே! (சின்ன)

ஆடிவரும் தென்றலென்பார்
பாடிவரும் அருவியென்பார்
தேடிவரும் செல்வம் உன்போல்
தெய்வம் வேறு இல்லையடா? (சின்ன)

கொஞ்சும் மழலைக் கேட்கையிலே
குழலும் யாழும் பொய்யன்றோ!
மேலும் தமிழே உன்னையன்றி
வேறு சொந்தம் இல்லையடா! (சின்ன)

# முத்துக்கூத்தன்

பழந்தமிழர் போற்றிய பாரம்பரியக் கலையான பொம்மலாட்டக் கலையினை நாடெங்கும் நடத்திவரும் கவிஞர் முத்துக் கூத்தன் நிறைந்த தமிழ்ப் புலமை மிக்கவர்.

இவர் சில நல்ல பாடல்களைத் திரைப் படங்களில் தீட்டியவர்.

'நாடோடி மன்னன்' படத்திற்காக,

''செந்தமிழே வணக்கம் - ஆதித்
திராவிடர் வாழ்வினைச் சீரோடு விளக்கும்
செந்தமிழே வணக்கம்''

எனத்தொடங்கும் தமிழுணர்ச்சிப் பாடலைத் தீட்டியுள்ளார்.

இப்பாடலில்,

''சாதி சமயங்கள் இல்லா - நல்ல
சட்ட அமைப்பினைக் கொண்டே
நீதிநெறி வழிகண்டாய் எங்கள்
நெஞ்சினிலும் வாழ்வினிலும் ஒன்றாகி நின்றாய்!

என்றமைந்த பகுதியும் சிறப்பாக உள்ளது.

'அரசகட்டளை' படத்திற்காக,

''ஆயிரம் கைகள் மறைத்து நின்றாலும்
ஆதவன் மறைவதில்லை
ஆணைகள் இட்டே யார் தடுத்தாலும்
அலைகடல் ஓய்வதில்லை''

என்று வீறோடு, இலக்கியச் சீரோடு எழுதியுள்ளார் முத்துக்கூத்தன்.

இப்பாடலிலுள்ள,

''இடையென்னும் கொடியாட நடமாடி வா - குழல்
இசை கொஞ்சி விளையாட நீயாடி வா
தடைமீறிப் போராடச் சதிராடி வா - செந்
தமிழே நீ பகைவென்று முடி சூடிவா

என்ற அடிகளில் எழுச்சியும், இலக்கிய அழகும் மின்னுகிறதல்லவா?

இப்பாடலில்,

''உயிருக்கு நிகர் இந்த நாடல்லவோ - அதன்
உரிமைக்கு உரியவர்கள் நாமல்லவோ''

என்ற வரிகள் தமிழினத்தின் எழுச்சிக்கு வித்திடும் வீரவரிகள் அல்லவா?

இப்பாடலின் இறுதி அடிகளாக,

புயலுக்கும் நெருப்புக்கும் திரை போட வோ மக்கள்
தீர்ப்புக்கு எதிராக அரசாளவோ?

என்றமைத்து தாம் சாதாரண பாடலாசிரியரல்லர் சத்தான பாட்டெழுதும் முத்தான கவி என்பதனை சிறப்பாக நிறுவுகிறார் முத்துக்.கூத்தன்!

இனி கவிஞரின் இரு பாடல்களை முழுமையாகப் பாருங்கள்.

## செந்தமிழே...

*படம்: நாடோடி மன்னன்*
*இசை: எஸ்.எம்.சுப்பையா நாயுடு*
*ஆணடு : 1958*

செந்தமிழே வணக்கம் - ஆதித்
திராவிடர் வாழ்வினைச் சீரோடு விளக்கும்
(செந்தமிழே)
ஐந்து இலக்கணங்கள் ஆய்ந்தே உலக
அரங்கினுக்கே முதன் முதல் நீ தந்ததாலும்
மக்களின் உள்ளமே கோயில் என்ற
மாசற்ற கொள்கையில் வாழ்ந்ததனாலே
பெற்ற அன்னை தந்தை அன்றி

பிறிதொரு தெய்வம் இலை என்பதாலே (செந்தமிழே)

சாதி சமயங்கள் இல்லா - நல்ல
சட்ட அமைப்பினைக் கொண்டே
நீதிநெறி வழிகண்டாய் எங்கள்
நெஞ்சினிலும் வாழ்வினிலும் ஒன்றாகி நின்றாய்!
(செந்தமிழே)

## ஆயிரம் கைகள்...

*படம்: அரச கட்டளை*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை:கே.வி. மகாதேவன்*
*ஆண்டு : 1967*

ஆயிரம் கைகள் மறைத்து நின்றாலும்
ஆதவன் மறைவதில்லை!
ஆணைகள் இட்டே யார் தடுத்தாலும்
அலைகடல் ஓய்வதில்லை!

ஆடிவா ஆடிவா ஆடிவா
ஆடப்பிறந்தவளே ஆடிவா - புகழ்
தேடப் பிறந்தவளே பாடிவா (ஆட)

இடையென்னும் கொடியாட நடமாடிவா - குழல்
இசைகொஞ்சி விளையாட நீயாடி வா
தடைமீறிப் போராடச் சதிராடி வா -.
செந்தமிழே நீ பகைவென்று முடிசூடிவா (ஆடி)

மயிலாட வான்கோழி தடை செய்வதோ? - மாங்
குயில்பாடக் கோட்டான்கள் குறை சொல்வதோ?
முயற்கூட்டம் சிங்கத்தின் எதிர் நிற்பதோ? - அதன்
முறையற்ற செயலைநாம் வரவேற்பதோ? (ஆடிவா)

உயிருக்கு நிகர்இந்த நாடல்லவோ?
உரிமைக்கு உரியவர்கள் நாமல்லவோ?
புயலுக்கும் நெருப்புக்கும் திரைபோடவோ? - மக்கள்
தீர்ப்புக்கு எதிராக அரசாளவோ? (ஆடிவா)

# வாலி

1959-இல் வெளிவந்த 'அழகர் மலைக்கள்வன்' படத்தின் மூலம் திரைப்படப் பாடலாசிரியராக அரும்பியவர் வாலி.

1963-இல் வெளிவந்த கே.எஸ்.ஜி.யின் 'கற்பகம்' படத்தின் மூலமே அவருக்குப் பெரும் புகழ் கிடைத்தது.

கண்ணதாசனின் பலமான ஆதிக்கம் இருந்த அந்தக்கால கட்டத்தில் 'கற்பகம்' படத்திற்கு அனைத்துப் பாடல்களையும் அபாரமாக எழுதித் திரையுலகில் தம்மிடத்தை அழுத்தமாகத் தாபித்தார் இவர்.

'கற்பகம்' படத்தில்,

"அத்தைமடி மெத்தையடி
ஆடி விளையாடம்மா
ஆடும்வரை ஆடிவிட்டு
அல்லிவிழி மூடம்மா"

என்ற பாடல் அடிகளிலும்

அப்படத்திலுள்ள,

"மன்னவனே அழலாமா?"

பாடலின்,

"மண்ணை விட்டுப் போனாலும்
மனதை விட்டுப் போகவில்லை
கண்ணை விட்டுப் போனாலும்
கருத்தை விட்டுப் போகவில்லை"

என்ற அடிகளிலும் தான் எத்தனை உருக்கம்.

1963-இல் வெளிவந்த ''நீங்காத நினைவு'' படத்தில் வாலி ஒரு அற்புதமான பாடல் வடித்துள்ளார்.

**''ஓ... ஓ... சின்னஞ்சிறு மலரை மறந்து விடாதே''**

என்று சிறுவன் பாட,

சிறுமி,

**''சிரிக்க வைத்தே என்னை வருந்த விடாதே''**

என்று பாடுகிறாள். தொடர்ந்து அவர்கள்,

**''வண்ணப் புறா போல் மண்ணில் பிறந்தோம்**
**''மண்ணில் பிறந்தே விண்ணில் பறந்தோம்''**
**''தூரம் தூரம் நம் பயணமென்றாலும்**
**துணிவுடன் நாமே தொடர்ந்து செல்வோமே''**
**''தொடர்ந்து செல்வோமே''**
**''சேர்ந்து வராமல் பிரிந்து விடாதே''**
**''சிரிக்க வைத்தே என்னை வருந்த விடாதே''**
**''புதுவிதமான உலகத்தில் நாமே**
**பொன்மயமான வீடமைப்போமே**
**வீட்டினில் இன்ப விளக்கு வைப்போமே''**
**''காற்று வராமல் காத்திருப்போமே''**
**''காத்திருப்போமே''**

இப்படியாக ஒவ்வொரு வரியையும் ஜீவ துடிப்போடு வாலி எழுதியுள்ளார்.

'தீதார்' என்ற பேரில் இந்தியில் வெளிவந்த அற்புத காதல் படமே 'நீங்காத நினைவு' என்ற பெயரில் தமிழில் வெளிவந்தது.

'தீதார்' படத்திற்கு இந்தியாவின் மகத்தான இசையமைப்பாளர் நௌஷாத் இசையமைத்தார்.

கே.வி.மகாதேவன் நௌஷாத் இசையை அப்படியே தழுவி இந்தப் பாடலை உருவாக்கியுள்ளார். இந்தப் பாடலின் ஈடுஇணையற்ற மெட்டுக்கேற்ற வகையில் வசந்த மலர்களாக வார்த்தைகளை கோத்து வாலி எழுதியுள்ளார்.

இந்தப் பாடலைக் கேட்கும் போதெல்லாம் ஏதோ ஓர் கனவில் மிதப்பது போல் தோன்றும்!

கவிஞர் வாலியிடம் நல்ல முற்போக்குச் சிந்தனையுண்டு 'புதுவெள்ளம்' படத்திற்காக

"புதுவெள்ளம்! புதுவெள்ளம்! புதுவெள்ளம்! - இது
பொங்கி வருகின்ற புதுவெள்ளம் - ஒரு
தங்கு தடையின்றி இது செல்லும் - இதைத்
தடுக்க நினைத்தாலும் ஒடுக்க நினைத்தாலும்
எதிர்த்து நின்று இது வெல்லும்"

என்று எழுச்சியோடு எழுதுகிறார்.

இதே பாடலில் உழைக்கும் வர்க்கத்தின் அவல நிலையை,

"பெருங்காட்டு மரங்களைப் போர்த்து - நீர்
மேட்டு நிலங்களில் வார்த்து உங்கள்
வாழ்வுக்கு வளங்களைச் சேர்த்து நாங்கள்
வீதியில் நின்றோம் வேர்த்து"

என்று கம்பீரமாக கவியழகோடு சொல்கிறார் கவிஞர்.

இப்பாடலில்,

"உங்கள் கைகளில் கனத்திடும் பணப்பை - வந்த
காரணம் உழவனின் கலப்பை எங்கள்
தோழர்கள் வழங்கிய உழைப்பை - உண்டு
கொழுத்தது உங்கள் இரைப்பை"

என்ற அடிகளிலும் ஆவேசமும், மொழிநயமும் கைகோத்து நிக்கிறதல்லவா?

ஏழை மீனவத் தொழிலாளர்களுக்காக இந்தக் கவிஞர் 'படகோட்டி' படத்தில்,

"தரைமேல் பிறக்க வைத்தான் - எங்களைத்
தண்ணீரில் மிதக்க வைத்தான்
கரைமேல் இருக்க வைத்தான் பெண்களைக்
கண்ணீரில் குளிக்க வைத்தான்"

என்று எழுதிய பாடல் ஓர் உன்னதமான கவிதைச் செல்வம் அல்லவா?

தாயின் அருமை பற்றி 'தாயின் மடியில்' படத்திற்காக கவிஞர் வாலி மிகச்சிறந்த பாடலொன்றைப் படைத்துள்ளார்!

"எத்தனை செல்வங்கள் வந்தாலுமே
எத்தனை இன்பங்கள் தந்தாலுமே
அத்தனையும் ஒரு தாயாகுமா?
அம்மா... அம்மா... அம்மா...
எனக்கது நீயாகுமா?"

இந்தப் பாடலுக்கு நெகிழ்ந்து போகாதவன் எதற்கும் நெகிழ மாட்டான் என உறுதியாகச் சொல்லலாம்.

இப்பாடலில் அமைந்த,

"தாயின் மடியில் தலைவைத்திருந்தால்
துயரம் தெரிவதில்லை
தாயின் மடியில் தெய்வத்தைக் கண்டால்
வேறொரு தெய்வமில்லை"

என்ற அடிகளில் தான் எத்துணை உருக்கம்!

இப்பாடலிலுள்ள,

"அன்பில் மலரும் அற்புதமெல்லாம்
அன்னையின் விளையாட்டு
அலையும் மனதை அமைதியில் வைப்பது
அன்னையின் தாலாட்டு"

என்ற அடிகளில் இலக்கிய மாட்சியும், இதயத்தை அள்ளும் உணர்ச்சிப் பாங்கும் ஒருங்கே அமைந்துள்ளன என்பதனைச் தமிழின்பத்தில் திளைக்கும் பக்குவம் பெற்ற எவருமே மறுக்கத் துணியார் அல்லவா?

'டெல்லி மாப்பிள்ளை'க்காக வாலி,

"ஆண்டவன் ஒருநாள் கடை விரித்தான் – அதில்
ஆயிரம் ஆயிரம் பொருள்குவித்தான்
அவரவர் நிலைமைக்கு வாங்கச் சொன்னார்
அவரவர் தேவைக்கு வாங்கச் சொன்னார்"

என்று கருத்தழகு மின்ன எழுதுகிறார்.

இப்பாடலில்,

"பெண்களோ அழகை வாங்க வந்தார்
ஆண்களோ ஆசையை வாங்க வந்தார்

தலைவர்கள் புகழை வாங்க வந்தார்
புலவர்கள் பொய்களை வாங்க வந்தார்''

என்று சிறப்பான சிந்தனை வளத்தோடு எழுதுகிறார்

இப்பாடலின் இறுதியில் அமைந்த வரிகளை,

''எதையும் வாங்கிட மனிதர் வந்தார் - விலை
என்னவென்றாலும் அவர் தந்தார்
இதயம் என்பதை விலையாய் தந்து
அன்பை வாங்கிட எவரும் இல்லை''

என்றமைத்து ஆடம்பரமும், பொய்மையும் தலைவிரித்தாடும் உலகில் இறைவன் மனிதனிடம் கேட்கும் அன்பு கிடையாது. ஏமாந்தும் நிற்பதாக உயர்ந்த தத்துவ நோக்கோடு வார்த்தைகளைப் பின்னி தமிழ் செய்துள்ளார் வாலி!.

'கடைவிரித்தோம் கொள்வாரில்லை'' என்று அருட்கவி இராமலிங்கர் அங்கலாயத்தார். வாலியின் திருஷ்டியில் இறைவனே அங்கலாயித்து நிற்பது நயமாக அமைந்துள்ளதல்லவா?

'சக்கரம்' படத்தில் 'காசேதான் கடவுளடா' என ஆரம்பமாகும் பாடலில்,

''அளவுக்கு மேலே பணம் வைத்திருந்தால்
அவனும் திருடனும் ஒன்றாகும்
களவுக்குப் போகும் பொருள்களை எடுத்து
வறுமைக்குத் தந்தால் தருமமடா
பூட்டுக்கு மேலே பூட்டைப் போட்டு
பூட்டி வைத்தால் அது கருமமடா''

என்றும்,

''சிரித்தவன் அழுவதும் அழுதவன் சிரிப்பதும்
பணத்தால் வந்த நிலைதானே?
கையிலும், பையிலும் ஓட்டமிருந்தால்
கூட்டமிருக்கும் உன்னோடு
தலைகளையாட்டும் பொம்மைகள் எல்லாம்
தாளங்கள் போடும் பின்னோடு''

என்றும் இன்றைய உலகியல் போக்கை யதார்த்தமாகச் சொல்கிறார் வாலி!

பணத்தை உழைப்பாளரை சரண்டும் வர்க்கம் சுருட்டிக் கொள்வதால்

பாடுபடும் பலர் அல்லலில் சிக்குண்டு கிடக்கவும், சிலர் செல்வச் செழிப்பில் உச்சாணிக் கொம்பில் ஊஞ்சாலாடிக் கொண்டிருக்கும் நிலை உள்ளது.

'படகோட்டி' படப்பாடலில் இதனை,

''படைத்தவன் மேல் பழியுமில்லை
பசித்தவன் மேல் பாவமில்லை
கிடைத்தவர்கள் பிரித்துக் கொண்டார்
உழைப்பவர்கள் தெருவில் நின்றார்''

என்று சிறப்பாக எழுதியுள்ளார்.

இந்தக் கவிஞர் யாத்த காதல்பாடல்களும் மிகச்சிறப்பானவை.

''நீ எங்கே என் நினைவுகள், அங்கே''
''மன்னிக்க வேண்டுகிறேன் - உன்
ஆசையைத் தூண்டுகிறேன்''

இப்படிப் பல பாங்கான பாடல்கள் இவர் பேனாவில் பிறந்தவைதான்.

'கலங்கரை விளக்கம்' படத்தில்

''நான் காற்று வாங்கப் போனேன்''

எனத் தொடங்கும் பாடலில்,

''நல்ல நிலவு தூங்கும் நேரம்
அவள் நினைவு தூங்கவில்லை
கொஞ்சம் விலகி நின்ற போதும்
இந்த இதயம் தாங்க வில்லை''

என்று இலக்கியச் செறிவோடு எழுதியுள்ளார்.

காதல் சோகத்தை 'இதயத்தில் நீ' படத்தில்,

''யார் சிரித்தால் என்ன - இங்கு
யார் அழுதால் என்ன
தெரிவது என்றும் தெரியவரும்
மறைவது என்றும் மறைந்துவிடும்''

என்றும்,

''இன்று நேற்று வந்ததெல்லாம்
நாளை மாறலாம்
நீரில் தோன்றும் நிழல்கள் போல
நிலையில்லாமல் போகலாம்''

என்றும்,

"பூந்தென்றல் புயலாக மாறலாம்
பொன்வெய்யில் நிலவாகக் காணலாம்
வருவது ஒன்று பிரிவது ஒன்று
மெய்யன்பு பொய்யென்று
தோன்றும் போது"

என்றும் சிந்தனைச் சிறப்பும், இலக்கிய எழிலும் மின்ன எழுதியுள்ளார்.

*"நான் மனிதர்களில் பல நடிகர்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால் நடிகர்களில் நான் பார்த்த முதல் மனிதர் எம்.ஜி.ஆர்."*

என்று வாலி குறிப்பிட்டார். அந்த அளவுக்கு கவிஞர் வாலியின் திறமைக்குரிய வாய்ப்புகளை வழங்கி அவர் அற்புதமாக எழுதுவதற்குத் தூண்டு கோலாக இருந்தவர் டாக்டர் எம்.ஜி.ஆர்.

எம்.ஜி.ஆர். படங்களில் மட்டுமல்லாது, சிவாஜி, ஜெய்சங்கர், ரவிச் சந்திரன் போன்றோர் படங்களிலும் வாலி தமது பாவளத்தை இனங்காட்டி பாங்கான பாடல்களை வடித்துள்ளார்.

இனி இன்றமிழ்க் கவிஞர் வாலியின் சில பாடல்களை முழுமையாகக் காணுங்கள்.

## சின்னஞ் சிறுமலரை...

*படம்: 'நீங்காத நினைவு'*
*பாடியவர்:*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1963*

பெ: ஓ... ஓ சின்னஞ் சிறுமலரை மறந்து விடாதே!
(சின்னஞ்)

ஆ: சிரிக்க வைத்தே என்னை வருந்த விடாதே!
சிரிக்க வைத்தே என்னை வருந்த விடாதே!

பெ/ஆ: சின்னஞ் சிறுமலரை மறந்து விடாதே!

ஆ: வண்ணப் புறா போல் மண்ணில் பிறந்தோம்!

பெ: மண்ணில் பிறந்தே விண்ணில் பறந்தோம்!

ஆ: வண்ணப் புறாபோல் மண்ணில் பிறந்தோம்

பெ: மண்ணில் பிறந்தே விண்ணில் பறந்தோம்!

ஆ: விண்ணில் பறந்தோம்.
தூரம் தூரம் நம் பயணமென்றாலும்
துணிவுடன் நாமே தொடர்ந்து செல்வோமே

பெ: தொடர்ந்து செல்வோமே!

ஆ: சேர்ந்து வராமல் பிரிந்து விடாதே

பெ/ஆ: சிரிக்க வைத்தே என்னை வருந்த விடாதே
(ஓ... சின்னஞ்)

பெ: புதுவிதமான உலகத்தில் நாமே
பொன்மயமான வீடமைப்போமே!
வீட்டினில் இன்ப விளக்கு வைப்போமே!
(புது)

ஆ: காற்று வராமல் காத்திருப்போமே!

பெ: காத்திருப்போமே!

ஆ: பருவங்கள் மாறும் மறந்து விடாதே!

ஆ/பெ: சிரிக்க வைத்தே என்னை வருந்த விடாதே
ஓ... ஓ... சின்னஞ் சிறுமலரை மறந்து விடாதே!
(ஓ... சின்னஞ்)

## புதுவெள்ளம்...

*படம்: 'புதுவெள்ளம்'*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: எம்.பி.சீனிவாசன்*

புதுவெள்ளம்! புதுவெள்ளம்! புதுவெள்ளம்! - இது
பொங்கி வருகின்ற புதுவெள்ளம் - ஒரு
தங்கு தடையின்றி இது செல்லும் - இதைத்
தடுக்க நினைத்தாலும் ஒடுக்க நினைத்தாலும்
எதிர்த்து நின்று இது வெல்லும்! (புது)

பெருங்காட்டு மரங்களை பேர்த்து - நீர்

மேட்டு நிலங்களில் வார்த்து உங்கள்
வாழ்வுக்கு வளங்களைச் சேர்த்து நாங்கள்
வீதியில் நின்றோம் வேர்த்து.
உங்கள் கைகளில் கனத்திடும் பணப்பை - வந்த
காரணம் உழவனின் கலப்பை எங்கள்
தோழர்கள் வழங்கிய உழைப்பை - உண்டு
கொழுத்தது உங்கள் இரைப்பை (பொங்கி)

உங்கள் வருவாய் பெருக்கிய கூட்டம் - இங்கு
ஒருவாய் சோற்றுக்கு வாட்டம் - இதை
அறிவால் உணர்ந்திட வேண்டும் - இல்லை
ஒருநாள் எரிமலை தோன்றும் - வீண்
பழி சொல்லித் தொடுப்பார் வழக்கு - அந்தப்
பாவிகளை நாவினை அடக்கு - நேர்
வழியினில் நடப்பவர் தமக்கு வெற்றி
நிச்சயம்! காலத்தின் கணக்கு! (இதுபொங்கி)

## தாயின் மடியில்...

*படம்: 'தாயின் மடியில்'*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: எஸ்.எம்.சுப்பையாநாயுடு*

எத்தனை செல்வங்கள் வந்தாலுமே
எத்தனை இன்பங்கள் தந்தாலுமே
அத்தனையும் ஒரு தாயாகுமா?
அம்மா... அம்மா... அம்மா...
எனக்கது நீயாகுமா?

தாயின் மடியில் தலை வைத்திருந்தால்
துயரம் தெரிவதில்லை
தாயின் வடிவில் தெய்வத்தைக் கண்டால்
வேறொரு தெய்வமில்லை.

பத்துமாதம் பொறுமை வளர்த்தே

பூமியை மிஞ்சிடுவாள்
வெள்ளை மனதைத் தொட்டிலாக்கி
பிள்ளையைக் கொஞ்சிடுவாள்
அன்பில் மலரும் அற்புதமெல்லாம்
அன்னையின் விளையாட்டு
அலையும் மனதை அமைதியில் வைப்பது
அன்னையின் தாலாட்டு
என்னைப் பார்த்த அன்னை முகத்தை
ஏழை பார்த்த தில்லை
கண்ணே கண்ணே கண்ணே என்று
கொஞ்சிய வார்த்தை காதில் கேட்டதில்லை
காதில் கேட்டதில்லை! காதில் கேட்டதில்லை!

## ஆண்டவன் ஒருநாள்...

*படம்: 'டெல்லி மாப்பிள்ளை'*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*ஆண்டு : 1968*

ஆண்டவன் ஒருநாள் கடை விரித்தான் - அதில்
ஆயிரம் ஆயிரம் பொருள் குவித்தான்
அவரவர் நிலைமைக்கு வாங்கச் சொன்னான்
அவரவர் தேவைக்கு வாங்கச் சொன்னான்

பெண்களோ அழகை வாங்க வந்தார்
ஆண்களோ ஆசையை வாங்க வந்தார்
தலைவர்கள் புகழை வாங்க வந்தார்
புலவர்கள் பொய்களை வாங்கிக் கொண்டார்.
(ஆண்டவன்)

குருடர்கள் பார்த்திட விழி கேட்டார்
ஊமைகள், பேசிட மொழி கேட்டார்
உறவினர் மாண்டவர் உயிர் கேட்டார்
ஒரு சிலர் மேலுக்கு விலை கேட்டார். (ஆண்டவன்)

எதையும் வாங்கிட மனிதர் வந்தார் - விலை

என்ன வென்றாலும் அவர் தந்தார்!
இதயம் என்பதை விலையாய் தந்து
அன்பை வாங்கிட எவரும் இல்லை!

## யார் சிரித்தால் என்ன...

*படம்: 'இதயத்தில் நீ'*
*பாடியவர்: பி.பி.சீனிவாஸ்*
*இசை: விஸ்வநாதன் - ராமமூர்த்தி*

யார் சிரித்தால் என்ன இங்கு
யார் அழுதால் என்ன
தெரிவது என்றும் தெரிய வரும்
மறைவது என்றும் மறைந்துவிடும் (யார்)

இன்று நேற்று வந்த தெல்லாம்
நாளை மாறலாம்
நீரில் தோன்றும் நிழல்கள் போல
நிலையில்லாமல் போகலாம்!
நான் பார்த்து ஒன்றாக காணலாம்
நீ பார்த்து வேறாக மாறலாம்
தெரிவது ஒன்று புரிவது ஒன்று
மெய்யன்பு பொய்யென்று
தோன்றும் போது (யார்)

கண்மலர்ந்த பார்வையெல்லாம்
காட்சியாகலாம்
காட்சியாக வந்ததெல்லாம்
கைவராமல் போகலாம்
பூந்தென்றல் புயலாக மாறலாம்
பொன்வெய்யில் நிலவாகக் காணலாம்
வருவது ஒன்று பிரிவது ஒன்று
மெய்யன்பு பொய்யென்று
தோன்றும் போது! (யார்).

*படம்: 'ஆசை முகம்'*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*ஆண்டு : 1965*

இன்னொருவர் வேதனை
இவர்களுக்கு வேடிக்கை
இதயமற்ற மனிதர்களுக்கு
இதுவெல்லாம் வாடிக்கை!

எத்தனை பெரிய மனிதருக்கு
எத்தனை சிறிய மனமிருக்கு!
எத்தனை சிறிய பறவைக்கு
எத்தனை பெரிய மனமிருக்கு

உயர்ந்தவரென்ன தாழ்ந்தவரென்ன

உடல் மட்டுமே கறுப்பு - அவர்
உதிரம் என்றும் சிவப்பு
ஒருவழி நடந்தால் உயர்ந்தவராவார்
பலவழி நடந்தால் தாழ்ந்தவராவார்!

கோழியைப் பாரு காலையில் முழிக்கும்!
குருவியைப் பாரு சோம்பலை முறிக்கும்!
காக்கையைப் பாரு கூடிப் பிழைக்கும்!
நம்மையும் பாரு நாடே சிரிக்கும்!

## நெஞ்சிருக்கும்...

*படம்: 'நெஞ்சிருக்கும் வரை' ஆண்டு : 196*
*பாடியவர்: டி.எம்.எஸ்.குழுவினர்*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்*

நெஞ்சிருக்கும் எங்களுக்கும்
நாளையென்ற நாளிருக்கும்

வாழ்ந்தே தீருவோம்!
எங்கே கால்போகும்? போகவிடு
முடிவைப் பார்த்து விடு!
காலம் ஒருநாள் கை கொடுக்கும்
அதுவரை பொறுத்து விடு!

இருந்தால் தானே செலவு செய்ய?
எடுத்தால் தானே மறைத்து வைக்க?
கொடுத்தால் தானே வாங்கிச் செல்ல
படுத்தால் தானே விழித்துக் கொள்ள
துணிந்தால் தானே எதுவும் முடிய
சிரித்தால் தானே கவலை மறைய
சிலநாள் தானே சுமைகள் குறைய (எங்கே)

## அழகன் முருகனிடம்...

*படம்: 'பஞ்சவர்ணக்கிளி'*
*பாடியவர்: பி.சுசிலா*
*இசை: விஸ்வநாதன் - ராமமூர்த்தி*
*ஆண்டு : 1965*

சத்தியம்! சிவம்! சுந்தரம்!
சரவணன் திருப்புகழ் மந்திரம்.

அழகன் முருகனிடம்
ஆசை வைத்தேன் - அவன்
ஆலயத்தில் அன்புமலர்
பூசை வைத்தேன்.

அண்ணல் உறவுக்கென்றே
உடலெடுத்தேன் - அவன்
அருளைப் பெறுவதற்கே
உயிர் வளர்த்தேன் - நான்! (அழகன்)

பனிபெய்யும் மாலையிலே
பழமுதிர் சோலையிலே
கனிகொய்யும் வேளையிலே

கன்னிமனம் கொய்துவிட்டான்!
பன்னிரண்டு கண்ணழகைப்
பார்த்திருந்த பெண்ணழகை
வள்ளல்தான் ஆளவந்தான்
பெண்மையை வாழவைத்தான். (அழகன்)
மலைமேல் இருப்பவனோ?
மயில்மேல் வருபவனோ?
மெய்யுருகி பாடி வந்தால்
தன்னைத்தான் தருபவனோ!
அலைமேல் துரும்பானேன்!
அனல்மேல் மெழுகானேன்!
அய்யன் கை தொட்டவுடன்
அழகுக்கு அழகானேன்! (அழகன்)

# ஆலங்குடி சோமு

தேவர் தயாரித்த 'யானைப் பாகன்' படம் மூலம் திரைப்படப் பாடலாசிரியராக அரும்பியவர் ஆலங்குடி சோமு.

'கார்த்திகை தீபம்' படத்தில் காதல் முறிவை,

"மலைசாய்ந்து போனால் சிலையாகலாம்
மரம் சாய்ந்து போனால் விலையாகலாம்
மலர் சாய்ந்து போனால் சரமாகலாம்
மனம் சாய்ந்து போனால் என்ன செய்யலாம்"

என்று உன்னதமான இலக்கியத் தரத்தோடு பாடலாக புனைந்துள்ளார் இவர். இதே பாடலில்,

இருண்டாலும் வானில் மீன் தோன்றலாம்
திரண்டாலும் பாலில் நிறங் காணலாம்
மருந்தாலும் தீரா நோய் தீரலாம் - காதல்
இழந்தாலே வாழ்வை என்ன செய்யலாம்

என்ற அடிகளில்தான் எத்துணை சோகம்! எத்துணை நயம்!

'எங்க வீட்டுப் பிள்ளை'க்காக

"மலருக்குத் தென்றல் பகையானால் - அது
மலர்ந்திடக் கதிரவன் துணையுண்டு
நிலவுக்கு வானம் பகையானால் - அது
நடந்திட வேறே வழியேது?

என்றும்,

''படகுக்குத் துடுப்பு பகையானால் - அங்கு
பாய் மரத்தாலே உதவியுண்டு
கடலுக்கு நீரே பகையானால் - அங்கு
கதை சொல்லும் அலை களுக்கிடமேது?''

என்றும் நெஞ்சைத் தொடும் வண்ணம் கவிதா மணம் கமழ பாடல் அமைத்துள்ளார் அருமைக் கவிஞர் ஆலங்குடியார்.

தாயின் மேம்பாட்டை 'அடிமைப் பெண்' படத்திற்காக

''தாயில்லாமல் நானில்லை
தானே எவரும் பிறந்ததில்லை
எனக்கொரு தாய் இருக்கின்றாள்
என்றும் என்னைக் காக்கின்றாள்.''

என எடுப்போடு ஆரம்பித்து

''ஜீவநதியாய் வருவாள் - என்
தாகம் தீர்த்து மகிழ்வாள்
தவறினைப் பொறுப்பாள தர்மத்தை வளர்ப்பாள்
தரணியிலே வளம் சேர்த்திடுவாள்.''

என்றும்,

''மேக வீதியில் நடப்பாள் - உயிர்
மூச்சினிலே கலந்திருப்பாள்
மலர்முடி தொடுவாள் மலர்மணம் தருவாள்
மங்கல வாழ்வுக்குத் துணையிருப்பாள்

என்றும் ஆத்ம நெகிழ்ச்சியோடு அழகிய இலக்கிய மலராகப் பாடலைப் படைத்துள்ளார் கவிஞர்.

'சொர்க்கம்' படத்திற்காக

''பொன்மகள் வந்தாள்
பொருள் கோடி தந்தாள்
பூமேடை வாசல் பொங்கும் தேனாக
கண்மலர் கொஞ்சும்
கனிவோடு என்னை
ஆளாக்கினாள் அன்பினாலே''

என்று அழகொழுக எழுதுகிறார் ஆலங்குடியார்!

'குடியிருந்த கோயிலுக்காக'

''ஆடலுடன் பாடலைக் கேட்டு
ரசிப்பதிலே தான் சுகம் சுகம்''

என்ற பாடலும் சிருங்கார ரசம் பொருந்தி சிந்தையில் கிளுகிளுப்பை ஊட்டும் வண்ணம் இந்தக் கவிஞரால் புனையப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

''கார்த்திகை தீபம்'' படத்தில் இலக்கிய ஜோதிமின்ன,

''எண்ணப் பறவை சிறகடித்து
விண்ணில் பறக்கிறதா - உன்
இமைகளிலே உறக்கம்வர
கண்கள் மறுக்கிறதா?

என்றும்,

''தென்றல் பாடும் தாலாட்டில் - நீ
இன்பம் பெறவில்லையா - இரவு
தீர்ந்திடும் வரையில் விழித்திருந்தாலே
துன்பம் வரவில்லையா''

என்றும்,

''அன்னையைப் போலே உன்னுடல் தன்னை
வருடிக் கொடுத்திடவா - நீ
அமைதியுடன் துயில் கொள்ளும்
அழகை ரசித்திடவா?''

என்றும் எழுதி தாமொரு முதல் வரிசைப் பாடலாசிரியர் என்பதனை ஆலங்குடி சோமு கம்பீரமாக நிறுவுகிறார்.

''நான் ஆணையிட்டால்'' படத்தில்

''ஓடிவந்து மீட்பதற்கு உண்மைக்கோ கால்களில்லை
ஓய்ந்திருந்து கேட்பதற்கு நீதிக்கோ நேரமில்லை
பார்த்த நிலை சொல்வதற்குப் பரமனுக்கோ உருவமில்லை
பழி சுமந்து செல்வதன்றி இவனுக்கோ பாதையில்லை

என்று நயமான ஒரு பாடலை வழங்கியுள்ளார் கவிஞர்

இப்பாடலில்

''மேகங்கள் இருண்டு வந்தால் - அதை
மழையெனச் சொல்வதுண்டு
மனிதர்கள் திருந்தி வந்தால் - அதைப்
பிழையெனக் கொள்வதுண்டோ?''

என்றும்,

''அரும்புகள்' மலர்ந்து வந்தால் - அந்த
அழகினை ரசிப்பதுண்டு
பருந்துகள் திருட வந்தால் - அந்தப்
பண்பினைப் பொறுப்பதுண்டோ?''

என்றும் அமைந்துள்ள பகுதி சீரிய சிந்தனைகளை இலக்கிய அழகோடு வெளிப்படுத்தும் கலையில் இக்கவிஞர் கைதேர்ந்தவர் என்பதைத் தெளிவாக அடையாளங் காட்டுகிறதல்லவா?

'இரவும் பகலும்' படத்தில் இடம்பெற்ற

''கத்தியைத் தீட்டாதே - உந்தன்
புத்தியைத் தீட்டு''

என்று தொடங்கும் பாடலில்

''ஆத்திரம் கண்ணை மறைத்திடும் போது
அறிவுக்கு வேலைகொடு - உன்னை
அழித்திட வந்த பகைவனென்றாலும்
அன்புக்குப் பாதை விடு!''

என்ற அடிகளிலும்,

''மன்னிக்கத் தெரிந்த மனிதனின் உள்ளம்
மாணிக்கக் கோயிலப்பா - இதை
மறந்தவன் வாழ்வு தடந்தெரியாமல்
மறைந்தே போகுமப்பா''

என்ற அடிகளிலும் கருத்தாழமும், கவி நயமும் மேலோங்கி நிற்கிறதல்லவா?

'தொழிலாளி' படத்திற்காக

''ஆண்டவன் உலகத்தின் முதலாளி
அவனுக்கு நானொரு தொழிலாளி
அன்னை உலகின்மடியின் மேலே
அனைவரும் எனது கூட்டாளி''

என்று விரிந்த சிந்தனை வளத்தோடு பாடலைத் தீட்டியுள்ளார்.

இப்பாடலில்

''கல்லைக் கனியாய் மாற்றும் தொழிலாளி
கவ்னம் ஒரு நாள் திரும்பும் - அதில்
நல்லவர் வாழும் புதிய சமுதாயம்
நிச்சயம் ஒரு நாள் அரும்பும்''

''வாழ்க்கை என்றொரு பயணத்திலே - பலர்
வருவார் போவார் பூமியிலே
வானத்து நிலவாய் சிலரிருப்பார் - அந்த
வரிசையில் முதல்வன் தொழிலாளி''

என்ற பகுதியிலும் கவிஞரின் நுட்பமான பாத்திறன் பளிச்சிடுவதைப் பார்க்கலாம்.

'பத்தாம்பசலி' படத்தில் ஏழை வீட்டில் உதித்த மழலையைப் பற்றி,

''வெள்ளைமனம் கொண்ட பிள்ளை ஒண்ணு
வேடிக்கை காட்டுது தூக்கமின்றி
முல்லைச்சரமே செல்லக்கிளியே
கண்மூடித் தூங்கம்மா
கண்மூடி தூங்கம்மா ஆரீராரோ

காத்தடிக்குது மழையுங் கொட்டுது
ஓலைக் குடிசையிலே - இங்கு
கட்டிலுமில்லை மெத்தையுமில்லை
உனக்கும் தூக்கமில்லை
காசும் இல்லை படிப்பும் இல்லை
அன்புக்குப் பஞ்சமில்லை - உன்னைக்
காலமிங்கே அனுப்பிவச்ச
கணக்கும் புரியவில்லை.''

என்று அருமையாக எழுதியுள்ளார் ஆலங்குடியார்.

'காஞ்சித் தலைவன்' படத்தில் உள்ள

''ஒரு கொடியில் இருமலர்கள் பிறந்தம்மா''

எனத் தொடங்கும் பாடலும் கவிஞர் எழுதிய சிறந்த பாடல்களில் ஒன்றாகும்.

'இரவும் பகலும்' படத்தில் கவிஞரின் மிகச் சிறந்த தத்துவப் பாடலொன்று உள்ளது.

''இறந்தவனைச் சுமந்தவனும் இறந்திட்டான் - அதை
இருப்பவனும் எண்ணிப் பார்க்க மறந்திட்டான்'

என்று ஆழமான ஓர் உண்மையை எழிலாக - எளிமையாக எழுதும் கவிஞர்,

மனிதனின் பேராசைக் குணத்தை,

''பறந்து பறந்து பணம் தேடி
பாவக் குளத்தில் நீராடி
பிறந்த வந்து நாள் முதலாய்
பேராசையுடன் உறவாடி''

என்ற அடிகள் மூலம் அழகாகக் காட்டுகிறார்.

மானுட வாழ்வை,

''தாயாரின் வேதனையில் பிறக்கிறான் - மனுஷன்
தன்னாலே துடிதுடிச்சி இறக்கிறான் - இடையில்
ஓயாத கவலையிலே மிதக்கிறான் - ஒரு நாள்
உடலை மட்டும் போட்டு எங்கோ பறக்கிறான்!''

என்று அற்புதமாகச் சித்தரிக்கிறார்.

இப்படியாகப் பல இலக்கிய நயமுள்ள பாடல்களைத் தீட்டிய கவிஞர் சில திரைப்படங்களைச் சொந்தமாகத் தயாரித்து ஈட்டிய செல்வத்தை இழந்தார். பாரிசவாத நோயால் தாக்குண்டு அவதியுற்றார்.

சில ஆண்டுகளுக்குமுன் காலன் வசமானார்.

ஆலங்குடி சோமு மறைந்தாலும் அவரெழுதிய திரைப்பாடல்கள் என்றென்றும் மறையாது நேயர்கள் நினைவில் மணம் வீசி நிற்கும் என்பது உண்மை.

இனி இக்கவிஞரின் பாடல்கள் சிலவற்றை முழுமையாகக் காண் போம்.

## மலருக்குத் தென்றல்...

*படம்: எங்க வீட்டுப் பிள்ளை*
*பாடியவர்கள்: பி.சுசீலா - எல்.ஆர்.ஈஸ்வரி*
*இசை: விஸ்வநாதன் - ராமமூர்த்தி*

பெ: 1 வானகமே வையகமே
வளர்ந்து வரும் தாயகமே
ஆணுலக மேடையிலே
ஆசை நடை போடாதே!

மலருக்குத் தென்றல் பகையானால் - அது
மலர்ந்திடக் கதிரவன் துணையுண்டு!
நிலவுக்கு வானம் பகையானால் - அது
நடந்திட வேறே வழியேது?

பெ: 2 பறவைக்குச் சிறகு பகையானால் - அது
பதுங்கி வாழ்ந்திடக் கால்களுண்டு!
உறவுக்கு நெஞ்சே பகையானால் மண்ணில்
உயிரினம் பெருகிட வகையேது?

பெ: 1 படகுக்குத் துடுப்பு பகையானால் - அங்கு
பாய்மரத்தாலே உதவியுண்டு!
கடலுக்கு நீரே பகையானால் - அங்கு
கதை சொல்லும் அலைகளுக்கிடமேது?

பெ: 2 கண்ணுக்குப் பார்வை பகையானால் - அதை
கருத்தால் உணர்ந்திட வழியுண்டு

பெ: 1 பெண்ணுக்குத் துணைவன் பகையானால் - அந்த
பேதையின் வாழ்வில் ஒளியேது?

## தாயில்லாமல்...

*படம்: அடிமைப் பெண்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*

இசை: கே.வி.மகாதேவன்

தாயில்லாமல் நானில்லை
தானே எவரும் பிறந்ததில்லை!
எனக்கொருதாய் இருக்கின்றாள்
என்றும் என்னைக் காக்கின்றாள். (தாய்)

ஜீவநதியாய் வருவாள் - என்
தாகம் தீர்த்து மகிழ்வாள்!
தவறினைப் பொறுப்பாள் தர்மத்தை வளர்ப்பாள்
தரணியிலே வளம் சேர்த்திடுவாள்! (தாய்)

தூயநிலமாய் கிடப்பாள் - தன்
தோளில் என்னைச் சுமப்பாள்
தன்மையில்லாமல் நான் மிதித்தாலும்
தாய்மையிலே மனங்கனிந்திடுவாள்! (தாய்)

மேகவீதியில் நடப்பாள் - உயிர்
மூச்சினிலே கலந்திருப்பாள்
மலர்முடி தொடுவான் மலர் மணம் தருவாள்
மங்கல வாழ்வுக்குத் துணையிருப்பாள் (தாய்)

ஆதி அந்தமும் அவள்தான் - நம்மை
ஆளும் நீதியும் அவள்தான்
அகந்தையை அழிப்பாள் ஆற்றலைக் கொடுப்பாள்
அவள்தான் அன்னை மகாசக்தி - அந்தத் (தாய்)

## மலைசாய்ந்து போனால்...

படம்: கார்த்திகை தீபம்
பாடியவர்: டி.எம்.சௌந்தர்ராஜன்
இசை: சுதர்சனம்
ஆண்டு : 1965

மலைசாய்ந்து போனால் சிலையாகலாம்
மரம் சாய்ந்து போனால் விலையாகலாம்
மலர் சாய்ந்து போனால் சரமாகலாம்
மனம் சாய்ந்து போனால் என்ன செய்யலாம்?

நடைமாறிப் போனால் கலையாகலாம்
விடை மாறிப் போனால் சரியாகலாம்
கடல் மாறிப் போனால் நிலமாகலாம் - காதல்
தடம் மாறிப் போனால் என்ன செய்யலாம்?

இருண்டாலும் வானில் மீன் தோன்றலாம்
திரண்டாலும் பாலில் நிறங் காணலாம்
மருந்தாலும் தீரா நோய் தீரலாம் - காதல்
இழந்தாலே வாழ்வை என்ன செய்யலாம்?

## பொன் மகள்...

*படம்: சொர்க்கம்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்*
*ஆண்டு : 1970*

பொன்மகள் வந்தாள்
பொருள் கோடி தந்தாள்
பூமேடை வாசல் பொங்கும் தேனாக
கண்மலர் கொஞ்சும்
கனிவோடு என்னை
ஆளாக்கினாள் அன்பினாலே

முத்துக்கள் சிரிக்கும் நிலத்தில்
தித்திக்கும் நினைப்பை விதைக்கும்
பாவை நீ வா...

சொர்க்கத்தின் வனப்பை ரசிக்கும்
சித்தத்தில் மயக்கம் வளர்க்கும்
யோகமே நீ வா...

வைரமே என் வசம்
வாழ்விலே பரவசம்
வீதியில் ஊர்வலம்
விழியெல்லாம் நவரசம்

செல்வத்தின் அணைப்பில் கிடப்பேன்

வெல்வெட்டின் விரிப்பில் நடப்பேன்
ராஜனாக...
இன்பத்தின் பணத்தில் குளிப்பேன்
என்றென்றும் சுகத்தில் மிதப்பேன்
வீரனாக...
திருமகள் சம்மதம்
தருகிறாள் என்னிடம்
மனதிலே நிம்மதி
மலர்வதோ புன்னகை (பொன்)

## எண்ணப் பறவை...

*படம்: கார்த்திகை தீபம்*
*பாடியவர்: பி.சுசீலா*
*இசை: சுதர்சனம்*

எண்ணப் பறவை சிறகடித்து
விண்ணில் பறக்கிறதா - உன்

இமைகளிலே உறக்கம் வர
கண்கள் மறுக்கிறதா?

தென்றல் பாடும் தாலாட்டில் நீ
இன்பம் பெறவில்லையா? - இரவு
தீர்ந்திடும் வரையில் விழித்திருந்தாலே
துன்பம் தரவில்லையா?

உன் துயர் கண்டால் என்னுயிரிங்கே
துடிப்பது தெரியல்லையா?
உண்மை அறிந்தும் உள்ளம் வருந்த
நடப்பது தவறில்லையா? (எண்ண)

ஊஞ்சலைப் போலே பூங்கரம் நீட்டி

அருகில் நெருங்கிடவா - உன்னை
உரிமையினாலே குழந்தையைப் போலே
அள்ளி அணைத்திடவா?
அன்னையைப் போலே உன்னுடல் தன்னை
வருடிக் கொடுத்திடவா? - நீ
அமைதியுடன் துயில் கொள்ளும்
அழகை ரசித்திடவா? (எண்ண)

## ஓடிவந்து மீட்பதற்கு...

*படம்: நான் ஆணையிட்டால்?*
*பாடியவர்: சீர்காழி*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்*
*ஆண்டு : 1966*

ஓடிவந்து மீட்பதற்கு உண்மைக்கோ கால்களில்லை
ஒய்ந்திருந்து கேட்பதற்கு நீதிக்கோ நேரமில்லை
ர்த்த நிலை சொல்வதற்குப் பரமனுக்கோ உருவமில்லை
பழிசுமந்து செல்வதன்றி இவனுக்கோ பாதையில்லை!

மேகங்கள் இருண்டு வந்தால் - அதை
மழையெனச் சொல்வதுண்டு
மனிதர்கள் திருந்திவந்தால் - அதைப்
பிழையெனக் கொள்வதுண்டோ?

நெஞ்சத்தில் நேர்மை வந்தால் - அதில்
நீதிக்குப் பெருமை உண்டு!
வஞ்சகம் நேரில் தந்தால் - அதை
வணங்கிட முறையுமுண்டோ? (மேகங்கள்)

தியாகத்தின் தலைநிமிர்ந்தால் - இந்தத்
தரணிக்கு லாபமுண்டு
தீமையின் கை உயர்ந்தால் - இங்கு
தருமங்கள் வாழ்வதுண்டோ?

அரும்புகள் மலர்ந்து வந்தால் - அந்த
அழகினை ரசிப்பதுண்டு

பருந்துகள் திருட வந்தால் - அந்தப்
பண்பினைப் பொறுப்பதுண்டோ?

உண்மைக்குக் காலம் வந்தால் - சிலர்
உயர்குணம் புரிவதுண்டு
ஊருக்கு நன்மை வந்தால் - நல்ல
உள்ளங்கள் மகிழ்வதுண்டு!

## இறந்தவனை...

படம்: இரவும் பகலும்
பாடியவர்: நடிகர் அசோகன்
இசை: டி.ஆர்.பாப்பா
ஆண்டு : 1965

இறந்தவனைச் சுமந்தவனும் இறந்திட்டான் - அதை
இருப்பவனும் எண்ணிப் பார்க்க மறந்திட்டான்!
(இறந்)

பறந்து பறந்து பணம் தேடி
பாவக் குளத்தில் நீராடி
பிறந்து வந்த நாள் முதலாய்
பேராசையுடன் உறவாடி (இறந்)

தாயாரின் வேதனையில் பிறக்கிறான் - மனுசன்
தன்னாலே துடிதுடிச்சி இறக்கிறான் - இடையில்
ஓயாத கவலையிலே மிதக்கிறான் - ஒரு நாள்
உடலை மட்டும் போட்டு எங்கோ பறக்கிறான் - அப்படி
(இறந்)

இளமையிலே சில நாள் முதுமையிலே சில நாள்
இன்பத்திலே சில நாள் துன்பத்திலே சில நாள்
அன்னையும், மனைவியும், அருமைப் பிள்ளையும்
கண்ணீர் சிந்திடவே கடைசி வழி ஒரு நாள் - அப்படி
(இறந்)

## கத்தியைத் தீட்டாதே...

படம்: இரவும் பகலும

பாடியவர்: டி.எம்.எஸ்.
இசை: டி.ஆர்.பாப்பா
ஆண்டு : 1965

கத்தியைத் தீட்டாதே - உந்தன்
புத்தியைத் தீட்டு!
கண்ணியம் தவறாதே - அதிலே
திறமையைக் காட்டு! (கத்தி)

ஆத்திரம் கண்ணை மறைத்திடும் போது
அறிவுக்கு வேலை கொடு - உன்னை
அழித்திட வந்த பகைவனென்றாலும்
அன்புக்குப் பாதை விடு! (கத்தி)

மன்னிக்கத் தெரிந்த மனிதனின் உள்ளம்
மாணிக்கக் கோயிலப்பா - இதை
மறந்தவன் வாழ்வு தடந்தெரியாமல்
மறைந்தே போகுமப்பா (கத்தி)

இங்கே இருப்பது சிலகாலம்
இதற்குள் ஏனோ அகம்பாவம்?
இதனால் உண்டோ ஒரு லாபம்? இதை
எண்ணிப் பாரு தெளிவாகும்! (கத்தி)

## ஆண்டவன்...

படம்: தொழிலாளி
பாடியவர்: டி.எம்.எஸ்.
இசை: கே.வி.மகாதேவன்
ஆண்டு : 1964

ஆண்டவன் உலகத்தின் முதலாளி
அவனுக்கு நானொரு தொழிலாளி
அன்னை உலகின் மடியின் மேலே
அனைவரும் எனது கூட்டாளி (ஆண்டவன்)

இருப்பதைக் கொண்டு சிறப்புடன் வாழும்
இலக்கணம் படித்தவன் தொழிலாளி

உருக்கு போன்ற தன்கரத்தையே நம்பி
ஓங்கி நிற்பவன் தொழிலாளி (ஆண்டவன்)

கல்லைக் கனியாய் மாற்றும் தொழிலாளி
கவனம் ஒரு நாள் திரும்பும் - அதில்
நல்லவர் வாழும் புதிய சமுதாயம்
நிச்சயம் ஒரு நாள் அரும்பும்!
வாழ்க்கை என்றொரு பயணத்திலே - பலர்
வருவார் போவார் பூமியிலே
வானத்து நிலவாய் சிலரிருப்பார் - அந்த
வரிசையில் முதல்வன் தொழிலாளி!

## - ஒரு கொடியில்...

*படம்: காஞ்சித் தலைவன்*
*பாடியவர்கள்: டி.எம்.எஸ். - சுசிலா*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1963*

ஆ: ஒரு கொடியில் இருமலர்கள் பிறந்ததம்மா பிறந்ததம்மா
அண்ணன் தங்கை உறவு முறை மலர்ந்ததம்மா மலர்ந்ததம்மா
(ஒரு)

பெ: ஒரு கொடியில் இருமலர்கள் பிறந்ததம்மா பிறந்ததம்மா
அண்ணன் தங்கை உறவுமுறை மலர்ந்ததம்மா மலர்ந்ததம்மா
(ஒரு)

கருமணியின் துயரம்கண்டு இமைகள் தூங்குமா? - அண்ணன்
கண்ணீரில் மிதந்திட என் இதயம் தாங்குமா?

ஆ: வரும்புயலை எதிர்த்து நின்று சிரிக்கின்றேனம்மா - தங்கை
வாழ்வுக்காக என் சுகத்தைக் கொடுக்கின்றேனம்மா
(ஒரு)

பெ: பிறவி என்னும் பாதையிலே உன்னுடன் வந்தேன் - அந்தப்
பயணத்திலே கடமை செய்யும் துணி வடைந்தேன்

ஆ: சிறகடிக்கும் ஆசைகளைச் சிறையில் பூட்டுவேன் - நீ
சிரித்திருக்கும் காட்சியிலே மனத்தைத் தேற்றுவேன்
(ஒரு)

# மாயவநாதன்

**"கவிஞர் மாயவநாதன் இயல்பாகவே ஒரு மேதை. யார்க்கும் அஞ்சாத - பணிந்து போகாத சுபாவமுள்ளவர். பணத்தை மட்டுமே குறியாகக் கொண்டு பாட்டெழுத மாட்டார். அவர் தீவிர காளி உபாசகர்."**

மேலே உள்ளவாறு கவிஞர் மாயவநாதனைப் பற்றி என்பால் எடுத்துரைத்தார். திரைப்படத் தயாரிப்பாளர் வி.டி.அரசு.

இவர் தயாரித்த படங்களுக்கு மாயவநாதன் தொடர்ந்து பாடல்கள் எழுதியுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது.

மாயவநாதனுடன் நெருங்கிப் பழகியவர் மறைந்த நடிகர் நம்பிராஜன். அவருடைய தம்பியும், நடிகருமான குமரிமுத்துவைச் சந்தித்த பொழுது அவர் "கவிஞர் மாயவநாதனும் என் அண்ணனும் உயிர் நண்பர்கள். இருவரும் மயிலாபூரில் உள்ள ஒரு லாட்ஜில் பல காலம் ஒன்றாக இருந்தார்கள். தேவரின் கோரிக்கையை ஏற்று மருதமலை முருகன் கோயிலில் கல்வெட்டில் பதிப்பதற்காக கவிஞர் சில பாடல்களை எழுதிக் கொடுத்தார். அவுருக்கு சித்தர்களிடத்தில் அதிகம் ஈடுபாடு இருந்தது. கரம்பைச் சித்தர், கரூரார் சித்தர், பாலமுருகச் சித்தர் போன்றோருடன் நெருங்கிய உறவு கொண்டிருந்தார். கவிஞரின் முதல் மனைவி இறந்தபடியால் அவர் இரண்டாம் கல்யாணம் செய்து கொண்டார். அவருடைய தம்பி அவர்களுடைய சொந்த ஊரான பூலாங்குளத்தில் ஆசிரியராக இருந்தார். கவிஞர் மாயவநாதன் அற்புதமான கவிதைத் திறமைமிக்கவர். அளவு கடந்த பக்தியுணர்ச்சி மிக்கவர்.

1971-இல் அவர் இறந்தது எங்களுக்கெல்லாம் பேரிழப்பாக இருந்தது. எனது அண்ணன் நம்பிராஜன் நல்லவர்கள் சிலரின் உதவியைப் பெற்று மாயவநாதன் உடலை அவர் சொந்த ஊரான பூலாங்குளத்திற்கு எடுத்துச் சென்று இறுதிச் சடங்குகளை முடித்துவிட்டுத் திரும்பினார்,'' என்று சொன்னார்.

கவிஞர் மாயவநாதன் தாம் பாட்டெழுதிய முதல் படமான 'படித்தால் மட்டும் போதுமா' படத்தில்

''தண்ணிலவு தேனிறைக்க
தாழைமடல் நீர் தெளிக்க
கன்னிமகள் நடைபயின்று வந்தாள் - இளம்
காதலனைக் கண்டு நாணி நின்றாள்

என்றெழுதித் தன் முத்திரையை அழுத்தமாகப் பதித்தவர்.

'என்னதான் முடிவு' படத்தில் நீண்ட மதிற் சுவரும் நெட்ட நெடு கோபுரமும்'' என்று தொடங்கும் பாடலில்

''பாவி என்னை மறுபடியும் பிறக்க வைக்காதே - செய்த
பாவமெல்லாம் தீருமுன்னே இறக்க வைக்காதே
பாவத்தின் கூலி தன்னை நிறுத்தி
வைக்காதே - என்னைப் போல்
பாவிகளை இனியேனும் படைத்து வைக்காதே''

என்ற அடிகளிலும்,

''உச்சிமரக்கிளையில் நின்று
உயிர்வேரை அறுத்தவன் நான்
பச்சையிளங் கொழுந்தைக் கிள்ளி
பாழ் நெருப்பில் எறிந்தவன் நான்''

என்ற அடிகளிலும் உணர்ச்சியும், நயமும் முழுமையாக ஆட்சி செய்கிறதல்லவா?

தத்துவ நோக்குடன் 'பந்தபாசம்' படத்திற்காக

''நித்தம் நித்தம் மாறுகின்ற தெத்தனையோ நெஞ்சில்
நினைத்ததிலே நடந்தது தான் எத்தனையோ''

என்று ஆரம்பித்து

''சுரை விதைத்த இடத்தில் வேறு செடி முளைத்தது
காதல் கதையில் பாதி நடக்கும் போது திரை விழுந்தது

என்று அழகாக தொடர்கிறார்.

இப்பாடலில்,

''இளமை துள்ளி எழுந்து நின்று காதல் என்றது
குடும்ப நிலைமை எதிரில் வந்து நின்று கடமை என்றது
காதலெனும் பூவுலர்ந்து கடமை வென்றது
என்றும் மேடுபள்ளம் உள்ளதுதான் வாழ்க்கை என்பது

என்ற அடிகளையும் கவிஞர் நளினமாக எழுதியுள்ளார்.

'பூமாலை' படத்திற்காக

''கற்பூரக் காட்டினிலே கனல் விழுந்து விட்டதம்மா - இரு
காலடியில் கன்னிமலர் கசங்கி உலருதம்மா''

என்று ஆவேசத்துடனும் இலக்கியப் பாங்குடனும் பாடலை ஆரம்பித்து.

''பெண்ணே உன் கதி இதுதானா - உன்
பெண்மை ஆண்மைக்குப் பலிதானா?''

எனத் தொடர்ந்து,

''கோபுர அழகும் கொடிமரப் பொலிவும்
குங்கும மஞ்சளும், மலரும் - நாம்
கும்பிடும் தெய்வத்தின் புனிதமும் சேர்ந்து
செய்தது பெண்ணுருவம்''

என்ற அடிகள் மூலம் பெண்களைப் பற்றி அழகிய சொல்லோவியம் வரைகிறார் கவிஞர்.

'பூம்புகார்' படத்தில் தமிழ்மொழியின் மாட்சி பற்றி இலக்கிய நய மோங்க,

''தமிழ் எங்கள் உயிரானது - காலச்
சுழலாலும் கனலாலும்
அழியாமல் நிலையான
தமிழ் எங்கள் உயிரானது''

என்றெழுதுகிறார் மாயவநாதன்.

இப்பாடலில்

''படிப்போர்க்குப் பால் போன்றது - தன்னைப்
பகைப்போர்க்கு வேல்போன்றது எங்கள்
தாயகத்தின் தன்மானக்
கலைத்தேரில் சதிராடும்
தமிழ் எங்கள் உயிரானது''

உள்ள பகுதியிலும் இலக்கியச் செறிவு மேலோங்கி நிற்கிறதல்லவா?

என்று மாயவநாதனின் மகத்தான காதல் பாட்டொன்று 'இதயத்தில் நீ' படத்திலுள்ளது.

'சித்திரப் பூவிழி வாசலிலே வந்து
யார் நின்றவரோ - இந்தக்
கட்டுக் கரும்பினைத் தொட்டுக் குழைத்திட
யார் வந்தவரோ?

என்று இலக்கிய எழிலோடு பாடலின் முன்னடிகளை அமைத்த கவிஞர்,

''கட்டழகில் கவிகம்பன் மகனுடன்
ஒட்டி இருந்தவரோ - இந்தப்
பட்டு உடலினைத் தொட்டணைக்கும் கலை
கற்றுத் தெளிந்தவரோ - உனை
மட்டும் அருகினில் வைத்துத் தினம்தினம்
சுற்றி வருபவரோ - கலை
முற்றும் அறிந்தவரோ - காதல்
மட்டும் தெரிந்தவரோ?''

என்ற அடிகளையும் மிடுக்கோடு அமைத்துள்ளார்.

'பூம்புகார்' படத்திற்காக கவிஞர்,

''துன்பம் எல்லாம் நம்மனத்தைச் சுத்தம் செய்யத்தான் - வலியத்
தோளிரண்டும் மிருப்பதெல்லாம் தாங்கிக் கொள்ளத்தான்
மக்கள் மனை சுற்றமெல்லாம் பற்று வைக்கத்தான் - நாம்
பற்று வைப்பதெல்லாம் என்றோ விட்டு விடத்தான்''

என்ற தத்துவப் போக்கோடு தண்டமிழ்ப் பாட்டொன்றை எழுதியுள்ளார்.

''மறக்க முடியுமா'' படப்பாடலில்

''வானும் நிலமும் வீடு
காற்றும் மழையும் உணவு
காலும் கையும் ஆடை
ஏழை வாழ்வு சிம்பிள்''

என்று சிறப்போடு பாடலைத் தொடங்கி

''நேரம் காலம் பார்த்து - அந்த
ராகு கேதைக் கேட்டும் - அண்ணே
வாழ்க்கை வாழ நினைத்தால் - உன்
வயது முடிந்து போகும்''

என்று ''சோதிடந்தனை இகழ்ந்து''.

''துணிந்தால் உழைக்கத் துணிந்தால்
கரைந்தால் - தொங்கி கரைந்தால் - இந்த
உலகம் உனக்கு வணங்கும்

என்று உழைப்பே உயர்வுக்கு வழி என கம்பீரமாகக் கூறுகிறார் கவிஞர்.

'தாலாட்டு' படத்தில் தலைசிறந்த தாலாட்டு பாட்டொன்று எழுதியுள்ளார் கவிஞர்.

''மல்லிகை பூப்போட்டு கண்ணனுக்கு மங்கல நீராட்டு
செண்பகப் பூப்போட்டு பாடு ஒரு செந்தமிழ்த் தாலாட்டு''

என்று அழகுமிளிர தமிழ் பெய்யும் கவிஞர்,

''வானவெளிதனில் பூவிருந்தால்
அதைத் தேடிப் பறிக்கட்டுமா? - இந்த
ஞானமகனுக்கு கோர்த்துக் கொடுத்ததைச்
சூடிக் களிக்கட்டுமா''

என்றும்,

''தேவர் அரசுக்குத் தூதனுப்பி - அவர்
தேரையும் கேட்கட்டுமா - மகன்
ஊர்வலம் போகிற காலத்திலே நின்று
பார்த்து ரசிக்கட்டுமா?''

என்றும் நயமாக எழுதியுள்ளார் கவிஞர்.

ஏற்கனவே வேறொரு படத்திற்காக

''அழகு ரதம் பொறக்கும் - அது
அசஞ்சி அசஞ்சி நடக்கும்''

என்று குழந்தைப் பாடலில் தமது திறனை இனங்காட்டியவர் இவர்.

தாயின் கருணை' படத்திற்காக தமிழ்மொழியின் மேம்பாடு பற்றி

''பூந்தென்றல் இசைபாட
புகழ்பாணர் கவிபாட
சான்றோர்கள் மடிதன்னில்
விளையாடும் தமிழ் வாழ்க''

என்று அழகாக எழுதி,

''அறிவான முப்பாலும் கனிகொடுக்க
திருவாசகம் வந்து பனிதெளிக்க''

என்ற அடிகள் மூலம் தலைசிறந்த அறிவு நூலான திருக்குறளைப் போலவே படிப்பாரை உருக்கும் பாநயம் மிகுந்த திருவாசகமும் தமிழுக்கு உயர்வு சேர்க்கிறது என்பதனை மாயவநாதன் சொல்வதிலிருந்து இவர் விரிந்த சிந்தனைத் தெளிவுடன் தமிழை முறையாக கற்றுத் தெளிந்தவர் என்பது புலனாகிறதல்லவா?

இவர் 'தண்ணிலவு தேனிறைக்க' என்ற தமது முதல் பாடல் மூலமாகவே ''யார் இந்த மாயவநாதன்?'' எனத் தம்மை கேட்கும்படியான ஒரு பரபரப்பை ஏற்படுத்தியவர்.

செழுந்தமிழ்ச் சொற்களை சிறப்பாகக் கையாண்டு அற்புதமான பாடல்கள் வடித்தவர்.

பொய்யும் புரட்டும் மலிந்த சினிமா உலகில் சத்தியவாஞ்சையோடு ஞானச் சிறகடித்துப் பறந்தவர். சாதித்துக் கொண்டிருந்த காலத்திலேயே சகவாழ்வைத் துறந்து விட்டார்.

சித்தனுக்கு மரணமில்லை. அவன் செய்த தமிழுக்குங் கூட! இனி அவர் பாடல்கள் சிலவற்றை முழுமையாகப் பாருங்கள்

## தண்ணிலவு தேனிறைக்க...

*படம்: படித்தால் மட்டும் போதுமா*
*பாடியவர்: பி.சுசிலா*
*இசை: விஸ்வநாதன் - ராமமூர்த்தி*

தண்ணிலவு தேனிறைக்க தாழைமடல் நீர் தெளிக்க
கன்னிமகள் நடைபயின்று சென்றாள் - இளம்
காதலனைக் கண்டு நாணி நின்றாள்! (தண்)

நெஞ்சமதில் அலையெழும்ப தஞ்சமலர் அடிகலங்க
அஞ்சி அஞ்சி இடைதுவள வந்தாள் - அங்கு
அன்பர் உள்ளம்தனை நினைத்து நின்றாள்! (தண்)

விண்ணளந்த மனமிருக்க மண்ணளந்து அடிஎடுக்க
பொன்னளந்த உடல்நடுங்க வந்தாள் - ஒரு
பூ அளந்த முகத்தைக் கண்டு நின்றாள்! (தண்)

பொட்டிருக்க பூவிருக்க பூத்தமலர் மணமிருக்க
கட்டிலுக்கும் மிக நெருங்கி வந்தாள் - இரு
கண் வழியில் கவிதை கண்டு நின்றாள்! (தண்)

## பாவி என்னை...

*படம்: என்னதான் முடிவு*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: ஆர்.சுதர்சனம்*

நீண்ட மதிற்சுவரும் நெட்டநெடு கோபுரமும்
சூழ்ந்து மறைத்திடும் சுத்தவெளிப் பொற் சபையே!
விளக்குக்கும் விளங்காத விளக்கமில்லா சத்தியமே!
வெறுங்கல்லாய் வீற்றிருக்கும் வினை கடந்த தத்துவமே!

பாவி என்னை மறுபடியும் பிறக்க வைக்காதே - செய்த
பாவமெல்லாம் தீருமுன்னே இறக்க வைக்காதே!

பாவத்தின் கூலி தன்னை நிறுத்தி வைக்காதே
- என்னைப் போல்
பாவிகளை இனியேனும் படைத்து வைக்காதே!

வஞ்சகனின் உடலெல்லாம்
வாதம் வர வேண்டாமோ?
வாய் நிறைந்த பொய்யனுக்குச்
சூலம்வர வேண்டாமோ?

காலமுகி கையமுகி காடு செல்ல வேண்டாமோ?
காதகனைக் கண்டு மக்கள் காறித்துப்ப வேண்டாமோ?
கோடி வகை நோய் கொடய்யா
சாகும் வரை அழவிடய்யா
என் கணக்கை முடித்திடய்யா!
உச்சி மரக்கிளையில் நின்று உயிர் வேரை அறுத்தவன் நான்!
பச்சை யிளங்கொழுந்தைக் கிள்ளிப் பாழ்நெருப்பில்
எறிந்தவன் நான்!
(பாவி)

## நித்தம் நித்தம்...

*படம்: பந்தபாசம்*
*பாடியவர்: சீர்காழி*
*இசை: விஸ்வநாதன் - ராமமூர்த்தி*
*ஆண்டு : 1962*

நித்தம் நித்தம் மாறுகின்றதெத்தனையோ - நெஞ்சில்
நினைத்ததிலே நடந்ததுதான் எத்தனையோ?
கோடு போட்டு வாழ்ந்தவர்கள் எத்தனையோ
கொண்ட குறியும் தவறிப் போனவர்கள் எத்தனையோ

சுரை விதைத்த நிலத்தில் வேறு செடி முளைத்தது!
காதல் கதையில் பாதி நடக்கும் போது திரை விழுந்தது
தங்கை உயிர் தானிருந்த இடத்தில் நின்றது!
கண்டு அங்கும் இங்கும் இன்றி ஒன்று மயங்குகின்றது
இளமை துள்ளி எழுந்து நின்று காதல் என்றது
குடும்ப நிலைமை எதிரில் வந்து நின்று கடமை என்றது
காதலெனும் பூவுலர்ந்து கடமை வென்றது

என்றும் மேடு பள்ளம் உள்ளதுதான் வாழ்க்கை எனபது
தனிக்கொடியாய் நடை இழந்து தவித்தது ஒன்று - அதன்
துணைக்கு வந்த துயர்துடைக்க நின்றது ஒன்று
இதற்கிதுதான் என்றுமுன்பு யார் நினைத்தது?
வழிஇங்கு வந்து முடியுமென்றால் யார் தடுப்பது?

## கற்பூரக் காட்டினிலே...

*படம்: பூமாலை*
*பாடியவர்: சி.எஸ்.ஜெயராமன்*
*இசை : ஆர்.சுதர்சனம்*

கற்பூரக் காட்டினிலே கனல் விழுந்து விட்டதம்மா - இரு
காலடியில் கன்னிமலர் கசங்கி உலருதம்மா!
பெண்ணே உன் கதி இதுதானா? - உன்
பெண்மை ஆண்மைக்குப் பலிதானா?
உலகே உனக்குச் சுமைதானா? - உன்
உடலே உனக்குப் பகைதானா? (பெண்)

கோபுர அழகும் கொடிமரப் பொலிவும்
குங்கும மஞ்சளும் மலரும் - நாம்
கும்பிடும் தெய்வத்தின் புனிதமும் சேர்ந்து
செய்தது பெண்ணுருவம்!

இத்தனை புனிதமும் ஆண்களின் கைகள்
பட்டதும் அழியுதம்மா! - ஒரு
இடியது விழுந்த பனைமரம் போல
கொடியினிற் கருகுதம்மா - பெண்மை
நொடியினிற் கருகுதம்மா! (பெண்)

## தமிழ்...

*படம்: பூம்புகார் ஆண்டு : 1964*
*பாடியவர்: பி.சுசீலா*
*இசை: சுதர்சனம்*

தமிழ் எங்கள் உயிரானது - காலச்

சுழலாலும் கனலாலும்
அழியாமல் நிலையான (தமிழ்)

படிப்போர்க்குப் பால் போன்றது - தன்னைப்
பகைப்போர்க்கு வேல் போன்றது - எங்கள்
தாயகத்தின் தன்மானக்
கலைத்தேரில் சதிராடும் (தமிழ்)

செந்தமிழும் பெண்குரலும் ஒன்றாகட்டும் - தேவ
மங்கையரும் இங்கு வந்து நின்றாடட்டும்
தண்டையிட்டு வந்த அடி செண்டாகட்டும் - நாதம்
தந்திதொட்ட வீணையென உண்டாகட்டும் (தமிழ்)
சிந்துகிற புன்முறுவல் முத்தாகட்டும் - தேன்
பொங்குகின்ற கன்னம் பூங்கொத்தாகட்டும்
அந்திவெயில் பட்டு உடல் பொன்னாகட்டும் - கண்டு
ஆடவர் உள்ளம் சல்லடைக் கண்ணாகட்டும் (தமிழ்)

## சித்திரப் பூவிழி...

*படம்: இதயத்தில் நீ*
*பாடியவர்கள்: சுசீலா - எல்.ஆர்.ஈஸ்வரி*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்*
*ஆண்டு : 1963*

சித்திரப் பூவிழி வாசலிலே வந்து
யார் நின்றவரோ? - இந்தக்
கட்டுக் கரும்பினைத் தொட்டுக் குழைத்திட
யார் வந்தவரோ?

தென்றல் அழைத்துவர - தங்கத்
தேரினில் வந்தாரே!
புன்னகை மின்னி வந்து அருகினில்
நின்றவர் என்னவரே - இடம்
தந்த என் மன்னவரே (சித்திர)

கட்டழகில் கவிகம்பன் மகனுடன்
ஒட்டி இருந்தவரோ? - இந்தப்

பட்டு உடலினைத் தொட்டணைக்கும் கலை
கற்றுத் தெளிந்தவரோ? - உனை
மட்டும் அருகினில் வைத்துத் தினம்தினம்
சுற்றி வருபவரோ? - கலை
முற்றும் அறிந்தவரோ? - காதல்
மட்டும் தெரிந்தவரோ? (சித்திர)

வண்ணக் கருவிழி தன்னில் ஒருவிழி
என்று அழைப்பதுவோ? - பசும்
பொன்னிற் புதியதை கண்ணன் எனப்பெயர்
சொல்லித் துதிப்பதுவோ? - ஒளி
மின்னிவரும் இரு கண்ணசைவில் கவி
மன்னவன் என்பதுவோ? - இல்லை
தன்னைக் கொடுத்தென்னை தன்னில் மறைத்தவர்
வண்ணப் புதுமலரே - அவர்
நெஞ்சம் மலரணையே - மனம்
எங்கும் நிறைந்தவரே! (சித்திர)

## துன்பமெல்லாம்...

*படம்: பூம்புகார்*
*பாடியவர்: கே.பி.சுந்தராம்பாள்*
*இசை: சுதர்சனம்*
*ஆண்டு : 1964*

துன்பம் எல்லாம் நம்மனத்தை சுத்தம் செய்யத் தான் - வலியத்
தோளிரண்டு மிருப்பதெல்லாம் தாங்கிக் கொள்ளத் தான்
மக்கள் மனை சுற்றமெல்லாம் பற்றுவைக்கத்தான் - நாம்
பற்று வைப்பதெல்லாம் என்றோ விட்டு விடத்தான்!
உறவாடும் பண்புதனை உள்ளமதில் சேர்த்து வைத்து
பாதுகாக்கச் சொல்லி யாரோ படைத்துவிட்டான் - பலர்
பாதியிலே கதை முழுதும் முடித்துவிட்டார்!
இரவுபகல் என்றே காலம் மாறவில்லையா? - ஒன்றை
இழந்து பெறும் இன்பம் இரண்டு பங்கில்லையா?

தோல்வியெல்லாம் வெற்றிகாண படிகளில்லையா - வள்ளுவன்
துன்பம் வந்தால் சிரிக்கச் சொல்லிப் பாட வில்லையா

## வானும் நிலமும்...

*படம்: மறக்க முடியுமா?*
*பாடியவர்: ஏ.எல்.ராகவன்*
*இசை: சுதர்சனம்.*
*ஆண்டு : 1966*

வானும் நிலமும் வீடு
காற்றும் மழையும் உணவு
காலும் கையும் ஆடை
ஏழை வாழ்வு சிம்பிள்!
நேரம் காலம் பார்த்து - அந்த
ராகு கேதைக் கேட்டும் - அண்ணே
வாழ்க்கை வாழ நினைத்தால் - உன்
வயது முடிந்து போகும்!
துணிந்தால் உழைக்கத் துணிந்தால்
கரைந்தால் தொந்தி கரைந்தால் - இந்த
உலகம் உனக்கு வணங்கும் (வானும்)
படித்தாய் பரீட்சையில் தேறனும் என்று
அடித்தாய் கோட்டு அடித்தாய் - இன்று
அகமது நொந்து இறந்திடலாமோ?
முகமது கஜினியை மறந்திடலாமோ?
முயன்றால் பலமுறை முயன்றால்
பதினேழு முறை முயன்றால்
வெற்றி வந்து சேரும்! (வானும்)
புலியின் வேஷம் போட்டு - வயத்து
பொழப்பு நடத்தும் அண்ணே!
மனுஷ வேஷம் போட்டுப் புலிகள்
மறைவாய் திரியுது நாட்டில்!

எதிர்த்தால் புலியை எதிர்த்தால்
பணப்புலியை எதிர்த்து ஜெயித்தால்
பாட்டாளி வாழ்வில் உயர்வான்! (வானும்)

## ஒரு கோடி பாடலுக்கும்...

*படம்: தாயின் கருணை ஆண்டு : 1965*
*பாடியவர்: சீர்காழி.*
*இசை : வி.குமார்*

ஒரு கோடி பாடலுக்கும் விதை ஒன்றுதான்
ஓம் என்ற நாதத்தின் அருள் ஒன்றுதான் (ஒரு கோடி)
விதைப்பார்கள் அறுப்பார்கள் நிலம் ஒன்றுதான்
எடுப்பார்கள் கொடுப்பார்கள் நலம் ஒன்றுதான்
இருப்பார்கள் போவார்கள் கூடொன்றுதான்
எந்நாளும் உலகெங்கும் நிழல் ஒன்றுதான்
(ஒரு கோடி)
உடுப்பார்கள் கிழிப்பார்கள் உடை ஒன்றுதான்
நினைப்பார்கள் நடப்பார்கள் வழி ஒன்றுதான்
அழைப்பார்கள் பழிப்பார்கள் மனம் ஒன்றுதான்
அருள்பாடும் திருமார்பில் இனம் ஒன்றுதான்
(ஒரு கோடி)

## பூந்தென்றல் இசை பாட...

*படம்: தாயின் கருணை*
*பாடியவர்: பி.பி.சீனிவாஸ்*
*இசை: வி.குமார்*
*ஆண்டு : 1965*

பூந்தென்றல் இசை பாட
புகழ்பாணர் கவி பாட
சான்றோர்கள் மடி தன்னில்
விளையாடும் தமிழ் வாழ்க!

அறிவான முப்பாலும் கனிகொடுக்க
திருவாசகம் வந்து பனிதெளிக்க
கொடிபோன்ற இளம்பெண்கள் கற்பினிலே
கொலுகொண்டு முதிராத் தமிழ் வாழ்கவே! (பூந்)

வேல்தேடி எறிகின்ற வீரம் உண்டு!
நூல் தேடி தருகின்ற ஞானம் உண்டு!
சூல்கொண்ட குலமங்கை திருமுகம் போல்
சுடர்கின்ற புதுமஞ்சள் தமிழ் வாழ்கவே! (பூந்)

## மல்லிகைப் பூப்போட்டு...

*படம்: தாலாட்டு ஆண்டு : 1969*
*பாடியவர்கள்: டி.எம்.எஸ்.*
*- சூலமங்கலம் ராஜலட்சுமி*
*இசை : ஸ்ரீகாந்த்*

பெ: மல்லிகை பூப்போட்டு கண்ணனுக்கு மங்கல நீராட்டு

ஆ: செண்பகப் பூப்போட்டு பாடு ஒரு செந்தமிழ்த் தாலாட்டு

பெ: ஆயர்குடியினில் ஊது குழலோடு
கண்ணன் விளையாட்டு - அந்த
தேவியசோரை மார்பில் அவனுக்கு
எப்பவும் தாலாட்டு

ஆ: தாவிஉறிதன்னில் ஏறி இருக்கிற
வெண்ணை திருடிவிட்டு - அவன்
தத்திநடக்கிற பாதத்தில் - கொஞ்சிடும்
முத்துச் சதங்கை கட்டு (மல்லி)

பெ: வானவெளிதனில் பூவிருந்தால்
அதைத் தேடி பறிக்கட்டுமா? - இந்த
ஞானமகனுக்கு கோர்த்துக் கொடுத்ததைச்
சூடிக் களிக்கட்டுமா?

பெ: தேவர் அரசுக்குத் தூதனுப்பி - அவர்
தேரையும் கேட்கட்டுமா? - மகன்

ஊர்வலம் போகிற காலத்திலே - நின்று
பார்த்து ரசிக்கட்டுமா?

## வருக! வருக...

*படம்: தொழிலாளி*
*பாடியவர்கள்: டி.எம்.எஸ். - சுசீலா*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1964*

ஆ: வருக! வருக! திருமகனின் முதல் மகனே!
பெ: நீ வாழ்க! வாழ்க! கலைமகளின் தலைமகளே.
ஆ: வருக! வருக! தேடிவந்த செல்வமே
பெ: நீ வாழ்க! வாழ்க! தெய்வம் போல என்றுமே!

ஆ: தென்றல்தனைத் துணைக்கழைத்து
மெல்ல மெல்ல அடியெடுத்து
இன்னும் கொஞ்சம் நெருங்கி வந்தால் - போதும்!

பெ: தமிழ் மண்ணில் பிறந்து வந்த
மங்கை என்ற காரணத்தால்
என்னை வந்து தடுக்குதய்யா நாணம்! (வருக)

ஆ: கையிரண்டில் உனையணைத்துக்
கண்ணிரண்டில் விருந்து வைத்து
கற்பனையில் மிதப்பதும் ஓர் அழகுதான்!

பெ: செம்பவள வாய்திறந்து
சிந்துகின்ற மலரெடுத்து
சேர்த்து வைத்துக் கொடுப்பதுவும் அழகுதான்! (வருக)

# பஞ்சு அருணாசலம்

1941-இல் காரைக்குடியில் பிறந்தவர் பஞ்சு அருணாசலம். கண்ணதாசனின் உறவினரான இவர் கவிஞரிடம் உதவியாளராகப் பணியாற்றியவர். பல படங்களுக்குக் கதை வசனம் எழுதியவர். சில படங்களைத் தாமே தயாரித்தவர். சில படங்களை இயக்கியுள்ளார்.

பஞ்சு அருணாசலம் நல்ல பாடலாசிரியருங்கூட

'கலங்கரை விளக்கம்' படத்தில்,

"பொன்னெழில் பூத்தது புதுவானில்
வெண்பனித் தூவும் நிலவே நில்
என் மனத்தோட்டத்து வண்ணப் பறவை
சென்றது எங்கே? சொல்! சொல்! சொல்!

என்று இலக்கிய நயம் பொங்க எழுதும் இக்கவிஞர்,

"முன்னம் என் உள்ளத்தில் முக்கனிச் சக்கரை
அள்ளிக்கொடுத்த பொன் மாடமெங்கே?
கிண்ணம் நிரம்பிட செங்கனிச் சாறுண்ண
முன்வந்த செவ்வந்தி மாலையெங்கே?"

என்றெழுதி இப்பாடலை தலைசிறந்த தமிழ்மாலையாக்கி விடுகிறார்!

'பூக்காரி' படத்திலும் பஞ்சு அருணாசலம் தமிழால் கோலமிடக் காணலாம்.

ஊர்வலம் போகிற காலத்திலே - நின்று
பார்த்து ரசிக்கட்டுமா?

## வருக! வருக...

*படம்: தொழிலாளி*
*பாடியவர்கள்: டி.எம்.எஸ். - சுசீலா*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1964*

ஆ: வருக! வருக! திருமகனின் முதல் மகனே!
பெ: நீ வாழ்க! வாழ்க! கலைமகளின் தலைமகளே.
ஆ: வருக! வருக! தேடிவந்த செல்வமே
பெ: நீ வாழ்க! வாழ்க! தெய்வம் போல என்றுமே!

ஆ: தென்றல்தனைத் துணைக்கழைத்து
மெல்ல மெல்ல அடியெடுத்து
இன்னும் கொஞ்சம் நெருங்கி வந்தால் - போதும்!

பெ: தமிழ் மண்ணில் பிறந்து வந்த
மங்கை என்ற காரணத்தால்
என்னை வந்து தடுக்குதய்யா நாணம்! (வருக)

ஆ: கையிரண்டில் உனையணைத்துக்
கண்ணிரண்டில் விருந்து வைத்து
கற்பனையில் மிதப்பதும் ஓர் அழகுதான்!

பெ: செம்பவள வாய்திறந்து
சிந்துகின்ற மலரெடுத்து
சேர்த்து வைத்துக் கொடுப்பதுவும் அழகுதான்! (வருக)

# பஞ்சு அருணாசலம்

1941-இல் காரைக்குடியில் பிறந்தவர் பஞ்சு அருணாசலம். கண்ணதாசனின் உறவினரான இவர் கவிஞரிடம் உதவியாளராகப் பணியாற்றியவர். பல படங்களுக்குக் கதை வசனம் எழுதியவர். சில படங்களைத் தாமே தயாரித்தவர். சில படங்களை இயக்கியுள்ளார்.

பஞ்சு அருணாசலம் நல்ல பாடலாசிரியருங்கூட

'கலங்கரை விளக்கம்' படத்தில்,

"பொன்னெழில் பூத்தது புதுவானில்
வெண்பனித் தூவும் நிலவே நில்
என் மனத்தோட்டத்து வண்ணப் பறவை
சென்றது எங்கே? சொல்! சொல்! சொல்!

என்று இலக்கிய நயம் பொங்க எழுதும் இக்கவிஞர்,

"முன்னம் என் உள்ளத்தில் முக்கனிச் சக்கரை
அள்ளிக்கொடுத்த பொன் மாடமெங்கே?
கிண்ணம் நிரம்பிட செங்கனிச் சாறுண்ண
முன்வந்த செவ்வந்தி மாலையெங்கே?"

என்றெழுதி இப்பாடலை தலைசிறந்த தமிழ்மாலையாக்கி விடுகிறார்!

'பூக்காரி' படத்திலும் பஞ்சு அருணாசலம் தமிழால் கோலமிடக் காணலாம்.

''காதலின் பொன் வீதியில்
நானொரு பண்பாடினேன்
பண்ணோடு ஒருத்தி வந்தாள்
கண்ணோடு ஒருத்தி வந்தாள்''

என்ற அடிகளிலும்,

''திருப்பாற்கடலில் பொன் மேடையிட்டு
நான் காத்திருப்பேன் உனக்காக
இனித் தனிமையில்லை பகல் இரவும் இல்லை
நாம் வாழ்ந்திருப்போம் இனிதாக''

என்ற அடிகளிலும்,

''விழியோரங்களில் சில நேரங்களில்
வரும் பாவங்களும் கவியாகும்
அந்தக் கவிதைகளில் உள்ள பொருளறிந்து
அதைச் சுவைப்பதுதான் கலையாகும்''

என்ற அடிகளிலும் உன்னத அழகு மின்னல் அடிக்கிறதல்லவா?

'அவர் எனக்கே சொந்தம்' படத்தில்,

''தேவன் திருச்சபை மலரிது
வேதம் ஒலிக்கின்ற மணிஇது
எங்கெல்லாம் உன் புன்னகைக் கோலம்
அங்கெல்லாம் என் மெல்லிசை ராகம்''

என்று அழகுத் தமிழ் எழுதுகிறார் பஞ்சு.

'கவிக்குயில்' படத்தில்,

''சின்னக் கண்ணன் அழைக்கிறான்
சின்னக் கண்ணன் அழைக்கிறான்
ராதையைப் பூங்கோதையை
அவள் மனங்கொண்ட ரகசிய
ராகத்தைப் பாடி (சின்ன.)

கண்கள் சொல்கின்ற கவிதை
இளம்வயதில் எத்தனை கோடி
கண்கள் சொல்கின்ற கவிதை
இளம் வயதில் எத்தனை கோடி''

என்று சிந்தையை அள்ளும் வண்ணம் மொழி நயத்தோடு பாட்டெழுதியுள்ளார் பஞ்சு.

இதே படத்தில்,

"குயிலே கவிக்குயிலே
யார் வரவைத் தேடுகிறாய்?
மனசுக்குள் ஆசை வைத்த
மன்னன் வந்தானா?"

என்ற இனிய பாடலும் இவரெழுதியதேயாகும். இளையராஜா முதன் முதலில் இசை அமைத்த 'அன்னக்கிளி' படத்தில் இடம்பெற்ற.

"அன்னக்கிளி உன்னைத் தேடுதே'

பாடலும் பஞ்சு அருணாசலத்தின் கைவண்ணமே ஆகும்.

இப்படி பல சிறந்த பாடல்களை எழுதிய பஞ்சு அருணாசலம் ஏனோ பாடற்கலையில் முழுக்கவனத்தையும் செலுத்தவில்லை!

அவர் நினைத்திருந்தால் மிக அதிகமான படங்களுக்கு அழுத்தமான முறையில் நிறைய பாடல்களை எழுதியிருக்க முடியும்!

எழுதிய பாடல்களை வைத்துப் பார்க்கும் போது பஞ்சு அருணாசலம் ஒரு நல்ல பாடலாசிரியர்தாம் என்பது சந்தேகத்திற்கிடமின்றி உறுதி செய்யப்பட்டுள்ளது.

இனி இப்பாடலாசிரியரின் மூன்று முதல்தர பாடல்களை முழுமையாக பாருங்கள்.

## பொன்னெழில் பூத்தது...

*படம்: கலங்கரை விளக்கம்*
*பாடியவர்: டி.எம்.எஸ். - சுசிலா*
*இசை; எம்.எஸ்.விஸ்வநாதன்*
*ஆண்டு : 1965*

ஆ: சிவகாமி! சிவகாமி! சிவகாமி!
பொன்னெழில் பூத்தது புதுவானில்
வெண்பனி தூவும் நிலவே நில்!

என் மனத்தோட்டத்து வண்ணப்பறவை
சென்றது எங்கே? சொல்! சொல்! சொல்!

தென்னை வனத்தினில் உன்னைமுகம் தொட்டு
எண்ணத்தைச் சொன்னவன் வாடுகின்றேன்
உன்னிரு கண்பட்டு புண்பட்ட நெஞ்சத்தை
உன் பட்டுக் கைப்படப் பாடுகிறேன்
முன்னம் என் உள்ளத்தில் முக்கனிச் சக்கரை
அள்ளிக்கொடுத்த பொன் மாடமெங்கே?
கிண்ணம் நிரம்பிட செங்கனிச் சாறுண்ண
முன்வந்த செவ்வந்தி மாலையெங்கே?

பெ: பொன்னெழில் பூத்தது தலைவா வா!
வெண்பனி தூவும் இறைவா வா!
உன் மனத்தோட்டத்து வண்ணப்பறவை
வந்தது இங்கே வா! வா! வா!

தென்னவன் மன்றத்துச்
செந்தமிழ்ப் பண்கொண்டு
வந்தது பொன்வண்டு பாடிக்கொண்டு
மன்னவன் உள்ளத்துச்
சொந்தம் வந்தாளென்று
சென்றது பூந்தென்றல் ஆடிக்கொண்டு
என்னுடல் என்பது உன்னுடல் என்றபின்
என்னுடன் கோபம் கொள்ளுவதோ?
ஒன்றில் ஒன்றானபின் தன்னைத் தந்தானபின்
உன்னிடம் நானென்ன சொல்லுவதோ? (பொன்)

## காதலின் பொன் வீதியில்...

*படம்: பூக்காரி*
*பாடியோர்: டி.எம்.எஸ். - ஜானகி*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்*

அவள்: காதலின் பொன்வீதியில்
காதலன் பண்பாடினான்

கண்ணோடு அருகில் வந்தேன் - நான்
கண்ணோடு உறவு கொண்டேன்

அவன்: காதலின் பொன்வீதியில்
நானொரு பண்பாடினேன்
பண்ணோடு ஒருத்தி வந்தாள்
கண்ணோடு ஒருத்தி வந்தாள்

அவள்: திருப்பாற்கடலில் பொன்மேடையிட்டு
நான் காத்திருப்பேன் உனக்காக
இனித் தனிமையில்லை பகல் இரவும் இல்லை
நாம் வாழ்ந்திருப்போம் இனிதாக

அவன்: இரு பொன் மலரில் ஒன்று என் மலராம்
தேன்கொள்ள வந்தேன் மனம்போல
என் மனதினிலே உன் நினைவுகளே
அதை அள்ளி வந்தேன் உனக்காக
விழியோரங்களில் சில நேரங்களில்
வரும் பாவங்களும் கவியாகும்.

அவள்: அந்தக் கவிதைகளில் உள்ள பொருளறிந்து
அதைச் சுவைப்பதுதான் கலையாகும்!

அவன்: அந்தக் கலைகளிலும் பல புதுமையுண்டு
அதைப் பழகுவதே பேரின்பம்!

அவள்: இன்ப வாசலிலே ஒரு காவலில்லை
இனிக் காலமெல்லாம் உன்சொந்தம்

## தேவன் திருச்சபை...

*படம்: அவர் எனக்கே சொந்தம்*
*பாடியவர்: கே.ஜே.ஜேசுதாஸ்*
*இசை: இளையராஜா*

தேவன் திருச்சபை மலர் இது
வேதம் ஒலிக்கின்ற மணி இது

எங்கெல்லாம் உன் புன்னகைக் கோலம்
அங்கெல்லாம் என்மெல்லிசை ராகம்
விண்மீனை உன்கண்ணில் பார்க்கிறேன்
பொன்மானை உன் சாயலில் காண்கிறேன்
என்றும் அன்னைமேரியின்
பொங்கும் கருணை மழையிலே
என் செல்வமே! என் தேவியே!
பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்கவே!
கண்ணே மணியே பொன் எழில் ராணியே
அன்பே அமுதே அருந்தவச் செல்வியே
கொஞ்சும் மழலை மொழியிலே
உள்ளம் மயங்க மயங்கவே
கவிபாடிவா! கதை சொல்லிவா!
நம் வாழ்விலே இன்பம் நிறையவே!

# திருச்சி தியாகராஜன்

''மலரைப் பறித்தாய் தலையில் வைத்தாய்
மனதைப் பறித்தாய் எங்கே வைத்தாய்''

இலக்கிய நயமுள்ள இந்தப் பாடல்வரிகள் 'செங்கமலத் தீவு' படத்திற்காக கவிஞர் தியாகராஜன் கற்பனையில் உதித்தவையாகும்.

தரமான கவிஞரான இவர் தமது சிறந்த கவிதைகளை சில தொகுதிக ளாக வெளியிட்டுள்ளார். சிறந்த முற்போக்குச் சிந்தனையாளர்.

திரைப்படங்களுக்கு எழுதிய பாடல்களிலும் தமது முத்திரையை ஆழமாகப் பதித்துள்ளார்.

'செங்கமலத் தீவு' படத்தில்,

''சிந்தித்தால் சிரிப்பு வரும்
மனம் நொந்தால் அழுகை வரும்
தென்றலும் புயலாய் மாறி மாறி
வரும் மானிடரின் வாழ்வே''

என்று தெள்ளிய சிந்தனை வளத்துடன் பாடல் எழுதும் இவர்,

''மோசடி பாதையிலே
காசினைச் சேர்த்தாலும்
பாசமுடன் புகழ்பாடி
பலபேரும் வரவேற்பார்''

என்று உலக நடைமுறை யை யதார்த்த சித்திரமாக வடிக்கிறார்.

மானுட இனம் மட்டுமே வறுமையில் உழல்கிறது. பறவை, மிருகங்

கள் கூட பசியென்றும், வறுமையென்றும் காய்வதில்லை என்பதனை,

''வானம் தனிலே திரியும்
பறவை, மிருகமெல்லாம்
வயிற்றுப் பசியாலே
வாடி மடி யவில்லை''

என்று எழுச்சியுடன் எழுதுகிறார்.

'உல்லாச பயணம்' படத்திற்காகக் கவிஞர்,

''போடா போடா பைத்தியமே - உன்
புத்திக்கு வேணும் வைத்தியமே''

என ஆரம்பித்து,

''யாரோ சிலரை உறவென்றாய்
யாரோ பலரை பகையென்றாய்
நீரில்லாத பாலை வனத்தை
நெல்வயலாக நினைக்கின்றாய்''

எனக் கருத்தழகோடு எழுதுகிறார். மேலும்,

''விறகை மண்ணில் ஊன்றி வைத்து அதில்
வெந்நீர் ஊற்றிப் பாத்திகட்டி
இரவும் பகலும் காத்திருந்தால்
பருவ மலர்கள் பூத்திடுமா?

என்று புத்தம்புது உவமை எழிலோங்க வார்த்தைகளை அமைத்துள்ளார் கவிஞர்.

ஆழமான சிந்தனைத் திறனும், அழகிய மொழிவளமும் மிக்க பாடல்களைத் தீட்டும் திருச்சிக் கவிராயரின் இருபாடல்களை முழுமையாகப் பாருங்கள்.

## சிந்தித்தால்...

*படம்: செங்கமலத் தீவு*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*ஆண்டு : 1962*

சிந்தித்தால் சிரிப்பு வரும்
மனம் நொந்தால் அழுகைவரும்

தென்றலும் புயலாய் மாறிமாறி
வரும் மானிடரின் வாழ்வே! (சிந்தித்தால்)
மோசடிப் பாதையிலே
காசினைச் சேர்த்தாலும்
பாசமுடன் புகழ்பாடி
பலபேரும் வரவேற்பார்!
வாசமில்லா மென்மலராய்
வாடிய ஒரு பூங்கொடியாய்
வாழ்வில் நல்லவனே தாழ்வினை அடைவதா?
வானம் தனிலே திரியும் (சிந்தித்தால்)
பறவை, மிருகமெல்லாம்
வயிற்றுப் பசியாலே
வாடி மடிவதில்லை
மனதிலே சிறந்தவனாம்
மண்ணிலே உயர்ந்தவனாம்
மனிதனை நினைத்தாலே
மாபெரும் வெட்கமடா! (சிந்தித்தால்)

## போடா போடா பைத்தியமே...

*படம்: உல்லாசப் பயணம்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1964*

போடா போடா பைத்தியமே - உன்
புத்திக்கு வேணும் வைத்தியமே (போடா)
யாரோ சிலரை உறவென்றாய்
யாரோ பலரைப் பகையென்றாய்
நீரில்லாத பாலைவனத்தை
நெல்வயலாக நினைக்கின்றாய்! (போடா)

விறகை மண்ணில் ஊன்றி வைத்து அதில்
வெந்நீர் ஊற்றிப் பாத்திகட்டி

இரவும் பகலும் காத்திருந்தால்
பருவ மலர்கள் பூத்திடுமா? (போடா)
ப்சுங்கொடியென்றே எண்ணியதெல்லாம்
பச்சைப் பாம்பாய் மின்னியது!
அசலும் நகலும் புரியவில்லை
யாரையும் நம்ப முடியவில்லை! (போடா)

# பூவை செங்குட்டுவன்

1936-இல் இராமநாதபுர மாவட்டத்திலிலுள்ள கீழைப் பூங்குடியில் பிறந்தவர் இவர்.

"காலம் எனக்கொரு பாட்டெழுதும்
காற்று வந்தே இசையமைக்கும்
தாளம் போடும் நீரலைகள்
தாவிப் பாயும் நினைவலைகள்!"

மேற்காணும் இலக்கியச் செறிவுள்ள பாடல்டிகள் 'பௌர்ணமி' படத்திற்காக கவிஞர் வடித்தது.

இப்பாடலில்,

"கைகளைப் போலொரு நண்பனில்லை
கால்களைப் போலொரு தொண்டனில்லை
உழைப்பதைப் போலொரு இன்பமில்லை - இதை
உணர்ந்தவர் வாழ்வில் கவலையில்லை!"

என்ற வரிகள் உழைப்பின் உயர்வை உன்னதமான முறையில் இனங்காட்டி நிற்றலைக் காணலாம். இப்பாடலிலுள்ள,

"அன்பின் வழியே நடைபோடு - உன்
அறிவால் எதையும் எடைபோடு"

என்ற வரிகளும் அருமையாக அமைந்துள்ளன.

'நம்பிக்கை நட்சத்திரம்' படத்தில்,

"சிரித்தால் சிரிக்கும் உலகமிது!

அழுதால் அழுவதில்லை – இந்த
நினைவுகள் யாவும் சரியோ தவறோ
எதுவும் புரியவில்லை''

என்று நயம்பொங்க எழுதுமிக் கவிஞர்,

''காலம் என்பது நிலைக்கண்ணாடி
காட்டும் கோலங்கள் எத்தனை கோடி
கண்ணால் காற்றைப் பார்த்தவரில்லை
பெண்மனம் அறிந்த மேதையுமில்லை''

என எழுதிய அடிகளிலும் கருத்தாழம் உண்டு.

'கனிமுத்துப் பாப்பா' படத்தில்,

''ராதையின் நெஞ்சமே
கண்ணனுக்குச் சொந்தமே
ஆயிரம் கனவுகள்
கல்யாண நாளிலே
ஆனந்த நினைவுகள்
அன்பு கொண்ட உறவிலே
வசந்த காலத் தேரில் வந்து
வாழ்த்துக் கூறும் தென்றலே''

என்று இந்திப்பட இசைமேதை எஸ்.டி.பர்மன் ஏற்கனவே போட்ட மெட்டை வைத்து அருமையாக எழுதியுள்ளார் கவிஞர்.

'தாகம்' படத்திற்காக,

''வானம் நமது தந்தை
பூமி நமது அன்னை
உலகம் நமது வீடு
உயிர்கள் நமது உறவு''

என்றும்,

''தேன் பிறந்தது மலரிலே
மீன் பிறந்தது நீரிலே
இயற்கை அன்னையே
பெற்ற தாயே!
எந்தநாளும் சொந்தம் நீயே''

என்றும் பரந்த நோக்கோடுப் பைந்தமிழைப் பெய்கிறார் கவிஞர்!

''புதிய பூமி'' படத்தில்,

''நான் உங்கள் வீட்டுப்பிள்ளை - இது
ஊரறிந்த உண்மை
நான் செல்லுகின்ற பாதை
பேரறிஞர் காட்டும் பாதை''

என டாக்டர் எம்.ஜி.ஆருக்காக மிடுக்கோடு எழுதிய கவிஞர், அப்பாடலில்,

''காலம்தோறும் பாடம் கூறும்
மாறுதல் இங்கே தேவை!
ஏழை எளியோர் துயரம் போக்கும்
செயலே எந்தன் சேவை''

என்ற வரிகளையும் எழுச்சியோடு அமைத்துள்ளார்.

''இளையராணி ராஜலட்சுமி' படத்தில்,

''நல்ல கணவனுக்கு
மனைவியானவள் - அந்த
கடவுளுக்கே
நன்றி கூறுவாள் - அவன்
வல்லமையை என்றுமே
விரும்புவாள் - அன்பு
வாழ்க்கையிலே
தீபஒளி ஏற்றுவாள்''

என சிந்தனைச் சீரோடு எழுதுகிறார் இக்கவிஞர்.

கவிஞர் பூவை செங்குட்டுவன் பக்திப் பாடல்கள் எழுதுவதில் தலைசிறந்தவர் என்பது ஊரறிந்த விஷயம். அவர் பல கோணங்களில் அருமையாக எழுதக் கூடியவர் என்பதனை எடுத்துக்காட்டவே இதுகாறும் எழுதினேன். இனி பூவையாரின் பக்திப் பாடல் திறனைக் காண்போம்.

''இறைவன் படைத்த உலகை எல்லாம்
மனிதன் ஆளுகின்றான்
மனிதன் வடித்த சிலையில் எல்லாம்
இறைவன் வாழுகின்றான்''

என்று ''வா ராஜா வா'' படத்திற்காக அழகோடு எழுதியுள்ளார் கவிஞர்

''திருப்பரங்குன்றத்தில் நீ சிரித்தால் - முருகா
திருத்தணி மலைமீது எதிரொலிக்கும்''

என்ற பாடலும்,

''திருப்புகழைப் பாடப்பாட
வாய் மணக்கும்
எதிர்ப்புகளை முருகா உன்
வேல் தடுக்கும்''

என்ற பாடலும்,

''ஆடுகின்றானடி தில்லையிலே - அதைப்
பாடவந்தேன் அவன் எல்லையிலே''

என்ற பாடலும் கருத்துச் செறிவோடு, இலக்கியப் பொலிவோடு அமைந்து கவிஞருக்கு அழியாத புகழை ஈட்டிக் கொடுத்துள்ளன.

கவிஞர் தமது திரைப்பட நாடக அனுபவங்களைத் திரட்டி தாமெழுதிய பாடல்களையும் உள்ளடக்கி ''உள்ளத்தின் ஓசைகள்'' என்ற பெயரில் நல்ல முறையில் நூல் ஒன்றினை வெளியிட்டுள்ளார்.

பிறரின் காலில் விழுந்து ''வாய்ப்புப் பிச்சை'' கேட்க விரும்பாத இந்தத் தன்மானக் கவிஞர் தம்மை தேடி வரும் கேசட் நிறுவனங்களுக்கும், திரைப்பட நண்பர்களுக்கும் பாடல்கள் எழுதி வாழ்ந்து வருகிறார்.

இனி இக்கவிஞரின் திரைப்பாடல்கள் சிலவற்றைச் சுவைத்து மகிழுங்கள்.

## நான் உங்கள் வீட்டுப் பிள்ளை

*படம்: புதிய பூமி*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை:*

நான் உங்கள் வீட்டுப்பிள்ளை - இது
ஊரறிந்த உண்மை!
நான் செல்லுகின்ற பாதை
பேரறிஞர் காட்டும் பாதை!

காலம் தோறும் பாடம் கூறும்
மாறுதல் இங்கே தேவை!
ஏழை எளியோர் துயரம் போக்கும்
செயலே எந்தன் சேவை!
இதயம் என்பது ரோஜாவானால்
நினைவே நறுமண மாகும்!
எங்கே இதயம் அங்கே வாழும்
அன்பே என்னை ஆளும்!

கோவில் என்றால் கோபுரம் காட்டும்
தெய்வம் உண்டு அங்கே!
உள்ளம் என்றால் உயர்ந்து காட்டும்
எண்ணம் வேண்டும் இங்கே!
பிறந்த நாடே சிறந்த கோயில்
பேசும் மொழியே தெய்வம் - இதை
மறந்திடாமல் வாழ்ந்து வந்தால்
கோபுரமாகும் கொள்கை!

உனக்கொரு பங்கும் எனக்கொரு பங்கும்
உலகில் நிச்சயம் உண்டு!
ஒவ்வொரு மனிதன் உழைப்பினாலும்
உலகம் செழிப்பதுண்டு!
எதுவந்தாலும் ஏற்றுக் கொண்டால்
துணிவே துணையாய் மாறும்!
இளையோர் கூட்டம் தலைமை தாங்கும்
பூமியே புதியபூமி!

## வானம் நமது தந்தை!

*படம்: தாகம்*
*பாடியவர்: டி.எம்.எஸ். - குழுவினர்*
*இசை: எம்.பி.சீனிவாசன்*

வானம் நமது தந்தை!
பூமி நமது அன்னை!
உலகம் நமது வீடு!

உயிர்கள் நமது உறவு!
மலைகளிலே பிறப்பதற்கு
அருவி என்று பேரு! - அது
மண்ணில் வந்து தவழும்போது
ஆறு என்று பேரு!
கொடிகளிலே பிறப்பதற்கு
மலர்கள் என்று பேரு-
மனித இனத்தில் பிறப்பதற்கு
குழந்தை என்று பேரு!

தேன் பிறந்தது மலரிலே!
மீன் பிறந்தது நீரிலே
இயற்கை அன்னையே
பெற்ற தாயே!
எந்த நாளும் சொந்தம் நீயே!

வானம் நமது தந்தை!
பூமி நமது அன்னை!
உலகம் நமது வீடு!
உயிர்கள் நமது உறவு!

## சொந்தக்காரங்க...

*பாடியவர்: மு.க.முத்து*

சொந்தக்காரங்க - எனக்கு
ரொம்பப் பேருங்க! - நான்
சொத்தா மதிக்கிறது - உங்க
அன்பைத் தானுங்க!
குடும்பபாசம் ஊட்டி வளர்த்தது
அண்ணன் அறிவுங்க - ஒரு
கோட்டையென்றாலும் குடிசையென்றாலும்
கொள்கை பொதுவுங்க!
பாட்டாளிகளின் கூட்டாளிகளில்
நானும் ஒருவனுங்க - தன்

பாட்டன் தமிழைக் காக்கும் படையில்
நான் ஒரு தொண்டனுங்க!
உழைக்கிறகைகளை நம்பியபடிதான்
பொழுதே விடியுதுங்க - இந்த
உண்மையைச் சொன்னா ஒருசில பேருக்கு
எரிச்சல் வருதுங்க!
தேவைக்கூட தியாகம் செய்யுற
கூட்டம் இருக்குதுங்க - தன்
தேவைக்காக எதையும் செய்வது
சரியா சொல்லுங்க!

## சிரித்தால் சிரிக்கும் உலகமிது!

*பாடியவர்: மு.க.முத்து*

சிரித்தால் சிரிக்கும் உலகமிது!
அழுதால் அழுவதில்லை! - இந்த
நினைவுகள் யாவும் சரியோ தவறோ
எதுவும் புரியவில்லை!
குழந்தையின் உள்ளம் வளர்ந்த பின் இல்லை!
கொடிமலர்கூட மணம் தரவில்லை!
கோவிலில் இருந்தால் அதன்பேர் தெய்வம்
தெருவில் கிடந்தால் கல்லெனமாறும்!
காலம் என்பது நிலைக் கண்ணாடி!
காட்டும் கோலங்கள் எத்தனைகோடி!
கண்ணால் காற்றைப் பார்த்தவரில்லை
பெண் மனம் அறிந்த மேதையுமில்லை!
ஆறுதல் கூறிட அன்னையுமில்லை
அறிவுரை சொல்லிட தந்தையுமில்லை
உருவை நிழலும் பிரிவதுமில்லை!
உண்மை எனக்குப் பொருந்தவுமில்லை.

## காலம்...

*படம்: பௌர்ணமி*
*பாடியவர்: எஸ்.பி.பாலசுப்பிரமணியம்*
*இசை: சேகர்*

காலம் எனக்கொரு பாட்டெழுதும்!
காற்று வந்தே இசையமைக்கும்
தாளம் போடும் நீரலைகள்!
தாவிப் பாயும் நினைவலைகள்!

கைகளைப் போலொரு நண்பனில்லை!
கால்களைப் போலொரு தொண்டனில்லை!
உழைப்பதைப் போலொரு இன்பமில்லை! - இதை
உணர்ந்தவர் வாழ்வில் கவலையில்லை!

அன்பின் வழியே நடைபோடு - உன்
அறிவால் எதையும் எடைபோடு!
எங்கே உருவம் நடைபோடும்
அங்கே நிழல் சதிராடும்!
கருணை பிறந்தது அன்னையிடம்!
கடமை பிறந்தது தந்தையிடம்!
பாசம் பிறந்தது அண்ணனிடம் - அது
நேசம் கொண்டது தங்கையிடம்!

## இறைவன் படைத்த...

*படம்: வா ராஜா வா*
*பாடியவர்: சீர்காழிகோவிந்தராஜன்*
*ஆண்டு : 1969*

இறைவன் படைத்த உலகைஎல்லாம்
மனிதன் ஆளுகின்றான்
மனிதன் வடித்த சிலையில்எல்லாம்
இறைவன் வாழுகின்றான்!

உள்ளம்சொல்வதை உதடுசொல்லாமல்
உண்மை பிறப்பதில்லை!
உள்ளிருந்தே நீ அருள்செய்யாமல்
ஒன்றும் நடப்பதில்லை!
இரண்டுமனிதர் சேர்ந்தபோதும்
எண்ணம் வேறாகும்!
எத்தனைகோயில் இருந்தபோதும்
இறைவன் ஒன்றாகும்
இசையால்இறைவனை இரங்கவைப்பது
மனிதன்குணமாகும் - அந்த
இசையில் மயங்கி இரங்கிவருவது
இறைவன் மனமாகும்!

# அவினாசி மணி

கவிஞர் அவினாசி மணி இலைமறைகாயாய் இருந்து இனிமையான திரைப்பாடல்களை இயற்றியவர்.

சுமார் பத்து வருடங்களுக்கு முன், தாமெழுதிய சிறந்த பாடலொன்றைக் கண்ணதாசன் எழுதியதாக பலர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற ஆதங்கத்தை சினிமா வார இதழ் ஒன்றில் வெளியிட்டார்.

அவினாசிமணி சிறந்த கற்பனை வளமும், வாக்கு வளமும் மின்ன,

''ஒளிபிறந்த போது - மண்ணில்
உயிர்கள் பிறந்ததம்மா - இங்கே
நீ பிறந்தபோது - தெய்வம்
நேரில் வந்ததம்மா''

என்று எழுதியவர். இப்பாடலில்,

''தருமம் எல்லாம் உருவமாகத்
தரையில் வந்தாளோ - வாழ்வில்
தன்னைத் தந்து என்னைக் காத்து
பெருமை கொண்டாளோ?''

என்ற அடிகளிலும் நயமுள்ளது.

'உலகம் இவ்வளவுதான்' படத்திற்காக,

''இவ்வளவுதான் - உலகம்
இவ்வளவுதான்
எவ்வளவோ இருந்தாலும்
எப்படித்தான் பார்த்தாலும்''

எனவும்,

''பொல்லாத உலகத்தில்
கல்லாமல் புதுப்பாடம் கற்றேன்
பொய்யாக வாழ்வோரைப்
புகழ்ந்தாடும் கூட்டத்தைக் கண்டேன்''

எனவும்,

''தேருமேலே தெய்வம் வந்தாக்
கூட்டம் கூடுது - பெரும்
கூட்டம் கூடுது அந்தத்
தெய்வம் கூடத் தெருவில் வந்தா
மவுசு குறையுது - பழைய
மவுசு குறையுது''

எனவும் நல்ல கருத்துப் பொலிவோடு கவிஞர் எழுதியுள்ளார்.

'அடிமைப் பெண்' படத்தில் டாக்டர் எம்.ஜி.ஆரை சிறப்பிக்கும் கண்ணோட்டத்தில்,

''காலத்தை வென்றவன் நீ
காவியமானவன் நீ
வேதனை தீர்த்தவன்
விழிகளில் நிறைந்தவன்
வெற்றித் திருமகன் நீ''

என்றமைந்த அழகிய பாடலை ஆக்கியுள்ளார் கவிஞர் அவினாசிமணி.

இனி இவர்தம் பாடல்கள் சிலவற்றை முழுமையாகக் காண்க!

## ஒளிபிறந்த போது...

*பாடியோர்: டி.எம்.எஸ் - ராஜேஸ்வரி*

அவன்: ஒளி பிறந்தபோது - மண்ணில்
உயிர்கள் பிறந்ததம்மா - இங்கே

நீ பிறந்தபோது - தெய்வம்
நேரில் வந்ததம்மா!

பூமகள் பொறுமையும் நாமகள் இனிமையும்
பூமியில் வந்தது பெண்ணாக!

அவள்: நாணமும் மென்மையும் நாயகி வடிவில்
காவியம் ஆனது உன்னாலே!
அடுத்த வருசம் இந்தநாளில் தாலி உண்டாகும்
- இந்த
அன்னம்பெற்ற குழந்தை வந்து தோளில் நின்றாடும்

அவன்: கொடுத்துக் கொடுத்து வைத்ததெல்லாம்
கூட்டல் என்றாகும் - இந்தக்
குடும்பம் நல்ல கோயில் என்று
ஊரும் கொண்டாடும்! (ஒளி)

அவள்: தருமம் எல்லாம் உருவமாகத்
தரையில் வந்தாளோ? - வாழ்வில்
தன்னைத் தந்து என்னைக்காத்து
பெருமை கொண்டாளோ?

அவன்: பாவை உள்ளம் கோயிலென்று
எண்ணச் செய்தாளோ? - அன்பு
பாசம், தியாகம் யாவும் ஒன்றாய் கண்ணில்
நின்றாளோ?

## உலகம் இவ்வளவுதான்...

*படம்: உலகம் இவ்வளவுதான்*
*பாடியோர்: டி.எம்.எஸ் - சுசீலா*
*இசை: வேதா*
*ஆண்டு : 1969*

இவ்வளவுதான் - உலகம்
இவ்வளவுதான்!

எவ்வளவோ இருந்தாலும்
எப்படித்தான் பார்த்தாலும் (இவ்வளவுதான்)

கடிக்காத பழமிங்கே
கசங்காத மலரிங்கே - அனுபவி
அடிக்காத கைப்பந்து
அழகாக கை கொண்டு அனுபவி!
படிக்காத புதுப்பாடம்
பழகாத நடுக்கூடம் அனுபவி!
முடிக்காத சுகங்காணும்
இரவுக்கு நான்தானே பல்லவி அனுபவி
(இவ்வளவுதான்)

பொல்லாத உலகத்தில்
கல்லாமல் புதுப்பாடங்கற்றேன்
பொய்யாக வாழ்வோரைப்
புகழ்ந்தாடும் கூட்டத்தைக் கண்டேன்!

சொல்லொன்று செயலொன்று
இல்லாத பேரிங்கு யாரப்பா?
சொல்லாமல் விட்டாலே
என்போன்ற முட்டாளும் ஏதப்பா? (இவ்வளவுதான்)

தேருமேலே தெய்வம் வந்தாக்
கூட்டம் கூடுது - பெரும்
கூட்டம் கூடுது அந்தத்
தெய்வம் கூடத் தெருவில் வந்தா
மவுசு குறையுது - பழைய
மவுசு குறையுது! (இவ்வளவுதான்)

ஆடாத ஆளில்லை
அளக்காத நாளில்லை இவ்விடம்
யாராக இருந்தாலும்
தானாக வந்ததிங்கே சங்கமம் (இவ்வளவுதான்)

## காலத்தை வென்றவன் நீ...

*படம்: அடிமைப் பெண்*
*பாடியோர்: சுசீலா - ஜானகி*
*இசை: கே.வி.மகாதேவன்*

ஆண்டு : 1969

காலத்தை வென்றவன் நீ
காவியமானவன் நீ
வேதனை தீர்த்தவன்
விழிகளில் நிறைந்தவன்
வெற்றித் திருமகன் நீ

நடந்தால் அதிரும் ராஜநடை
நாற்புறம் தொடரும் உனதுபடை
போர்க்களத்தில் நீ கணையாவாய்
பூவைக்கு ஏற்ற துணையாவாய் (காலத்தை)

அழகாக விடிந்திடும் பொழுது உனக்காக
வேங்கையின் மைந்தனும் எனக்காக
ஓயாது உழைப்பதிலே சூரியன் நீ
ஒவ்வொரு வீட்டிலும் சந்திரன் நீ (காலத்தை)

பாவாய் பாவாய் பாரடியோ
பார்வையில் ஆயிரம் வேலடியோ
தங்கம் தங்கம் உன் உருவம்
தாங்கா தினிமேல் என் பருவம்

சுடராகத் தோளில் புகழ்மாலை தொடராக
தோகையின் நெஞ்சம் மலராக
உள்ளத்தில் இருக்கும் கனவாக
ஊருக்குத் தெரியா உறவாக (காலத்தை)

# புலமைப் பித்தன்

1935-இல் கோவை மாவட்டத்திலுள்ள பள்ளப் பாளையத்தில் பிறந்தவர் இவர்

தமிழ் இலக்கண, இலக்கியங்களை முறையாகப் பயின்று புலவர் பட்டம் பெற்ற இவர் டாக்டர் எம்.ஜி.ஆர். மூலம் தமிழ்ப் படவுலகிற்குக் கிடைத்த மணியான பாட லாசிரியர்.

'அடிமைப் பெண்' படத்தில் புலவர் யாத்த 'ஆயிரம் நிலவே வா' பாடல் தமிழர் வாழும் இடமெல்லாம் காற்றிலே தவழ்ந்து இவரை அருமையான பாடலாசிரியராக அடையாளங்காட்டியது

''ஆயிரம் நிலவே வா ஓர் ஆயிரம் நிலவே வா
இதழோரம் சுவைதேட இதழோரம் சுவைதேட
புதுப்பாடல் விழிபாட''

என்ற தொடக்க வரிகளிலேயே இலக்கிய நயம் சுடர்கிறதல்லவா?

''இல்லை உறக்கம் ஒரே மனம்
என்னாசை பாராயோ
என்னுயிரிலே உன்னை எழுத
பொன்மேனி தாராயோ''

என்ற அடிகளில் தமிழ் இன்பம் மழையெனப் பொழிகிறதல்லவா?

''மன்னவனின் தோளிரண்டை
மங்கை எந்தன் கை தழுவ
கார்குழலும் பாய்விரிக்கும்
கண்சிவந்து வாய்வெளுக்கும்''

என்ற அடிகளில் சிருங்காரச் சுவை மேலோங்கி நிக்கிறதல்லவா?

"அல்லிமலர் மேனியிலே
ஆடையென நான் இருக்க"

"சின்ன இடையில் மலரிதழ்
பட்டாலும் நோகாதோ"

"பொய்கையெனும் நீர்மகளும்
பூவாடை போர்த்திருந்தாள்
தென்றலெனும் காதலனின்
கைவிலக்க வேர்த்து நின்றாள்

என்று இப்பாடலில் 'எங்கெங்கு தொட்டாலும்' இலக்கியச் செழுமை நிறைந்திருக்கக் காணலாம்!

ஒரு கிராமத்துக் காதலனின் இதய சோகத்தை 'ரோசாப்பூ ரவிக்கைக் காரி'க்காக ஜீவனோடு-மண்வாசனை' தவழ புலவர்.

"உச்சி வகுந்தெடுத்து
பிச்சிப்பூ வச்சக்கிளி
பச்சமல பக்கத்தில
மேயுதின்னு சொன்னாங்க
மேயுதின்னு சொன்னதிலே
நியாயமென்ன கண்ணாத்தா"!

என்று எழுதுகிறார்.

மேலும்,

"வட்ட கருப்பட்டிய வாசமுள்ள ரோசாவ
கட்டெறும்பு மொச்சதுன்னு சொன்னாங்க
கட்டுக்கத அத்தனையும் கட்டுக்கத அத
சத்தியமா நம்மமனம் ஒத்துக்கல்ல"

என்று நெகிழ்ச்சியோடும் சொற் செறிவோடும் இப்பாடலைப் படைத்திருக்கிறார்!

'இன்றுபோல் என்றும் வாழ்க' படத்திற்காக,

"புரட்சிக் கவிஞன் கவிதை நடையே
பொங்கிப் பெருகும் கங்கை நதியே

பெண்ணின் பெருமை பேசும் அழகே
புதுமைப் பெண்ணே வருக வருக!''

என்று மொழியால் எழிலோவியம் தீட்டும் புலவர்,

''அச்ச மின்றி அடக்கமின்றி அடக்கி வைத்தார்கள்
ஆண்கள் நம்மை ஆளத்திட்டம் தீட்டி வைத்தார்கள்
தீமை தன்னை எண்ணும் போது அச்சம் கொள்ளுங்கள்
பாவம் வந்து சேரும்போது கொஞ்சம் வெட்கம் கொள்ளுங்கள்''

என்று வீறோடு எழுதுகிறார்.

மேலும் இப்பாடலில்,

''காசுக்காக மாலை சூட்டும் இழிந்த உள்ளங்கள்
கண்ணில்பட்டால் அச்சமின்றி விலங்கு பூட்டுங்கள்''

என ஆவேசமாக கர்ஜிக்கிறார். மேலும்,

''வீட்டுக்குள்ளே வாழும் பெண்ணை அடைத்து வைத்தார்கள்
ஏட்டைத் தொட்டு பார்ப்பதெல்லாம் பாவமென்றார்கள்
நாட்டை இன்று ஆள்வதற்குப் பெண்கள் வந்தார்கள்
நாளை எங்கள் காலமென்று சொல்லித் தந்தார்கள்''

என்று புலவர் கூறுகிறார். பெண்களுக்கு பெருமைசேர்க்க இந்திரா அம்மையார் இந்தியப் பிரதமராக மின்னியதும், டாக்டர் ஜெயலலிதா தமிழக முதல்வராய் புகழோங்கித் திகழ்வதும்,

''நாட்டை இன்று ஆள்வதற்குப் பெண்கள் வந்தார்கள்''

என்ற புலவரின் பாட்டடிகளுக்கு பாங்கான சான்றுகள் அல்லவா?

இவர் எல்லோரும் நல்லவரே' படத்திற்காக எழுதிய பாடலொன்று கருத்துப் பெட்டகமாக, இலக்கியச் செல்வமாகக் கொண்டாடக்கூடிய தகுதி மிக்க தாகும்.

''பகைகொண்ட உள்ளம் துயரத்தின் இல்லம்
தீராத கோபம் யாருக்கு லாபம்''

என்ற ஆரம்ப அடிகளே சிந்தனைக்கு விருந்தாக விளங்குகிறது.

உவமை நயஞ்சுடர

''வீட்டுக்கு வெளிச்சம் வருவதற்காக
கூரையை எரிப்பாரோ - ஒரு

வேதனைதன்னை விலைதந்து யாரும்
வாங்கிட நினைப்பாரோ?''

என்றெழுதுகிறார்.

கோபதாபங்களால் குடும்ப உறவுகள் - நாட்டுறவுகள் அனைத்துமே பாதிக்கப்பட்டு குரோதப் போக்கும், எதிர்ப்புணர்வுமே உலகெங்கும் பர விக்கிடக்கிறது. இவை அத்தனைக்கும் பரிகாரம் காண்பது போல் இந்தப் புலவர்,

''இதயத்தைச் திறந்து நியாயத்தைப் பேசு
வழக்குகள் முடிவாகும்
இருக்கிற பகையை வளர்த்திடத்தானே
வாதங்கள் துணையாகும்''

என்கிறார். இப்படியான உயர்ந்த சிந்தனையைத் தருகிற ஞானமுள்ள ஒரு பாட லாசிரியர் உயர்ந்த இலக்கியக்காரர் தாம் என்பதனை யார்தான் மறுக்க முடியும்?

தாயன்பைப் பற்றி புலமைப் பித்தன் 'மதன மாளிகை' படத்திற்காக எழுதிய பாடலை பார்ப்போம்

''ஒரு சின்னப் பறவை அன்னையைத் தேடி
வானில் பறக்கிறது - அதன்
சிந்தனையெல்லாம் தாயவள் அன்புத்
தேனில் குளிக்கிறது''

என்ற அடிகளின் கருத்து நயமும், மொழி நயமும் கோபுரம் போல் உயர்ந்து நிற்கிறது.

''அன்னை என்பது மானுடம் அல்ல
இதுதான் உலகத்தின் தெய்வீகம்
அன்றவள் சொன்னது தாலாட்டல்ல
ஆன்மா பாடிய சங்கீதம்''

எனற அடிகளிலும்,

''வேதம் என்பது வேறேதுமல்ல
தாயவள் கூறிய உபதேசம்
விண்ணில் இருப்பது சொர்க்கமல்ல
அதுதான் அன்னையின் மலர்ப்பாதம்''

என்ற அடிகளிலும் உள்ள நயத்தை பார்க்கும் போது சினிமாப் பாடல்களையும் அறிவு நிரம்பிய ஒருவரின் கைவண்ணத்தால் அழியாத இலக்கிய மலர்களாக பிரசவிக்க முடியும் என்ற பேருண்மை துலங்குகிறதல்லவா?

தமிழிலுள்ள மிகச் சிறந்த தாலாட்டுப் பாடல்களை ஒரு தொகுதியாக வெளியிட்டால் அதில் முதல் வரிசையில் வைத்துப் போற்ற வேண்டிய தகுதி படைத்த ஒரு தாலாட்டுப் பாடலைப் புலவர் புலமைப்பித்தன் எழுதியுள்ளார்

''இந்தப் பச்சைக்கிளிக்கொரு செவ்வந்திப்பூவில்
தொட்டிலைக் கட்டிவைத்தேன் - அதில்
பட்டுத் துகிலுடன் அன்னச் சிறகினை
மெல்லென இட்டு வைத்தேன்''

என்று தங்கத்தமிழ் தீட்டுமிவர்,

''எந்தக் குழந்தையும் நல்ல குழந்தை தான்
மண்ணில் பிறக்கையிலே - பின்
நல்லவர் ஆவதும் தீயவர் ஆவதும்
அன்னை வளர்ப்பதிலே''

என்று ''குழந்தைகள் உளவியல் ஞானம்'' புரிந்து கொண்ட நிலையில் எழுதுகிறார்.

'பல்லாண்டு வாழ்க' படப்பாடலொன்று புலவரின் விரிந்த கண்ணோட்டத்திற்குச் சாட்சி பகர்கிறது!

''ஒன்றே குலமென்று பாடுவோம்
ஒருவனே தேவனென்று போற்றுவோம்
அன்னை இதயமாக அன்பு வடிவமாக வந்து
வழிகாட்ட வேண்டுமென்று வணங்குவோம்''

என்ற அடிகளிலும்,

''நல்ல மனச்சாட்சியே தேவன் அரசாட்சியாம் அங்கு
ஒருபோதும் மறையாது அவன் சாட்சியாம்''

என்ற அடிகளிலும்,

''பாவம் என்ற கல்லறைக்குப் பலவழி என்றும்
தர்மதேவன் கோவிலுக்கு ஒருவழி''

என்ற அடிகளிலும் உயர்ந்த சிந்தனைகள் உலா வருகிறதல்லவா?

இனி புலவரின் சில பாடல்களை முழுமையாக துய்த்து மகிழுங்கள்.

## ஆயிரம் நிலவே வா...

*படம்: அடிமைப் பெண்*
*பாடியோர்: எஸ்.பி.பி. - சுசீலா*
*இசை: கே.வி.மகாதேவன்*
*ஆண்டு : 1969*

ஆ: ஆயிரம் நிலவே வா ஓர் ஆயிரம் நிலவே வா
இதழோரம் சுவைதேட இதழோரம் சுவைதேட
புதுப்பாடல் விழிபாட (ஆயிரம்)

நல்லிரவு துணையிருக்க
நாமிருவர் தனியிருக்க
நாணமென்ன பாவமென்ன
நடைதளர்ந்து போனதென்ன
இல்லை உறக்கம் ஒரே மனம்
என்னாசை பாராயோ
என்னுயிரிலே உன்னை எழுத
பொன்மேனி தாராயோ?

பெ: மன்னவனின் தோளிரண்டை
மங்கை எந்தன் கை தழுவ
கார் குழலும் பாய் விரிக்கும்
கண் சிவந்து வாய் வெளுக்கும்
இன்பமயக்கம் எழில் முகம்
முத்தாக வேர்க்காதோ?
அந்த நினைவில் வந்து விழுந்தேன்
கொத்தாக - பூவாக (ஆயிரம்)

ஆ: அல்லிமலர் மேனியிலே
ஆடையென நான் இருக்க

பெ: கள்ளவிழிப் பார்வையிலே
காணுமின்பம் கோடிபெறும்!

ஆ: சின்ன இடையில் மலரிதழ்
பட்டாலும் நோகாதோ

பெ: இன்ப மெதுவோ

ஆ: இன்னுமெதுவோ

பெ: தந்தாலும் ஆகாதோ

ஆ/பெ:ஆயிரம் நிலவே வா

ஆ: பொய்கை யெனும் நீர்மகளும்
பூவாடை போர்த்திருந்தாள்

பெ: தென்றலெனும் காதலனின்
கைவிலக்க வேர்த்து நின்றாள்

ஆ: என்ன துடிப்போ அவள் நிலை
நீ உணர மாட்டாயோ

பெ: அந்த நிலையில்

ஆ: தந்த சுகத்தை

பெ: நான் உணரக் காட்டாயோ?

இரு: ஆயிரம் நிலவே வா

## பகை கொண்ட உள்ளம்.

*படம்: எல்லோரும் நல்லவரே*
*பாடியவர்: ஜேசுதாஸ்*
*இசை: வி.குமார்*

பகைகொண்ட உள்ளம் துயரத்தின் இல்லம்
தீராத கோபம் யாருக்கு லாபம்
வீட்டுக்கு வெளிச்சம் வருவதற்காக
கூரையை எரிப்பாரோ - ஒரு
வேதனை தன்னை விலைதந்து யாரும்

வாங்கிட நினைப்பாரோ?

இதயத்தைத் திறந்து நியாயத்தைப் பேசு
வழக்குகள் முடிவாகும்
இருக்கிற பகையை வளர்த்திடத் தானே
வாதங்கள் துணையாகும்!
வற்றிய குளத்தைப் பறவைகள் தேடி
வருவது கிடையாது - நம்
வாழ்க்கையில் வறுமை வருகிற போது
உறவுகள் கிடையாது
பாலைவனத்தில் விதைப்பதனாலே
பயிரொன்றும் விளையாது
பட்ட பின்னாலே வருகிறஞானம்
யாருக்கும் உதவாது.

## ஒன்றே குலமென்று...

*படம்: பல்லாண்டு வாழ்க*
*பாடியோர்: ஜேசுதாஸ் குழுவினர்*
*இசை: எம்.எஸ்.வி.*
*ஆண்டு:*

அன்பிலார் எல்லாம் தமக்குரியர் - அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு
தெய்வத்தால் ஆகாதெனினும் முயற்சி தன்
மெய்வருத்தக் கூலிதரும்.

ஒன்றே குலமென்று பாடுவோம்
ஒருவனே தேவனென்று போற்றுவோம்
அன்னை இதயமாக அன்பு வடிவமாக வந்து
வழிகாட்ட வேண்டுமென்று வணங்குவோம்
கடவுளிலே கருணை தன்னைக் காணலாம் - அந்தக்
கருணையிலே கடவுளையும் காணலாம்
நல்ல மனசாட்சியே தேவன் அரசாட்சியாம் - அங்கு

ஒரு போதும் மறையாது அவன் சாட்சியாம்
பாவம் என்ற கல்லறைக்குப் பலவழி என்றும்
தர்ம தேவன் கோவிலுக்கு ஒரு வழி
இந்த வழி ஒன்றுதான் எங்கள் வழி என்று நாம்
நேர்மை ஒருநாளும் தவறாமல் நடை போடுவோம்
(ஒன்றே)

இதயதெய்வம் நமது அண்ணா தோன்றினார் - அவர்
என்றும் வாழும் கொள்கை தீபம் ஏற்றினார்
அந்த ஒளி காணலாம் சொன்ன வழி போகலாம்
நாளை வரலாறு நமக்காக உருவாகலாம். (ஒன்றே)

## ஒரு சின்னப் பறவை...

*படம்: மதன மாளிகை*
*பாடியவர்: எஸ்.பி.பாலசுப்பிரமணியம்*
*இசை: எம்.பி.சீனிவாசன்*

ஒரு சின்னப் பறவை அன்னையைத் தேடி
வானில் பறக்கிறது - அதன்
சிந்தனையெல்லாம் தாயவள் அன்புத்
தேனில் குளிக்கிறது.

காலைப்பொழுதில் பனித்துளி எங்கும்
பன்னீர்த் தெளிக்கிறது - மென்
காற்றுக் குளிர்ந்து வீசிடும் போது
உள்ளம் சிலிர்க்கிறது.

அன்னை என்பது மானுடம் அல்ல
இதுதான் உலகத்தின் தெய்வீகம்
அன்றவள் சொன்னது தாலாட்டல்ல
ஆன்மா பாடிய சங்கீதம்

வேதம் என்பது வேறேதுமல்ல
தாயவள் கூறிய உபதேசம்

விண்ணில் இருப்பது சொர்க்கமல்ல
அதுதான் அன்னையின் மலர்ப்பாதம்

## இந்தப் பச்சைக் கிளிக்கொரு...

படம் . நீதிக்குத் தலைவணங்கு

பாடியோர்: ஜேசுதாஸ்

இந்தப் பச்சைக்கிளிக்கொரு செவ்வந்திப் பூவில்
தொட்டிலைக் கட்டிவைத்தேன் - அதில்
பட்டுத் துகிலுடன் அன்னச் சிறகினை
மெல்லென இட்டு வைத்தேன்
நான் ஆராரோ என்று தாலாட்ட
இன்னும் யார்யாரோ வந்து பாராட்ட (பச்சை)

எந்தக் குழந்தையும் நல்ல குழந்தை தான்
மண்ணில் பிறக்கையிலே - பின்
நல்லவர் ஆவதும் தீயவர் ஆவதும்
அன்னை வளர்ப்பதிலே
தூக்க மருந்தினைப் போன்றவைகள் பெற்றவர்
போற்றும் புகழுரைகள் - நோய்

தீர்க்கும் மருந்தினைப் போன்றவைகள் - கற்றவர்
கூறும் அறிவுரைகள்
ஆறுகரையில் அடங்கி நடந்திடில்
காடுவளம் பெறலாம் - தினம்
நல்ல நெறிகண்டு பிள்ளை வளர்ந்திடில்
நாடு நலம் பெறலாம்.

பாதை தவறிய கால்கள் விரும்பிய
ஊர்சென்று சேர்வதில்லை - நல்ல
பண்பு தவறிய பிள்ளைகள் பெற்றவர்
பேர் சொல்லி வாழ்வதில்லை (பச்சை)

## உச்சி ...

படம்: ரோசாப்பு ரவிக்கைகாரி
பாடியவர்: எஸ்.பி.பாலசுப்பிரமணியம்
இசை: இளையராஜா.

உச்சி வகுந்தெடுத்து
பிச்சிப்பூ வச்சக்கிளி
பச்சமல பக்கத்தில
மேயுதின்னு சொன்னாங்க
மேயுதின்னு சொன்னதிலே
நியாயமென்ன கண்ணாத்தா

ஆரிரா ரோ.... ஆரிராரோ... ஆரிராரோ

வீட்டுல மாடுகட்டி பால கறந்துவச்சா
பால் திரிஞ்சி போச்சுதுன்னு சொன்னாங்க
சொன்னவங்க வார்த்தையில சுத்தமில்ல
அடி சின்னக்கண்ணு நானும் அத ஒத்துக்கல்ல
(உச்சி)

வட்ட கருப்பட்டிய வாசமுள்ள ரோசாவ
கட்டெறும்பு மொச்சுதுன்னு சொன்னாங்க
கட்டுக்கத அத்தனையும் கட்டுக்கத அத
சத்தியமா நம்பமனம் ஒத்துக்கல்ல

பொங்கலுக்கு செங்கரும்பு
பூவான பூங்கரும்பு
செங்கறையான் தின்னதுன்னு சொன்னாங்க
செங்கறையான் தின்னுருக்க நியாயமில்ல
அட சித்தக்கத்தி பூவிழிய நம்பவில்ல (உச்சி)

## புரட்சி...

படம்: இன்றுபோல் என்றும் வாழ்க

பாடியோர்: வாணிஜெயராம் குழு.
இசை: விஸ்வநாதன்.

குழு: புரட்சிக் கவிஞன் கவிதை நடையே
பொங்கிப் பெருகும் கங்கை நதியே
பெண்ணின் பெருமை பேசும் அழகே
புதுமைப் பெண்ணே வருக வருக!

பெ: புதுமைப் பெண்கள் அறிவுக் கண்கள்
பிறந்த நாட்டின் சிறந்த செல்வம்
என்றே நாம் வாழுவோம்!
இளமைக் காதல், உரிமைப் பாடல் இரண்டும்
எங்கள் இனத்தில் உண்டு என்றே நாம் பாடுவோம்
அன்பு ராஜாங்கம் இங்கே காணுவோம் அங்கு
எல்லோரும் ஒன்றாக வாழுவோம்
அச்சமின்றி அடக்கமின்றி அடக்கி வைத்தார்கள்
ஆண்கள் நம்மை ஆளத்திட்டம் தீட்டி வைத்தார்கள்
தீமைதன்னை எண்ணும் போது அச்சம் கொள்ளுங்கள்
பாவம் வந்து சேரும்போது வெட்கம் கொள்ளுங்கள்
புதுப்பண்பாட்டைக் கொஞ்சம் கேளடி
இதைப் பண்பாடிச் சொன்னான் பாரதி
காசுக்காக மாலை சூட்டும் இழிந்த உள்ளங்கள்
கண்ணில் பட்டால் அச்சமின்றி விலங்கு பூட்டுங்கள்!
காலம் பார்த்துத் தாமே தம்மை மாற்றிக் கொள்ளட்டும்
காதல், அன்பு, தியாகமெல்லாம் கற்றுக் கொள்ளட்டும்
இந்தக் கல்யாண சந்தை நாட்டிலே
என்ன கச்சேரி தேவை வீட்டிலே
வீட்டுக்குள்ளே வாழும் பெண்ணை அடைத்து வைத்தார்கள்
ஏட்டைத் தொட்டுப் பார்ப்பதெல்லாம் பாவமென்றார்கள்
நாட்டை இன்று ஆள்வதற்கும் பெண்கள் வந்தார்கள்

நாளை எங்கள் காலமென்று சொல்லித் தந்தார்கள்
இனி எல்லோருக்கும் எல்லாம் ஆகலாம் புது
பூலோக சொர்க்கம் காணலாம்!

# முத்துலிங்கம்

1942 ஆம் ஆண்டில் சிவகெங்கை அருகே உள்ள கடம்பங்குடியில் பிறந்தவர் இவர்.

வெண்ணிலா, எம்.ஜி.ஆர்., பிள்ளைத் தமிழ், எம்.ஜி.ஆர். உலா ஆகிய நூல்களை வெளியிட்டுத் தம் கவிதைப் புலமையை இனங்காட்டியவர். புலவருக்குப் படித்தவர்.

'பொண்ணுக்குத் தங்க மனசு' படத்தின் மூலம் திரைப்படப் பாடலாசிரியரானார். டாக்டர் எம்.ஜி.ஆர். ஒத்துழைப்பால் சிறந்த பாடல்கள் எழுதும் வாய்ப்பு களைப் பெற்று நாடறிந்த கவிஞரானார்.

'இன்று போல் என்றும் வாழ்க' படத்திற்காக,

''அன்புக்கு நான் அடிமை - தமிழ்ப்
பண்புக்கு நான் அடிமை — நல்ல
கொள்கைக்கு நான் அடிமை - தொண்டர்
கூட்டத்தில் நான் அடிமை''

என்று தெள்ளிய சிந்தனைகளைத் தங்கு தடையின்றி பாடலாய் வடித்துள்ளார்.

இப்பாடலில்,

''அன்பு, பணிவு அடக்கம் என்றே
தேடிப் பார்த்தேன் தென்பட வில்லை
குடிக்கும் நீரை விலைகள் பேசி
கொடுக்கும் கூட்டம் இங்கே''

என்ற அடிகளிலும்,

"ஆடைபாதி ஆளும் பாதி
அறிவும் பாதி ஆனது இங்கே
உள்ளத்தில் ஒன்று உதட்டில் ஒன்று
உறவு கொண்டீர்களே"

என்ற அடிக்ளிலும் சிறுத்த மனப்போக்குடைய மாந்தர்களை கவிஞர் உணர்ச்சித் துடிப்போடு சாடுகிறார்.

இதே படத்தில்,

"இது நாட்டைக் காக்கும் கை - உன்
வீட்டைக் காக்கும் கை இந்தக் கை
நாட்டின் நம்பிக்கை எதிர்காலத்
தாயகத்தின் வாழ்க்கை"

என்றும்,

"ஈகை காட்டும் மக்கள்
சேவை ஆற்றும் கை முள்
காட்டைச் சாய்த்து தோட்டம்
போட்டு பேரெடுக்கும் கை"

என்றும் கருத்துச் செறிவோடு எழுதுகிறார் கவிஞர்.

'ஊருக்கு உழைப்பவன்' படத்தில்,

"பிள்ளைத் தமிழ் பாடுகிறேன் - ஒரு
பிள்ளைக்காகப் பாடுகிறேன்
மல்லிகை போல் மனதில் வாழும்
மழலைக்காகப் பாடுகிறேன்"

என்று இலக்கிய வளத்தோடு எழுதும் இவர்,

"வான மழைத்துளி யாவும்
முத்தாக மாறாது!
வண்ணமிகு மலர் யாவும்
உன்போல் சிரிக்காது"

என்றும்,

"தேடி வந்த பொருள்யாவும்
தேன்மழலை ஆகாது
திருவிளக்கின் ஒளியழகும்
உன்னழகைக் காட்டாது"

என்றும் எழுதுவது நல்ல நயத்தோடு அமைந்துள்ளது.

'என் கேள்விக்கென்ன பதில்' படத்தில் கவிஞர் முத்துலிங்கம்,

''ஒரே வானம் ஒரே பூமி ஒரே சாமிதான் நாம்
ஒரே குலம் ஒரே இனம் ஒரே சாதிதான்
ஒரே ரத்தம்தான் உயிரும் ஒரே உயிருதான்''

என்ற பாடலில் இனச் சண்டை, ஜாதிச் சண்டை, மொழிச் சண்டை, மதச் சண்டை என்று போர்க்குணத்தில் அலைவோர்க்குப் புத்தி புகட்டும் வண் ணம் 'தேச ஒருமைப்பாடு' என்ற புனித லட்சியத்தை வலியுறுத்தி எழுதி யுள்ளார்.

தேச ஒற்றுமையை வலியுறுத்திய கவிஞர் உலகப் பார்வையுடன்,

''காக்கை குருவி கூட்டம் போல சேர்ந்து வாழுவோம்
உலகமெல்லாம் சமத்துவத்தை ஓங்கச் செய்குவோம்
ஒருமைப்பாடு என்னும் கொடியை உலகில் ஏற்றுவோம்!''

என்று எழிலோங்க எழுதுகிறார்!

சிறந்த சித்தாந்தப் பாடல்களைத் தீட்டிய கவிஞர் காதல் சுவைமின்ன, இலக்கிய நயம் பொங்க 'கிழக்கே போகும் ரயில்' படத்தில்,

''மாஞ்சோலைக் கிளிதானோ மான்தானோ
வேப்பந் தோப்புக்குயிலும் நீதானோ - இவள்
ஆவாரம் பூதானோ நடை தேர்தானோ
சலங்கைகள் தரும் இசை தேன்தானோ''

என்று எழுதுகிறார்.

இப்பாடலில்,

''மின்னல் ஒளியெனக் கண்ணைப் பறித்திடும்
அழகோ தேவதையோ
அங்கம் ஒரு தங்கக் குடம் - அழகினில்
மங்கை ஒரு கங்கை நதி - உலகினில்
துள்ளும் இசை தேன்தான்
அள்ளும் கரம் நான்தான்
மஞ்சம் அதில் வஞ்சிக்கொடி
வருவாள் சுகமே தருவாள் மகிழ்வேன்!''

என்று மேலும் மேலும் இலக்கிய மிடுக்கோடு எழுகிறார்.

'பயணங்கள் முடிவதில்லை' படத்தில் முத்து லிங்கத்தின் பாட்டு காதல் சோகத்தைச் சுமந்து அற்புதமான பவனி வருகிறது!!

''மணியோசை கேட்டு எழுந்து
நெஞ்சில் ஆசைகோடி சுமந்து
திருத்தேரில் நானும் அமர்ந்து
ஒருகோயில் சேர்ந்தபோது
அந்தக் கோயிலின் மணி வாசலை
இங்குமூடுதல் முறையோ?''

எனக் கவிஞர் எழுதுவது உணர்ச்சித் துடிப்புள்ள இலக்கியமாக மலர்ந்துள் ளது அல்லவா?

இப்பாடலில்,

''பாதை மாறிப்போகும்போது,
ஊரும் வந்து சேராது!
''தாளம் மாறிப் போகும்போது
ராகம் தோன்றாது''

என்ற அடிகளில்தான் எத்துணை நயம்!

'வயசுப்பொண்ணு' படத்தில்,

''காஞ்சிப் பட்டுடுத்தி
கஸ்தூரி பொட்டு வைத்து
தேவதை போல் நீ நடந்து
வரவேண்டும் - அந்தத்
திருமகளும் உன் அழகைப்
பெற வேண்டும்''

என்ற இனிய பாடலும், 'எங்க ஊர் ராசாத்தி' படத்தில்,

''பொன்மானைத் தேடி - நானும்
பூவோட வந்தேன்''

என்ற அரிய பாடலும் முத்துலிங்கம் யாத்த முத்தான பாடல்களேயாகும்.

இனி கவிஞர் யாத்த புகழ்பூத்த சில பாடல்களை முழுமையாகக் கண்டு மகிழுங்கள்.

## அன்புக்கு நான் அடிமை......

*படம்: இன்றுபோல் என்றும் வாழ்க*
*பாடியவர்: ஜேசுதாஸ்*
*இசை: விஸ்வநாதன்*
*ஆண்டு:*

அன்புக்கு நான் அடிமை - தமிழ்ப்
பண்புக்கு நான் அடிமை நல்ல
கொள்கைக்கு நான் அடிமை - தொண்டர்
கூட்டத்தில் நான் அடிமை
இன்பங்கள் இங்கே பொங்கி வழியும்
முகங்கள் நான் பார்க்கிறேன்
இதயம் எல்லாம் பாலைவனம் போல்
இருக்கும் நிலை பார்க்கிறேன்
அன்பு பணிவு அடக்கம் என்றே
தேடிப் பார்த்தேன் தென்படவில்லை
குடிக்கும் நீரை விலைகள் பேசி
கொடுக்கும் கூட்டம் இங்கே
இருக்கும் காசைத் தண்ணீர் போலே
இறைக்கும் கூட்டம் இங்கே
ஆடை பாதி ஆளும் பாதி
அறிவும் பாதி ஆனது இங்கே
உள்ளத்தில் ஒன்று உதட்டில் ஒன்று உறவு கொண்டீர்களே
கடமை கண்ணியம் கட்டுப்பாட்டை மறந்து போனீர்களே
நாகரீகம் என்பது எல்லாம் போதையான பாதை அல்ல
(அன்புக்கு)

## இது நாட்டை...

*படம்: இன்றுபோல் என்றும் வாழ்க*
*பாடியவர்: டி.எம்.எஸ்*

*இசை: எம்.எஸ்.வி.*
*ஆண்டு:*

இது நாட்டைக் காக்கும் கை - உன்
வீட்டைக் காக்கும் கை இந்தக்கை
நாட்டின் நம்பிக்கை எதிர்கால தாயகத்தின் வாழ்க்கை
அன்புக்கை - இது ஆக்கும் கை - இது அழிக்கும் கையல்ல
சின்னக்கை ஏர் தூக்கும் கை - இது திருடும் கையல்ல
நேர்மை காக்கும் கை - நல்ல நெஞ்சை வாழ்த்தும் கை
இது ஊழல் நீக்கி தாழ்வைப் போக்கும் சீர்மிகுந்த கை
வெற்றிக்கை படை வீழ்த்தும் கை இது தளரும் கையல்ல
சுத்தக்கை புகழ் நாட்டும் கை இது சுரண்டும் கையல்ல
ஈகை காட்டும் கை - மக்கள் சேவை ஆற்றும் கை முள்
காட்டைச் சாய்த்து தோட்டம் போட்டு பேரெடுக்கும் கை
உண்மைக் கை - கவி தீட்டும் கை - கறைபடிந்த கையல்ல
பெண்கள் தம்குலம் காக்கும் கை - இதுகெடுக்கும் கையல்ல
மானம் காக்கும் கை - அன்ன தானம் செய்யும் - சம
நீதி ஓங்க பேதம் நீங்க ஆளவந்த கை

## பிள்ளைத் தமிழ்...

*படம்: ஊருக்கு உழைப்பவன்*
*பாடியவர்: ஜேசுதாஸ்*
*இசை: எம்.எஸ்.வி.*

பிள்ளைத் தமிழ் பாடுகிறேன் - ஒரு
பிள்ளைக்காகப் பாடுகிறேன்
மல்லிகை போல் மனதில் வாழும்
மழலைக்காகப் பாடுகிறேன்.

நீலக்கடல் அலைபோலவே
நீடூழி நீ வாழ்க!
நெஞ்சம் என்னும் கங்கையிலே

நீராடி நீ வாழ்க!
காஞ்சி மன்னன் புகழ்போலே
காவியமாய் நீ வாழ்க!
கடவுளுக்கும் கடவுளென
கண்மணியே நீ வாழ்க!
வான மழைத்துளி யாவும்
முத்தாக மாறாது!
வண்ணமிகு மலர் யாவும்
உன்போல சிரிக்காது!
தேடிவந்த பொருள் யாவும்
தேன்மழலை ஆகாது!
திருவிளக்கின் ஒளியழகும்
உன்னழகைக் காட்டாது!

## ஒரே வானம்...

*படம்: என் கேள்விக்கென்ன பதில்*
*பாடியவர்: பி.எஸ்.சசிரேகா*
*இசை: எம்.எஸ்.வி.*

ஒரே வானம் ஒரே பூமி ஒரே சாமிதான் - நாம்
ஒரே குலம் ஒரே இனம் ஒரே சாதிதான்
ஒரே ரத்தம்தான் உயிரும் ஒரே உயிருதான்
தெற்கு வடக்கு வேறுபாடு திசையில் இருக்கலாம்
ஒரு தேசமக்கள் வேறுபட்டால் அமைதி இருக்குமா
அன்று இனவெறியை மதவெறியை மறந்து போனீரே
அதை மறந்ததினால் சுதந்திரத்தை வாங்கிக் கொண்டீரே
இன்று உங்களுக்குள் சாதிபேத சண்டை வருவதோ
ராம ராஜ்யத்தில் இரத்த கங்கை
பொங்கி பாய்வதோ பொங்கி பாய்வதோ (ஒரே)

மேடையிலே சாதிகளை ஒழிப்பேன் என்பவர்கள்

தன் பெயரின்பின்னே சாதி பெயரை போட்டுக்
கொள்ளுவதேன்
இது ஆதியிலே வந்துவிட்ட பழக்கம்தானம்மா
அறிந்துகொண்டு திருந்தி வாழ்ந்தால் பேதம் ஏதம்மா
பள்ளியிலே குழந்தைகளை படிக்க சேர்க்கையிலே
அங்கு ஜாதிபெயர் என்னவென்று கேட்கின்றாரே
இதை ஆட்சியில் உள்ளவர்கள் புரிந்து கொண்டாலே
சாதிபேதம் ஒழியும் தன்னாலே
ஒரு தாயின் வயிற்றில் உதித்த பிள்ளைகள்
இன்று ஒற்றுமையாய் வாழ்வதற்கு முயன்று நிற்போமா
ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு உணர்ந்து கொள்ளுங்கள்
இதை உணர்ந்து கொண்டு மற்றவர்க்கும்
எடுத்துச் சொல்லுங்கள்.
காக்கை குருவி கூட்டம் போல சேர்ந்து வாழுவோம்
காக்கை குருவி போல சேர்ந்து உண்ணுவோம்
உலகமெல்லாம் சமத்துவத்தை ஓங்கசெய்குவோம்
ஒருமைப்பாடு என்னும் கொடியை உலகில் ஏற்றுவோம்.

## மாஞ்சோலை கிளிதானோ...

*படம்: கிழக்கே போகும் ரயில்*
*பாடியவர்: ஜெயச்சந்திரன்*
*இசை: இளையராஜா*

மாஞ்சோலைக் கிளிதானோ மான்தானோ
வேப்பந் தோப்புக் குயிலும் நீதானோ - இவள்
ஆவாரம் பூதானோ நடை தேர்தானோ
சலங்கைகள் தரும் இசை தேன்தானோ (மாஞ்)

நீரோடை போலவே சிரித்தாடி ஓடினாள்
வளையோசையே காதிலே சிந்து பாடுதே
பளிங்குச் சிலையே பவளக் கொடியே

குலுங்கி வரும் இடையில் புரளும்
சடையில் மயக்கும் மலர்க்கொடி (மாஞ்)

மின்னல் ஒளியென கண்ணைப் பறித்திடும்
அழகோ தேவதையோ

அங்கம் ஒரு தங்கக்குடம் - அழகினில்

மங்கை ஒரு கங்கை நதி - உலகினில்
துள்ளும் இசை தேன்தான் அள்ளும் கரம் நான்தான்
மஞ்சம் அதில் வஞ்சிக்கொடி வருவாள்
சுகமே தருவாள் மகிழ்வேன்
பண்பாடும் பெண்ணோவியம் செந்தாமரையே
மேலாடை மாங்கனி அசைந்தாடும் வேளையில்
பலகோடிகள் ஆசையே வந்து மோதுதே
கரும்பு வயலே குறும்பு மொழியே
இளமை எனும் தன்மை நெருப்பை அணைக்கும்
பருவ மழை முகில் (மாஞ்)

## மணியோசை கேட்டு...

*படம்: பயணங்கள் முடிவதில்லை*
*பாடியோர்: எஸ்.பி.பி. - ஜானகி*
*இசை: இளையராஜா*

பெ: மணியோசை கேட்டு எழுந்து
நெஞ்சில் ஆசைகோடி சுமந்து
திருத்தேரில் நானும் அமர்ந்து
ஒரு கோயில் சேர்ந்த போது
அந்தக் கோயிலின் மணிவாசலை
இங்கு மூடுதல் முறையோ? (மணி)

ஆ: கண்ணன் பாடும் பாடல் கேட்க
ராதை வந்தால் ஆகாதோ
ராதையோடு ஆசைக் கண்ணன்

பேசக்கூடாதோ?

பெ: கண்ணன் பாடும் பாடல்கேட்க
ராதை வந்தால் ஆகாதோ!
ராதையோடு ஆசைக்கண்ணன்
(இது) பேசக்கூடாதோ?

ஆ: ராதைமனம் ஏங்கலாமோ?
கண்ணன் மனம் வாடலாமோ?
வாழ்க்கை மாறுமோ நெஞ்சம் தாங்குமோ?
பாதைமாறிப் போகும்போது
ஊரும் வந்து சேராது
தாளம் மாறிப் போகும்போது
.......

பெ: பாதை மாறிப் போகும்போது
ஊரும் வந்து சேராது

ஆ: தாளம் மாறிப் போகும்போது
ராகம் தோன்றாது!

பெ: பாடும் புது வீணை இங்கே

ஆ: ராகம் அதில் மாறும் இங்கே
காலம் மாறுமோ? ராகம் சேருமோ?

## பட்டுக் கன்னம்...

*படம்: காக்கிச் சட்டை*
*பாடியோர்: எஸ்.பி.பி - சுசீலா*
*இசை: இளையராஜா*

ஆ: பட்டுக் கன்னம் தொட்டுக் கொள்ள
ஒட்டிக் கொள்ளும்... ஒட்டிக்கொண்டு
கட்டிக்கொள்ள உள்ளம் துள்ளும்
தென்றல் வந்து உன்னைத் தொடும்
மெல்ல மெல்ல ராகம் ஒன்று பாடுதம்மா

ஆ: நீல நதிக்கரை ஓரத்தில் நின்றிருந்தேன் ஒருநாள்,
உந்தன் பூவிதழ் ஈரத்தில்
என்னை மறந்திருந்தேன் பலநாள்

பெ: வானத்து மீன்களை மேகம் மறைத்தது போல்
தினமும் எந்தன் மோகத்தை நாணத்தில்
மூடி மறைத்திருந்தேன் மனதில்

ஆ: நாணம் யாவும் நூலாடை
நானே உந்தன் புது மேலாடை

பெ: மங்கை இவள் அங்கங்களில்
உங்கள் கரம் தொடங்கலாம் நாடகமே
கற்பனை கொஞ்சிடும் காலடிச் சத்தங்களே
அடடா இந்த காவியம் கோவிலைப் பார்த்து
எழுதியதோ தலைவா

ஆ: புன்னகை சிந்திடும் பூந்தமிழ் ஓவியமே - கிளியே
உந்தன் பூ உடல் பார்த்த பின
சிற்பம் வடித்தனரோ கிளியே

பெ: ஆசைத் தீயை தூண்டாதே
போதைப் பூவைத் தினம் தூவாதே

ஆ: அந்தியிலே வெள்ளி நிலா
அள்ளித் தரும் சுகங்களே ஆயிரம்.

# நா.காமராசன்

1942 ஆம் ஆண்டில் மதுரை மாவட்டத்தில் உள்ள போடிநாயக னூரில் பிறந்த நா.காமராசன், தமது கறுப்பு மலர்கள், சூரியகாந்தி, சகாரா வைத் தாண்டாத ஒட்டகங்கள் போன்ற இலக்கியப் படைப்பு கள் மூலம் தமிழ் உலகிலே உன்னத இலக்கிய வாதியாக,கவிஞராக தம்மை அடை யாளங் காட்டியவர்.

கம்பதாசன், சுரதா போல எதையும் புதிய கோணத்தில் புதிய மொழி ஆளுகையுடன் எழுத வேண்டுமென்ற வெறி இந்தக் கவிஞரிடம் மிகுதி யாக உண்டு.

டாக்டர் எம்.ஜி.ஆர். மூலம் 'பல்லாண்டு வாழ்க' படத்திற்குப் பாடல் எழுதும் வாய்ப்பைப் பெற்றுத் திரையுலகில் நுழைந்தார் இவர்.

இப்படத்திற்காக,

''போய் வா நதியலையே - இவள்
பூச்சூடும் நாள் பார்த்துவா!
வாவா நதியலையே - ஏழை
பூமிக்கு நீர் கொண்டுவா''

என்று புதிய பார்வையுடன் இப்பாடலை அமைத்துள்ளார் கவிஞர்.

இப்பாடலில்,

''கனிதூங்கும் தோட்டம் முகம் பூத்த கோலம்
பனிவாடைக் காலம் உனைக்காணவேண்டும்
நிலவென்னும் ஓடம் கரைசேரும் நேரம்
மழைக்கூந்தல் ஓரம் இளைப்பாற வேண்டும்''

என்ற அடிகளிலும்,

''நுரை பூவை அள்ளி அலைசிந்த வேண்டும்
அலைமீது கொஞ்சம் தலைசாய வேண்டும்
வசந்தத்தை வென்று வருமுன்னைக் கண்டு
மழைவில்லில் வண்ணம் வரைகின்ற வானம்''

என்ற அடிகளிலும் புதுமை மிடுக்கும் மொழி லாவண்யமும் ஒன்றாகி புத்திலக்கிய மலராக இப்பாடலை ஆக்கி விடுகிறது!

'இன்றுபோல் என்றும் வாழ்க' படத்திற்காக,

''இதயத்திலிருந்து இதழ்கள் வரை - அது
ஏதோ ஒருவகை புதிய கலை மனப்
புயலுக்குப் பிறகு அமுதமழை - அதில்
மலர்போல் வளர்வது என்ன கதை''

என்ற நா.கா. பாடலிலும் இலக்கிய அழகு புதுமலராகப் பூத்து விரிகிறது.

இப்பாடலில்,

''மார்கழி பூங்கனி குளிர்கள் கொண்டு
மாலை சூடுவதேன்?''

என்ற அடிகளிலும்,

''தாமரைக் கன்னி சூரியன் வந்தால்
தமிழ்போல் ஏன் சிரித்தாள்?''

என்ற அடிகளிலும் ஓர் அபூர்வ கலைநயம் புன்னகைக்கிறதல்லவா?

'வெள்ளை ரோஜா' படத்திற்காக கவிஞர், எழுதிய

''மானே மானே உன்னைத்தானே''

என்று தொடங்கும் பாடலில்,

''ஓ மானே! மானே!
காலைப் பனித்துளி கண்ணில் தவழ்ந்திட
கனவுகள் மலர்கினறது''
''பார்வை தாமரை அதைத் தேடுகின்றது
பருவம் துடிக்கின்றது''
''நீல பூவிழிப்பார்வை ஜாலம் புரிகின்றது
நினைவுகள் இனிக்கின்றன''

என்று உள்ள அடிகள் மிகுந்த நயம்மிக்கவை அல்லவா?

'நீதிக்குத் தலைவணங்கு' படத்திற்காக இந்தக் கவிஞர்,

''கனவுகளே ஆயிரம் கனவுகளே
காதல் தேவனின் தூதர்களே
என் கண்மணியை இங்கு வரச்சொல்லுங்கள்
கொஞ்சம் வரச்சொல்லுங்கள்''

என்று 'கனவுகளைத் தூதுவிடும்' புதிய சிந்தனை அலையோடு இப்பாடலை ஆரம்பிக்கிறார்.

இப்பாடலை

''நகக்குறி வரைகின்ற சித்திரமோ -- அங்கு
நாணங்கள் காரிகை வண்ணங்களோ
முகமென்று அதற்கொரு தலைநகரோ – கைகள்
மூடிய கோட்டை கதவுகளோ''

என்று புதிய உவமைத்திறன் மின்ன, உருவகப்பாங்கு ஒளிர அமைக்கிறார்!

இப்பாடல் இறுதியில்,

''நிலவென்ற தீபம் ஒளிரட்டுமே – அதில்
நித்திரை இரவுகள் எரியட்டுமே
காதலில் கவிதைகள் வளரட்டுமே – ஒரு
காவியம் தொட்டிலில் தவழட்டுமே!''

என்றுள்ள அடிகளில்தான் எத்துணை ஜீவன்! எத்துணை இலக்கியச் செழுமை.

'நீதிக்குத் தலைவணங்கு' படத்தில் முற்போக்குச் சிந்தனை ஓங்கிச் சுடர

''எத்தனை மனிதர்கள் உலகத்திலே – அம்மா
எத்தனை உலகங்கள் இதயத்திலே
ஏழையின் உறக்கங்கள் பாதையிலே – அந்த
மாளிகை மயக்கங்கள் போதையிலே''
''எட்டடி மண்ணுக்குப் போகும் வரை – இந்தக்
கற்பனை ஊர்வலம் வாழ்க்கையிலே
யாரோ ஒருவன் தோட்டமிட்டான் – அதில்
யாரோ பலனை அனுபவித்தார்''

என்று எழுதி யுள்ளார்.

காமராச னுக்கு அவருடைய திறனை முழுமையாக இனங்காட்ட வாய்ப்புகள் வழங்கப்படவில்லை. கிடைத்த வாய்ப்புகளைப் பயன்படுத்தித் தாம் ஓர் உயர்ந்த இலக்கியக்காரர், சிறந்த பாடலாசிரியர் என்பதனை தெட்டத் தெளி வாக உணர்த்தியிருக்கிறார்.

இனி நவகவி நா.காமராசனின் தேனார் தமிழ்ப்பாடல்கள் சிலவற்றை முழுமையாக துய்த்து மகிழுங்கள்.

## கனவுகளே ஆயிரம்...

*படம்: நீதிக்குத் தலைவணங்கு*
*பாடியோர்: டி.எம்.எஸ்.சுசீலா*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்*

ஆ: கனவுகளே ஆயிரம் கனவுகளே,
காதல் தேவனின் தூதர்களே
என் கண்மணியை இங்கு வரச்சொல்லுங்கள்
கொஞ்சம் வரச்சொல்லுங்கள்.

பெ: கனவுகளே ஆயிரம் கனவுகளே
காதல் தேவியின் தூதர்களே
என் காதலனை இங்கு வரவிடுங்கள்

கொஞ்சம் வர விடுங்கள். (கனவு)

ஆ: நகக்குறி வரைகின்ற சித்திரமோ - அங்கு
நாணங்கள் தூரிகை வண்ணங்களோ
முகமென்று அதற்கொரு தலைநகரோ? - கைகள்
மூடிய கோட்டை கதவுகளோ?

பெ: இதழென்ற மலர்மட்டும் விரியட்டுமே - அதில்
இதயத்தின் வண்டுகள் பறக்கட்டுமே,
கைவளை விலங்குகள் நொறுங்கட்டுமே - அங்கு
காதலின் சிறகுகள் உயரட்டுமே! (கனவு)

ஆ: உடையென்ற திரைமட்டும் விலகட்டுமே - இன்ப
உடலெங்கும் நாடகம் நடக்கட்டுமே
உறவென்ற தேர் இங்கு ஓடட்டுமே - அதில்
ஊடலின் கொடி ஒன்று அசையட்டுமே!

பெ: நிலவென்ற தீபம் ஒளிரட்டுமே - அதில்
நித்திரை இரவுகள் எரியட்டுமே
காதலில் கவிதைகள் வளரட்டுமே - ஒரு
காவியம் தொட்டிலில் தவழட்டுமே! (கனவு)

## எத்தனை மனிதர்கள்

*படம்: நீதிக்குத் தலைவணங்கு*
*பாடியவர்: ஜெயச்சந்திரன்*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்*

எத்தனை மனிதர்கள் உலகத்திலே - அம்மா
எத்தனை உலகங்கள் இதயத்திலே
ஏழையின் உறக்கங்கள் பாதையிலே - அந்த
மாளிகை மயக்கங்கள் போதையிலே

எட்டடி மண்ணுக்குப் போகும் வரை - இந்தக்
கற்பனை ஊர்வலம் வாழ்க்கையிலே
யாரோ ஒருவன் தோட்டமிட்டான் - அதில்
யாரோ பலனை அநுபவித்தார்

தாயினைக் கடவுள் என நினைத்தான் - இவன்
தாய்மடி கோவில் என வளர்ந்தான்
கோவிலைப் பிரிந்தே வரும்போதும் - மனக்
கோவிலில் தாய்தான் வாழுகிறாள்!
பக்கத்தில் திருடன் விழித்திருப்பான் - நல்ல
கட்டத்தில் அவன்தான் அகப்படுவான்!
துக்கமும் துன்பமும் தொடர்வதுண்டு - இந்தத்
தொடர்கதை ஒருநாள் முடிவதுண்டு!

## போய்வா நதியலையே...

*படம்: பல்லாண்டு வாழ்க*
*பாடியோர்: ஜேசுதாஸ் - கலா*
*இசை: கே.வி.மகாதேவன்*

பெ: போய்வா நதியலையே - இவள்
பூச்சூடும் நாள் பார்த்து வா!
ஆ: வா வா நதியலையே - ஏழை
பூமிக்கு நீர் கொண்டு வா (போய்)
பெ: கனிதூங்கும் தோட்டம் முகம் பூத்த கோலம்
பனிவாடைக் காலம் உனைக்காண வேண்டும்.
ஆ: நிலவென்னும் ஓடம் கரைசேரும் நேரம்
மழைக்கூந்தல் ஓரம் இளைப்பாற வேண்டும்
பெ: இதுபோதும் என்று தடுமாறி
ஆ: இடம் மாறி மாறி சுகம்தேடி
பெ: உறவாடும்போது சரிபாதியாகி
ஆ: உயிர்காணும் இன்பம் பலகோடி (போய்வா)
பெ: நுரைப்பூவை அள்ளி அலைசிந்த வேண்டும்
அலைமீது கொஞ்சம் தலைசாய வேண்டும்
ஆ: வசந்தத்தை வென்று வருமுன்னைக் கண்டு
மழைவில்லில் வண்ணம் வரைகின்ற வானம்

பெ: மெதுவாக வந்து இதழ்மூடி
ஆ: பதமாக அன்பு நதி தேடி
பெ: மணமேடை கண்டு புதுமாலை சூடி
ஆ: குலமங்கை வாழ்க நலம்பாடி (போய்வா)

## இதயத்திலிருந்து...

*படம்: இன்றுபோல் என்றும் வாழ்க*
*பாடியோர்: டி.எம்.எஸ். - சுசீலா*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்*

ஆ: இதயத்திலிருந்து இதழ்கள் வரை - அது
ஏதோ ஒரு வகை புதிய கலை மனப்
புயலுக்கு பிறகு அமுத மழை - அதில்
மலர்போல் வளர்வது என்ன கதை?

பெ: இதயத்திலிருந்து இதழ்கள் வரை - அது
ஏதோ ஒருவகை புதியகலை மனப்
புயலுக்குட் பிறகு அமுதமழை - அதில்
மலர்போல் வளர்வது காதல் கதை

ஆ: மார்கழிப் பூங்கனி குளிர்கள் கொண்டு
மாலை சூடுவதேன்?

பெ: ஆண்டவன் நீயென்று வணங்கி
அவன் ஆண்டாள் ஆனதினால்

ஆ: காவிரிபோல் ஒரு உணர்ச்சி வெள்ளம்
உனைக் கண்டால் பாய்வதென்ன?

ஆ: தாமரைக் கன்னி சூரியன் வந்தால்
தமிழ்போல ஏன் சிரித்தாள்?

பெ: பூங்குல ராணி நீரினில் ஆட
மஞ்சள் தூவியதால்

ஆ: நீதொடும் வேளையில் கொதிப்பும் என்ன

எந்தன் நிழலும் சுடுவதென்ன?

பெ: பெண்மையின் தீபம் கண்களில் ஏந்தி
திருநாள் கூடுவதால்

இரு: ஆ... ஆ... ஓ... ஓ...

## ஓ மானே! மானே!......

*படம்: வெள்ளை ரோஜா*
*பாடியவர்: எஸ்.பி.பாலசுப்பிரமணியம் - ஜானகி*
*இசை: இளையராஜா*

ஆ: ஓ மானே! மானே! உன்னைத் தானே - என்
கண்ணில் உன்னைக் கண்டேன் சின்னப் பெண்ணே!

பெ: ஆசை நெஞ்சே நான் போதை கொண்டேன்
சொன்னாலும் சொக்கிப் போனேன் நானே! நானே!

ஆ: ஓ மானே! மானே!
காலைப் பனித்துளி கண்ணில் தவழ்ந்திட
கனவுகள் மலர்கின்றது!

பெ: பார்வை தாமரை அதைத் தேடுகின்றது
பருவம் துடிக்கின்றது!

ஆ: ஆசையின் மேடை நாடகம் ஆடும்

பெ: ஆயிரம் பாடல் பாவையைத் தேடும்

ஆ: நீ தேவன் கோயில் தேரோ? என்
தெய்வம் தந்த பூவோ?
நீ தேனில் ஊறிய பாலோ?
தென்றல் தானோ?

பெ: ஓ மானே! மானே!
நீலப் பூவிழிப் பார்வை ஜாலம் புரிகின்றது
நினைவுகள் இனிக்கின்றது!

ஆ: காதல் கோபுரம் இங்கே என் கைகளில்!

பெ: மந்திரம் ஒன்றை மன்மதன் சொன்னான்

ஆ: மார்பினில் ஆடும் மேனகை வந்தாள்

பெ: என் ஆசை நெஞ்சில், ராகம் என் கண்களில்
ஆடும் ரோஜா என் காதல் கோவில்
தீபம் கண்ணா கண்ணா வா!

ஆ: ஓ மானே! மானே!

## இரவுப் பாடகன்...

*படம்: ஊருக்கு உழைப்பவன்*
*பாடியவர்: ஜேசுதாஸ்*
*இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்*

இரவுப் பாடகன் ஒருவன் வந்தான் - நெஞ்சில்
இரண்டு பாடல்கள் கொண்டு வந்தான்
காத்திருப்பான் என்று தேவதைக்கு - தென்றல்
காற்றினிலே ஒன்றைத் தூதுவிட்டான்! (இரவு)

புத்தனின் முகமோ? என் தத்துவச் சுடரோ?
புத்தனின் முகமோ? என் தத்துவச் சுடரோ?
சித்திர விழியோ? அதில் எத்தனைக் கதையோ?
சித்திர விழியோ? அதில் எத்தனைக் கதையோ?
அதில் எத்தனைக் கதையோ?
ஆரிராரோ ஆரிராரோ...

ஆரிராரோ ஆரிராரோ

ஆரிராரோ ஆரிராரோ

# கங்கை அமரன்

இன்றைய தமிழ்பட உலகில் மிகப்பிரபலமாக விளங்கும் இசைய மைப்பாளர் இளையராஜாவின் சகோதரரான இவர், ஏராளமான பாடல் களை எழுதும் வாய்ப்புகள் பெற்றவர்.

அமரனின் பல பாடல்கள் பாமர மக்களைத் திருப்தி செய்யும் போக் கில் அமைந்தவை.

இந்த வகையில் அவரெழுதிய பாடல்கள் பல மிகவும் ஹிட்டாகி உள்ளன.

அவர் எழுதிய மிகப்பலப் பாடல்கள் நகைச்சுவைப் பாங்கு மிக்கவை. எந்தவொரு கிராமத்து மனிதனையும், பாமரனையும் வசீகரிகும் திறன் நிச்சயமாக அமரன் பாடல்களுக்கு உண்டு.

இந்த வகையில் பார்த்தால் அவர் ஒரு வெற்றிகரமான பாடலாசிரியர் என்பதனை நாம் ஏற்றுக் கொண்டே ஆகவேண்டும்.

அமரன் சில பாடல்களை இலக்கிய நயமோங்கவும் எழுதியுள்ளார்.

'அம்மன் கோயில் கிழக்காலே படத்தில் இடம் பெற்ற,

**''சின்ன மணிக் குயிலே''**

என்று தொடங்கும் பாடலில் உள்ள

**''இல்லாத வைகையிலே நீ ஜாடை செய்கையிலே**
**கல்லாகிப் போனேன் நானும்**
**கண்பார்த்தா ஆளாவேன்''**

என்ற வரிகளில் நயமுண்டு.

'முந்தானை முடிச்சு' படத்தில்,

''அந்திவரும் நேரம் வந்ததொரு ராகம்
ஏதேதோ மோகம் இனித் தீராதோ தாகம்''

என்ற பாடல் அமரனின் இலக்கியத் தரமான பாடல்களில் ஒன்றாகும்.

'எங்க ஊர் பாட்டுக்காரன்' படத்தில்,

''செண்பகமே செண்பகமே
தென்பொதிகை சந்தனமே
உன் பாதம் போகும்
பாதை நானும் போக வந்தேனே
உன்மேலே ஆசைப்பட்டுப்
பாத்துக் காத்து நின்றேனே''

என்று அழகாக எழுதியுள்ளார் இவர்.

'தங்கமான ராசா' படத்தில்,

''கண்ணே என் கார் முகிலே
கண்ணீரும் ஏனடியோ
பொன்னே என் பூங்கொடியே
போராட்டம் ஏனடியோ''

என்ற பாடல் நெகிழ்ச்சியோடும், தரத்தோடும் அமரன் பேனா தீட்டியதாகும்.

'கல்லுக்குள் ஈரம்' படத்தில்,

''சிறுபொன்மணி அசையும்
அதில் தெறிக்கும் புதுஇசையும்
இரு கண்மணி பொன்
இமைகளில் தாள லயம்''

என்ற பாடல் 'கற்றார்க்கின்பம்' அளிக்கும் நயம் மிக்கதாகும்

'கிழக்கே போகும் ரயில்' படத்திலுள்ள,

''பூவரசம் பூ பூத்தாச்சு
பொண்ணுக்குச் சேதி வந்தாச்சு
காவேரி போல பொங்குற
மனசு பாடாதோ''

என்ற பாடலும ஒரு க்ராம பெண்ணின ஆதம ராகத்தை அழகாகவே சித்தரிக்கிறது.

'மூடுபனி' படத்தில் இவர்,

"என் இனிய பொன் நிலாவே
பொன் நினைவில் என் கனாவே"

என்ற பாடலையும் இலக்கியப் பாங்கோடு எழுதினார்.

'பதினாறு வயதினிலே படத்தில் இடம் பெற்ற "செந்தூரப் பூவே, செந்தூரப் பூவே' பாடலும் இவரெழுதிய மிகச்சிறந்த பாடல்களில் ஒன்றா கும். அமரன் எழுதிய ஏராளமான பாடல்களில் சில பாடல்கள் இலக்கிய எழில் பொருந்தியதாகவும், தரமானதாகவும் உள்ளன.

இளையராஜா இன்னிசையில் சின்னத்தம்பி படத்திற்காக கங்கை அமரன்,

"தூளியிலே ஆடவந்த வானத்து மின் விளக்கே
ஆழியிலே கண்டெடுத்த அற்புத ஆணிமுத்தே
தொட்டில் மேலே முத்து மால
வண்ணப் பூவா விளையாட,
சின்னத்தம்பி எசபாட....

என்று நெஞ்சை அள்ளும் விதமாய் பாடலைப் புனைந்துள்ளார்.

பாமரரின் கொச்சைத் தனமான ரசனையை ஈர்க்கும் பாடல்களில் மிக அதிகமான கவனத்தை செலுத்தும் அமரன், இலக்கிய அம்சம் பொருந்திய நல்ல பாடல்களை எழுதும் திறமை மிகுந்தவர் என்பதில் ஐயமில்லை.

அவர் அந்தத் திறமையை இனம் காட்டும் வண்ணம் எதிர் காலத்தில் ஏராளமான பாடல்களை எழுத வேண்டும் என்பது எம் அவா.

# டி.ராஜேந்தர்

ராஜேந்தர் கதை - வசனம் - பாட்டு, இசை - இயக்கம் இப்படியாக பல துறைகளிலும் காலூன்றித் திரையுலகில் புகழீட்டியவர்.

தன்னம்பிக்கையும், எடுத்த காரியத்தை அயராது உழைத்து செய்து முடிக்கும் உறுதியும் மிக்கவர்.

அவர் 'ஒருதலைராகம்' தொடங்கி அண்மையில் வெளிவந்த 'எங்க வீட்டு வேலன்' படம் வரை ஏராளமான பாடல்சளை எழுதியுள்ளார்.

'ஒரு தலைராகம்' படத்தில் அவர் எழுதிய பாடல்கள் இலக்கிய மணம் கமழும் இனிய பாடல்கள்.

அவற்றில் அர்த்தமற்ற அடுக்குத் தொடர்களோ, கொச்சைத் தனமான வார்த்தைகளின் பிரயோகங்களோ இல்லை.

செழுமையான வார்த்தைகளோடு உவமை நயங்களோடு, கருத்துப் பொலிவோடு 'ஒரு தலைராகம்' பாடல்கள் ஒளிர்கின்றன!

''வாசமில்லா மலரிது வசந்தத்தைத் தேடுது
வைகையில்லா மதுரையிது மீனாட்சியைத் தேடுது''

என்ற நயமோங்க எழுதுகிறார்.

அப்பாடலிலுள்ள

''பாட்டுக்கொரு ராகம் ஏற்றிவரும் புலவா
உனக்கேன் ஆசை நிலவவள் மேலே
மீட்டிவரும் வீணை சொட்டவில்லைத் தேனை''

என்ற வரிகளில்தான் எத்துணை எழில்?

"இது குழந்தை பாடும் தாலாட்டு
இது இரவு நேர பூபாளம்
இது மேற்கில் தோன்றும் உதயம்
இது நதியில்லாத ஓடம்
இது நதியில்லாத ஓடம்"

என்று தமிழின்பம் மேவ பிறிதொரு பாடலைத் தீட்டினார் டி.ஆர்.

இப்பாடலில்,

"பெரும் காற்றில் உளிகொண்டு
சிலை ஒன்றை வடிக்கிறேன்
விடிந்துவிட்ட பொழுதில் கூட
விண்மீனைப் பார்க்கிறேன்
விருப்பமில்லாப் பெண்ணை எண்ணி
உலகை நான் வெறுக்கிறேன்"

என்ற வரிகளில் அருமையான இலக்கியச் செறிவு பொருந்தி உள்ளதென் பதை எவரே மறுக்கத் துணிவார்?

இப்படத்திலுள்ள,

"கடவுள் வாழும் கோயிலிலே கற்பூர தீபம்
கலையிழந்த மாடத்திலே முகாரி ராகம்
முகாரி ராகம் முகாரி ராகம்"

என்ற வரிகளையும்,

"ஒரு தலைராகம் எந்த வகையினில் சாரும்
அவள் இரக்கத்தைத் தேடும்
என் மனம் பாடும்"

என்ற வரிகளையும், தமிழைச் சுவைக்கத் தெரிந்த எவருமே காலகாலமாய் மறக்கவே முடியாதல்லவா?

ஒரு தலைராகத்தில் டி.ஆர். எழுதிய மிகச்சிறந்த பாடல்களில்,

"என்கதை முடியும் நேரமிது
என்பதைச் சொல்லும் ராகமிது
அன்பினில் வாழும் உள்ளமிது
அணையே இல்லா வெள்ளமிது"

என்ற பாடலும் ஒன்றாகும்.

''இதயத்தில் ரகசியம் இருக்கின்றது - அது
இதழினில் பிறந்திட தவிக்கின்றது''

என்ற யதார்த்தமாக தமிழ்த் தேனை அள்ளிச் சொரிகிறார் டி.ஆர்.

''ரயில் பயணத்தின் துணையாய் அவள் வந்தாள்
உயிர்ப் பயணத்தின் முடிவாய் அவள் நின்றாள்
துயில் நினைவினை மறக்கும் விழிதந்தாள்
துயர்க் கடலினை படைக்கும் நீர் தந்தாள்''

என்று அடிகளை ஆத்மசோகம் அலைமோத நெக்குருகி கவிஞர் டி.ராஜேந்தர் அமைத்துள்ளார்.

இனி இந்த உணர்ச்சித் தமிழனின் நறுமணத் தமிழ் மலர்கள் சிலவற்றை முழுமையாக முகர்ந்து மகிழுங்கள்.

## என் கதை முடியும்...

*படம்: ஒரு தலைராகம்*
*பாடியவர்: டி.எம்.எஸ்.*
*இசை: டி.ராஜேந்தர்*

என் கதை முடியும் நேரமிது
என்பதை சொல்லும் ராகமிது
அன்பினில் வாழும் உள்ளமிது
அணையே இல்லா வெள்ளமிது
இதயத்தில் ரகசியம் இருக்கின்றது - அது
இதழினில் பிறந்திட தவிக்கின்றது
உலகத்தை என் மனம் வெறுக்கின்றது - அதில்
உறவென்று அவளை நினைக்கின்றது

பேதமை நிறைந்தது என் வாழ்வு - அதில்
பேதையும் வரைந்தது சில கோடு
பித்தென்று சிரிப்பது உன் நினைவு - அதில்
வித்தொன்று போட்டது அவள் உறவு

உறவுகள் வளர்ந்தது எனக்குள்ளே - அதில்

பிரிவுகள் என்பது இருக்காது
ஒளியாய் தெரிவது வெறுங்கனவு - அதன்
உருவாய் எரிவது என் மனது
ரயில் பயணத்தின் துணையாய் அவள் வந்தாள்
உயிர் பயணத்தின் முடிவாய் அவள் நின்றாள்
துயில் நினைவினை மறக்கும் விழி தந்தாள்
துயர் கடலினை படைக்கும் நீர் தந்தாள்
ரயில் பயணத்தின் துணையாய் அவள் வந்தாள்
உயிர் பயணத்தின் முடிவாய் அவள் நின்றாள்.

## இது குழந்தை பாடும்...

*படம்: ஒரு தலைராகம்*
*பாடியவர்: எஸ்.பி.பாலசுப்பிரமணியன்.*
*இசை: டி.ராஜேந்தர்*

இது குழந்தை பாடும் தாலாட்டு
இது இரவு நேர பூபாளம்
இது மேற்கில் தோன்றும் உதயம்
இது நதியில்லாத ஓடம்
இது நதியில்லாத ஓடம் (இது)
நடைமறந்த கால்கள் தன்னில்
தடயத்தை பார்க்கிறேன்
வடமிழந்த தேரது ஒன்றை
நாள்தோறும் இழுக்கிறேன்
சிறகிழந்த பறவை ஒன்றை
வானத்தில் பார்க்கிறேன்
உறவுதராத பெண்ணை எண்ணி
நாளெல்லாம் வாழ்கிறேன் (இது)

வெறும் நாரில் கரம் கொண்டு
பூமாலை தொடுக்கிறேன்
வெறும் காற்றில் உளிகொண்டு

சிலை ஒன்றை வடிக்கிறேன்
விடிந்துவிட்ட பொழுதில் கூட
விண்மீனை பார்க்கிறேன்
விருப்பமில்லா பெண்ணை எண்ணி
உலகை நான் வெறுக்கிறேன்

## கடவுள் வாழும்...

படம்: ஒரு தலைராகம்
பாடியவர்: டி.எம்.எஸ்.
இசை: டி.ராஜேந்தர்

கடவுள் வாழும் கோவிலிலே கற்பூர தீபம்
கலையிழந்த மாடத்திலே முகாரி ராகம்
முந்தானை பார்த்து முன்னூறு கவிதை
எந்நாளும் எழுதும் கவிஞர்கள் கோடி - முந்தானை
முன்னாடி அறியா பெண் மனதை கேட்டு
அன்புண்டு வாழும் காளையர் கோடி
ஒரு தலைராகம் எந்த வகையினில் சாரும்
அவள் இரக்கத்தை தேடும் என் மனம் பாடும்
கிணற்றுக்குள் வாழும் தவளையைப் போல
மனதுக்குள் வாழும் ஆசைகள் கோடி
கண்கெட்ட பின்னே சூரிய உதயம்
எந்தப் பக்கமானால் எனக்கென்ன போடி
ஒரு தலைராகம் எந்த வகையினில் சாரும்

# வைரமுத்து

1953 -இல் மதுரை மாவட்டத்தில் உள்ளடங்கிய பெரியகுளம் வட்டத் தில் பிறந்தவர் இவா.

செழுமையான சொல்லாட்சியுடன் அருமையான மரபுக்கவிதைகள் பல எழுதியவர்.

மிகச்சிறந்த புதுக்கவிதைகளை உத்வேகத்தோடு எழுதி மரபுக் கவிதைகள், புதுக்கவிதைகள் இரண்டுமே தமக்கு மகத்தான முறையில் கைவரும் என்பதனை ஆணித்தரமாக நிறுவியவர்:

கம்பதாசன், சுரதா, நா.காமராசன் போன்றவர்களைப் போல 'எதை யும் புதிய கோணத்தில் - மாறுபட்ட மொழி ஆளுகையுடன் சொல்ல வேண்டுமென்ற வேகம் மிக்கவர்.

திரைப்படப் பாடலாசிரியராக அவர் 'ராஜ பிரவேசம்' செய்த போது காலம் அவரைக் கைக்கூப்பி வரவேற்றது.

புதுமை விரும்பிகளான கம்பதாசன், சுரதா, நா.காமராசன் போன் றோர்க்குக் கிட்டாத ஏராளமான வாய்ப்புகள் அவரை வந்து அணைத்தது.

வைரமுத்து அதனை அழகாக - அற்புதமாகப் பயன்படுத்தித் தாமொ. ரு உன்னத பாடலாசிரியர் என்பதனை கம்பீரமாக நிரூபித்தார்!

'நிழல்கள்' படத்தில்,

''பொன்மாலைப் பொழுது
இது ஒரு பொன்மாலைப் பொழுது
வானமகள் நாணுகிறாள்
வேறுஉடை பூணுகிறாள்''

என்று கவிதா சுகந்தம் பரவிய சீரிய பாடல் சித்திரத்தைத் தீட்டியுள்ளார்.

இப்பாடலில்,

''ஆயிரம் நிறங்கள் ஜாலமிடும்
ராத்திரி வாசலில் கோலமிடும்
வானம் இரவுக்குப் பாலமிடும்''

என்ற வரிகளில் புதிய பார்வைத் திறனும், இலக்கிய மிடுக்கும் பின்னிப் பிணைந்து நிற்கின்ற தல்லவா?

இதே பாடலில்,

''வானம் எனக்கொரு போதிமரம்
நாளும் எனக்கது சேதிதரும்''

என்று அர்த்தமுள்ள அழகுத் தமிழெழுதும் கவிஞர்.

''ஒருநாள் உலகம் நீதிபெறும்
திருநாள் நிகழும் சேதி வரும்
கேள்விகளால் வேள்விகளை நான் செய்வேன்''

என்ற அடிகள் மூலம் தாம் அழகியல் நோக்குடைய கவிஞர் மட்டுமல்லர் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனையாளர் என்பதனைச் சிறப்பாக அடையாளங்காட்டுகிறார்..

காதல் சோகத்தை 'இளமைக் காலங்கள்' படத்திற்காக,

''ஈரமான ரோஜாவே என்னைப் பார்த்து மூடாதே
கண்ணில் என்ன சோகம் - போதும்
ஏங்காதே - என் அன்பே ஏங்காதே''

என்று இசையை முத்தமிடும் கவிதா சித்திரத்தை வரைகிறார் இவர்!

இப்பாடலில்,

''என்னைப் பார்த்து ஒரு மேகம்
ஜன்னல் சாத்திவிட்டுப் போகும்
உன் வாசலில் என்னைக் கோலமிடு
இல்லையென்றால் ஒரு சாபமிடு பொன்னாரமே!
தண்ணீரில் மூழ்காது காற்றுள்ள பந்து
என்னோடு நீ பாடிவா சிந்து''

என்று திரைப்படப் பாடலினுள் உன்னத புதுக்கவிதை ரத்தத்தைப் பாய்ச்சித் தமது தனித்துவத் திறனை கச்சிதமாகக் காட்டுகிறார் வைரமுத்து.

காதல் தீயில் உழல்வோர் சோகத்தை 'ராஜ பார்வை' படத்தில்,

"அந்திமழை பொழிகிறது
ஒவ்வொரு துளியிலும்
உன்முகம் தெரிகிறது"

என்று வஜைஓவியமாக வரைகிறார். மேலும்;

"தனிமையிலே வெறுமையிலே
எத்தனை நாளடி இளமையிலே
கெட்டன இரவுகள் சுட்டன கனவுகள்
இமைகளும் சுமையடி இளமையிலே"

என்ற அடிகளிலும்,

"தேகம் யாவும் தீயின் தாகம்
தாகம் தீர நீதான் மேகம்
கண்ணுக்குள் முள்ளை வைத்து
யார் தைத்தது?"

என்ற அடிகளிலும், வைரமுத்துவின் நவீன வெளிப்பாட்டுத் திறன் கோபுர மாய் உயர்ந்து நிற்கிறதல்லவா?

'புன்னகை மன்னன்' படத்தில்,

"ஏதேதோ எண்ணம் வளர்த்தேன்"

எனத்தொடங்கும் பாடலில்,

"நீயே அணைக்க வா
தீயை அணைக்க வா
நீ பார்க்கும் போதே
பனியாகிறேன்
உன்மார்பில் சாய்ந்து
குளிர் காய்கிறேன்
எதுவந்த போதும்
இந்த அன்பு போதும்"

என்ற அடிகளிலுள்ள கவினை, மொழித்திறனை வியந்து போற்றா விட்டால் தமிழ் படித்ததின் அர்த்தமே அற்றுப் போய்விடும்.

'கீதாஞ்சலி' படத்தில்,

ஒரு ஜீவன் அழைத்தது
ஒரு ஜீவன் துடித்தது
இனி எனக்காக
அழ வேண்டாம்
கண்ணீரும் விழவேண்டாம்
உன்னையே எண்ணியே
வாழ்கிறேன்''

என்று காதல் ஆவேசம் அலைமோதும் பாடலொன்றைப் படைத்துள்ளார் கவிஞர்.

இப்பாடலில்,

''அன்பே நம் வாழ்வில் பிரிவுவென்பதில்லை
ஆகாயம் ரெண்டாய் உடையாது''

என்ற வரிகளும்

''என்னை நீ கண்ட நேரம்
எந்தன் நெஞ்சம் துண்டானது''

என்ற வரிகளும் சொல்லி முடியாத அழகோடு கவிஞரால் வரையப்பட்டுள்ளது.

தமிழன் பரந்த பாரதத்தை நேசிக்கும் பான்மை பட்டுப்போய் குறுகிய எண்ணங்களின் கைதியாக நிற்கிறான்.

இதனை 'ரோஜா' படப்பாடலில் வைரமுத்து அழகாக,

''தமிழா தமிழா நாளை நம் நாளே
தமிழா தமிழா நாடும் நம்நாடே
என்வீடு தாய்த்தமிழ் நாடு என்றே சொல்லடா
என்நாமம் இந்தியன் என்றே நில்லடா''

என்றும்,

''நவபாரதம் பொதுவானது
இது வேர்வையால் உருவானது''

என்றும் சொல்கிறார்.

இப்பாடல் நாமக்கல் கவிஞரின் பாடல் பாணியில் அமைந்தது!

சமகாலப் படைப்பாளிகளின் தாக்கம் ஒருவர்மேல் ஒருவருக்கு அமைவது தவிர்க்க முடியாததேயாகும்.

உதாரணமாக, 'ஆன்' படத்தில் நௌஷாத்தின் இசையில் கவிஞர் கம்பதாசன் எழுதிய,

"மோக முத்தம் தரும் மாந்தளிர்கையாள் - யௌவனம்
போற்றும் மலரடியாள்"

என்ற பாடலின் பாதிப்பே கவிஞர் கண்ணதாசனின் 'மாலையிட்ட மங்கை படப்பாடலான,

"செந்தமிழ்த் தேன்மொழியாள் - நிலாவெனச்
சிரிக்கும் மலர்க் கொடியாள்"

இதைப்போல கம்பதாசன் எழுதிய,

"சிலர் வாழ்வார் சிலர் சாவார் - நான்
வாழ்ந்து கொண்டே சாகிறேன்?"

கவிதையின் பாதிப்பே, கண்ணதாசனின் 'பாவமன்னிப்பு' படப்பாடலான

"சிலர் சிரிப்பார் சிலர் அழுவார் - நான்
சிரித்துக் கொண்டே அழுகின்றேன்"

என்ற பாடலாகும்.

கவிஞர் கம்பதாசன், கண்ணதாசனுக்கு முன்னோடி என்றால் கண்ணதாசன் அவருக்குப் பின்வந்த கவிஞர்களுக்கு முன்னோடியாக மின்னுகிறார். வைரமுத்து போன்ற தனித்துவ சிந்தனை மேலோங்கிய சீரிய கவிஞர்களும்,

"ஊரைத் தெரிஞ்சு கிட்டேன்
உலகம் புரிஞ்சிக்கிட்டேன்
கண்மணி என் கண்மணி,"

'சம்சாரம் அது மின்சாரம்' போன்ற பாடல்களின் மூலம் கண்ணதாசன் பாதிப்புக்குள்ளாவே செய்கிறார்கள்.

இதைப்போல கம்பதாசன் கவிதை வரிகள் கூட வைரமுத்துவைப் பாதித்திருக்கிறது.

1952-இல் கம்பதாசன் வெளியிட்ட "பாட்டு முடியுமுன்னே" நூலில் காதலி சித்ரா பிரிவைப் பற்றிச் சொல்லும் போது.

"வாழ்ந்திருந்து நீபுனையும் சேலை தன்னில்
வரியிழையாய் ஆவதற்கும் வகை தானுண்டோ?"

என எழுதினார். இதன் எதிரொலியே,

''நினைவெல்லாம் நித்யா'' படத்தில் வைரமுத்து எழுதிய,

''நீ கட்டும் சேலைக்கு நூலாவேன்''

என்பதாகும்.

இப்படியாக மூத்த கவிஞர்களின் சிந்தனைத் தாக்கங்கள் வைரமுத்து விடமும் இருக்கவே செய்கிறது.

தமிழ் சினிமாப் பாடலாசிரியர்களில் கம்பதாசன், சுரதா, நா.காமராசன் போன்றோர் மாறுதலுக்கான புதிய விதைகளைத் தூவினார்கள்.

கண்ணதாசன் மரபுக் கவிதை மரபைப் பேணி இனிய தமிழிசைச் சித்திரங்களை அழுத்தமாக வரைந்தார்.

நமது கவிஞர் வைரமுத்து தமது கற்பனா சக்தியாலும், மொழி ஆளுமைத் திறனாலும் சினிமாப் பாடல்களுக்கு ஆரோக்கியமான புதிய ரத்தத்தைப் பாய்ச்சினார்.

இன்றைய காலகட்டத்தின் தலைசிறந்த பாடலாசிரியராக கம்பீரத்துடன் ராஜ உலா வருகிறார். இவர் சினிமாப் பாடல்களில் புகுத்திய புதிய பாணியை மனச்சாட்சியுள்ள எந்த விமர்சகனும், ரசிகனும் மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

கவிஞர் வைரமுத்துவின் அற்புதமான திரைப்பாடல்களைப் பற்றி விரிவாக தனிநூலே எழுத வேண்டும்.

இந்த அற்புத இலக்கியச் செம்மலை கவிதா சிற்பியை 'ஓரங்கட்ட' என்னும் எத்தர்களின் சித்து வேலைகள் நிச்சயம் பலிக்காது!

அண்மையில் வெளிவந்த 'ரோஜா' படத்தில் கூட ரகுமானின் இனிய இசையில்,

''சின்ன சின்ன ஆசை
சிறகடிக்கும் ஆசை
வெண்ணிலவு தொட்டு
முத்தமிட ஆசை
என்னை இந்தப் பூமி
சுற்றிவர ஆசை''

என்று அற்புத கற்பனைத் திறனோடு பாச்சித்திரம் தீட்டி,

''நல்ல இலக்கியத்தை எத்தனை நந்தி குறுக்கே படுத்தாலும் மறைத்து

விடமுடியாது'' என்று சொன்ன இலக்கியமேதை புதுமைப் பித்தன் கூற்றை மெய்ப்பித்துள்ளார்.

வைரமுத்து என்ற மகத்தான கவிஞனை - பாடலாசிரியனை நல்ல முறையில் பயன்படுத்துவோர் தமிழன்னையை கௌரவப்படுத்தும் வாய்ப்பைப் பெறுவார்கள் என்பது மட்டும் நிச்சயம்!

இனி இந்தத் தங்கத் தமிழ்க் கவிஞனின் தண்ணமுதப் பாடல்கள் சிலவற்றை அனுபவியுங்கள்.

## இது ஒரு பொன்மாலை......

*படம்: நிழல்கள்*
*பாடியவர்: எஸ்.பி.பாலசுப்பிரமணியம்*
*இசை: இளையராஜா*

ஏக் தோ தீன்... லலலா
பொன்மாலைப் பொழுது
இது ஒரு பொன் மாலைப்பொழுது
வானமகள் நாணுகிறாள்
வேறு உடை பூணுகிறாள் (இது ஒரு பொன்)

ஆயிரம் நிறங்கள் ஜாலமிடும்
ராத்திரி வாசலில் கோலமிடும்
வானம் இரவுக்கு பாலமிடும்
பாடும் பறவைகள் தாளமிடும்
பூ மரங்கள் சாமரங்கள் வீசாதோ (இது ஒரு பொன்)

வானம் எனக்கொரு போதிமரம்
நாளும் எனக்கது சேதி தரும்
ஒரு நாள் உலகம் நீதிபெறும்
திருநாள் நிகழும் தேதிவரும்
கேள்விகளால் வேள்விகளை நான் செய்வேன்
(இது ஒரு பொன்)

# அந்தி மழை பொழிகிறது...

*படம்: ராஜபார்வை*
*பாடியவர்: எஸ்.பி.பி., ஜான்கி குழுவினர்.*
*இசை: இளையராஜா*

ஆ: அந்தி மழை பொழிகிறது
ஒவ்வொரு துளியிலும் உன்முகம் தெரிகிறது
இந்திரன் தோட்டத்து முந்திரியே
மன்மத நாட்டுக்கு மந்திரியே (அந்தி மழை)

பெ: தேனில் வண்டு மூழ்கும் போது
பாவம் என்று வந்தாள் மாது
நெஞ்சுக்குள் தீயை வைத்து
மேகம் என்பாய்
தண்ணீரில் மூழ்கிக் கொண்டே
தாகம் என்பாய்

ஆ: தனிமையிலே வெறுமையிலே
எத்தனை நாளடி இளமையிலே
கெட்டன இரவுகள் சுட்டன கனவுகள்
இமைகளும் சுமையடி இளமையிலே (அந்தி மழை)

பெ: தேகம் யாவும் தீயின் தாகம்
தாகம் தீர நீதான் மேகம்
கண்ணுக்குள் முள்ளை வைத்து யார் தைத்தது
தண்ணீரில் நிற்கும் போதே வேர்க்கின்றது
நெஞ்சு பொறுகொஞ்சம் இரு
தாவணி விசிறிகள் வீசுகிறேன்
மன்மத அம்புகள் தைத்த இடங்களில்
சந்தனமாய் எனைப் பூசுகிறேன் (அந்தி மழை)

சிப்பியில் தப்பிய நித்திலமே
ரகசிய ராத்திரிப் புத்தகமே

(அந்தி மழை)

## ஈரமான ரோஜாவே...

*படம்: இளமைக் காலங்கள்*
*பாடியவர்: ஜேசுதாஸ், ஜானகி*
*இசை: இளையராஜா*

ஆ: ஈரமான ரோஜாவே என்னைப் பார்த்து மூடாதே
கண்ணில் என்ன சோகம் - போதும்
ஏங்காதே - என் அன்பே ஏங்காதே (ஈர)

என்னைப் பார்த்து ஒரு மேகம்
ஜன்னல் சாத்திவிட்டுப் போகும்
உன் வாசலில் என்னைக் கோலமிடு
இல்லையென்றால் ஒரு சாபமிடு பொன்னாரமே...
தண்ணீரில் மூழ்காது காற்றுள்ள பந்து
என்னோடு நீ பாடி வா சிந்து (ஈர)
நேரம் கூடி வந்த வேளை நீ
நெஞ்சை மூடி வைத்த கோழை
என் நெஞ்சிலே இனி ரத்தமில்லை
கண்ணீருக்கே நான் தத்துப்பிள்ளை என் காதலி...
உன்போல என்னாசை தூங்காது ராணி
கண்ணீரில் தள்ளாடுதே தோணி
பெ: ஈரமான ரோஜாவே
ஏக்கமென்ன ராஜாவே
கண்ணில் என்ன சோகம் போதும்
ஏங்காதே என் அன்பே ஏங்காதே
ஏங்காதே என் அன்பே ஏங்காதே

## எரிமலை எப்படி பொறுக்கும்...

*படம்: சிவப்பு மல்லி*
*பாடியவர்: டி.எம்.எஸ்., மகராஜன்*

*இசை: சங்கர் - கணேஷ்*

எரிமலை எப்படிப் பொறுக்கும்
நம் நெருப்புக்கு இன்னுமா உறக்கம்
ரத்தச் சாட்டை எடுத்தால்
கையை நெரிக்கும் விலங்கு தெறிக்கும்
நாம் கண்ணீர் விற்கும் ஜாதி
இனி அழுதால் வராது நீதி

ரத்தம் இங்கே வேர்வையாகச் சொட்டிவிட்டது
உயிர்வற்றி விட்டது
காலம் இங்கே ஊமை கையைக் கட்டி விட்டது
கண்ணீர் சுட்டு விட்டது
காலம் இங்கே ஊமைக்கையைக் கட்டிவிட்டது
கண்ணீர் சுட்டு விட்டது
ஏரு பிடித்தவர் இருமி இளைத்தவர்
வேர்வை விதைத்தவர் வெயிலில் அலுத்தவர்
ரத்தப் பொட்டு வைத்துக் கொண்டால்
தர்மங்கள் தூங்காது (எரிமலை)

எழுதிய படிதான் நடக்கும் எல்லாம்
விதிவசம் என்பதை விட்டுவிடு
இளமை உன் தோள்களில் இருக்கும் போதே
எதுநிஜம் என்பதை எட்டிவிடு
காலம் புரண்டு படுக்கும்
நம் கண்ணீர்த் துளியை துடைக்கும் (எரிமலை)

ஏழை வர்க்கம் வேர்வைக் குள்ளே
முத்துக் குளிக்கும்
பின்பு செத்துப் பிழைக்கும்
ஏழை வீட்டுத் தேனும்கூட உப்புக்கரிக்கும்
அதில் தண்ணீர் மிதக்கும்
செருப்பாய் உழைத்தவர் வரப்பென இளைத்தவர்
சுடச்சுட அழுதவர் அடிக்கடி இறந்தவர்
வெற்றிச் சங்கு ஊதும் போது
தர்மங்கள் தூங்காது.

# ஒரு ஜீவன் அழைத்தது...

*படம்: கீதாஞ்சலி*
*பாடியவர்: இளையராஜா - சித்ரா*
*இசை: இளையராஜா*

பெ: ஒரு ஜீவன் அழைத்தது ஒரு ஜீவன் துடித்தது
இனி எனக்காக அழ வேண்டாம்
இங்கு கண்ணீரும் விழ வேண்டாம்
உன்னையே எண்ணியே வாழ்கிறேன்
ஆ: முல்லை பூ போல உள்ளம் வைத்தாய்
முள்ளை உள்ளே வைத்தாய் - ஹோய்
என்னை கேளாமல் எண்ணம் வைத்தாய்
நெஞ்சில் கன்னம் வைத்தாய்... ஹோய்
நீயில்லை என்றால் என் வாழ்வில் என்றும்
பகலென்று ஒன்று கிடையாது
அன்பே நம்வாழ்வில் பிரிவென்பதில்லை
ஆகாயம் ரெண்டாய் உடையாது
இன்று காதல் பிறந்த நாள்
என் வாழ்வில் சிறந்த நாள்
பெ: மணமாலை சூடும் நாள் பார்க்கவே
உன்னை நான் கண்ட நேரம்
நெஞ்சில் மின்னல் உண்டானது
என்னை நீ கண்ட நேரம்
எந்தன் நெஞ்சம் துண்டானது
காணாத அன்பை நானின்று கண்டேன்
ஆ: காயங்களெல்லாம் பூவாக
காமங்கள் ஒன்றே என் காதல் அல்ல
கண்டேனே உன்னை தாயாக
மழை மேகம் பொழியுமோ
நிழல் தந்து விலகுமோ
இனிமேலும் என்ன சந்தேகமோ

## ஏதேதோ...

*படம்: புன்னகை மன்னன்*
*பாடியவர்: சித்ரா*
*இசை: இளையராஜா*

ஏதேதோ எண்ணம் வளர்த்தேன் - உன்
கையில் என்னைக்கொடுத்தேன்
நீ தானே புன்னகை மன்னன் - உன் ராணி நானே
பண்பாடும் பாடகன் நீயே - உன் ராகம் நானே
(ஏதேதோ)

சிலகாலமாய் நானும் சிறை வாழ்கிறேன்
உனை பார்த்ததால்தானே உயிர் வாழ்கிறேன்
தூக்கம் விழிக்கிறேன் பூக்கள் வளர்க்கிறேன்
சில பூக்கள் தானே மலர்கின்றது
பல பூக்கள் ஏனோ உதிர்கின்றது
பதிலென்ன கூறு பூவும் நானும் வேறு (ஏதேதோ)

குலதெய்வமே இன்று குறை தீர்க்க வா
கை நீட்டினேன் என்னை கரை சேர்க்க வா
நீயே அணைக்கவா... தீயை அணைக்கவா
நீ பார்க்கும் போதே பனியாகிறேன்
உன் மார்பில் சாய்ந்து குளிர் காய்கிறேன்
எது வந்த போதும் இந்த அன்பு போதும் (ஏதேதோ)

## தமிழா, தமிழா...

*படம்: ரோஜா*
*பாடியவர்கள்: ஹரிஹரன் குழுவினர்*
*இசை: ரகுமான்*
*ஆண்டு: 1992*

ஆண்: தமிழா தமிழா நாளை நம் நாளே

தமிழா தமிழா நாடும் நம் நாடே
என் வீடு தாய்த்தமிழ் நாடு என்றே சொல்லடா
என் நாமம் இந்தியன் என்றே எங்கும் நில்லடா..
(தமிழா...)

குழு: இனம் மாறலாம் குணம் ஒன்றுதான்
இடம் மாறலாம் நிலம் ஒன்றுதான்
மொழி மாறலாம் பொருள் ஒன்றுதான்
வழி மாறலாம் கொடி ஒன்றுதான்
திசை மாறலாம் நிலம் ஒன்றுதான்
இசை மாறலாம் ஒலி ஒன்றுதான்
நம் இந்தியா அது ஒன்றுதான்
ஜெய பாரதம்... ஜெய பாரதம்.

ஆண்: தமிழா தமிழா கண்கள் கலங்காதே
விடியும் விடியும் உள்ளம் மயங்காதே
(தமிழா...)

உனக்குள்ளே இந்திய ரத்தம் உண்டா இல்லையா
ஒன்றான பாரதம் உன்னை காக்கும் இல்லையா
(தமிழா...)

நவபாரதம் பொதுவானது
இது வேர்வையால் உருவானது
மனபேதமோ எருவானது
அதன் ஆயுதம் உருவானது
சுப பந்தமாய் வலுவானது
அட வானிலா விளைகின்றது
இன்பம் விழா பெரிதென்பது
ஜெய பாரதம்... ஜெய பாரதம்.

## சின்னசின்ன ஆசை...

*படம்: ரோஜா*
*இசை : ரகுமான்*
*பாடியவர் : மின்மினி*
*ஆண்டு: 1992*

**சின்ன சின்ன ஆசை சிறகடிக்கும் ஆசை**

முத்து முத்து ஆசை முடிந்து வைத்த ஆசை
வெண்ணிலவு தொட்டு முத்தமிட ஆசை
என்னை இந்த பூமி சுற்றிவர ஆசை... (சின்ன...)

மல்லிகை பூவாய் மாறிவிட ஆசை
தென்றலை கண்டு மாலையிட ஆசை
மேகங்களை எல்லாம் தொட்டுவிட ஆசை
சோகங்களை எல்லாம் விட்டுவிட ஆசை
கார் குழலில் உலகை சுத்திவிட ஆசை (சின்ன...)

சேற்று வயலாடி நாற்று நட ஆசை
மீன் பிடித்து மீண்டும் ஆற்றில் விட ஆசை
வானவில்லை கொஞ்சம் உடுத்திக் கொள்ள ஆசை
பனிக்குழிக்குள் நானும் படுத்துக் கொள்ள ஆசை
சித்திரத்து மேலே சேலை கட்ட ஆசை... (சின்ன...)

# மு.மேத்தா

புதுக்கவிதை உலகில் குறிப்பிடக்கூடிய சாதனைகளை நிகழ்த்தி விட்டுத் திரைப்படவுலகில் பாடலாசிரியராகக் கம்பீரமாக நுழைந்தவர் கவிஞர் மு.மேத்தா.

'உதயகீதம்' படத்தில்,

''பாடுநிலாவே தேன்கவிதை பூ மலர
உன்பாடலை நான் தேடுவேன்
கேட்காமலே நான் பாடுவேன்''

என்று மெருகான சொற்களினால் சுந்தரக் கோலம் வரைகிறார் இவர்.

இப்பாடலில்,

''நீ போகும் பாதை என் பூங்காவனம்
நீ பார்க்கும் பார்வை என் பிருந்தாவனம்''

என்று வனப்போடு கூறுமிவர்,

''கைதான போதும் கைசேர வேண்டும்
உன்னோடு வாழும் ஓர்நாளும் போதும்
என் ஜென்மமே ஈடறவே''

என்ற வரிகளின் மூலம் காதல் பாடல்கள் எழுதுவதில் தாம் கைதேர்ந்தவர் என்பதனை உணர்த்துகிறார்!

இப்பாடலில்,

''உன்வீடு தேடும் இந்நேரங்களே
பூமீது தேன்தூவும் காதல் வரம்
என் நெஞ்சில் நீஊதும் நாதஸ்வரம்''

என்று இலக்கிய எழிலோடு வரிகளை அமைத்துள்ளார் இந்தக் கவிஞர்!

'இதயக்கோயில்' படத்தில்,

''யார் வீட்டில் ரோஜா பூ பூத்ததோ
கார்காலக் காற்று ஏன் வாடுதோ?
மேகந்தன்னை மேகம்மோதி மின்னல் மின்னுதோ
மின்னல் இந்தநேரம் என் கண்ணில் மின்னுதோ''

என்று நயமோங்க எழுதுகிறார் மேத்தா.

இப்பாடலில்,

''ஓர் ஏழை வெண்புறா மேடையில்
என்காதல் வெண்புறா வீதியில்
பூங்காற்று போராடவே
பூத்தபூவும் ஆற்றில் ஓடவே
வான்மேகம் மோதும் மழைதனிலே
நான்பாடும் பாடல் நனை கின்றதே''

என்ற அடிகளையும் அடிமனத்தை ஈர்க்கும் மோகனச் சொற்சித்திரமாய் தீட்டியுள்ளார் இவர்!

''ஆயிரம் பூக்கள் மலரட்டும்'' படத்தில் நாயகன்,

''பூமேடையோ பொன்வீணையோ நீரோடையோ
அருவியோ தேன்காற்றோ பூங்குயிலே நீ பேசவா
நீ பேசினால் அவையாவும் தானே வாய்மூடுமே
பதில்! பதில்!''

என்று பாட நாயகி,

''பூமேடைநான், பொன்வீணை நான் நீரோடை நான்
அருவிநான் . காற்றுநான், பூங்குயில் நான்
நான் பேசவோ!
நான் பேசினால் மலர்தூவும் சோலை பாய்போடுமே
அதில்! அதில்!''

என்று அழகு மலர்ச் சொல்லடுக்கி தமிழாரம் செய்கிறார் கவிஞர்

'மைக்கேல்ராஜ்' படத்தில்,

**''காலம் பொறந்துருச்சு சின்னமயிலே**
**காத்தும் அடிச்சிருச்சு சின்னமயிலே**

நேரம் விடிந்துவிடும் சின்னமயிலே
நம்ம சோகம் முடிந்துவிடும் சின்ன மயிலே

என்று உருக்கமான உயர்ந்த பாடல் ஒன்றைத் தீட்டியுள்ளார் இவர்!

'கைநாட்டு' படத்தில்,

''ஊரெங்கும் என்னைத் தேடுதோ
மேகங்கள் அந்த நாளிலே
மழைநாளிலே குடையானவள்
நனைகின்றதேன்?''

என்று அழகோடு தமிழ் பின்னியுள்ளார் இவர்.

'வேலைக்காரன்' படத்தில்,

''வா வா கண்ணா வா
தா தா கவிதை தா
உனக்கொரு சிறுகதை நான்
தனிமையில் தொடத் தொடத்
தொடர்கதை தான்''

என்று சுவையாகக் காதல் ரசத்தைப் பிழிந்து தருகிறார் கவிஞர்.

இதே படத்தில் சோகம் நிறைந்த,

''பெத்து எடுத்தவதான் என்னையும்
தத்துக் கொடுத்துப் புட்டா
பெத்தக் கடனுக்குத்தான்
என்னை வித்து வட்டிக்
கொடுத்துப் புட்டா''

என்ற பாடலை உணர்ச்சித் துடிப்போடு இவர் எழுதியுள்ளார்.

'ஓமானே மானே' படத்திற்காக இவரெழுதிய,

''பொன்மானைத் தேடுதே
என் வீணை பாடுதே''

என்ற பாடலும் நினைவு கூரத்தக்க நல்ல பாட்லாகும்.

'வேலைக்காரன்' படத்திற்கு கவிஞர் எழுதிய பாடலொன்றில்,

''தாஜ்மகாலின் காதிலே ராமகதை கூறலாம்!
மாறும் இந்த பூமியில் மதங்கள் ஒன்று சேரலாம்!''

நீ பார்க்கும் பார்வை என் பிருந்தாவனம்
ஊரெல்லாம் உன்ராக ஊர்கோலமோ
என் வீடு வாராமல் ஏன் போகுமோ
கைதான போதும் கைசேர வேண்டும்
உன்னோடு வாழும் ஓர் நாளும் போதும்
என் ஜென்மமே ஈடேறவே...
பாடு நிலாவே தேன் கவிதை பூ மலர
உன் பாடலை நான் கேட்கிறேன்
பாமாலையே நான் கோர்க்கிறேன்
ஊரெங்கும் போகும் என் ராகங்களே
உன் வீடு தேடும் இந்நேரங்களே
பூ மீது தேன் தூவும் காதல் வரம்
என் நெஞ்சில் நீ ஊதும் நாதஸ்வரம்
காவேரி வெள்ளம் கைசேரத் துள்ளும்
ராகங்கள் சேரும் தாகங்கள் தீரும்
காதல் நிலா தூதாகுமே...

## வா.... வா... கண்ணா...

*படம்: வேலைக்காரன்*
*பாடியோர்: மனோ - சித்ரா*
*இசை: இளையராஜா*

பெ: வா - வா - வா - கண்ணா வா - தா - தா - கவிதை தா
உனக்கொரு சிறுகதை நான்... தனிமையில்
தொட தொடத் தொடர் கதைதான்
தனிமையில் உருகி... உருகி... இதைப் படித்திட (வா)

ஆ: வானில் காணும் வானவில்லின் வண்ணம் ஏழு வண்ணம்
தோகை எந்தன் தேகம் சூடமோகம் ஆடைபின்னுமோ
பெ: காணும் இந்தப் பூக்கள் மேலே
காயம் என்ன காயமோ காற்சலங்கையோடு
வண்டு பாடிச் சென்ற மாயமோ

ஆ: நூறு நூறு தீபமாய் வானில் அங்கு கார்த்திகை
வாழும் காதல் சின்னமாய் ஆகும் எங்கள் யாத்திரை
நாலு கண்கள் பாதைபோட நாகரீகம் நடந்தது (வா)
ஆசையோடு பேச வேண்டும்
ஆயுள் இங்கே கொஞ்சமே ஆவலாக வந்த பின்னும்
அஞ்சும் இந்த நெஞ்சமே ஆசை கொண்ட தேகம் ரெண்டு
நீதிமன்றம் போகுமே பேசத் தேவையில்லை என்றே
அங்கு தீர்ப்பு ஆகுமோ ராகவீணை போலவே
ஆ: தேகம் வீணையாகவே தேவகீதம் பாடவே
நானும் நீயும் காதல் கதை எண்ண எண்ண இனிக்குதே
காளிதாசன் காணவேண்டும் காவியங்கள் சொல்லுவான்
கம்பநாடன் உன்னைக் கண்டு சீதையென்று துள்ளுவான்
பெ: ஷாஜஹானைப் பார்த்ததில்லை நானும் உன்னைப் பார்க்கிறேன்
தாகம் கொண்ட தேகம் ஒன்று பாடும் பாடல் கேட்கிறேன்
தாஜ்மகாலின் காதிலே ராம கதை கூறலாம்
மாறும் இந்த பூமியில் மதங்கள் ஒன்று சேரலாம்
பாதி நீயும் பாதி நானும் ஜோதியாக இணைந்திட

## ஊரெங்கும் என்னை...

*படம்: கைநாட்டு*
*இசை: சந்திரபோஸ்*
*பாடியோர் : ஜெயச்சந்திரன், வாணிஜெயராம்*

பெ: ஊரெங்கும் என்னைத் தேடுதோ
மேகங்கள் அந்த நாளிலே
மலை நாளிலே குடையானவள்
நனைகின்றதேன்...
ஆ: ஊரெங்கும் உன்னைத் தேடுதோ
மேகங்கள் அந்த வானிலே
மழை நாளிலே குடை போலவே
நனைகின்றதேன் பெண்மையே...

அந்த நாளின் ஞாபகம்
எங்கள் அன்பின் தாயகம்
ஏழை நெஞ்சில் வாழும் உந்தன் பூமுகம்
உந்தன் வீணைதான் பொன் வீணைதான்
நீ இல்லையேல் ஊமைதான் (ஊரெ)
கூவும் காதல் கோகிலம்
இங்கு எந்தன் கோகிலம்
கண்ணன் என்னும் கள்வன்
கையில் போர்க்காலம்
ஆ: செந்தாமரை ஏன் வேர்த்ததோ
என் தாமரை பூத்ததோ
ஊரெங்கும் உன்னைத் தேடுதோ
மேகங்கள் அந்த வானிலே (ஊரெ)

## பூ மேடையோ...

*படம்: ஆயிரம் பூக்கள்,மலரட்டும்*

ஆ: பூமேடையோ பொன் வீணையோ நீரோடையோ
அருவியோ தேன் காற்றோ பூங்குயிலே நீ பேசவா
நீ பேசினால் அவையாவும் தானே வாய் மூடுமே
பதில்! பதில்!
பெ: பூமேடை நான், பொன் வீணைநான் நீரோடைநான்
அருவிதான், காற்றுதான், பூங்குயில்நான் நான் பேசவோ?
நான் பேசினால் மலர் தூவும் சோலை பாய் போடுமே
அதில்! அதில்!
ஆ: பூமேடையோ நீலாம்பரி ராகமே ஏங்குமே
நீ பாடினால் பூமியே தூங்குமே
பெ: என்ராகம் கால்கள் தள்ளாடும் உன் ஆசை பூச்சூடும்
ஆ: கல்யாண காலம் பொற்காலம் கண்போடும் தாம்பூலம்

பெ: காதலின் ஓடமே கைகளில் ஓடுமே
ஆ: நீ மூடும் மேலாடை நான் (பூமேடை)

பெ: உன் பார்வைகள் பூசுதே சந்தனம்
உன் வார்த்தைகள் ஆனதே குங்குமம்

ஆ: வந்தேனே காதல் சந்யாசி
என்ன ஆகும் நீயோசி

பெ: உன் ஆசை வானில் பொன்மேகம்
என்ன ஆகும் என் தேகம்?

ஆ: பாடலின் பல்லவி பாடுவாள் பைரவி
நீயாகவே ஓடோடி வா! (பூமேடை)

## காலம் பொறந்துருச்சு...

*படம்: மைக்கேல்ராஜ்*
*பாடியவர்: ஜேசுதாஸ்*
*இசை: சந்திரபோஸ்*

காலம் பொறந்துருச்சு சின்னமயிலே
காத்தும் அடிச்சிருச்சு சின்ன மயிலே
நேரம் விடிந்துவிடும் சின்னமயிலே
நம்ம சோகம் முடிந்து விடும் சின்னமயிலே
நடக்குது வழக்கு சின்ன மயிலே
வெளுக்குது கிழக்கு சின்னமயிலே

சந்திரனைப் பிடித்துச் சின்னமயிலே
தந்தவர்கள் இல்லை சின்னமயிலே
நந்தவனம் உன்னை சின்னமயிலே
பந்தடிக்கும் உலகம் சின்னமயிலே

வந்ததெல்லாம் கனவுகளே
வாழும் அன்பின் உறவினிலே
வாசல் தேடும் உயர்வுகளே

இமயம் நம்மை எழுந்து பார்க்கும்
அஞ்சுகிற முகத்ததைப் பார்ப்பதற்கு
ஆறுமுகம் கூட வருவதில்லை
நெஞ்சமெனும் அடுப்பில் நெருப்பிருக்கு
வஞ்சகரின் உலகில் பயமெதற்கு?
ஓடும் போதும் துரத்துமடி
ஒதுங்கி நின்றால் விரட்டுமடி
சீறி எழுந்தால் வணங்குமடி
தீர்ப்பை மாற்றி எழுதுமடி
பூவும் புயலை எதிர்த்து நிற்கும் (காலம்

## யார் வீட்டில் ரோஜா...

*படம் : இதயக்கோயில்*
*இசை : இளையராஜா*
*பாடியவர் : எஸ்.பி.பி*

யார் வீட்டில் ரோஜாப் பூ பூத்ததோ
கார்காலக் காற்று ஏன் வாடுதோ
மேகம் தன்னை மேகம் மோதி மின்னல் மின்னுதோ
மின்னல் இந்த நேரம் எந்தன் கண்ணில் மின்னுதோ
ஒரு ராகம் புது ராகம் அதில் சோகம் தான் ஏனோ
ராகங்கள் நூறு அவள் கொடுத்தாள்
கீதங்கள் நூறு அவள் கொடுத்தாள்
ஜீவன் அங்கே என்னைத் தேடும்
பாடல் இங்கே காற்றில் ஓடும்
காணாமல் கண்கள் நோகின்றதோ
காதல் ஜோடி ஒன்று வாடும் நேரம் இன்று
ஓர் ஏழை வெண்புறா மேடையில்
என் காதல் வெண்புறா வீதியில்
பூங்காற்று போராடவே
பூத்த பூவும் ஆற்றில் ஓடவே
வான் மேகம் மோதும் மழை தனிலே

நான் பாடும் பாடல் நனைகிறேதே
பாடல் இங்கே நனைவதனாலே
நனையும் வார்த்தை கரையுது இங்கே
ஜென்மங்கள் யாவும் நீ வாழவே
காதல் கொண்ட உள்ளம் காணும் அன்பின் இல்லம்
ஓர் காற்றில் கைகள் தீண்டுமோ
என் காவல் எல்லையைத் தாண்டுமோ
நியாயங்கள் வாய் மூடுமோ
தெய்வங்கள் என்று போகுமோ (யார்)

# குருவிக்கரம்பை சண்முகம்

பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியரும், சிறந்த மரபுக் கவிஞரும், குறிப்பிடக் கூடிய புதுக்கவிஞர்களில் ஒருவருமான இவர், கே.பாக்யராஜ் மூலம் 'அந்த ஏழு நாட்கள்' படத்திற்குப் பாட்டெழுதும் வாய்ப்புப் பெற்றார்.

எம்.எஸ்.விஸ்வநாதன் இன்னிசையில்

''கவிதை அரங்கேறும் நேரம் மலர்க்
கணைகள் பரிமாறும் தேகம் - இனி
நாளும் கல்யாணராகம் - அந்த
நினைவே சங்கீதமாகும்''

என்று அற்புதமான இலக்கிய நயத்தோடு முதற்பாடலை எழுதி தாமொரு தகுதி வாய்ந்த திரைப்படப் பாடலாசிரியர் என்பதனைக் கம்பீரமாக நிறுவினார்!

இவரின் முதற் பாடலின் ஒவ்வொரு வரியும் கற்கண்டாய் இனிக்கிறது.

''பார்வை உன்பாதம் தேடி - வரும்
பாவை என் ஆசை கோடி - இனி
காமன் பல்லக்கில் ஏறி - நாம்
கலப்போம் உல்லாச ஊரில்''

என்று எத்துணை அழகாக - இயல்பாக பாட்டெழுதுகிறார் இவர்!

''உன் அங்கம் தமிழோடு சொந்தம் - அது
என்றும் திகட்டாத சந்தம்''

என்கிறார் தொடர்ந்து. இது புதிய கண்ணோட்டமுள்ள சிந்தனையல்லவா?

மேலும்,

"கைகள் பொன்மேனி கலந்து மலர்ப்
பொய்கை கொண்டாடும் விருந்து!
உன் இளமை மழைமேகமானால் - என்
இதயம் குளிர்வாடை ஆகும்"

என்ற வரிகளில் எத்துணை இலக்கிய நயம்!

'தாவணிக் கனவுகள்' படத்திற்காக,

"செங்கமலம் சிரிக்குது
சங்கமத்தை நினைக்குது"

என்று தொடங்கும் அமுதனைய பாட்டொன்றை ஆக்கியுள்ளார். இக்கவிஞர்.

இப்பாட்டில்,

"கூக்கூ எனக் கூவும் குயில்
சின்னச் சின்ன சந்தத்தில்
அந்திப் போர் நடத்தும்"

என்று மிக நளினமாக எழுதுகிறார்.

இப்பாட்டில்,

"நித்தம் இதழ் தேடும் நேரம்
நாணம் எனும் நோய் வருமோ?"

என்றெழுதி நாணம் என்பது ஒருவகை நோயென நவமாகச் சொல்கிறார்.

'நிலவே மலரே' படத்தில்,

"மாலை பொன்னான மாலை - இளம்
பூவே நீ வந்த வேளை"

எனத் தொடங்கும் காதல் பாட்டில்,

"சித்திரத்தில் முத்தெடுக்கும்
தத்துவத்தின் கதை படித்தாயோ
ஒத்திகைக்கு இத்தினத்தில்
ஒத்துவந்து சுகம் கொடுப்பாயோ"

என்று பேராசிரியர் எழுதியுள்ளதன் மூலம் காதல் பாட்டெழுதுவதில் தாம்

பலே கில்லாடி என்பதனை ஆணித்தரமாக உறுதி செய்கிறார்.

'டார்லிங் டார்லிங் டார்லிங்' படத்தில்,

"ஓ நெஞ்சே நீதான்
பாடும் கீதங்கள்
ஏன் இன்று நீர்மேல்
ஆடும் தீபங்கள்!
ராகங்கள் சொல்லாதோ
காதல் சந்தத்தை!
சோகத்தில் தள்ளாடும்
பேதை உள்ளத்தை"

என்று இலக்கியச் செறிவோடு சொல்கிறார் கவிஞர்!

'சோலைக்குயில்' படத்தில் தமக்குக் கிராமியத் தமிழும் வரும் என்பதனை நிரூபிக்கும் வண்ணம்.

"மலைநாட்டு மச்சானே
வலைபோட்டு வச்சானே
கரையோரப் பூவாய்நான்
மணம்வீசிப் பூக்கும் நாள்
தனியாக ரோஜாப்பூ!
இனியேது மாராப்பு"

என்று யதார்த்த சித்திரம் வரைகிறார்.

'தீர்ப்புகள் திருத்தப்படலாம்' - படத்தில்,

"ராகம் தாளம் பல்லவி - அது
காதல் பூபாளமே
வானம் சிந்தும் நேரம்
ஆசை நெஞ்சில் மோதும்
பொங்கும் இந்நாளே - நம்
பொன்னாளாய் மாறும்"

என்று தங்கு தடையின்றி தமிழ்பெய்கிறார் கவிஞர்.

'சார் ஐ லவ் யூ' படத்தில்,

"இங்கே இறைவன்
என்னும் கலைஞன்"

என்ற பாட்டில்,

''பனியின் முடிசூடியே
கொடியின் மலர் ஆடுதே''

என்று பேராசிரியர் எழுதியுள்ளது.

''பனித்துளி முடிசூடித் - தென்றல்
பாட்டினைக் கேட்ட மலர்''

என்றெழுதிய கம்பதாசன் கவிதை வரிகளை ஞாபகப் படுத்துகிறது!

குருவிக்கரம்பை சண்முகம் குறுகிய காலத்திலேயே சொற்செட்டோடு பொருள் நயத்தோடுப் பாடல்களை எழுதிப் புகழீட்டியவர்.

தமது கவிதைத் திறனால் முதலாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டை ஒட்டி அறிஞர் அண்ணா ஏற்பாடு செய்த பலநாட்டுக் கவிஞர்களும் கலந்து கொண்ட கவிதைப் போட்டியில் பரிசில் பெற்றவர்.

பாவேந்தர் பாரதிதாசனாரிடம் ''நல்ல கவிஞர்'' என்ற பாராட்டைப் பெற்றவர்.

# குறிப்பிடத்தக்க பிற பாடலாசிரியர்கள்

## எம்.எஸ்.சுப்பிரமணியம்

'குடும்பம்' படத்தில் பெண்டியாலாவின் அற்புத இசையமைப்பில் உருவான பாடல்களை எழுதியவர் இவரே!

''ஆனந்தம் ஆனந்தம்
ஆனந்தமே ஜீவித பரமார்த்தம்''

என்று தொடங்கும் அருமையான பாடலில்,

''புன்னகை பூத்திடும் மோகனராகம்
கோகிலம் பாடிடும் வசந்தகானம்
பூங்காவில் மல்லியின் கந்தம்
பிரேமையில் மின்னும் மான்விழி அந்தம்
தென்றல் காற்றிலே ககன விகாரம்
ஊஞ்சல் வீச்சிலே மதுர சஞ்சாரம்
நதிமீதிலே பயண உல்லாசம்
இருமனம் கலந்திடும் பிரணயவிலாசம்

என்கிறார்.

இதயத்தை ஈர்த்திடும் இன்ப கானமல்லவா இது?

இதே படத்திலுள்ள,

"பார்த்தீரா இவர் சரசம்
கேட்டீரா இவர் ஹாஸ்யம்"

எனத் தொடங்கும் பாடலில்,

**"அல்லிப்பூவும் வெண்ணிலாவும்
அன்பு பொங்க தழுவும் போது
மேகமிடையில் வருவதேனோ சொல்
ஓ சிங்காரப் பெண்ணே"**

என்ற பாடலையும் சிறப்பாகச் சுப்பிரமணியம் எழுதியுள்ளார்.

அண்ணி, ரோகிணி, செஞ்சுலட்சுமி போன்ற படங்களிலும் சில இனிமையான பாடல்களை இவரெழுதியுள்ளார் என்பது குறிப்பிடத் தக்கது.

## டி.கே.சண்முகம்

சிறந்த நடிகர்களாக மின்னியவர்கள் சில பாடல்களை எப்போதாவது ஒரு உந்துதலில் எழுதி அது சிறப்பாக அமைந்து விடுவது உண்டு!

தமது நகைச்சுவை மூலம் அற்புத சிந்தனைகளை தமிழ்க் கலா ரசிகர்களுக்கு வழங்கிய கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன் சில பாடல்களைத் தாமே யாத்துப் பாடியுள்ளார் என்பது பலரும் அறிந்த சேதி!

மிகச் சிறந்த கலைஞரான டி.கே.சண்முகம் அவர்கள் 'ஓர் இரவு' படத்திற்காக,

**"எங்கநாடு இது எங்க நாடு"**

என ஆரம்பிக்கும் ஒரு உன்னத பாடலை ஆர்.சுதர்சனம் இசையில் எழுதியுள்ளார்.

அப்பாட்டில்,

**"எல்லார்க்கும் எடங்கொடுத்து
ஏமாந்த நாடு"**

என்றும்,

"தங்கக் குடிசையில்லாமெ
தரித்திர மானாலும் தலைவிதின்னு
நம்பிக்கிட்டு - சாமியைக்
கும்பிடும் நாடு"

என்றும்.

"சங்கம் வச்சு மொழி வளர்த்த
தமிழ்நாடு இப்போ
தாய்மொழியைக் கதம்பம் பண்ணும்
சண்டாள நாடு"

என்றும்.

"உலகுக்கெல்லாம் தருமம் சொல்லி
உயர்ந்த நன்னாடு - இப்போ
உயர்வு, தாழ்வு பேசிப் பேசி
ஒத்துமையில்லா நாடு"

என்றும் மிக அருமையாக - ஆவேசமாக தமது அகவுணர்வைப் பாட்டாகப் பிரதிபலிக்கிறார் கலைஞர் டி.கே. சண்முகம்.

இனி பா லை முழுமையாகப் பாருங்கள்

## எங்க நாடு...

எங்க நாடு இது எங்க நாடு
எங்கும் புகழ் தங்கும் நாடு - வளம்
பொங்கும் நாடு - வந்த
எல்லார்க்கும் எடங்கொடுத்து
ஏமாந்த நாடு (எங்கநாடு)
தங்கக் குடிசையில்லாமெ
தரித்திர மானாலும் தலைவிதின்னு
நம்பிக்கிட்டு - சாமியெனக்

கும்பிடும் நாடு (எங்க நாடு)
சங்கம் வச்சு மொழி வளர்த்த
தமிழ்நாடு... இப்போ

தாய் மொழியைக் கதம்பம் பண்ணும்
சண்டாள நாடு

சொந்த நாட்டு மனுஷங்களைத் தூக்கிப் பேசாது
சொரண்ட வந்த ஆளுக்கெல்லாம்
தொழுது மாலை போடும் நாடு

உலகுக்கெல்லாம் தருமம் சொல்லி
உயர்ந்த நன்னாடு - இப்போ
உயர்வு தாழ்வு பேசிப்பேசி
ஒத்துமையில்லா நாடு- இது
எங்க நாடு... எங்கும்
புகழ் தங்கும் நாடு...

# கே.தேவநாராயணன்

மகாகவி பாரதியின், ''மங்கியதோர் நிலவினிலே'' பாடலை டி.எம்.எஸ், எஸ் பி.பாலசுப்பிரமணியம் போன்றோர் திரைப்படங்களிலும் சிதம்பரம் ஜெயராமன், கே.தேவநாராயணன் போன்றோர் தனிப்பாடல்களாகவும் பாடியுள்ளார்கள்.

இவர்களில் கே.தேவநாராயணன் தாமே இசையமைத்துப் பாடிய பாடலே காதினில் இன்பத் தேன் பாய்ச்சும் வண்ணம் அமைந்துள்ளது.

அருமையான குரல் வளம் மிக்க பாடகரும் இசையமைப்பாளருமான இவர் மொழி மாற்றுப் படங்கள் பலவற்றுக்கு வசனங்களும் பாடல்களும் ஏராளமாக எழுதியுள்ளார்.

பல அருமையான கவிதைகளையும் வடித்துள்ளார்.

இவரெழுதிய திரைப்பாடல்களில் 'ஹதிம் தாய்' படத்திற்காக எழுதிய,

- ''உலகில் உள்ளோர் வாழ
நற்சேவை செய்தாய் அன்பனே
நிலைத்தனை நீ நெஞ்சமதில்

நாடு உன் கதை பாடுமே''

என்ற தரமான, நயமான பாடலை இலங்கை வானொலி அடிககடி ஒலிப ரப்பி வந்துள்ளது.

## வி.சீத்தாராமன்

கண்ணாடி சீத்தாராமன் எனப் பட்வுலகினரால் அழைக்கப்பட்ட இவர், ஜெமினி நிறுவனமும், ஏ.வி.எம். நிறுவனமும் தயாரித்த படங்களுக்குப் பல பாடல்களை எழுதிப் புகழ் பெற்றவர்.

அதிகமாக இவரை நகைச்சுவைப் பாடல்கள் எழுதுவதற்கே பயன் படுத்தியுள்ளார்கள்.

'அதிசயப் பெண்' படத்தில்,

''ஈனா மீனா டீக்கா''

'அன்பு எங்கே' படத்தில்,

''டிங்கிரி டிங்காலே மீனாட்சி
டிங்கிரி டிங்காலே''

போன்ற பாடல்களே இவருக்குப் புகழைக் கொடுத்தன.

ஆனால் தரமான பாடல்களையும் இவர் எழுதியுள்ளார்.

'கொஞ்சும் சலங்கை' படத்தில் எஸ்.எம்.சுப்பையா நாயுடு இசையில்

''காணக் கண்கோடி வேண்டும் - ஐயன்
கால்தூக்கி நின்றாடும் காட்சி - பொன்னம்பலத்தில்''

என்ற அருமையான பாடலையும்,

''வசந்தகாலத் தென்றலில் ஒரு வண்டு - அது
மலர்ந்து சிரிக்கும் தாமரை மலர்க் கண்டு''

என்ற நயமான பாடலையும் இவரே எழுதியுள்ளார்.

'அதிசயப் பெண்' படத்தில் இடம் பெற்ற,

''அங்கும் இங்கும்
எங்கும் நிறைந்த
ஆண்டவனே நீ வாராய்''

என்ற இனிமையான பாடலையும் இவரே எழுதியுள்ளார்.

# சிதம்பரம் வரதராசன்

'அம்மா' என்ற பெயரில் சாந்தகுமாரி அற்புதமாக நடித்த படம் சுமார் நாற்பது வருடங்களுக்கு முன் வந்தது.

அந்தப் படத்திற்கு 'இசை மேதை' வி.தட்சிணா மூர்த்தி இன்னிசையில் அனைத்து பாடல்களையும் எழுதியவர் திருச்சி வரதராசன் என்பவர்.

ஜிக்கி தமது கம்பீரக் குரலில் பாடும்,

''அம்மாவே தெய்வம் உலகினிலே''

என்ற பாடல் எனது பால்ய காலந்தொட்டே என்னை மிகவும் ஈர்த்த பாடலாகும்.

அன்னையின் பெருமை கூறித் தமிழ் படங்களில் புனையப்பட்ட மிகச் சிறந்த பாடல்களில் இதுவும் ஒன்றென்பது என் கருத்து.

இலங்கை வானொலியில் அடிக்கடி ஒலிபரப்பாகும் இந்தப் பாடலைக் கேட்கும் போதெல்லாம் நான் பெற்றதாயின் நினைவில் நெஞ்சுருகி நிற்பேன்.

இந்த அற்புதமான தமிழ் மலரை நீங்கள் எழுத்திலாவது முழுமையாக பாருங்கள்.

## அம்மாவே தெய்வம்...

அம்மாவே தெய்வம் உலகினிலே
அம்மாவே தெய்வம் உலகினிலே - உற்ற
துணையாகுமே எவர்க்கும் இவ்வாழ்விலே
(அம்மாவே)

எவ்வுயிர்க்கும் முதல்சொல் அம்மா
எவ்வுயிர்க்கும் முதல்சொல் அம்மா - நம்

எதிர்நின்று பேசுந்தெய்வம் அம்மா - பிச்சை
எடுப்பார்களும் சொல்வாரே அம்மா! (அம்மாவே)
இவ்வடிவம் என்க்கு நீ, 'தந்தாய் அம்மா
இவ்வடிவம் எனக்கு நீ, தந்தாய் அம்மா
இதுபோலவே இனிதாகவே
இதுபோலவே இனிதாகவே
எடுத்துரைப்பார் யார்? எனக்கே அம்மா!
(அம்மாவே)

# புரட்சி தாசன்

புரட்சிதாசன் குறிப்பிடக் கூடிய இலக்கிய, இசை ஆய்வு நூல்கள் பல எழுதியவர்; நல்ல தமிழறிவு மிக்கவர்.

ஏராளமான மொழிமாற்றுப் படங்களுக்கும், நேரடியாகத் தமிழில் தயாரிக்கப்பட்ட சில படங்களுக்கும் பாடல்களை எழுதியவர்.

நேரடியாகத் தமிழில் தயாரிக்கப்பட்ட 'நல்ல காலம்' படத்தின் மூலம் இவர் பாடலாசிரியராக அரும்பினார்.

'மங்கையர் திலகம்' படத்தில் இசைமேதை எஸ்.தட்சிணாமூர்த்தி இசையில், இவர் எழுதிய

''கண்டு கொண்டேன் நான்
கண்டு கொண்டேன்''

என்ற பாடல் 1955-இல் பிரபலம் பெற்ற பாடல்களில் ஒன்றாகும்.

தேவரின் 'யானைப்பாகன்' படத்தில் கே.வி.மகாதேவன் இன்னிசையில்,

''செங்கனி வாய் திறந்து
சிரித்திடுவாய்
தித்திக்கும் தேன்குடமே
செண்பகப் பூச்சரமே''

என்ற பாடல் இலக்கிய வளம் மிக்கதாக விளங்குகிறது.

'ஹதிம் தாய்' படத்திற்காக புரட்சிதாசன் புனைந்த,

''வான்மதி ஆகியே நாமுலாவலாம்
இதந்தருங் காதலே இந்த நாளிலே
சிறந்த பூஞ்சோலையில் கதைகள் சொல்லலாம்
திறந்த வான்மீதிலே பறந்து செல்லலாம்''

என்றமைந்த பாடலும் காதல் சுவை ததும்ப இனிமையாக அமைந்துள்ளது.

இவர் சொந்தமாகத் தயாரித்த 'தராசு' போன்ற படங்களிலும் இவரெழுதிய பாடல்கள் உள்ளன.

# பா.ஆதிமூலன்

விளம்பரப் பிரியர்கள் பொங்கி வழியும் திரைப்படவுலகில் அடக்கமாக இருந்து சில அழகிய பாடல்களை எழுதியவர் ஆதிமூலன். சில படங்களுக்கு வசனங்களும் எழுதியுள்ளார்.

'அம்பிகாபதி' படத்தில் ஜி.ராமநாதன் இசையில் வி.என்.சுந்தரம் தமது கம்பீரமான குரலில் பாடும்,

''சோறுமணக்கும் சோனாடா
சோலை மணக்க புகழ் மணக்க - பொன்னியெனும்
ஆறுமணக்கும் புனல் நாடா''

என்ற இலக்கிய கனம் மிக்க பாடலை எழுதிய இவர், ''பசியின் கொடுமை' படத்திற்காக சில அருமையான பாடல்களையும் நயமோங்க எழுதி யுள்ளார்.

இலங்கை வானொலியில் சுமார் முப்பது வருடங்களாக அடிக்கடி ஒலிபரப்பாகிக் கொண்டிருக்கும்,

''தூய இருமனம் சிதைந்து போவதுன்
திருவிளையாடலோ - தேவா
காதல் நதியினை வேதனைத் தடையால்
தடுப்பதும் உனக்கழகாமோ?''

என்ற இந்தப் பாடலை ஏ.எம்.ராஜா உருக்கத்தோடு பாடியுள்ளார்.

'பசியின் கொடுமை'க்காக கவிஞர் தீட்டிய,

''அழுவாதே என் செல்வக் கண்ணே உன்னை என்
உயிர் போல வளர்ப்பேனே பொன்னே

அலறும் பசியின் கொடுமை தன்னால்
அன்றோ பிறந்தாய் இம்மண்ணில்''

என்ற பாடல் வறுமைத் தீயில் உழன்ற ஒருதாய் தன் பிள்ளையைத் தேற்றும் பாணியில் அமைந்தது. கல்லும் கசிந்துருகும் வண்ணம் இப்பாடலை யாத்துள்ளார்.

கவிஞர் ஆதிமூலனின் இரு அமர கீதங்களையும் முழுமையாக அனுபவியுங்கள்!

## தூய இருமனம்....

தூய இருமனம் சிதைந்து போவதுன்
திரு விளையாடலோ? - தேவா
காதல் நதியினை வேதனைத் தடையால்
தடுப்பதும் உனக்கழகாமோ? (தூய)
ஆசையினால் மனவீதியில் மாளிகை
அமைத்தனனே மனிதன்!
இடிந்து வீழ்ந்திட ஏனோ நீயும்
இருந்து மகிழ்ந்தனையோ?
வாழ்க்கை எனும் பூங்கா செழிப்பாக
வளர்ந்து பலன் தரவே
ஏக்கமும் துன்பமும் இரங்கலும் தானோ
எழில்செயும் எனும் நினைவாமோ?

## அழுவாதே என் செல்வக் கண்ணே...

அழுவாதே என்செல்வக் கண்ணே - உன்னை என்

உயிர்போல வளர்ப்பேனே பொன்னே
அலறும் பசியின் கொடுமை தன்னால்
அன்றோ பிறந்தாய் இம்மண்ணில்!
உரியோன் என்று ஒருவன் இல்லாதே - பல
உதிரப் பிழம்பான தேகம்
எறியப்படும் குப்பை மேட்டில் - இதை
அறியாதவர் போல நாட்டில்
நடிக்கும் கயவர்தம் செய்கை - தன்னை
பழிக்குப் பழிவாங்கத் தவறாய்
என்றே நினைத்துக் களித்தே - உன்னை
நன்றாக நான் வளர்ப்பேனே!
அழலாமோ என் இன்பக் கனியே - உன்னை
அன்பாய் வளர்ப்பேன் கண்மணியே! (அழுவாதே)

# இரா.பழனிச்சாமி

கவிஞர் பழனிச்சாமி பண்பட்ட நாடகாசிரியர். பல திரைப்படங்களுக்குக் கதை - வசனங்கள் எழுதியவர். தமிழ் இலக்கியங்களிலும், ஆன்மிக விஷயங்களிலும் ஆழமான புலமை பெற்றவர்.

அவர் சில திரைப்படங்களுக்குப் பாடல்களும் எழுதியுள்ளார்.

அவற்றில் 'உலகம் சிரிக்கிறது' படத்திற்காக எழுதிய பாடல் அர்த்தம் நிறைந்த அழகு மிகுந்த பாடலாகும்.

"உலகம் சிரிக்குதடா - மனிதா
உலகம் சிரிக்குதடா
அன்பிலே பிறந்து வளர்ந்து
வம்பில் அழியும் நிலையைக் கண்டு
உலகம் சிரிக்குதடா!

"பண்பும் அறிவும் தடுத்த போதும்
நண்பனைக் கெடுத்திடும் வஞ்சகன்
கண்களிரண்டிலும் கடலைப் பெருக்கி
கலங்கிடும்போது உதடுகளோரம்

உலகம் சிரிக்குதடா

உள்ளத்தில் வைத்து உருவாக்கி - தினம்
பள்ளியில் வைத்து ஆளாக்கும்
பெற்றவர் வருந்திடச் சிரித்தவன் முடிவில்
புலம்பிடும்போது பொன்னிதழ் திறந்து
உலகம் சிரிக்குதடா''

பேசும் மலர்களாம் பெண்களை - மண்ணில்
புதைத்திட நினைத்தவன் சிரிக்கின்றான்

வீசும் நெருப்பாம் கற்பிலே - அவனும்
வேக உலகம் சிரிக்குது - பெண்கள்
உலகம் சிரிக்குது''

இப்படியாகப் பாடல் முழுமையும் நல்ல சிந்தனைகளை வாக்கு வளத்தோடு பாடலாய் படைத்துள்ளார் கவிஞர்.

## கோவை குமாரதேவன்

இலைமறை காயாய் இருந்து கொண்டு சில நல்ல பாடல்களைப் படங்களுக்கு எழுதியவர் இவர்.

தேவரின் 'கொங்கு நாட்டுத் தங்கம்' படத்திற்காக கே.வி.மகாதேவன் இசையில்,

''கரும்பாக இனிக்கின்ற பருவம் - இதைக்
கதையாகச் சொல்லுது உன் உருவம்''

என்று எழிலோங்க எழுதுகிறார். 'பொன்னு மாப்பிள்ளே' படத்திற்காக,

''மணமகன் அழகனே
மணமகள் அழகியே
திருமணம் ஆனதும் - இங்கு
ஜோடி சேர்ந்தனரே''

என்று வேதா இசையில் மிகவும் ஹிட்டான ஒரு பாடலைப் படைத்தார் இவர்.

கோவைகுமார தேவன் தேவரின் ''யானைப்பாகன் படத்திற்காக கே.வி.மகாதேவன் இசையில் எழுதிய,

''பதினாறும் நிறையாத பருவமங்கை''

என்ற பாடல் இலக்கிய மலராக மலர்ந்து இனிய மணம் வீசி நிற்கிறது; அந்தப் பாடலை முழுமையாகத் துய்த்து மகிழலாம்.

## பதினாறும் நிறையாத...

பதினாறும் நிறையாத் பருவமங்கை - காதல்
பசியூட்டி வசமாக்கும் ரதியின் தங்கை!
குதித்தாடி மருண்டோடும் கலைமானோ? — இளங்
குமரிகளும் மயங்கும் சிலைதானோ - அவள்
(பதினாறும்)

வண்ணமுகக் கண்ணிரண்டும்
நட்சத்திரமோ? - அது
வாவென்று அழைப்பதென்ன

விசித்திரமோ?
மின்னுகின்ற பல்வரிசை
முத்துச்சரமோ?... யாரும்
மெச்சுகின்ற குணங்களே தான்
சொத்து சுகமோ!... அவள் (பதினாறும்)

வண்டுகளே கண்டிடாத
வசந்த முல்லை! - அவள்
வந்ததுமே பறந்தோடும்
காதல் தொல்லை!
எண்ணம் போல வாய்த்துவிட்டால்
ஈடு இல்லை - என்
எண்ணம் போல வாய்த்துவிட்டால்
ஈடு இல்லை பின்
என்றைக்குமே இன்பத்திற்கு ஏது எல்லை? - அவள்
(பதினாறும்)

# ஈழத்து ரத்தினம்

ஈழத்தில் தயாரிக்கப்பட்ட தமிழ்ப் படங்கள் அதிகமானவற்றுக்குப் பாடல்கள் எழுதும் வாய்ப்பைப் பெற்றுத் தமது திறமையை சிறப்பாக வெளிக்காட்டியவர் ஈழத்து ரத்தினம்.

அருமையான பல மெல்லிசைப் பாடல்களையும் இலங்கை வானொலிக்கு வழங்கி உள்ளார். அவை இக்கவிஞருக்கு நல்ல புகழைக் கொடுத்துள்ளது. ஈழத்துக் கிழக்குப் பகுதியிலுள்ள மட்டக் களப்பு மாவட்டத்தில் பிறந்த இவர்,

1957-இல் தமிழ்நாட்டில் வெளிவந்த, 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்' படத்திற்காக ஓர் எழுச்சிப் பாடலை விஸ்வநாதன் - ராமமூர்த்தி இசையில் எழுதியுள்ளார்.

"இங்கு இளைத்தவனும் வலுத்தவனும் இல்லையடா
இது நல்லோர்கள் சொல்லி வைத்த உண்மையடா
ஆ... நாமும் அதன் வழியே செல்வோமடா
ஆ... ஒன்றுபட்ட சக்தியால்
உரிமை காக்க வேண்டும்
உறுதி கொண்டு அடிமை வாழ்வை
உதறித் தள்ள வேண்டும்
ஒன்றுபட்ட சக்தியால்
உரிமை காக்க வேண்டும்

உறுதிகொண்டு அடிமை வாழ்வை
உதறித்தள்ள வேண்டும்
ஒன்றுபட்ட சக்தியால்
உரிமை காக்க வேண்டும்

கருவிகொண்ட கைகளோடு
ஒன்று கூடுவோம்
கைவிலங்கு ஒடிகவென்று
முரசு கொட்டுவோம்!
தரமுயர்ந்த வாழ்வு தன்னை
நாடி ஓடுவோம்!

தரமுயர்ந்த வாழ்வு தன்னை
நாடி ஓடுவோம் - நம்மைத்
தாழ்த்த எண்ணும் தீயவர்க்கு
முடிவு கட்டுவோம்''

ரத்தினத்தின் வீரரசம் சொட்டும் இப்பாடல் தமிழர்களுக்குப் பயன்தரக் கூடிய பாங்கோடு உள்ளது.

## முடியரசன்

பாவேந்தர் பாரதிதாசன் பரம்பரையில் வந்த புகழ்பூத்த கவிஞர்களில் ஒருவர் முடியரசன்.

இவர் 'கண்ணாடி மாளிகை' படத்தின் அனைத்துப் பாடல்களையும் எழுதியுள்ளார். அவற்றில்,

''நாணம் ஏனோ இந்த வேளையிலே - வண்டு
நாடி ஓடும் மலர்ச் சோலையிலே
நானும் நீயும் இந்த மாலையிலே
நல்ல நாதம் ஆவோம் காதல் வீணையிலே''

என்ற பாடலைக் கவிஞர் இலக்கியச் செழுமை மின்னத் தீட்டியுள்ளார். இப்படத்திலுள்ள,

''சிரித்தமுகம் வேணுமடி பெண்ணே - அதுதான்
சேவை செய்யும் பெண்களுக்கு
அழகுதரும் கண்ணே''

என்ற பாடலும் சிறப்பானதே!

இதில்-

''கிள்ளக் கிள்ள தேயிலையும்
தழையுது பாரு - கடமை
செய்யச் செய்ய நன்மை வந்து
விளையுது பாரு''

என்ற அடிகள் கருத்தோவியமாக அமைந்துள்ளது.

## உளுந்தூர்பேட்டை சண்முகம்

இவர் இலக்கிய மணங்கமழும் பல பக்திப் பாடல்களை வரைந்தவர்.

சீர்காழி கோவிந்தராஜன் மேடைகளிலும், தனிப்பாடல் இசை தட்டுகளிலும் பாடிய மிகப் பல பாடல்கள் சண்முகத்தின் கை வண்ணமே யாகும்.

'திருமலை தெய்வம்' படத்திற்காக குன்னக்குடி வைத்தியநாதன் இசையில் இவர் தீட்டிய பாடலொன்று இலக்கியப் பாங்கோடு அமைந்துள்ளது.

''ஏழுமலையிருக்க நமக்கென்ன மனக்கவலை''

என்று தொடங்கும் இப்பாடலில்,

''கால்வண்ணம் அகலிகைக்கு வாழ்வு தந்தது
கைவண்ணம் திரௌபதியின் மானம் காத்தது
மால்வண்ணம் திருமகளின் மனம் கவர்ந்தது
மணிவண்ணன் கருணை நம்மை மகிழ வைத்தது

என்றமைந்த சரணங்கள் தமிழறிந்தவர் யாவரையும் சரணடையச் செய்யும் வண்ணம் அமைந்துள்ளது.

## நெல்லை அருள்மணி

''நான்பாடும் பாடலுக்கு
ஸ்வரம் சொல்ல முடியுமா?
இசையோடு விளையாடும்
எனையாளும் மன்னவா''

மேற்கண்ட இனிய பாடலைக் குன்னக்குடி வைத்தியநாதன் இசையில் 'ராக பந்தங்கள்' படத்திற்காக எழுதினார் நெல்லை அருள்மணி.

'அவன் ஒரு சரித்திரம்' படத்தில் எம்.எஸ்.வி. இன்னிசையில், 'மாலையிட்டான் ஒரு மன்னன்' எனத் தொடங்கும் பாடலில்,

''மாணிக்கத் தாரகை நிலவினிலே - எங்கும்
மங்கல மிசைத்திடும் தென்றலே

தேரினில் தேவன் ஊர்வலமே அந்தத்
தேவியின் வாழ்வினில் காவியமே''

என்ற அடிகளில் இலக்கிய இன்பம் கரைபுரண்டு ஓடுகிறதல்லவா?

தமக்குக் குறைவாக கிடைத்த வாய்ப்புகளைத் தகுந்த முறையில் பயன்படுத்தித் தமது திறமையை நிறுவிய சிறந்த பாடலாசிரியர்களில் நெல்லை அருள்மணியும் ஒருவர்.

## பல்லடம் மாணிக்கம்

பல்லடம் மாணிக்கம் சிறந்த மரபுக் கவிஞர். அருமையான இரண்டு கவிதை நூல்களை வெளியிட்டவர்.

இவர் இசைமேதை எஸ்.தட்சிணாமூர்த்தி இன்னிசையில் புலவர் ஏ.கே.வேலனின் 'தேவி' படத்திற்கு அருமையான பாடல்களைத் தீட்டினார்.

''சின்னக் குழந்தை விழிகளிலே
தெய்வம் வந்து சிரிக்குதம்மா
வண்ணப் பூவிதழ் மழலையிலே
வாழ்க்கையின் தத்துவம் புரியுதம்மா''

என்ற பாடல் இலக்கிய நயமோங்க அற்புதமாக இவரால் புனையப் பட்டுள்ளது.

இப்படத்தில்,

''தேவி ஸ்ரீதேவி உன்னைத்
தேடி அலைகின்றேன் - அன்பு
தெய்வம் நீயென்றே உன்னைத்
தேடி அலைகின்றேன்''

என்ற காதல் பாட்டும் உன்னதமானதாகும்.

இந்தக் கவிஞர் தாம் பாட்டெழுதிய ஒரே ஒரு படத்திலேயே முத்திரை பதித்தவர். தொடர்ந்து பாடல்கள் எழுதியிருந்தால் அற்புதமான பல பாடல்களைத் தமிழ்ப்படவுலகம் பெற்றிருக்கும்.

## மல்லியம் ராஜகோபால்

கதாசிரியராக இயக்குநராகச் சிறப்பாகத் துலங்கி ஜீவனாம்சம், சவாலே சமாளி' போன்ற நல்ல படங்களைத் தந்த இவர் சில படங்களுக்குக் குறிப்பிடும் படியான பாடல்களையும் எழுதியுள்ளார்.

'இளைய தலைமுறை' படத்திற்காக எம்.எஸ்.வி. இசையில் எழுதிய பாடலில்,

''இளைய தலைமுறை இனிய தலைமுறை
இனிஇந்த நாட்டுக்கு நீதான் கலங்கரை''

என்ற வரிகளிலும்,

''உதய காலத்தின் பூபாளராகங்களே - ஒரு
புதிய வானத்தின் சுதந்திர மேகங்களே
இதயக் கனலேந்தி மிதக்கின்ற கப்பல்களே - சிறு
விதையில் மறைந்திருக்கும் எதிர்கால விருட்சங்களே''

என்ற வரிகளிலும் உள்ள இலக்கிய அழகையும், கருத்துச் செறிவையும் இங்கு குறிப்பிட்டேயாக வேண்டும்!

## தஞ்சை வாணன்

சென்னைத் தொலைக்காட்சியில் பணியாற்றும் தஞ்சை வாணன் சிறந்த நாடகாசிரியர். இலக்கியஞானம் நிரம்பியவர்.

இவர் திரைப்படங்களுக்குப் பல பாடல்களைத் தீட்டியுள்ளார்.

அநேகமான பாடல்கள் நகைச்சுவைப் பாங்கை வெளிப்படுத்தும் வண்ணம் அமைந்துள்ளன.

'நினைப்பதற்கு நேரமில்லை' படத்தில் கே.வி.மகாதேவன் இசையில் இவரெழுதிய,

''அத்தான் கடிதம் நல்ல முத்து முத்து
ஆகா என் அன்பு மலர்க் கொத்து கொத்து''

என்ற பாடல் செழுமை மிகுந்த பாடலாக அமைந்து தஞ்சைவாணன் தகுதியை நிலை நிறுத்துகிறது.

# யார் கண்ணன்

## (மதுக்கூர் கண்ணன்)

1978-இல் ஜவகர் இசையமைப்பில் உருவான 'கசப்பும் இனிப்பும்' படத்தின் மூலம் பாடலாசிரியராக அரும்பிய 'யார் கண்ணன்' மொழியாட்சியும், கருத்துப் பொலிவும் சங்கமிக்கும் சந்தனத் தமிழ்ப்பாடல்களை, 'வடிவங்கள், மலர்களே மலருங்கள், நண்டு, மெட்டி, யார், கண்ணே கனியமுதே, உன்னை ஒன்று கேட்பேன் உட்பட பன்னிரெண்டுக்கும் மேற்பட்ட படங்களில் தீட்டியவர்.

ஆணித்தரமான சிந்தனை மலர்களாக - வார்த்தை மின்னல்களாக சில புதுக்கவிதை நூல்களையும் எழுதியவர்.

யார், கண்ணே கனியமுதே போன்ற படங்களை இயக்கியவர்.

இந்த நல்ல கவிஞரின் திரைப்பாடல்கள் சிலவற்றின் நயத்தைப் பார்ப்போம்.

'உன்னை ஒன்று கேட்பேன்' படத்திற்கு கவிஞரெழுதிய பாடலொன்றிலுள்ள,

**''வருகிறாள் என் தேவதை**
**வழியில் எங்கும் பூவிதை**
**நெடிய வானம்... கடலின் கானம்**
**நெஞ்சை அள்ளுதே - உன்**
**நினைவு வந்து விழிசிவந்து**
**கதைகள் சொல்லுதே''**

என்ற அடிகளும்,

**''உனது பெயரைக் கரையில் எழுதும்**
**கடல் நீர் இனிக்கும்''**

என்ற அடிகளும்,

**''புதிய பயணம் தொடரும் நேரம்**
**சிறகினைப் பறித்தாய் - உன்**
**புன்னகையும் பூவிழியும்**
**கனவென உரைத்தாய்''**

என்ற அடிகளும் இந்தத் திரைப்பாடலை உன்னத கவிதை அந்தஸ்த்துக்கு உயர்த்தி விடுகிறது! கண்ணனின் பாட்டுக்கட்டும் ஆற்றலுக்கு அழகிய சான்றுகளாக அமைந் துள்ளது.

எழுதப் படிக்கத் தெரியாத பாமரர்களை லட்சக் கணக்கில் ஏந்தி நிற்கும் தமிழ்நாட்டில் தமிழை அத்தகையவர்கள் அறியும் வண்ணம் செய்ய உதவுவதில் திரைப்பாடல்களுக்குப் பெரும்பங்குண்டு.

இதனை மனத்திற்கொண்டு தரமான பாடல்களை திரையில் வரை கின்ற பாடலாசிரியர்களில் இவரும் ஒருவர் என்பது உண்மையாகும்.

'கண்ணே கனியமுதே' படத்தின் பாடலொன்றில்,

''தொட்டிலில் தொடங்கிடும் தாலாட்டு - நால்வர்
தோள்தரும் நேரமும் ஓர்பாட்டு
எத்தனைச் சுமைகள் உன் மனதில் இருப்பினும்
இறக்கி வைக்கலாம் இசைகேட்டு''

என்ற அடிகளும்,

''பாலூட்டும் மார்புக்குள் இதயத்தின் சத்தம் - குழந்தை
காதுக்குள் அரங்கேறும் தாளத்தின் முத்தம்''

என்ற அடிகளும்

இந்தக் கவிஞர் 'மெட்டி' படத்திற்கெழுதிய

''ராகம் எங்கேயோ தாளம் எங்கேயோ
பாதம் பாடும் கீதம் யாவும்
வான் மீதோ''

என்ற அடிகளும் இவர்தம் பாத்திறனை பளிச்சென காட்டுகிறது!

'பூச்சூட்டும் நேரம்' படத்திற்காக,

''எங்கிருந்து பார்த்தாலும் வானம் ஒன்றுதான்
இன்பதுன்பம் என்றாலும் வாழ்க்கை ஒன்றுதான்
காத்திருப்போம்... கண்விழிப்போம் ... கதவுகள் திறக்கும்
காயம்பட்ட பின்னால்தான் நியாயம் பிறக்கும்''

என்றெழுதிய அடிகளில் அழகு ஆனந்த நர்த்தனம் புரிகிறது!

'யார் கண்ணனை' மக்களுக்கு மத்தியில் சிறந்த கவிஞராக அடையா ளங் காட்டிய பாடல்களில் ஒன்று 'நண்டு' படத்திற்காக இளையராஜா இன்னிசையில் இவரெழுதிய,

"அள்ளித் தந்த பூமி
அன்னையல்லவா....
சொல்லித் தந்த வானம்
தந்தையல்லவா
ஆடும் நாள்... பாடும் நாள்... தாளங்கள்
ஆனந்தம்.. ஆரம்பம்... வாருங்கள்"

என்ற வனப்போங்கிய பாடலாகும். இப்பாடலில்,

"விரியும் பூக்கள் பானங்கள்
விசிறியாகும் நாணல்கள்"
"மரத்தின் வேரும் மகிழ்ச்சிப் படுக்கையே"

என்ற வரிகளிலும் தனி லாவண்யம் லவித புன்னகை சிந்துகிறது.

1970-ஆம் ஆண்டுக்குப் பின் தமிழ்ப் படப் பாடலாசிரியராக மலர்ந்து புகழ்பெற்றவர்களில் இவரையும் நிச்சயம் குறிப்பிட வேண்டும்.

## ஆற்றலரசு

ஈரோட்டில் பிறந்த கவிஞர் ஆற்றலரசு, ஆற்றல் கவிதைகள், ஞான விழுதுகள் போன்ற கவிதை நூல்களைச் சிறப்பாக எழுதியவர்.

இசைஞானமும், இலக்கிய ஞானமும் மிக்க இவர் சில திரைப்படங்களுக்கு எழிலேந்தும் சில பாடல்களையும் எழுதியுள்ளார்.

கண்ணிலே அன்பிருந்தால்' படத்திற்காக கங்கை அமரன் இசையில் எஸ்.ஜானகி பாடிய,

"காலைவேளை சேவல் கூவும் நேரமே
என் கைகளின் வளையலின் அசைவிலே
ஒரு ராகம் தாளம் சேர்ந்து
நெஞ்சில் கேட்குதம்மா
புது ராகத்திலே"

என்ற அருமையான பாடல் இவரது கை வண்ணமேயாகும்.

இப்பாடலில்,

"மஞ்சள் இழைத்து அள்ளிஇடும் நேரம்
வளையல் குலுங்கி சிந்துகளைப் பாடும்

நிலவின் குளுமை பகலில் தெரியும்
இதயப் பறவை பறந்து திரிவதேனோ
இங்கு ஆனந்த ஊர் கோலமோ''

என்ற அடிகள் உட்பட பாடல் முழுவதுமே இலக்கிய மணம் கமழ்கிறது.

'வடிவங்கள்' படத்திற்கு எழுதிய,

''கலைமகளே உன்னை அழைக்கின்றேன்''

என்று தொடங்கும் பாடலிலுள்ள,

''நாட்டியக் கலையே அபிநயமாகும்
நங்கையின் முகமே கவிநயமாகும்
முகிலாட துகிலாட புதுக்கோலங்கள்
விழியாட மொழியாட தேன்ராகங்கள்''

என்ற அடிகளில் இலக்கிய சுகமுண்டு.

கவிஞர் ஆற்றலரசு எழுதி மிகவும் ஹிட்டான பாடல், ''ராமாயி வயசுக்கு வந்துட்டா'' படத்தில் கங்கைஅமரனின் இசையில் ஜானகி பாடிய,

''அடி ராமாயி
என் ராசாத்தி
அடி ராமாயி''

எனும் பாடலாகும்

# காமகோடியன்

கவிஞர் கண்ணதாசனை ஆதர்சகவியாக வரித்துக் கொண்ட காமகோடியன் பல கருத்துள்ள பாடல்களைத் தீட்டியவர்.

'பொண்ணு பாக்கப் போறேன்' படத்தில்,

''ஆவாரம் பூ ஒண்ணு துணை தேடுது - அதன்
காதோரம் பூங்காற்று கவிபாடுது

ஆத்தோரம் காத்தாட அலைபாயுது - இளம்
நாத்தாகக் கூத்தாடி நடைபோடுது
இளம்பாவை கிளியொன்று விளங்காத சுகங்கண்டு
உள்ளூற கள்ளூற தள்ளாடுது!
புதுவெள்ளம் அணைமீது பெண்ணுள்ளம் அரங்கேற
பொன்னான எண்ணங்கள் உருவானது''

என்று வார்த்தைகளை சிதைக்காது அழகுத் தமிழ் மாலையாகக் கட்டியுள்ளார் கவிஞர் -

''ஒரு தொட்டில் சபதம்' படத்திற்காக,

''ராத்திரி நேரத்திலே ஒரு
சொப்பனங் கண்டு புட்டேன்
அந்த ராக்கோழி கூவையிலே
நான் சொர்க்கத்தை
பாத்துப்புட்டேன்''

என்று கிராமிய பாணியில் அழகோடு காதல் சித்திரம் தீட்டுகிறார் கவிஞர்.

இதே படத்தில்,

''பூஞ்சிட்டுக் குருவிகளா
புதுமெட்டுத் தருவிகளா
பாடத்தான் போறேன் பாட்டு
பலபேரு கதையக்கேட்டு
அம்மாடி ஆத்தாடி
பொல்லாத உலகமடா''

என்ற பாடல் கருத்துப் பொலிவும், வார்த்தை வனப்பும் மிக்கதாக அமைந்துள்ளது.

இலைமறை காயாக உள்ள கவிஞர் காமகோடியனுக்கு தாராளமாக பாட்டெழுதும் வாய்ப்புகள் அமையுமாயின் அற்புதமான முறையில் தமது திறமையை நிறுவுவார் என்பது நிச்சயம்!

## சிதம்பரநாதன்

கிராமிய மணங்கமழும் பாடல்களை எழுதுவதில் இவர் தனித் தேர்ச்சி மிக்கவர்.

'பஞ்ச கல்யாணி' படத்திற்காக,

''ஆமணக்குத் தோட்டத்திலே
பூமணக்கப் போறபுள்ளே
ஒத்தையிலே போராயோடி
ஒங்கூட நான் வரவா''

என்று நாயகன்பாட,

''ஒத்தையிலே போனாலும்
வெத்திலைக்குச் சுண்ணாம்பா
சேத்துக்கிட்ட ஆசைமச்சான்''

என்று நாயகி பாடுவதும் கிராமத்துக் காதலை யதார்த்த சித்திரமாக கண் முன் காட்டுகிறதல்லவா?

'தூறல் நின்னு போச்சு' படத்திற்காகப் புலவர் சிதம்பர நாதன் எழுதிய,

''ஏரிக்கரைப் பூங்காற்றே
நீ போறவழி தென்கிழக்கே
தென்கிழக்கு வாசமல்லி - என்னைத்
தேடிவரத் தூது செல்லு''

என்ற இனியபாடல் இவருக்குப் புகழை அள்ளிக் கொடுத்தது.

## காளிதாசன்

கவிஞர் திருப்பத்தூரான் காளிதாசனாய் மலர்ந்து தேவா இசையமைக்கும் அதிகமான படங்களுக்குப் பாடல்கள் எழுதி வருகிறார்.

அண்மையில் வந்த 'பொண்டாட்டி ராஜ்யம்' படத்தில்,

''உச்சிமரப் பச்சைக் கிளியே
ஒரு உள்ளம் இன்னும் தூங்கலையே
அவன் வச்ச முல்ல பூக்கலையே
அந்த வாசனையைப் பார்க்கலையே''

என்றும்,

''ஊத்துக்குள்ள தண்ணிதான் தெளிஞ்சதம்மா
அது அள்ளும்போது மண்சரிஞ்சி மறைஞ்சதம்மா

நெஞ்சிரண்டும் நூலெடுத்து முடிஞ்சதம்மா
அட நெய்யும் போதே சேலை ஒண்ணு கிழிஞ்சதம்மா''

என்று இவர் கருத்தழகு பொலிய எழுதுகிறார்.

'பட்டத்து ராணி' படத்திற்காக, எழுதிய

''பெண்ணாகப் பிறந்தோரே கதை கேளுங்கள்
சொந்தங்கள் பந்தங்கள் வெளிவேஷங்கள்
கண்ணீரில் அலைபாயும் குலமான்களே
கண்ணீரில் அலைபாயும் குலமான்களே
கானல் நீராடும் தரைமீன்களே
கானல் நீராடும் தரைமீன்களே''

என்ற வரிகளில் நல்ல நயமிருக்கிறது.

இப் பாடலில்,

''செல்வங்கள் வரும்போது போதை வரும்
அங்கு செல்லாத காசாக பாசம் ஆகும்
அன்புக்கு ஒரு உள்ளம் அலைபாயுது
அதன் துன்பத்தில் சொந்தங்கள் குளிர் காயுது''

என்ற வரிகளையும் சிறப்பாக அமைத்துள்ளார் கவிஞர் காளிதாசன்.

எதிர்காலத்தில் மேலும் சிறந்த பாடல்களை இவர் பேனா பிரசவிக்கும் என்பதில் ஐயமில்லை!

## எம்.ஜி.வல்லபன்

''மௌனமே நெஞ்சில் நாளும்
நீ எழுதும் கனவே கவிதை''

என்ற தரமான - நயமான பாடலை 'உறங்காத நினைவுகள்' படத்திற்காக எழுதியவர் கவிஞர் வல்லபன்.

'உதிரிப்பூக்கள்' படத்திற்காக,

''நான் பாட
வருவாய் தமிழே
இனிமை தருவாய்''

என்ற இலக்கியச் செறிவுள்ள இன்கிய பாடலைப் படைத்தவர் இவர்!

'பிலிமாலயா' தாபக ஆசிரியராகத் திகழ்ந்த இவர் இப்போது 'பாக்யா'வை அலங்கரிக்கிறார்.

நல்ல இலக்கிய ஞானம் மிக்கவர். தெளிவாக.சிந்திக்கும் திறன் படைத்தவர்.

பல்வேறு சூழ்நிலைகளுக்கேற்ப பொருத்தமான வார்த்தைகளைக் கருத்துச் செறிவோடு அமைத்துப் பாடல்களாக ஆக்கும் கலையறிந்தவர்

வல்லபன் போன்ற அடக்கமுள்ள திறமைசாலிகளை இன்றைய முன்னணி இசையமைப்பாளர்கள் தாராளமாக வாய்ப்புகள் வழங்கிப் பயன்படுத்தினால் அது தமிழுக்கு நலம் சேர்க்கும்!

## கண்மணி சுப்பு

**கா**லத்தால் அழியாத பல அற்புதமான திரைப்பாடல்களை எழுதி தமது பாணியில் பாடல் எழுதும் பாடலாசிரியர் பரம்பரையையே தோற்றுவித்தவர் கண்ணதாசன்!

அவருடைய அன்பு மைந்தனே கண்மணிசுப்பு.

இவர் பட இயக்குநராகவும், வசனகர்த்தாவாகவும் விளங்குவதோடு சில படங்களுக்கு நல்ல பாடல்களும் எழுதியுள்ளார்.

'மிஸ்டர் கார்த்திக்' படத்திற்காக,

''சொர்க்கம் போக வேண்டுமா''

என்று ஆரம்பிக்கும் பாடலில்,

**''ஜாலங்கள் செய்யாமல்**
**பாவங்கள் இல்லாமல்**
**தேடுங்கள் சந்தோஷம்தான்**
**துரோகங்கள் செல்லாது**
**தெய்வங்கள் நம்மோடுதான்''**

என்ற அடிகளில் நயமுண்டு.

'சித்திரைப் பூக்கள்' படத்தில் இவரெழுதிய

பாடலொன்றில்,

''மல்லிகைப் பூக்கள் சேர்த்தெடுத்து வீடுகட்டி
அந்த மஞ்ச நிலாவை வாசலிலே ஊஞ்சலிட்டு
வாழ்வில் நானும் ராணியாக
தேவர்கள் நாளும் பாராட்ட''

என்ற அடிகளில் அழகோங்கி நிற்கிறது.

'தர்ம பத்தினி' படத்தில் இடம் பெற்று மிகவும் ஹிட்டான,

''நான் தேடும் செவ்வந்திப் பூவிது''

என்ற பாடல் இலக்கிய பாங்கோடு உள்ளது.

எதிர்காலத்தில் தமது தந்தையார் கவிஞர் கண்ணதாசன் போல் இலக்கிய வளமுள்ள பல பாடல்களை இவர் படைக்க வேண்டுமென்பது எமது அவா.

# இளையபாரதி

இவர் உணர்ச்சி துடிப்போடு புதுக் கவிதைகள் தீட்டுபவர். அதே உணர்ச்சித் துடிப்பை தாமெழுதும் திரைப்பாடல்களிலும் மின்னச் செய்கிறார்.

'காவலுக்குக் கெட்டிக்காரன்' படத்தில்,

''கருவறை தொடங்கிக்
கல்லறை வரையில்
காணுவ தெல்லாம்
தண்டனை தான்
வறுமைப்பட்ட மனுசனுக்கு
வாழ்க்கை எல்லாம்
தண்டனைதான்''

என்று கருத்து நயத்தோடு பாடல் படைத்துள்ளார்.

'சோலை இளங்குயில்' எனத் தொடங்கும் பாடலில்,

''தோளில் தாவிடும் தாரகையே
வானத்தில் ஏறட்டும் தாமரையே

இசையே மீட்டிடு எனையே
கனலே தீட்டிடு தினமே''

என்ற நயமான வார்த்தைகளைப் பின்னியுள்ளார் இவர்.

இதே படத்தில்,

''அம்மம்மா இதயம் எரியும்
கொடுமை நடந்ததே
பூமாலை கனலில் விழுந்து
கருகிப் போனதே!
எரியும் சிதையிலே நிலவும் கருகவே
தனிமை சிறையிலே மனது உருகவே
அன்பு நெஞ்சமே இங்கு அனலில் வேகுதே
துன்பம் ஒன்றுதான் என் சொந்தமானதே''

என்று மிகவும் உருக்கமாக ஒரு பாடலை எழுதியுள்ளார் இவர்.

கவிஞர் இளையபாரதி அனல்காற்று, ஒரு இந்திய கனவு போன்ற வேறு பல படங்களிலும் முனைப்போடு பாடல்கள் எழுதியுள்ளார் என்பது குறிப்பிடத் தக்கது.

## பொன்னடியான்

கவிஞர் பொன்னடியான் முனைப்போடு கவிதைகள் தீட்டுபவர். பாவேந்தர் பாரதிதாசன் நேசமழையில் நனைந்தவர்.

'மதிஒளி' சண்முகம் இயக்கிய 'நெஞ்சில் ஒரு முள்' படத்தின் மூலம் பாடலாசிரியராகத் திரையுலகில் அரும்பினார்.

இன்று இளையராஜாவின் தோழமையில் தோய்ந்து இலகுவாக பொதுமக்களை ஈர்க்கும் வண்ணம் பல பாடல்களைத் தீட்டி வருகிறார்.

''குயிலுக்கு ஒரு நிறமிருக்கு – அதன்
குரலுக்கு ஒரு நிறமிருக்கா''

என்று 'சொல்லத் துடிக்குது மனசு' படத்தில் இவரெழுதிய பாடல் பொன்ன

டியான் ஒரு வெற்றிபெற்ற பாடலாசிரியர் என்பதனை உணர்த்தியது.

'ராஜ்ாதி ராஜா' படத்தில்,

''எங்கிட்ட மோதாதே
நான் ராஜாதி ராஜனடா''

என்ற பாடல் கவிஞரை புகழின் உச்சிக்கே இட்டுச் சென்றது.

'ஒருவர் வாழும் ஆலயம்' படத்தில்

''வானின் தேவி வருக - இந்த
ஏழை மண்ணில் பொழிக''

என்ற பாடல் நயமோங்கி அமைந்துள்ளது. இதே படத்தில்,

''உயிரே உயிரே உருகாதே
கனவே மலரே கருகாதே
கோயில் தீபம் நீதானே
யாவும் வாழ்வில் நீதானே
நான் கொண்ட சொந்தங்கள்.
சூழ்ந்துள்ள பந்தங்கள்
சேரும் நேரமே''

என்று உணர்ச்சித் துடிப்போடு பாட்டெழுதியுள்ளார் கவிஞர்.

அண்மையில் வெளிவந்த ''என் ராசாவின் மனசிலே'' படத்திலே,

''குயில் பாட்டு ஹோ
வந்ததென்ன இளமானே
அதுகேட்டு ஹோ
செல்வதெங்கே மனம்தானே
இன்று வந்த இன்பம்
என்னவோ அது கண்டு கண்டு
அன்பு பொங்கவோ''

என்று அழகாக எழுதியுள்ளார் இவர்.

கவிஞர் பொன்னடியானுக்கு நல்லநேரம் அமைந்துள்ளது. அவரெழுதும் பாடல்கள் ஹிட்டாகி அவருக்குத் தொடர்ந்து வெற்றியைத் தந்து

கொண்டிருக்கிறது. நல்ல இலக்கியப் பாங்கோடு கவிதைகள் தீட்ட வல்ல இவர் அந்தத் திறனை திரைப்படப் பாடல்களிலும் அழுத்தமாகப் பதித்து மேன்மேலும் புகழேந்திப் பொலிய வேண்டுமென்பதே எமது ஆசை.

## ஆபாவாணன்

இவர் தங்கு தடையின்றி திரைப்பாடல்கள் வடிக்கும் கலையறிந்தவர். நல்ல இசைஞானம் மிக்கவரென்பதால் பாடல்கள் இயல்பாக வருகிறது!

'இணைந்த கைககள்' படத்தில்,

**''ஆதவன் துணையிருந்தால்''**

எனத் தொடங்கும் பாடலில்,

**''ஆசையின் துடிப்பில் ஆயிரம் பந்தம்**
**ஆட்டத்தின் முடிவில் ஆறடி சொந்தம்**
**தனிவழிப் பாதையிலே தடைகளை யாரறிவார்?**
**ஓ... விதிவழி போகையிலே**
**வழித்துணை யார் வருவார்''**

என்ற அடிகளில் மொழிச் சிறப்பும், கருத்தழகும் பின்னிப் பிணைந்துள்ளது.

காதலுணர்வை பிறிதொரு பாட்டில்

**''மெல்ல மெல்ல நிலவு வந்தது**
**ஒரு அல்லிப் பூவின் கதையைச் சொன்னது''**

என்று ஆரம்பித்து,

**''நீரலைகள் பாதையில்**
**நீந்திவரும் வேளையில்**
**நிலவு என்று அல்லிபூத்தது**

நீந்தும் பெண்ணைப் பார்த்தது
நிலையறிந்து தலைகுனிந்தது''

என நயமாகச் சொல்கிறார் ஆபாவாணன

காதல் சோகத்தை 'ஊமை விழிகள்' படத்தில், 'கண்மணி நில்லு' எனத் தொடங்கும் பாடலில்,

''மலர் ஒன்று எடுத்து
சரம் ஒன்று தொடுத்து
தேவி உன் பூஜைக்கு
நான் கொடுத்தேன்
மலர்ச்சரம் பிரித்து
மலர்வளை தொடுத்து
ஏழை என் காதலை
நீ புதைத்தாய்
புதைத்தது மீண்டும்
மலராகும்
பூஜையை நினைத்தே
சரம் ஆகும்''

என்று பளிங்கு வரிகளை இதயத்தை ஈர்க்கும் வண்ணம் அமைத்துள்ளார் இக்கவிஞர்.

இதே படத்தில் தத்துவப் போக்கில்,

''நிலைமாறும் உலகில்
நிலைக்கும் என்ற கனவில்
வாழும் மனித ஜாதி
அதில் வாழ்வதில்லை நீதி''

என்று அற்புதவரிகளை அமைத்துள்ளார் இவர்.

'ஊமை விழிகள்' படப்பாடல்களில் உன்னதமானது,

''தோல்வி நிலையென நினைத்தால்
மனிதன் வாழ்வை நினைக்கலாமா?
வாழ்வை சுமையென நினைத்து

தாயின் கனவை மிதிக்கலாமா?''

என்றமைந்த வீரவரிகளை உள்ளடக்கிய பாடலாகும்.

''உரிமையை இழந்தோம்
உடமையும் இழந்தோம்
உணர்வை இழக்கலாமா?
உணர்வை கொடுத்து
உயிராய் வளர்த்த
கனவை மறக்கலாமா?''

என்ற வரிகள் தன்மானத் தமிழன் எவனுக்குமே உணர்ச்சியைக் தோற்றுவிக்கும்மல்லவா?

இப்பாடலில்,

''விடியலுக்கில்லை தூரம்
விடியு மனதில் இன்னுமேன் பாரம்?
உன் நெஞ்சம் முழுவதும் வீரம் இருந்தும்
கண்ணில் இன்னும் ஏன் ஈரம்''

என்ற வரிகள் இலட்சிய புருசர்கள் எவருக்கும் ஏற்படக் கூடிய ஆத்ம சோர்வை அகற்றும் எழுச்சி வரிகளாக உள்ளது!

ஆபாவாணன் மேலும் பல பாடல்களை முனைப்போடு எழுத வேண்டுமென்பதே எமது அவா!

## பிறைசூடன்

இளையராஜா இசையில் பல படங்களுக்குப் பாடல்கள் எழுதி வருகிறார் இவர்.

'என் ராசாவின் மனசிலே' படத்தில்,

''சோலைப் பசுங்கிளியே சொந்தமுள்ள பூங்கொடியே
ஈச்ச இளங்குறுத்தே என்தாயி சோலையம்மா
கோடித் திரவியமே வந்தது வந்தது ஏன்?
கொள்ளை போனது போனது ஏன்
ஆவி துடிக்க விட்டுச் சென்றது சென்றது ஏன்?
விட்டுச் சென்றது சென்றது ஏன்?''

என்று சோக பாவத்தை உணர்ச்சித் துடிப்போடு பாட்டாக்கி உள்ள இவர்.

''கண்ணுபட போகும் என்று பொத்திவச்ச பூங்குயிலே
மண்ணுபட்டு போகும் என்று நெஞ்சம் இன்று தூங்கலையே''

என்றும்,

''தங்கநிற தாமரைய செங்கறையான் தீண்டிடுமோ
மஞ்சமுக மல்லிகைய மண்கறையான் மாத்திடுமோ
கற்பூரக் கட்டி ஒன்று காத்துல போனதடி
செந்தூர வாழை ஒன்று சேத்துல சாஞ்சதடி''

என்ற அடிகளையும் சிறப்பாக அமைத்துள்ளார்.

'செம்பருத்தி' படத்திற்காக கவிஞர்,

''நடந்தால் இரண்டடி இருந்தால் நான்கடி
படுத்தால் ஆறடி போதும்
இந்த நிலமும் அந்த வானமும்
அது எல்லோர்க்கும் சொந்தம்''

என்றும்,

''நாம் வாழும் வாழ்வே அது சிலகாலம்தான்
உறவோடு வாழ்ந்தால் அது பூக்கோலம்தான்''

என்றும் அமைத்த வரிகளில் கருத்துச் செறிவு மிகுந்துள்ளது.

இவர் 'என்னப் பெத்த ராசா' படத்திற்கெழுதிய,

''சொந்தம் ஒன்றைத் தேடும் அன்னக்கிளி
சொல்லிச் சொல்லிப் பாடும் அன்னக்கிளி
இந்தக் குரல் கேட்குதா இன்பந்தன்னைத் தூண்டுதா''

என்ற பாடலும் நயம் மிக்கதாகும். மேலும் அழுத்தமும், முதிர்ச்சியும் மிக்க பார்வையுடன் அமைந்த பாடல்களை இவர் எதிர்காலத்தில் வரைவார் என்பது நிச்சயம்.

## எஸ்.ஏ.ராஜ்குமார்

நல்ல இசையமைப்பாளர்களில் ஒருவராக விளங்கும் இவர் பாட்டுகள் கட்டும் திறனும் மிக்கவர்!

'குங்குமக்கோடு' படத்தில்,

''தாலாட்டும் நிலவுக்குக் காவலாய்
வானம் இருக்குது
தள்ளாடும் மலருக்குக் காவலாய்
தென்றல் இருக்குது
பெண்ணே உனக்குக் காவலாய்
என்ன இருக்குது?
பொட்டு மில்லே
பூவும் மில்லே
குத்தம் யாருது?
பச்சமரம் பட்டுவிட்டா
பாவம் யாருது?''

என்று சிறப்பாகப் பாடலை அமைத்துள்ளார் இவர்.

'அண்ணன் காட்டிய வழி' படத்தில்,

''பனிமலையைத் தழுவிவரும் மேகங்களே
எங்கள் தமிழகத்தின் தாகம் தீருங்களே''

என்று எடுப்பாக தொடங்கும் பாடலில்,

''மேகம் வந்து போகும்
நீலவானம் மாறுமா
தாயின் தமிழை உண்ட எங்கள்
வீரம் போகுமா? ''

என்ற வரிகள் நயத்தோடுள்ளது.

'ஒரு பொண்ணு நெனச்சா' படத்தில்,

''நீதானா நிழல்தானா''

எனத் தொடங்கும் பாடலில்,

''சொல்லாத சோகங்கள்
நெஞ்சுக்குள்ள பாடும்
கல்லான பெண்ணின்
உள்ளத்தைத் தேடும்
காலங்கள் போயாச்சி
கண்ணோரம் நீராச்சி''

என்று அழகாக எழுதுகிறார் இவர்!

ராஜ்குமாரின்,

"ஏ புள்ள கருப்பாயி
உள்ள வந்து படுதாயி"

பாடல் இவர்தம் இசைத்திறனுக்கும் 'பாடல் எழுதும் திறனுக்கும் சான்றாக உள்ள மிகவும் பிரபலம் பெற்ற பாடல் அல்லவா?

## ஜீவ்பாரதி

முற்போக்குச் சிந்தனையாளராகவும், திரைப்பட இயக்குநராகவும் விளங்கும் இவர் சில பாடல்களையும் சினிமாவுக்கு வடித்துள்ளார்.

'சந்தனக் காற்று' படத்தில்,

**"சந்தனக் காற்றில் சுந்தரப் பூக்கள்**
**ஆடும் நாட்டியமே**
**வெண்பனி தூவ புன்னகையோடு**
**பூத்தது பூவினமே ஓ...**
**பூமகள் மடிமேலே"**

என்றும்,

**"வானத்து மேலே மேகப் பறவை**
**ஊர்வலம் போகின்றது**
**வருகின்ற மேகம்**
**சூரியன் முகத்தில்**
**ஓவியம் வரைகின்றது"**

என்றும் இலக்கியச் செறிவோடு எழுதியுள்ளார்.

நல்ல வாய்ப்புகள் கிடைத்தால் மேலும் நல்ல பாடல்களை இவர் உருவாக்கக் கூடும்.

## ஆர்.வி.உதயகுமார்

தமிழ்ப் படவுலகின் இன்றைய முன்னணி இயக்குநர்களில் ஒருவ ரான இவர் சில நல்ல பாடல்களையும் யாத்துள்ளார்.

'சின்னக் கவுண்டர்' படத்தில்,

''அந்த வானத்தைப் போல
மனம் படைச்ச மன்னவனே
பனித்துளியைப் போல
குணம் படைச்ச தென்னவனே''

என்று தொடங்கும் பாடலும்,

''முத்துமணி மால உன்னைத்
தொட்டுத் தொட்டு தாலாட்ட
வெக்கத்துல சேல
கொஞ்சம் விட்டு விட்டு போராட''

எனத் தொடங்கும் பாடலும்,

''கிழக்கு வாசல்' படத்திலுள்ள,

''பச்ச மலப்பூவு நீ
உச்சி மலத் தேனு''

எனத் தொடங்கும் பாடலில்,

''பூநாத்து மொகம் பாத்து வெண்ணிலா நாண
தாளாமல் தடம்பாத்து வந்தவழி போக
சித்திரத்து சோல முத்துமணி மால
மொத்தத்துல தாரேன் தூக்கமென்ன மானே
வண்ணமா வானவில்லில் நூலெடுத்து வாரேன்
விண்ணுல மீன்புடிச்சி சேல தச்சு தாரேன்''

என்று எழிலோடு அடிகளை அமைத்து தமது பாத்திறனை பளிச்சென அடையாளங் காட்டுகிறார் உதயகுமார்.

  

குறிப்பிடக்கூடிய பாடலாசிரியர் வரிசையில் 1940-ஆம் ஆண்டுக்கு முன்னர் எழுதியவர்களில்,
சந்தான கிருஷ்ண நாயுடு
கவிகுஞ்சரம்
ஆனை வைத்திய நாதய்யர்
கோவை அய்யாமுத்து
தமிழ் ஒளி

கோவி மணிசேகரன்
கவி ஆறுமுகனார்
போன்றோரையும், 1960-ஆம் ஆண்டுக்குப் பின் பாடல் தீட்டி யோர் வரிசையில்,
பாரதிசாமி
வேம்பத்தூர் கிருஷ்ணன்
கி.வா.ஜகந்நாதன்
ஜெயகாந்தன்
தமிழழகன்
பூங்குயிலன்
எஸ்.என்.ரவி
அடியார்
காளிமுத்து
இளவேனில்
பட்டுக்கோட்டை தண்டபாணி
சிற்பி
கங்கை கொண்டான்
எஸ்.அறிவுமதி
அன்புக்கனி
முத்துப்பாரதி
ராஜேஸ்கண்ணா
இளந்தேவன்
நெல்லை ஆ.கணபதி
ரோஷனரா பேகம்
கே.சி.எஸ்.அருணாசலம்
உமா கண்ணதாசன்
வலம்புரிஜான்
இதயச் சந்திரன்
ஆர்.ஈ.சந்திரசேகர்
போன்றோரையும் இங்கு சொல்ல வேண்டும்.

# முடிவுரை

இதுகாறும் யான், 1932 இல் இருந்து 1992 வரை தமிழ்ப்படவுலகில் பாடலாசிரியர்களாக பரிமளித்தவர்களையும் - பரிமளித்துக் கொண்டிருப்பவர்களையும் பற்றி விரிவாக இனங்காட்டியுள்ளேன்.

இந்நூல் மிகுந்த கவனத்துடனும், நடுநிலையுடனும் உருவாக்கப்பட்டுள்ளது என்பதனை படிப்பவர்கள் நிச்சயம் உணர்வார்கள் எனக் கருதுகிறேன்.

தொடக்க காலத்திலிருந்து இன்றுவரை எத்துணை பேர் படங்களுக்குப் பாட்டெழுதியுள்ளார்கள் என்று பட்டியல் போட்டுப் பக்கங்களை வீணடிக்காது,பெரிய அளவிலும் சிறிய அளவிலும் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தியவர்களை முறையாக இந்நூலில் அடையாளங் காட்டியுள்ளேன்.

தமிழின் மீதும், இசையின் மீதும் யான் மாறாத காதல் கொள்வதற்குக் காரணமாக அமைந்தது பால்ய காலந் தொட்டு என் ஆத்மாவைத் தாலாட்டிய திரைப் பாடல்களேயாகும்.

ஆண்டாண்டுகாலம் யான் அனுபவித்த அந்த அமர கீதங்களையும், அவற்றை ஆக்கிய கவிஞர்களின் ஆளுமைகளையும், வாழ்க்கைக் குறிப்புகளையும் உள்ளடக்கிய இந்நூலை ஆய்வாளர்களும், கலாரசிகர்களும் ஆர்வத்தோடு வரவேற்பர் என்பது எனது நம்பிக்கை.

# பிற் சேர்க்கை

## தமிழ்த் திரையுலகப் பாடக பாடகியரும் இசையமைப்பாளர்களும் - சில குறிப்புகள்

இளமைக் காலத்தின் இன்ப நாட்கள் இசைத் தட்டாய் இதயத்தில் சுழல்கிறது. அப்போதெல்லாம் திரைப்பாடல்களே என் காதுகளில் வேத மந்திரமாய் ஒலித்தன.

1950-இல் இருந்து சங்கிலித் தொடராய் பல நிகழ்ச்சிகள் நினைவு வானில் சுகானந்த மேகங்களாய் தவழ்ந்த வண்ண முள்ளன.

பாகவதர், மகாலிங்கம் பாடல்களைப் பாடிப்பாடி பரவச முற்றேன்.

கண்டசாலாவின் லைலா மஜ்னு, பாதாள பைரவி, தேவ தாஸ் படப் பாடல்களை பாடிப்பாடி பைத்தியமாய் அலைந்தேன்!

பின்பு டி.ஏ.மோதியும், ஏ.எம்.ராஜாவும் என்னை ஆனந்த ஊஞ்சலில் ஆடச்செய்தனர்.

பின் வந்த காலகட்டத்தில் டி.எம்.சௌந்தர்ராஜன், ஜேசு தாஸ், எஸ்.பி.பி, சீர்காழி, பி.பி.சீனிவாஸ் பாடல்கள் இதயத்தில் இனித்தன.

பெண் பாடகிகளில்,

மீரா, சகுந்தலை படப் பாடல்கள் மூலம் கோடானு கோடி திரைப்பாடல் ரசிகர்களைக் கவர்ந்தது போலவே எம்.எஸ்.

சுப்புலட்சுமி என்னையும் கவர்ந்தார்.

'வேதாள உலகம்' படத்தில் பாரதி பாடல்களை அற்புதமாகப் பாடிய டி.கே.பட்டம்மாளும்ஞானசௌந்தரி,மருமகள், கூண்டுக்கிளிப் படப்பாடல்களால் பி.ஏ.பெரியநாயகியும், மனிதனும் மிருகமும், மனிதன், தாய் உள்ளம் படப் பாடல்களால் எம்.எல். வசந்தகுமாரியும், தம் குரலினிமையால் பலரையும் கவர்ந்தவர்கள். பாதாள பைரவி, கல்யாணம் பண்ணிப்பார், மிஸ்ஸியம்மா படங்களில் தமது தேமதுரக் குரலில் பாடிய பி.லீலாவையும், அவன், கண்கள் உட்பட பலப்பல படங்களில் கம்பீர கான இன்பத்தில் எம்மைத் திளைக்கச் செய்த ஜிக்கியையும், ராஜி என் கண்மணி, மங்கையர் திலகம் உட்பட பல படங்களில் 'பசுமை கொஞ்சும் தீங்குரலில் பாடிய பாலசரஸ்வதியையும் அன்றும் இன்றும் தமது குரலினிமையால் கொடி கட்டிப் பறக்கும் சுசீலாவையும் யாரால்தான் மறக்க முடியும்?

காதல்வசப் படுத்தும் கவர்ச்சிக்குரல் பாடகிகளான ஜமுனாராணி, எல்.ஆர்.ஈஸ்வரி போன்றோர் பாடிய பாடல்களையும்,

மழலைக் குரலோடு பாடி எமை ஈர்த்த எம்.எஸ்.ராஜேஸ்வரியையும், மறக்க இயலுமா?

நடிப்புத்திறனும் பாங்கான குரல் வளமும் கொண்டு துலங்கியோர் வரிசையில் கே.ஆர்.ராமசாமி, என்.எஸ்.கே., சந்திரபாபு, பி.எஸ்.கோவிந்தன் போன்றோரையும்,

பாடகிகள் வரிசையில் பி.பானுமதி, எஸ்.வரலட்சுமி போன்றோரையும் மறக்கவே முடியாதல்லவா?

இன்றைய பாடகர்களில் ஜெயச்சந்திரன் குரல் அலாதியானது. இளம் பாடகர் மனோ நன்றாகப் பாடுகிறார். எஸ்.பி.பாலசுப்பிரமணியத்தை 'இமிடேட்' செய்வதை அவர் தவிர்த்தல் நன்று.

இன்றைய பாடகிகளில் சித்ரா, சொர்ணலதா, மின்மினி போன்ற இளம் பாடகிகள் நன்றாகவே பாடுகிறார்கள்.

இசையமைப்பின் நுட்பங்களை அறியும் தெளிவு ஏற்பட்ட பின் வடநாட்டு திரை இசை மாமேதைகளான நெளஷாத் அலி, ரோஷன், சங்கர் ஜெய்கிஷன். ரவி, எஸ்.டி.பர்மன் போன்றோ ரின் மனமோகன இசையின் வசப்பட்டேன்.

இன்றுவரை அவர்களின் இசையமைப்புச் சாதனைகள் வேறு யாராலும் திரையுலகில் தகர்க்கப்படவில்லை என்பதனை எவரால் மறுக்க முடியும்?

தென்னக திரைப்பட இசையமைப்பாளர்களில் நவீனத்து வத்தையும் எழுச்சியையும் ஏற்படுத்தி லைலா மஜ்னு, மருமகள், காதல், தேவதாஸ் போன்ற படங்களுக்கு இசையமைத்த சி.ஆர். சுப்பராமன் கோடானுகோடி மக்களைத் தமது இசையமைப்புத் திறனால் அடிமை கொண்டது போலவே என்னையும் அடிமை யாக்கினார்!

''மீரா''வில்,

''காற்றினிலே வரும் கீதம்''

''அந்த நாளும் வந்திடாதோ''

போன்ற பாடல்களுக்கு அதி அற்புத இசை ஈந்த எஸ்.வி.வெங் கட்ராமன் சாதனைகளை நல்லிசை மோகிகள் எவராலும் மறக்க முடியாதல்லவா.

இதைப் போலவே, அபூர்வ சகோதரர்கள், மிஸ்ஸியம்மா, பிரேமபாசம், கடன் வாங்கிக் கல்யாணம் போன்ற பல படங்க ளுக்கு அமைதி செறிந்த அமுத இசை வழங்கிய எஸ்.ராஜேஸ் வர ராவ், பாதாளபைரவி, சந்திரஹாரம், மாயாபஜார் போன்ற படங்களுக்கு அதி அற்புத இசையமைத்த கண்டசாலா ஆகி யோர் ஆற்றலை மறக்க முடியுமா என்ன?

ஹரிதாஸ், சிவகவி போன்ற படங்களுக்கு சாஸ்திரீக சங்கீத மரபுகளைப் பேணியும், உத்தம புத்திரன், நான் பெற்ற செல்வம், ஏ.எல்.எஸ். தயாரித்த அம்பிகாபதி போன்ற படங்களில் மரபி சையில் புதுமை கலந்து அரிய இசை வழங்கிய இசைமேதை ஜி.ராம்நாதனையும்,

அனார்க்கலி, மணாளனே மங்கையின் பாக்கியம், மங்கையர் உள்ளம் மங்காத செல்வம் போன்ற படங்களுக்கு மனமோகன இசையமைத்து இந்தியாவின் அதி உன்னத இசையமைப்பாளர் வரிசையில் இடம் பிடித்த ஆதி நாராயணராவ் திறனையும் எவரால்தான் மறக்க முடியும்?

1950-இல் இருந்து அறுபது வரை பல தெலுங்குப் படங்களுக்கும், பலே ராமன், கலைவாணன், பெற்றதாய் குடும்பம் போன்ற தமிழ்ப் படங்களுக்கும் என்றென்றும் அழியாத இன்னிசை அமைத்த பெண்டியாலாவையும் இந்நேரம் நினைத்து வியக்கிறேன்!

1957-இல் 'மாலையிட்ட மங்கை' படத்திலிருந்து 'மெல்லிசை மன்னர்கள்' விஸ்வநாதன் - ராமமூர்த்தி இசைத்திறன் அருமையாகச் சுடர்விட ஆரம்பித்தது - தொடர்ந்து அவர்கள் பாசமலர், பாலும் பழமும் போன்ற மிகப் பல சிவாஜி படங்களிலும் எங்க வீட்டுப் பிள்ளை உட்பட மிகப்பல எம்.ஜி.ஆர். படங்களிலும் காலம் வென்ற இசை ஈந்து மக்களைக் கவர்ந்தார்கள்.

நான் பெற்ற செல்வம், டவுன் பஸ், திருவிளையாடல், வசந்தமாளிகை சங்கராபரணம் போன்ற எண்ணற்ற படங்களில் கே.வி.மகாதேவனின் மகோன்னத புகழ்க்கொடி கம்பீரமாகப் பறந்தது.

தமிழ் சினிமாவில் 1960-ஆம் ஆண்டுக்கு முன் தமத பேராற்றலை இசையமைப்பில் காட்டியவர்களில் சந்தானம், மனம் போல் மாங்கல்யம், மங்கையர் திலகம், 'அலிபாபாவும் நாற்பது திருடர்களும்' போன்ற படங்களுக்கு இசையமைத்த எஸ்.தட்சிணாமூர்த்தியின் இன்னிசை ஆற்றலை நினைவு கூர்ந்தே ஆக வேண்டும். தாகம், மதனமாளிகை போன்ற பல படங்களில் அற்புத இசை வழங்கிய எம்.பி.சீனிவாசனையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

1960 ஆண்டுக்குப்பின் வந்த இசையமைப்பாளர்களில் சங்கர் - கணேஷ், வி.குமார், வைத்தியநாதன் போன்றோரின் இசையமைப்புகளில் சில பாடல்கள் அருமையாக உள்ளது.

'அன்னக்கிளி' மூலம் பிரவேசித்து இன்றைய காலகட்டத் தில் தமிழ்த் திரையுலகின் மிகச் சிறந்த இசையமைப்பாளராக வெற்றி பவனி வருபவர் இசைஞானி இளையராஜா.

பதினாறு வயதினிலே, இளமைக் காலங்கள், நிறம் மாறாத பூக்கள், முதல் மரியாதை போன்ற படங்கள் இவர்தம் அருமை யான இசைத்திறனை இனங்காட்டியது. அண்மைக்காலப் படங் களில் சின்னதம்பி, நாயகன், தளபதி, கேளடி கண்மணி போன்ற படங்களில் இவர் இசையமைப்பு மிகச் சிறந்து விளங்கியது.

'என்னை விட்டுப் போகாதே' படத்தில் இவர்தாமே இயற் றிப் பாடிய,

''என்னப் பெத்த ஆத்தா
கண்ணீரத்தான் பாத்தா''

பாடலும்,

மறைந்த இவர்தம் சகோதரரான பாவலர் வரதராசன் இயற்றி, இவர் இசையமைத்துப் பாடிய,

''வானுயர்ந்த சோலையிலே''

பாடலும், மிகச் சிறப்பாக அமைந்தது.

மிக நல்ல இசையமைப்பாளரான இளையராஜா, தமது இசையமைப்பில் வாத்தியங்களின் ஆக்கிரமிப்புகளையும், பாடல்களில் 'கொச்சை வார்த்தைப் பிரயோகங்களையும் தவிர்த்து இசைமேதை சி.ஆர்.சுப்பராமன், எஸ்.ராஜேஸ்வரராவ் போன்றோரைப் போல் காலம்வென்ற புகழ்காண வேண்டும்.

இல்லாவிட்டால் ஒரு 'குறிப்பிட்ட சீசனில் வெற்றிகரமாக சிறகடித்தவர்' என்ற வட்டத்தில் அவர் திறமை முடங்கி விடக் கூடும்.

அவர் தமது தேவைகளின் நிமித்தம் விமர்சிக்க அஞ்சி ஒரே யடியாய் புகழ்ந்து தள்ளிக் கொண்டிருப்போரிடம் விழிப்பாய்

பிற்சேர்க்கை:

# பாடலாசிரியர்கள், இசையமைப்பாளர்கள்
(1993-2000)

இந்நூலின் முதற்பதிப்பில் 1932இல் இருந்து 1992 வரையில் உருவான தமிழ்த்திரைப் பாடல்களையும், பாடலாசிரியர்களைப் பற்றியும் மிகத்தெளிவாக நடு நிலையிலிருந்து பலப்பலத் தகவல்களைக் தொகுத்து வழங்கினேன்.

கடந்த எட்டாண்டு காலத்தில் தமிழ்த்திரைப்பாடல்கள் - பாடலாசிரியர்கள் - இசையமைப்பாளர்கள் பற்றி எனது நூலின் இரண்டாம் பதிப்பிற்காக இக்கட்டுரையைத் தீட்டியுள்ளேன்.

## வைரமுத்து

கடந்த எட்டாண்டு காலத்தில் வெளிவந்த திரைப்பாடல்களைப் பொறுத்தவரை

வைரமுத்துவே முதலிடத்தில் தொடர்ந்து இருக்கிறார் என்பது வெள்ளிடை மலை.

"பெண்ணே உனது மெல்லிடை பார்த்தேன்
அடடா பிரமன் கஞ்சனடி
சற்றே நிமிர்ந்தேன் தலை சுற்றிப் போனேன்
ஆஹா! அவனே வள்ளலடி" (ஜீன்ஸ்)

"பூப் பூக்கும் ஓசை - அதைக்
கேட்கத்தான் ஆசை
புல்விரியும் ஓசை - அதைக்
கேட்கத்தான் ஆசை
நதிபாடும் பாடல்
கேளாய்ப் பட்டுப் பெண்ணே
பூமி ஒரு வீணை - இதைக் காற்றின் கைகள் மீட்டுதே"

(மின்சாரக்கனவு)

என்றும்

கற்பனை எழிலோடு பாப்பொழிகிறார் கவிஞர்.

## வாலி

கவிஞர் வாலி வாடாத தமிழ் மலர்களெனத் தக்க பல பாடல்களை கடந்த நாற்பதாண்டு காலத்திற்குமேல் எழுதி வருகின்றார்.

கவியரசு கண்ணதாசன் பாட்டுலகில் உச்ச நிலையில் உலா வந்த நேரத்திலேயே அவருக்குத் தனிப் பெருஞ் சவாலாகத் திரையுலகில் மின்னியவர் கவிஞர் வாலி.

ஆனால் கடந்த எட்டாண்டு காலத்தில் அவருக்குப் பாடல் எழுதும் வாய்ப்புகள் ஏனோ அருகிக் கொண்டே வருகின்றன!

"என்ன விலை அழகே

சொன்ன விலைக்கு வாங்க வருவேன்

விலை உயிரென்றாலும் தருவேன்"

(காதலர் தினம்)

என்று அவர் எழுதும் போதும்,

"காதலெனும் தேர்வெழுதி காத்திருந்த மாணவன் நான்"

(காதலர் தினம்)

எனத் தீந்தமிழ்ச் சிந்தும் போதும் கவிஞர் வாலியின் பாவளம் பட்டுப் போகவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது.

## எஸ். அறிவுமதி

கவிஞர் அறிவுமதி தரமான பல புதுக் கவிதைகளைப் படைத்தவர்.

கடந்த எட்டாண்டு காலத்தில் பல நல்ல திரைப் பாடல்களை அவர் தந்துள்ளார்.

இவர் போன்ற நல்ல கவிஞர்களுக்கு முழுமையான வாய்ப்புகள் கிட்டும் பட்சத்தில் மேன்மேலும் பல சாதனைகளைப் புரிவர் என்பது திண்ணம்.

இவரைப் போன்றே நா. காமராசன், மு. மேத்தா, இளந்தேவன், சிற்பி, ஈரோடு தமிழன்பன் போன்ற உயர்ந்த தமிழ் வளம்மிக்க கவிஞர்களையும் இன்றைய இசையமைப்பாளர்கள் தாராளமாகப் பயன்படுத்த முன் வந்தால் அது கண்டிப்பாகத் தமிழுக்கு நன்மை பயப்பதாக அமையும்.

## பழனி பாரதி

குறுகிய காலத்தில் தமது திறமையால் வெகுவேகமாக முன்னேறியவர் இவர்.

"ஒரு பட்டாம்பூச்சி நெஞ்சுக்குள்ளே சுற்றுகின்றதே அது

சுற்றிச் சுற்றி ஆசை நெஞ்சைத் தட்டுகின்றதே!

(காதலுக்கு மரியாதை.

"என்னைத் தாலாட்ட வருவாளோ?

தங்கத் தேராட்டம் வருவாளோ?"

(காதலுக்கு மரியாதை)

"சொல்லாமலே யார் பார்த்தது?

நெஞ்சோடு தான் பூ பூத்தது"

(பூவே உனக்காக)

போன்ற பாடல்கள் எல்லாம் பழநிபாரதியின் பாத்திறனுக்குச் சான்று பகரவல்லவை.

திரைப் பாட்டுலகில் இவர் ஒரு நம்பிக்கை நட்சத்திரம்.

வருங்காலத்தில் மேன்மேலும் நல்ல பாடல்களை இவர் வழங்குவார் என்பது திண்ணம்.

## மறைந்த வாசன்

இளங்கவிஞர் வாசன் மிகவேகமாகத் திரைப்பாட்டுலகில் முன்னேறி வந்தார். பல வெற்றிப் பாடல்களையும் வழங்கினார்.

"வாசன் நிச்சயம் பாட்டுலகில் ஏதாவது சாதனை புரிவார்" என்று பலரும் எதிர்பார்த்த தருணத்தில் துடிக்கும் இளமையிலேயே ஆவி அடங்கிப் போனார்!

## கலைக்குமார்

"ஏதோ ஒரு பாட்டு என் காதில் கேட்கும்

கேட்கும் போதெல்லாம் உன் ஞாபகம் தாலாட்டும்

நான் சுவாசிக்கும் மூச்சினிலே

உன் ஞாபகம் கலந்திருக்கும்.

ஞாபகங்கள் மழையாகும்

ஞாபகங்கள் குடையாகும்

ஞாபகங்கள் தீமூட்டும்

ஞாபகங்கள் நீருற்றும்"

மேலுள்ள பாடலை நான்

முதன் முதலாக கேட்ட போது அப்பாட்டால் மிகவும் ஈர்க்கப் பட்டேன்.

பாடலை எழுதியவர் கலைக்குமார் என்பதை அறிந்த போது நிச்சயமாக இவர் எதிர்காலத்தில் திரைப்பாட்டுலகில் ஒரு சாதனை திலகமாகத் திகழ்வார் என்ற நம்பிக்கை என்னுள் வேரூன்றியது.

முத்துக்குமார், பெண் பாடலாசிரியை தாமரை, பா. விஜய் உட்பட பலர் இன்று திரைப் பாட்டுலகில் மிக வேகமாக முன்னேறி வருகிறர்ர்கள். இவர்களுக்கெல்லாம் நல்ல எதிர்காலம் இருக்கிறது.

இவர்கள் சாதனைகள் படைக்கிறார்களா என்பதைக் கணிப்பதற்கு இன்னும் ஐந்தாண்டு காலமாவது நாம் பொறுத்திருக்க வேண்டும்.

## இசையமைப்பாளர்கள்

### இளையராஜா

கடந்த எட்டாண்டு காலத்தில் இளைய்ராஜாவுக்கு 'மார்க்கெட்' குறைந்து விட்டது உண்மை தான்.

ஆனால் அவரின் இசையாற்றல் அப்படி ஒன்றும் மங்கி மறைந்து விட வில்லை.

சின்னக் கவுண்டர், பாரதி, காதலுக்கு மரியாதை உட்பட பலப்பல படங்களில் நயமான இசையைத் தந்துள்ளார் அவர்.

## ஏ.ஆர். ரகுமான்

ஆற்றல் மிக்க இசையமைப்பாளர் ரகுமான் இன்று இசை உலகில் கொடிகட்டிப் பறக்கிறார்.

மின்சாரக் கனவு, காதலர்தினம், ஜீன்ஸ், சங்கமம் உட்பட பலப்படங்கள் அவரை உச்சாணிக் கொம்பில் ஊஞ்சலாட வைத்துள்ளன.

ரகுமானிடம் நல்ல இசையாற்றல் இருப்பது போல் அவர்பால் சில பெரிய குறைபாடுகளும் உள்ளன.

அவர் இசையில் வாழ்த்தியங்களின் ஆக்கிரமிப்பு பல இடங்களில் வெறுக்கத்தக்க வகையில் உள்ளன.

பன்றிகளினால் சின்னாபின்னப் படுத்தப்பட்ட முத்துகளைப் போல பாடலாசிரியர்களின் நல்ல சொற்கள் எல்லாம் சிதைந்து போய் விடுகின்றன.

மேலும் ரகுமான் இசையில் பாடகர்கள் பாடுகிறார்கள். திடீரென விநோத குரலில் ஊளையிடுகிறார்கள். இதெல்லாம் “இசையுலகப் புதுமை” என ரகுமான் கருதுவதைத் தவிர்த்து

பாடக, பாடகிகளை இயல்பாக பாடச் செய்து, வாத்திய கருவிகளின் ஆக்கிரமிப்பை அடக்க வேண்டும்.

இந்திய திரை இசை உலகில் மாமேதை நௌஷாத் அலி, எஸ்.டி. பர்மன், சங்கர் - ஜெய்கிஷன், சி. ராமச்சந்திரா போன்றோரின் இசைச் சாதனைகளில் பத்து வீதம் கூட ரகுமான் செய்யவில்லை.

அதைப் போலத் தென்னிந்திய இசை மேதைகள் சி.ஆர். சுப்பராமன், எஸ். ராஜேஸ்வரராவ், பெண்டியாலா, ஆதி நாராயணராவ், கண்டசாலா, ஜி. ராமநாதன், எஸ்.வி. வெங்கட்ராமன், விஸ்வநாதன், ராமமூர்த்தி, மகாதேவன், இளையராஜா போன்றோரின் சாதனைகளை அண்ணாந்து பார்க்கும் நிலையில்தான் ரகுமான் இருக்கிறார்.

நல்ல இசையமைப்பாளரான ரகுமான் தமது குறைபாடுகளைக் களைந்து எதிர் நாளில் பல சாதனைகள் புரிய வாழ்த்துகள்.

# தேவா

ஆசை, காதலே நிம்மதி, நினைத்தேன் வந்தாய், பாட்சா உட்படப் பலப்படங்களில் நமது இசைத்திறனை இனங்காட்டி புகழின்

ராஜபாட்டையில் மேலோங்கிச் செல்கிறார் தேவா.

பிற இசையமைப்பாளர்களின் சாயல் ஆங்காங்கே தெரிந்தாலும் தேவாவிடம் நல்ல சரக்கு இருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை.

ஆனால் அவர் திறமைக்குக் களங்கம் ஏற்படும் வகையில் எவ்வித மொழியழகோ கற்பனைச் செறிவோ இல்லாத பாடல்களை, இனிமையின் சுவடே அமையாத குரலில் பாடுகிறாரே (கானாப் பாட்டாம் அது) அத்தகைய பாடல்களை அவர் புறந்தள்ள வேண்டும்.

## எஸ். ஏ. ராஜ்குமார்

கடந்த எட்டாண்டுகளில் அமைதி கொஞ்சும் மெல்லிசைப் பாடல்களால் மிகு புகழ்பெற்றவர் இவர்.

துள்ளாத மனமும் துள்ளும் உட்பட மிகப் பல படங்கள் இவரை முன்னணி இசையமைப்பாளர் என நிறுவியுள்ளன.

ஆர்ப்பாட்டமில்லாத மென்மையான இவரது இசையமைப்பு இன்றைய காலகட்டத்தில் தனி அழகுடன் உள்ளது. அழியாப் புகழ்பெற்ற பழைய ஹிந்திப் படப் பாடல்களின் சாயல் இவர்

பாடல்களுக்கு மெருகேற்றுகிறது.

கடந்த எட்டாண்டு காலத்தில் வித்யா சாகர் சிற்பி, ஆதித்யன், பரத்வாஜ், யுவன் சங்கர்ராஜ் உட்பட பல இசையமைப்பாளர்கள் மிக நல்ல முறையில் இசையமைத்து முன்னேறி வருகிறார்கள்.

திரை இசைத்துறையில் இவர்கள் பல சாதனைகள் புரிய எமது வாழ்த்துகள்.



# விரைவில் வெளிவரவுள்ள இந்நூலாசிரியரின் நூல்கள்

1. அன்பின் கனாக்களும் அவளும்
2. மறைக்கப்பட்ட மாமேதை சுத்தானந்த பாரதி
3. ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து (நேரடி அனுபவ உண்மைகள்)
4. ஆங்கிலப் படவுலகின் அற்புத நடிகமணிகள்
5. இந்திய திரையுலகின் மிகச்சிறந்த நட்சத்திரங்கள்.
6. நடிப்புக்கலை
7. எனது இந்தியக்கலை, இலக்கிய அனுபவங்கள்
8. வெளிச்சத்தில் விவேகானந்தர்.



## சிலோன் விஜயேந்திரன் எம்.ஏ.டி.லிட்

அன்பன் யாழ்ப்பாணக் கலைஞர், நடிகமணி விஜயேந்திரன் பாரதியார் வாழ்க்கையை உணர்ச்சி ததும்பும் நாடகமாக எழுதியுள்ளார்.

**- கவியோகி சுத்தானந்த பாரதி**

கம்பதாசன் பாடல்களைத் தொகுத்தளித்து அவர் திரையுலகில் எத்துணை ஆற்றல் காட்டினார் என்பதை நண்பர் சிலோன் விஜயேந்திரன் விளக்கி இருப்பது "கம்பதாசன் மறையவில்லை" என முழக்குவது போலிருக்கிறது.

**- தமிழக முதல்வர் கலைஞர்**

சிலோன் விஜயேந்திரன் கம்பதாசன் வரலாற்றை முதன் முதல் எழுதி வெளியிட்டவர். ஈழத்துக் கவிஞர்களின் சிறந்த கவிதைகளை ஈழத்துக் கவிதைக் கனிகள் என்ற பெயரில் முதன் முதலாக தமிழகத்திற்கு அறிமுகப் படுத்தியவர். தமிழ் இலக்கியத்திற்குத் தமிழ் திரைப்பாடல்கள் எத்துணை தூரம் உதவியுள்ளது என்பதை "அறுபதாண்டு காலத்திரைப் பாடல்களும், பாடலாசிரியர்களும்" என்ற பெயரில் பெரிய நூல் மூலம் வெளிப்படுத்திய சிறப்பும் விஜயேந்திரனுக்கே உரியது.

**- கவியரசர் சுரதா**